# அகிலத்திரட்டு
# அம்மானை



இஃது
சாமிதோப்பு ஊர்
**பொ. முத்துக்குட்டி சுவாமியவர்களால்**
இயற்றப்பெற்று
ஷை யூர்
**மு. ச. பால்வர்ணநாதன் சுவாமியார்,**
மகன்
**பா. தங்கையா நாடார்**
இவர்களால் அச்சிலியற்றப்பெற்றது.



நான்காம் பதிப்பு



[Rights Reserved] 1963.

**1138**

டாஸ் பிரஸ், நாகர்கோவில்.

அய்யா துணை.

# முகவுரை

ஆயிரத்திஎட்டாவது ஆண்டு வரை எனது பாட்டன் பொ. முத்துக்குட்டி சுவாமி மனு அவதாரமாயிருந்தார். அதற்குமேல் அவர் திருச்செந்தூர் சென்று சமுத்திரத்திற்குள் மூன்று நாளிருந்து விஞ்சை பெற்று ஸ்ரீமந் நாராயணசுவாமியின் திரு அவதாரமாக இப்புவியில் வந்துதித்தார். உடன் அவர் பூவண்டன் தோப்பில் ஆறு வருஷம் தவமிருந்து, தண்ணீரும் மண்ணும் ஈந்து, சகலமான நோய்களும் தீர்த்து, சான்றோருக்குப் புத்திசொல்லி, மன்னன் சோதனைகளைவென்று, சப்தமாதர்களையும் மணம் முடித்து, பேய் பிசாசுகளுக்குக் கொடுத்த வரத்தை வாங்கி, பேயை எரித்து, முன்னால் ஆறு யுகம் முடித்து, கலியுகத்தில் வைகுண்டசுவாமி என்ற பெயரும் பெற்று, செய்த அற்புதத் திருவிளையாடல்களைப்பற்றி கூறும் நூல்தான் இந்த அகிலத் திரட்டு. இந் நூல் ஆயிரத்தி பதினொருவது ஆண்டு கார்த்திகை மாசம் இருபத்திஏழாம் தியதி இரவு ஸ்ரீமந் நாராயணசுவாமி அவர்களால் ஏட்டுப்பிரதியாக திருவாய் மலர்ந்தருளப்பட்டது. இது அரும் பிரயாசையுடன் பெரும் பொருள் செலவிட்டு நாராயணசுவாமி உத்தரவைப்பெற்று, ஏட்டிலிருப்பதுபோல் சுத்தப் பதிப்பாக அச்சுப் பிழையில்லாமலும் ஏட்டிலிருக்கிற காவியத்தில் ஒன்றுவது குறைபடாமலும் ஏட்டு பிரதிகளனைத்தையும் பரிசோதனை செய்தும், என்னால் பிழை திருத்தப்பட்டும் அச்சிலியற்றப் பட்டிருக்கிறது. ஸ்ரீமந் நாராயணசுவாமி பூலோகத்தில் வந்துதித்து, அவர் செய்த திருவிளையாடல்களைப் பற்றி ஆகம சாஸ்திரம் ஒன்று ஏற்பட்டிருக்கிறதாக அறிந்தவர்கள் ரொம்ப சொற்பமாகத்தான் இருக்கிறார்கள். ஆதலால் இந்த ஆகமத்தை எல்லோரும் பிரபல்யமாக எளிதாக வாசித்தறியும்பொருட்டு அச்சிலேற்றப்பட்டிருக்கிறது. இந்த ஆகமத்தை வாசிக்கிறவர்களும், வாசித்துக் கேட்பவர்களும் வருங்காலம், சென்றகாலம், நிகழ்காலம் என்ற மூன்று காலத்தில் நடக்கிற சகல சங்கதிகளையும் அறிந்து, அஷ்ட ஐஸ்வரியத்துடன் இஷ்ட சித்திகளையும் பெற்று, பின் அழியாத வைகுண்ட பதவி அடைவார்களென்பது சுவாமி உத்தரவு.

இப்படிக்கு,

**மு. ச. பால்வர்ணநாதன் சுவாமியார்**

இந்த அகிலத்திரட்டை வாசிக்கிறபொழுது, ஸ்நானம் செய்து, புலால் உணவை நீக்கி, தாம்பூலம் தரிக்காமல், பரிசுத்தமான இடத்தில் வைத்து வாசிக்க வேண்டும். இந்த அகிலத்திரட்டை பரிசுத்தமான இடத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

*இந்தப் புஸ்தகம் வாங்கப் பிரியப்படுவோர்*
*கீழே காணும் விலாசத்திற்கு எழுதவும்*


**பொ. மு. ச. பால்வர்ணநாதன் சுவாமியார்**
**மகன், தங்கையா நாடார்,**
**சாமிதோப்பு போஸ்ட்,**
கன்னியாகுமரி ஜில்லா.


*16—2—1138.*


10-,87NMK3,A

அய்யா துணை.

# அறிவிப்பு.



இதனால் சகலமானவர்களுக்கும் அறிவிப்பது யாதெனில் சாக்ஷாத் ஸ்ரீமந்நாராயண சுவாமி அவர்கள் மனு அவதாரமாக பூவண்டன்தோப்பில் வந்துதித்து, ஏழு அம்மையார்களை மணம் முடித்தார். அதில் முதல் அம்மையாருடைய பேர் ஞானதான சாஸ்திரக் கன்னி. அந்த அம்மையாருக்கு சடயாண்டியென்று ஒரு புதல்வன் பிறந்தார். ஷை சடையாண்டியினுடைய சேஷ்ட புதல்வன் பொ. மு. ச. பால்வர்ணநாதன் சுவாமி அவர்கள். ஷை சுவாமியார் புதல்வன் தங்கையா நாடார் ஆகிய நான் இந்நூலை அச்சிலேற்றி இருக்கிறேன். இந்நூலை வேறு யாராவது என்னுடைய உத்தரவில்லாமல் அச்சிடவோ, இதில் அடங்கிய அம்சங்களை வேறுபடுத்தி அச்சிடவோ செய்வாராகில் 1887-வது வருஷத்தில் 25-வது ஆக்டின் 20-வது பிரிவு 6-வது உட்பிரிவின்படி யான்கோரும் நஷ்டத்திற்கு ஜவாப்தாரி ஆவதுடன், கிரிமினல்க்கும், தெய்வ சிட்சைக்கும் பாத்திய மாவார்கள் என்பதை இதன் மூலமாய்த் தெரிவித்துக்கொள் கிறேன்.

இப்படிக்கு,

**பா. தங்கையா நாடார்.**

அய்யா துணை.

## சாற்றுக்கவி.



பரப்பொருளாய்நிறைந்த நாராயணரைப்போற்றி
பார்பெரியநாரணனர் தன்கதையைப்பாட
காரணமாய்க்கார்மேகம் எங்கும்தானாய்த்தோன்ற
கண்மணியினடுவான கருணைதன்னைப்போற்றி
காரணமாய்கலி தன்னில்வந்துதித்த
நாரணனை அனுதினமும் அறிவாய்போற்றி
அகாரமென்னும்மறையாறு சாஸ்திரத்தை மனதிலுன்னி
மகத்தானமறையோனை போற்றிசெய்து
அரும்பொருள் ஆகமத்தை அருள்பெற்றோதினேனே
கார்மேகவண்ணனது கருணைபூத்துமறைநான்கின்முன்னேமேவ
பரம்பூத்தநாரணனும் ஓர்வடிவமானேன்
தசமூன்றும்ஒன்றும்ஒன்றாய் பூத்துவைகுண்டமோர்வடிவு
மானேன்
செயல்பூத்ததிருவருள் செய்திங்குநின்றாய்
பார்பூத்தசேரவளநாட்டில்மேவும் மனுபூத்தபூவண்டன்தோப்பி
லுதித்தாய்
நின்னருள்பூத்த பால்வர்ணசுவாமியானும்
கரம்பூத்தமலர்க்கொண்டே கருத்தில்வையும்
காரணமாய்நிறைந்தகுரு மலர்தாள்போற்றி
புகலுகிறேன் அகிலரத்தின சுருக்கந்தன்னை
நாரணர்தன் அருளைப்பெற்று
சீர்பெறவேசெக சோதிதன்னருளினாலே
செகத்திலுள்ளமனுவோர்க்கும் அன்புள்ளோர்க்கும்
எளிதிலுரை அறிவதற்காய் இயற்றினேன்
புஸ்தகத்தில் இன்னூல் நவின்றிட்டேன் நாரணர்
தன்னருளைப்போற்றி தங்கையா நாடார்
பொருளீந்துரை பகர்ந்தேனின்னூல்



நாராயணசுவாமி துணை.



# அகிலத் திரட்டு அம்மானை.

---

ஏரணியுமாயோன் இவ்வுலகில் தவசுபண்ணி
காரணம்போல்செய்தகதை கட்டுரைக்க பூரணமாய்
ஆராய்ந்துபாட அடியேன்சொல் தமிழ்க்குதவி
நாராயணர்பாதம்நாவினில் பாண்டவர் தமக்காய்தோன்றி
பகைதனை முடித்துமாயோன் வீன்றியகலியன்வந்த
விசனத்தால்கைலையேகிச் சான்றவர் தமக்காயிந்த
தரணியில்வந்தஞாயம் ஆண்டவர் அருளிச்செய்ய
அம்மானை யெழுதலுற்றேன் சிவமேசிவமேசிவமணியே
தெய்வமுதலேசிதம்பரமே தவமே தவமே தவக்கொழுந்தே
தாண்டவசங்காராதமியே யெங்களுட பவமேபவமே
பலநாளுஞ்செய்த பவமறுத்துன் னகமேவைத்
தெங்களையாழ்க்கொள்ளுவாய் சிவசிவசிவசிவ
அரகரா அரகரா அலையிலே துயிலாதிவராகவா
ஆயிரத்தெட்டாண்டினிலோர்பிள்ளை சிலையிலேபொன்மகர
வயிற்றினுள்செல்லப்பெற்று திரிச்சம்பதி தனில்
முலையிலேபொன்மகரப்பாலை உமிழ்ந்துபின் னுற்றதெச்சணம்
மீதிலிருந்து தான் உலகில்சோதனைபார்த்தவர்
வைய்ந்தரின்உவமைசொல்ல உகதர்மமாகுமே
திருமொழிசீதையாள்க்கு சிவதலம்
புகழுயெங்கும் ஒருபிள்ளை உருவாய்த்தோன்றி
யிகபரசோதனைகள்பார்த்து திருமுடிசூடிதர்மசீமையில்
செங்கோலேந்தி ஒருமொழியதற்குள்ளாண்ட
உவமையையுரைக்கலுற்றார்

நடை

சிவமேசிவமே சிவமேசிவமணியே
தவமேதவமே தவமே தவப்பொருளே
சீரானகன்னி செய்குமரிநன்னாட்டில்
பாரானதெட்சணமே பரமனுறுதலத்தில்
போர்மேனிமாயன் பிறந்துதவம்புரிந்து
ஓர்மேனிச்சாதி ஒக்கவரவழைத்து
நன்னியாய்நானூறு நாலுபத்தெட்டதினேய்
தண்ணீரால்தீர்த்த தர்மமதுதானதையும்
செய்திருந்தநன்மை தீங்குகலிகண்டிருந்து
வயதுமுகிந்தகலி மாளவந்தவாறுகளும்

முன்னாள்க்குரோணி முச்சூரனுடல்துணித்து
பின்னாளிரணியனைபிழந்துயிருகூருக்கி
ஈரஞ்சுசென்னி இராட்சதரையுஞ்செயித்து
வீரஞ்செய்மூர்க்கர் விடைதவிர்த்தேதுவரா
தேசாதிதேசர் சென்னிகவிழ்ந்தேபணியும்
தீசாதியான திரியோதனன் முதலாய்
அவ்யுகத்திலுள்ள அனைவோரையும்வருத்தி
எவ்வுகமுங்காண தேகக்குண்டமேகி
பொல்லாதநீசன் பொருளறியாமாபாவி
கல்லாதகட்டன் கபடக்கலியுகத்தில்
வம்பாலனியாயம் மகாதேவாகொண்டேகி
அம்பாரிமக்களுக் காகயிரக்கமதாய்
அறுகரத்தோன்வாழும் ஆழிக்கரையாண்டி
நறுகரத்தோனை நாராயணமூர்த்தி
உருவெடுத்துநாமும் உலகமேழுந்தழைக்க
திருவெடுத்தகோலஞ் சிவனருள்புரிய
ஈசனருள்புரிய இறையோனருள்புரிய
மாயனருள்புரிய மாதுமருள்புரிய
பூமாதுநாமாது புவிமாதுபோர்மாது
நாமாதுலட்சிமியும் நன்றாயருள்புரிய
சரசுபதிமாதே தண்டரளமாமணியே
அரசுக்கினிதிருத்தும் ஆத்தாளேஅம்பிகையே
ஈரேழுலகும் இரட்சித்தவுத்தமியே
பாரேழுமளந்த பரமேசொரித்தாயே
பத்துசிரசுடைய பாவிதனைசெயிக்க
மத்துநிகரொவ்வா வாய்த்ததசரதர்க்கு
சேயாயுதிக்கச் செடமெடுத்ததுபோலே
மாயாதிசூச்சமனுவாய் கலியுகத்தில்
பிறந்துவாறேன்மேல் பெரியதவம்புரிந்து
சிறந்தகுழலாள் சீதைசிறையதுபோல்
இருந்த சொரூபமதும் இமசூச்சவற்பதமும்
மருந்தாகத்தண்ணீர்மண் வைத்தியங்கள்செய்ததுவும்
தர்மவைத்தியமாய் தாரணியிலுள்ளோர்க்கு
கர்மமதுதீரக் கணக்கெடுத்துப்பார்த்ததுவும்
ஏகாபுரிக்கணக்கும் யேழுயுகக்கணக்கும்
மாகாளிமக்கள் வைகுண்டர்பாதமதை
கண்டுதொழுததுவும் கைகெட்டிச்சேவிப்பதுவும்
தொண்டராகச்சான்றோர் சூழ்ந்துநின்றவாறதுவும்
பண்டாரவேசம் பத்தினியாள்பெற்றமக்கள்
கொண்டாடிநன்றாய்க் குளித்துத்துவைத்ததுவும்
கண்டுமாபாவி கலைத்து அடித்ததுவும்
சாணாரினத்தில் சுவாமிவந்தாரென்றவரை
வீணாட்டமாக வீறுசெய்தஞாயமதும்
மனிதனேசுவாமி வெய்பென்றுதானடித்து

தனுவறியாப்பாவி தடியிரும்பிலிட்டதுவும்
அன்புபார்த்தெடுத்து ஆளடிமைகொண்டதுவும்
வம்பையழித்துயுகம் வைகுண்டந்தாகுகி
எல்லாயிடும்பும் இறையுமிகத்தவிர்த்து
சொல்லொன்ருல்நாதன் தொல்புவியையாண்டதுவும்
நாலுமூணுகணக்கு நடுத்தீர்த்தஞாயமதும்
மேலெதிரியில்லாமல் விணையில்லாதாண்டதுவும்
இன்னுள்விபரமெல்லாம் யெடுத்துவியாகரரும்
முன்னுள்மொழிந்த முறைநூல்ப்படியாலே
நாரணரும்வந்து நடத்தும்வளமைதன்னை
காரணமாயெழுதிக் கதையாய்ப்படித்தோர்க்கு
ஒய்யாரமாக உள்விணைநோய்தீருமென்று
அய்யாவுமிக்கதயை அருளுகிருரன்போரே
பேயையெரித்தும் புதுமைமிகச்செய்ததுவும்
ஆயர்குலத்தை ஆளாக்கிக்கொண்டதுவும்
சான்ருேர்குலத்தை தற்காத்துக்கொண்டதுவும்
நீண்டபுகழ்தர்மம் நிறுத்திஅரசாண்டதுவும்
பத்தும்பெரிய பாலருக்காகவேண்டி
சத்தளியும்பாவி தடியிரும்பிலுமிருந்து
படுத்தினபாடெல்லாம் பாலருக்காகப்பொறுத்து
உடுத்ததுணிகளைந்து ஒரு துகிலைத்தான்வருத்தி
தேவஸ்திரீகளையுஞ் சேர்த்தெடுத்துப்பாலருக்காய்
பாவக்கலியுகத்தில் பாராத்தியங்கள்பட்டு
நாலுபிறவி நானிலத்திலேபிறந்து
பாலுகுடித்தாண்டி பறுபதத்தின்மேல்தாண்டி
மனுக்கண்காணுமல் மறைந்தொருமூன்றுநாளாய்
தானுந்தவமதுவாய் சாயூச்சியமேபுரிந்து
நல்லோரையெழுப்பி நாலுவரமுங்கொடுத்து
பொல்லாரைநரகில் போட்டுக்கதவடைத்து
வானமிடியால் மலைகளிழகிடவும்
கானமதுநாடாய் கண்டதுவுஞ்சூரியனும்
தெக்குவடக்காய்ச் திசைமாறிநின்றிடவும்
ஒக்கவேநாதன் உரைக்கிருரன்போரே
அய்யாவுரைக்க அன்போர்கள்தங்கள்முன்னே
மெய்யாயெழுதி விதிப்பேனுனென்பதெல்லாம்
ஆனைநடைகண்டு அன்றில்நடையதொக்கும்
சேனைசரிவதென்னச் சிற்றெறும்புபற்றியென்ன
குயில்கூவக்கண்டு கூகைக்குரலாமோ
மயிலாடக்கண்டு வான்கோழியாடினதேன்
மடந்தைதேனீக்கள் வைத்தரசமறிந்து
கடந்தைதாடேற்றுங் கதைபோலேயானடியேன்
நாலுமூணுயுகமும் ஈடுத்தீர்க்கவந்தபிரான்
மேலோன்திருக்கதயை யெழுதுவேனென்றதொக்கும்
எம்பிரானுன இறையோனருள்புரிய

தம்பிரான்சொல்லத் தமியேனெழுதுகிறேன்
எழுதுவேனென்றதெல்லாம் ஈசனருள்செயலால்
பழுதொன்றும்வாராமல் பரமேசொரிகாக்க
ஈசன்மகனே இயல்வாய்யிக்கதைக்கு
தோசமகலச் சூழாமல்வல்வினைகள்
காலக்கிரகங் கர்மசஞ்சலமானதுவும்
வாலக்குருவே வாராமலேகாரும்

### தெச்சணபுதுமை

காருமடியேன் கௌவைவினைதீர
வாருமடியேன் மனதுள்குடிகொள்ளவே
தர்மயுகமாக்கித் தாரணியையாளுதற்கு
கர்மக்கலியில் கடவுளார்வந்தகதை
சாகாதிருக்கும் தர்ம அன்புள்ளோர்முன்
வாகாகத்தர்ம அம்மானைதான்வகுத்தார்
வகுத்தபரமனுக்கும் மாதாபிதாவதுக்கும்
தொகுத்தகுருவதுக்குந் தோத்திரந்தோத்திரமே
தோத்திரமென்று சுவாமிதனைத்தொழுது
இராத்திரிதூக்கம் நான்வைத்திருக்கையிலே
ஆண்டானஆண்டு ஆயிரத்துப்பதினறில்
கண்டானைக்கண்டேன் கார்த்திகைமாதமதில்
தெய்தியிருபத்தேழில் சிறந்தவெள்ளிநாளையிலே
சுகுதியுடனித்திரையில் சுபக்கியானலக்கனமதில்
நாதனெனருகில் நலமாகவந்திருந்து
சீதமுடனெழுப்பிச் சொன்னரேகாரணத்தை
காப்பிலொருசீர் கனிவாய்மிகத்திறந்து
தார்ப்பிரியமாகச் சாத்தினரெம்பெருமாள்
மகனேயிவ்வாய்மொழியை வகுக்குங்காண்டமதுக்கு
உகமோரறிய உரைநீமுதல்க்காப்பாய்
அதின்மேல்நடப்புன் னுள்ளேயகமிருந்து
சரிசமனய்நான்வகுப்பேன் தானெழுது காண்டமதை
நானுரைக்க நீயெழுதி நாடுபதிநாலறிய
யானுரைக்க நீயெழுதி அன்போர்கள்தங்கள்முன்னே
வாசிக்கக்கேட்டு மகிழ்ந்திருந்த அன்போர்க்கு
பூசித்துநின்ற பூரணங்கள்கிட்டுமடா
பழித்தோர் நகைத்தோர் பதிலெதிரியாய்ப்பறைந்தோர்
களித்தோர்வறுமைகண்டு கடுநரகம்புக்கிடுவார்
மலடியுமிக்கதையை மாவிருப்பத்தோடிளகி
தலமளந்தோனைநாடி தான்கேள்ப்பாளாமாகில்
என்னுணை பார்பதியாளீஸ்பரியுந் தன்னுணை
உன்னுணைமதலை யுடனேகிடைக்குமடா
குட்டமதுகொண்டோர் குணம்வைத்துக்கேட்பீரால்
திட்டமதுசொன்னேம் தீருந்திருவாணை
நாராயணரும் நல்லதிருச்செந்தூரில்

பாரோர்கள்மெய்க்கப் பள்ளிகொண்டங்கிருந்து
ஆண்டாயிரத்து அவென்றலக்கமதில்
நன்ருனமாசி நாளான நாளையிலே
சான்ருேர்வளருந் தாமரையூர் நல்பதியில்
மூன்ருனசோதி யுறைந்திருந்ததெச்சணத்தில்
வந்திருந்தநல்ப்பதியின் வளமைகேளம்மானை
மூவாதிமூவருறைந்திருக்குந் தெச்சணமே

### சீமையினியல்பு.

தேவாதிதேவர் திருக்கூட்டத்தெச்சணமே
வேதப்புரோகி விளங்கிருந்த தெச்சணமே
நாதாந்தவேதம் நாடுகின்ற தெச்சணமே
அகத்தீசுரரும் அமர்ந்திருக்கும் தெச்சணமே
மகத்தானமாமுனிவர் வாழுகின்ற தெச்சணமே
தாணுமால் வேதன்ருமதிக்குந் தெச்சணமே
ஆணுவஞ்சேர்காளி யமர்ந்திருக்குந் தெச்சணமே
தோசமிகுகர்மம் துலைக்குகின்ற தெச்சணமே
நீசவினைதீர நீராடுந் தெச்சணமே
மாதுகுமரி மகிழ்ந்திருக்குந் தெச்சணமே
பாறுபடவு பரிந்துநிற்குந் தெச்சணமே
ஆனைபடைகள் அலங்கரிக்குந் தெச்சணமே
சேனைபடைத்தளங்கள் சேருகின்ற தெச்சணமே
ஆகமக்கூத்து ஆடுகின்ற தெச்சணமே
பார்வதியாள்வந்து பரிந்திருந்த தெச்சணமே
சீர்பதியையீசன் செய்திருந்த தெச்சணமே
மாயனுய்த்தோன்றி வந்திருந்த தெச்சணமே
ஆயனுர்க்கூத்தாடுகின்ற தெச்சணமே
தெச்சணத்தின் புதுமை செப்பமுடியாது
அச்சமில்லாப்பூமி அடவுகேளம்மானை.

### விருத்தம்

கச்சணிதனத்தாளோடு கரமிடத்தண்ணலீசர்
பச்சமால் முனிவர்தேவர் பதுமலக்கமலதேவி
நிச்சயமானகன்னி நிறைந்திடும் பூமியான
தெச்சணுபுதுமைசொல்லிச் சீமையினியல்புஞ் சொல்வோம்

### நடை

புன்னைமலர்காவில் பொறிவண்டியல்பாட
அன்னமது குதித்தாராடுஞ் சோலைகளும்
கன்னல்கதலி கரும்பு பலாச்சுளையும்
என்னேரமும்பெருகி யிலங்கிநிற்குஞ் சோலைகளும்
எங்கெங்கும் நாதமிடுகின்ற பேரொலியும்
பொங்குங்கதிரோன் பூமேல்குடை நிறைய
நந்தாவனம் பூத்து நகரிமணம்வீச
செந்தாமரைபூத்துச் செலம்பு மணம்வீச

அரகராவென்று அபயமிடுமொலியும்
சிவசிவாவென்று துதிக்கின்ற பேரெலியும்
மடியில்பணம்போட்டும் மார்குத்தும் பேரொலியும்

### சீமையின் தர்மநீதம்

முடியும்மடியில்லா முதலோனைப் போற்றொலியும்
முத்தாலேபாண்டி முதல்மடவா ராடொலியும்
மத்தாலேமோரு மடமடென்ற பேரொலியும்
சமுத்திரத்துமுத்து தான்கரையில் சேருவதும்
குமுத்திரளாய்ப்பெண்கள் குரவையிடுமொலியும்
சங்கீதமேளந் தானோதும் வாலையமும்
மங்களகீதம் வகுக்குகின்ற வாலையமும்
காரணவேதக் கல்விமொழியாலமும்
வாரணத்தின்மீதில் வரும் பவனியாரபமும்
மாவேறிவீதி வரும் பவனிவீதிகளும்
கூரையிலேமுத்துக்குலை சாய்க்கும் கன்னல்களும்
பாதையிலே பார்ப்பார்க்கு பைம்பொன்னளிப்பாரும்
அன்னமிடுசாலைகள் தோராலையங்கள் வைப்பாரும்
சொர்ணமளித்து சொகுசுபெற நிப்பாரும்
சிவனே சிவனேயெனச் சிவகருத்தாய் நிப்பாரும்
தவமே பெரிதெனவே தவநிலைகள் செய்வாரும்
கோவிந்தாவென்று குருபூசை செய்வாரும்
நாவிந்தையாக நால்வேதம் பார்ப்பாரும்
மாரிபொழியு மாதமொன்று மூன்றுதரம்
ஏரிபெருகி யேரடிக்க மள்ளரெல்லாம்
நாத்துநடும்புரசி நளினமிகச் சொல்லொலியும்
கூத்துவொலியுங் குருபூசை தன்னொலியும்
எப்பாரெல்லாம்புகழும் யேகாபதியதுபோல்
தப்பாததெச்சணத்தின் றண்மையிதம்மானை.

### விருத்தம்

காமனைஎரித்தயீசன் களலிணைமறவாவண்ணம்
பூமண குழலாள்கன்னி பொருந்திடும் நகரியான
சீமையின்குணமுஞ்சொல்லிச் சிறந்திடும் பூமிதன்னில்
நேமவர்தர்மஞாய நிலைதனைநிகழ்த்துவாரே

### நடை

ஆதிப்பொருளை யனுதினமுந்தானேக்கி
சோதியுடநீதஞ் சொல்லுவேனம்மானை
தெய்வமனுநீதம் தேசராசநீதம்
மெய்யருந்தும்நீதம் விளம்புவேனம்மானை
ஆயிரத்தெட்டுவான திருப்பதிக்கும்
வாயிதமாய்ப்பூசை வகுப்புமுடங்காது
கோயில் கிணறு குளங்கரைகளானதையும்

## தெய்வநீதம்.

தேய்வுவராதே சேருமதில்கோட்டைகளும்
எளியோர் வலியோரென்றெண்ணி மிகப்பாராமல்
களிகூரநன்ருய்க் கண்டவழக்கேயுரைப்பார்
அன்னமடம்வைத் தகங்களிகூற
என்னேரம் பிச்சை இடுவார் எளியோர்க்கு
பந்தலிட்டுத்தண்ணீர் பக்தர் தமக்களிப்பார்
எந்தயிரவும் இருந்து பிச்சையீவாரும்
ஆறிலொருகடமை அசையாமல் தான்வேண்டி
தேறியேசோழன் சீமையரசாண்டிருந்தான்
சிவாயநமவென்ற சிவவேதமல்லாது
கவாய்மாய்ச்சொல்ல கருத்தறிய மாட்டார்கள்
ஆறிலொருகடமை அதுதரவே மாட்டோமென்று
மாருருவர்சொன்னல் மன்னன்மறுத்தேகேளான்
பன்னிரண்டுஆண்டு பரிவாய் இறையிறுத்தால்
பின்னரண்டாண்டு பொறுத்திறை தாருமென்பார்
இவ்வகையாய்ச்சோழன் ராஜ்ஜியத்தை ஆண்டிருந்தான்
அவ்வகையாய்ச்சோழன் ஆண்டிருக்கும் நாளையிலே
மெய்யறிவுகொண்ட மேலான் பதத்தெளிவோன்
தெய்வத்திருநிலைமை செப்புவேனம்மானை

### விருத்தம்

இவ்வகையாகச் சோழனிருந்து ராஜ்ஜியத்தையாள
கவ்வைகளில்லாவண்ணம் கலியுகம் வாழும்நாளில்
செவ்வகைதிருவேயான திருவுளக்கிருபைகூர்ந்து
தெய்வமெய்நீதம்வந்த செய்தியை செலுத்துவாரே

### நடை

வாரமதில்லாமல் மன்னன் அதிசோழன்
நீதமாய்பூமி நிறுத்தியரசாளுகையில்
கண்டுவேதாவும் கமலத்திருமகளும்
நின்றுதெய்வாரும் நாராயணரும்மெச்சி
அன்றந்தமாமுனிவர் எல்லோரும்தான்கூடி
சென்றுசிவனர் திருப்பாதம் தெண்டனிட்டு
சாகாதிருக்கும் சமுலத்திருப்பொருளே
ஏகாபரனே எங்கும்நிறைந்தோனே
மூலப்பொருளே முதல்பொருளே காரணமே
சாலப்பொருளே தவத்தோரரும்பொருளே
காரணரேவேதா நாடிப்பெரும்போரில்
காரணரே நீருங்கனல் கம்பமானேரே
ஆலமுதருந்தி யரவையுமிகவுரித்து
கோலத்திருக்கழுத்தில் கோர்வையாயிட்டோனே
ஆனைதனையுரித்து அங்கமெல்லாம்புனைந்து

மானேந்தியகரனே மழுவேந்தியசிவனே
கோனேந்திருகிரியில் குடியிருக்குங்கோவே
தானேயிருக்குந் தவமேதவப்பொருளே
ஆதியாய்நின்ற அதியதிருமுதலே
சோதியே சோழன் சொல்நெறியைக் கேளுமையா
வாடிவந்தபச்சினுக்கு வாளாலவனுடம்பை
தேடிவந்தவேடனுக்கு துடையரிந்தீந்தவன்காண்
ஆறிலொருகடமை அவன்வேண்டிற்ருனெனவே
மாறியவன்புவியோர் மனதில்கவ்வைகளில்லை
கோவில்சிவாலயங்கள் குளங்கூபம்வாவிகளும்
சேவித்தனுதினமுஞ் செய்வானேதானதர்மம்
ஆதலால்சோழன் அரசாளுஞ்சீமையிலே
நீதமாய்த்தெய்வம் நிலைநிறுத்தவேணுமையா
என்றுமிகத்தேவர் இறஞ்சித்தொழுதிடவே
கண்டிருந்தயீசர் கரியமாலோடுரைப்பார்
நல்லதுகாண் மாயவரே நாட்டைமிகக்கார்க்க
வல்லவனேபூமா தேவி தனைவருத்தும்
வருணன்றனையழைநீ மாதமும்மாரிபெய்ய
கருணைக்குடைவிரிக்க கங்குல்தனையழையும்
வாசியதுபூவாய் வளங்கவரவழையும்
தோசிமறலியையும் சொல்லிவிலக்கிடுநீ
குருபூசைசெய்யுங் கூட்டமதில்ச்சிவமாய்
திருவீற்றிருக்கச் செய்திடுநீகோலமது
நித்திராதேவி நித்தமந்தப்பூமியிலே
மத்திபமாய்க்காக்க வையென்ருரீசுரரும்
நினைத்தோர்க்குறுதி நினைவிலறிவுதோன்றி
எணைத்தோத்திரங்கள் இளகாமல்வையுமென்ருர்
பன்றியோடேகடுவாய் பாவித்திருந்திடவும்
அன்றிலோடேகுயிலும் அன்புற்றிருந்திடவும்
கீரியும்பாம்பும் கிளைபோல்குழைந்திடவும்
வாரிகுளம்போல் வரம்பிலேநின்றிடவும்
இட்டவிரைகளீரெட்டுக் கண்டிடவும்
பட்டியும்முயலும் பண்புற்றிருந்திடவும்
பசுவும்புலியும்வொருபக்கம் நீருண்டிடவும்
கசுவுகரைபுரள கரும்புமுத்தீன்றிடவும்
சாஸ்திரவேதஞ் சமையம்வழுகாமல்

மனுநீதம்

சூத்திரமாகத் துல்வப்படுத்திடவும்
மனுவோர்தழைத்து மக்களொருகோடிபெற்று
இனிதாகநாமு மிறவாதிருக்கவென்றும்
சந்திரசூரியர்கள் தட்டுமிகமாருமல்
இந்திரருந்தேவரிறஞ்சித் தொழுதிடவும்
தானதவங்கள் தப்பிமிகப்போகாமல்

ஈனமில்லாமலிது தெய்வநீதமெல்லாம்
மானம்நிறுத்திவையென்றுரீசுரரும்

### விருத்தம்

இப்படித்தெய்வநீத ஈசுரரிதுவேகூற
செப்படிமறவாவண்ணந் திருமருகோனுஞ்செய்தார்
அப்படித்தவறுநீத அம்புவிதனிலேவாழ
மல்ப்பணிகுழலார்தங்கள் மனுனெறிவகுத்தார்தானே

### நடை

தெய்வநிலமை செப்பியபின்றேசமதில்
நெய்நீதப்பெண்கள் நிலைமைகேளம்மானை
கணவன்மொழியக் கலவுமொழிபேசாத
துணவிநிலைமை சொல்லுவேனம்மானை
கல்க்கதவுபோலே கற்புமனக்கதவு
தொல்க்கதவுஞானத் திறவுகோலம்மானை
அன்பாகப்பெற்ற அன்னைபிதாவதுக்கும்
முன்பானசோதி முறைபோலுறவாடி
போற்றியேநித்தம் பூசித்தனுதினமும்
சாற்றியசொல்லைத் தவறுமலேமொழிவாள்
அரசன்றுயில ஆராட்டிவோராட்டி
கரமானதுதடவிக் கால்தடவிநின்றிடுவாள்
துயின்றதறிந்து துஞ்சுவாள்மங்கையரும்
மயன்ற்றவொருச்சாமம் மங்கையெழுந்திருந்து
முகத்துநீரிட்டு நான்முகத்தோனையுந்தொழுது
அகத்துத்தெருமுத்த மலங்காரமாய்ப் பெருக்கி
பகுத்தாகநித்தம் பாரிப்பார்பெண்ணர்கள்
மனுநீதஞ்சொல்லி வகுக்கமுடியாது
கனியானபெண்கள் கற்புநிலைமாறுல்
வழியானசாதி வளமைகேளம்மானை
சான்றோர்முதலாய்ச் சக்கிலியன்வரையும்
உண்டானசாதி வொக்கவொருயினம்போல்
தங்கள்தங்கள்நிலைமை தப்பிமிகப்போகாமல்
திங்கள்மும்மாரி சிறந்தோங்கியேவாள
செல்வம்பெருகச் சிவநிலமைமாறுமல்
அல்வல்தினஞ்செய் தன்புற்றிருந்தனராம்
தான்பெரிதென்று தப்புமிகச்செய்யாமல்
வான்பெரிதென்று மகிழ்ந்திருந்தாரம்மானை
ஒருவர்க்கொருவ ரூழியங்கள்செய்யாமல்

### கைலை வளம்

கருதல்சிவன்பேரில் கருத்தாயிருந்தனராம்
செய்யும்வழக்குச் சிவன்பேரிலல்லாது
வையம்வழக்கு வாராதேயிருந்தார்
அடிபணியவென்று அலச்சல்மிகச்செய்யாமல்

குடிபொருந்திவாழ்ந்து குடியிருந்தாரம்மானை
சேயினுடஆட்டுச் செவிகேட்டிருப்பதல்லால்
பேயினுடஆட்டோர் பூதரறியாதிருந்தார்
இந்தப்படிமனுவோ ரெல்லாமிருந்துவொரு
விந்துக்கொடிபோல் வீற்றிருந்தாரம்மானை

விருத்தம்

இப்படித்தெய்வ இராச்சியநீதமும்
மல்ப்படித்தேச மனுவுடநீதமும்
நல்ப்புடன்றேசம் நாடிவாழ்வதை
கல்ப்புரீசர் கண்டுமகிழ்ந்தனர்

நடை

முத்தானசீமை மூன்றுநீதத்தோடு
பத்தாசையாகப் பண்பாய்த்தழைத்திடவே
நாலானவேதம் நல்லகலியுகமாய்
மேலாம்பரமாய் விளங்கியிருந்திடவே
தேவருரையும் திருக்கயிலைதன்வளமை
பாவலர்கள்முன்னே பாடினாரம்மானை
ஈசருரையும் யிரத்தினகிரிதனிலே
வாசவனுந்தேவர் மறையோரும் வீற்றிருக்க
பொன்னம்பலநாதர் பொருந்திருக்குமண்டபமும்
கின்னரர்கள்வேதம் கிளர்த்துகின்றமண்டபமும்
வேதப்புரோகி விளங்குகின்றமண்டபமும்
சீதவுமையாள் சிறந்திலங்குமண்டபமும்
நீதத்திருமால் நிறைந்திலங்குமண்டபமும்
ஆதவனுஞ்சந்திரனும் அவதரிக்குமண்டபமும்
வேதாவுருத்திரனும் வீற்றிருக்குமண்டபமும்
ஆருமறிந்து அளவிடக்கூடாத
பாருபடைத்த பரமேசுரனுரை
விசுவாசமேலோர் விமலனடிவணங்கி
வசுவாசுதேமன் வந்துமிகவணங்க
மறைவேதசாஸ்திரங்கள் வந்துமலரோனடிவணங்க
இறவாததேவ ரிறஞ்சிமிகவணங்க
யமதர்மராசனெப்போதும் வந்துநிற்க
பூகமழும்வேதம் புரோகிதர்வந்துதெண்டனிட
காமதேவன்முதலாய்க் கணக்கர்மிகுமுனிவர்
நாமநெடியோன்பதத்தை நாடோறும்போற்றிநிற்க
தலைவனிருக்குந் தங்கத்திருக்கயிலை
நிலமையெடுத்துரைக்க நிலையாதுவம்மானை

விருத்தம்

ஆறுசெஞ்சடைசூடியவய்யனார்
அமர்ந்துவாழுங்கயிலை வளமதை
கூறக்கூறக்குறைவில்லைக்காணுமே
கொன்றைசூடிய அண்டாதிருப்பதம்

வாறுவாறு வகுக்கமுடிந்திடா
மகிழுங்குண்டவளஞ் சொல்லியப்புறம்
வேறுவேறு விளம்பவேகேளுங்கோ
மெய்யுள்ளோராகிய வேதஅன்பரே

நடை

கயிலேவளமை கட்டுரைக்கக்கூடாது
அகிலம்வளமை யருளுகிறேனம்மானே
தேவாதிதேவர் திருக்கூட்டமாயிருக்க
மூவாதிமூவர் மிக்கவொருமிக்கவொரு
சிங்காசனத்தில் சிறந்திருக்கும்வேளேயிலே
மங்காததேவி மாதுதிரு லட்சுமியாள்
ஈரேழுலக மிரட்சித்த வுத்தமியாள்
பாரேழும்படைத்த பரம திருலட்சுமியாள்
நன்ருயெழுந்திருந்து நாராயணர் பதத்தை
தெண்டனிட்டு லட்சிமியும் செப்புவாளம்மானே
தேவரீரென்னேத் திருக்கல்யாணமுகித்து
கோவரிகுண்டக் குடியிருப்பிலேயிருத்தி
போகுவதென்ன புதுமையெனக்கறிய
தேவரீர் நீர்தான் செப்பிடீர்யென்றுரைத்தாள்
பின்னுமந்த லெட்சுமியாள் பெருமாள்தனேத்தொழுது
என்றுமிருக்க யிறவாதிருப்போனே
ஆதியால்சூட்ச மளவெடுக்கக்கூடாத
நாதியாய்நின்ற நாராயணப்பொருளே
தேவாதிக்கெல்லம் திருமுதலாய்நின்றோனே
மூவாதிக்கெல்லாம் முதன்மையாய் நின்றோனே
உமக்குயெதிரி யுலகமதிலுண்டோகாண்
தமக்கெதிரிவந்த தன்மை மிகவுரையும்
யுகத்துக்குகம்பிறந் துலகிடத்திலேயிருக்க
அகத்துவந்தனுாயம் அருளுமென்ருளம்மானே
என்றுதிருவும் ஈதுரைக்கமாயவரும்
நன்றுநன்றென்று நாராயணருரைப்பார்
சத்திசிவமுந் தானுதித்த காலமதில்
எத்திசையும் நாமிருபேர் பிறப்பதிலும்
ருத்திரருமயே சுரருதித்த நாளதிலும்
பக்தியுள்ளதேவர் பரநாதர் நாளதிலும்
வானோர்கள்தெய்வார் மறைவேத சாஸ்த்திரமும்
ஈனமாய்ச்சண்டனிவன் பிறந்த நாளதிலும்
ஆதித்தன்வாயு வண்டபிண்டந் தோன்றியபின்
ஈதுத்தகாலம் ராச்சியமொன்றுண்டு கண்டாய்
அவ்வுகத்தைக்கண் டாதிபிரமா மகிழ்ந்து
இவ்வுகத்துநாம் மென்னவிடுவோமென்று
மாலும்பிரமாவும் மாயாதிருப்போனும்
ஆலோசித்து ஆகமத்தைத்தான்பார்த்து
நீடியயுகமெனவே நியமித்துறுதிகொண்டு

தேடியமுப்பொருளும் செப்பினர்காணம்மானை
அவ்வுகத்தைஈசனார்ப்பரித்த காலமதில்
இவ்வுகத்துக்காரை இருத்துவோமென்றுசொல்லி
எல்லோருங்கூடி யிதமித்தாரம்மானை
தில்லையாரீசன் திருவேள்விதான் வளர்க்க
நல்லையாவேள்வி நன்ருய்வளர்த்திடவே
பிறந்தான்குரோணி பெரியமலைபோலே
அறந்தானறியா அனியாயக்கேடனுமாய்
பிண்டம்நிறையும் பொல்லாதான் தன்னுடம்பு
அண்டமமைய அவன் பிறந்தானம்மானை
முகங்கண்களெல்லாம் முதுகு பிறமேலாட
நகக்கரங்கள்கோடி கால்களொருகோடி
தவங்களறியாச் சண்டித்தடிமோடன்
குரோணியவனுயரங்கோடி நாலுமுழமாய்
கைலைகிடுகிடென்னுங் கால்மாறி வைக்கயிலே
அயிலங்கிடுகிடென்னும் அவனெழுந்தானம்மானை
இப்படியேகுரோணி என்றவொரு அசுரன்
முப்படியேநீடிய யுகத்திலிருந்தான்காண்
இருந்துசிலநாள் இவன்றூங்கித்தான்விழித்து
அருந்தும்பசியால வனுயர்ந்து பார்ப்பளவில்
பாருகங்காணுன் பலபேருடல்காணுன்
வாருதிரைநீரை வாரிவிழுங்கினன்காண்
கடல்நீரத்தனையுங் கடைவாய் நனையாமல்
குடலெல்லாமெத்தக் கொதிக்குதெனவெகுண்டு
அகிலமுழுங்க ஆர்ப்பரித்து நிர்ப்பளவில்
கைலைதனைக்கண்டு கண்கள்மிகக்கொண்டாடி
ஆவியெடுத்து அவன்விழுங்குமப்போது
தாவிக்குதித்துத் தப்பினர் மாயவரும்
மாயவரும்வோடி மண்ணுலகம்புகுந்து
தூயவருமங்கே சிவனை மிகநினைத்து
தவசியிருந்தார்காண் தாமோதரனாரும்
தவசுதனிலீசன் சன்னியாகி போலேவந்து
ஆருநீயிந்த ஆழவனந்தனிலே
ஏதுநீதவசு யெனைநினைந்தவாறேது
என்றுசன்னாசி இதுவுரைக்க மாயவரும்
பண்டுபட்டபாட்டைப் பகர்ந்தாரவரோடே
கைலையெமலோகங் கரைக்கண்டர் சத்திவரை
அகிலமதைக்குரோணி யசுரனென்றமாபாவி
விழுங்கினான்நானும் உபாயமாய்த் தப்பிவந்தேன்.
பளிங்குமலைநாதன் பாரத்தேவாதிமுதல்
பண்டுபோல்நாளும் பதியிலிருந்திடவே
என்றுங்கைலை இலங்கியிருந்திடவும்
முன்றுசெய்தபாவி முகமுமவனுடம்பும்
துண்டாறதாக தொல்புவியிலிட்டிடவும்

கண்டகண்டமாய்ப்போடக் கடியவரமெனக்கு
தண்டமிழீர்ரீரும் தரவேதவசிருந்தேன்
என்றுதிருமா லெடுத்துரைக்கவேயீசர்
மன்றுதனையழந்த மாலோடுரைக்கலுற்றார்
கேளாய்நீவிஷ்ணுவே கேடன்குறோணிதனை
தூளாக்கியாறு துண்டமதுவாக்கி
விட்டெறிந்தால் அவனுதிரம் மேலுமொருயுகத்தில்
கெட்டுக்கிழையாய்க் கொடியசூரக்குலமாய்
பிறக்குமவனுதிரம் பொல்லாதான்றன்னுடம்பு
துண்டமொன்றுதானும் தொல்புவியிலேகடிய
குண்டோமசாலியனாய்க் குவலயத்திலேபிறப்பான்
அப்படியேகுரோணி அவனுதிரமானதுவும்
இப்படியேயாறு யுகத்துக்கவனுடம்பு
வந்துபிறப்பான்காண் மாத்தானாயுந்தனுக்கு
யுகத்துக்குகமே உத்தமனாய் நீபிறந்து
அகத்துக்கவன்பிறப்பாறு யுகமதிலும்
உண்டுமவன் சீவனுயிரழிவு வந்துஅன்னாள்
பண்டுநடுக்கேட்டுப் பாவியவனுயிரை
கொன்றுபோட்டே நரகக்குழிதாக்க நாள்வருங்காண்
என்றுவிடைகொடுத்தார் ஈசுரர்காணம்மானை
அன்றுவிடைவேண்டி அதிகதிருமாலும்
குன்றுபோல்வந்த கொடியபடுபாவி
குறோணிதனைச்செயிக்க கோபம்வெகுண்டெழுந்து
சுரோணிதவேதன் துடியாய் நடந்தனராம்
நாகத்தணைகிடந்த நாராயணமூர்த்தி
வேகத்தால் குறோணிதனை வெட்டிப்பிழக்கலுற்றார்
வெட்டினாராறு மிகுதுண்டமம்மானை
துண்டமதாறுந் தொல்புவியிலேபோட்டு
பிண்டமதைச்சுமந்து போட்டனர்காணம்மானை
அந்தக்குறோணி அவனுதிரமானதையும்
கொந்துகொந்தாக குளம்போலே குண்டுவெட்டி
உதிரமதைவிட்டு உயர்ந்தபீடம்போட்டு
சதிர்யுகமெனவே தான்வகுத்தாரோர்பீடத்தை
அவ்வுகத்திலேயுதிரம் அசுரர்க்குலமாகி
முவ்வுகத்துப்பாவி முடிந்தவொரு துண்டமதை
குண்டோமசாலி எனவேகொடியவனாய்
பண்டோர்குறோணி பாதக ஆறுதுண்டமதில்
வந்துபிறந்தான் சதிரவையகதிதிலம்மானை
முந்துபிறந்த முழுமோசமரனதிலும்
ம்ந்துமுகமாய் மாபாவிதன்னுயிரை
நானூறாயிரமுழங்கள் நாடுமவன்கரங்கள்
முன்னூறு கால்கை வேள்கள்துதிபோலே
உடைதோளுடம்பு உருவறியாமாபாவி
படைத்தோனையறியான் பாரியென்றுந்தானறியான்

அட்டைபோலேசுருண்டு அம்மிபோலேகிடப்பான்
மட்டைபோலேதிரிவான் வயிறுமிகப்பசித்தால்
அன்னுகத்திலுள்ள அசுரக்குலங்களையும்
தன்வயிற்றுக்கிட்டு தடிபோலுருண்டிடுவான்
இப்படியேநாளுமிவன் குலங்களானதெல்லாம்
அப்படியேதின்றவன் பசிகளாற்ருமல்
அய்யையோவென்றலறினன் காணம்மானை
மெய்யையனுன விறுமாவதுகேட்டு

### சதிரயுகம் குண்டோமசாலி பாடு

சிவனைத்தொழுது சொல்லுவாரம்மானை
தவமேதவப்பொருளே தாண்டவசங்காரவனே
எவனுவொருத்தனிட்ட சத்தமானதிலே
தவலோகமெல்லாந் தானலேவதேதெனவே
மாயனதுகேட்க வகுப்பாரங்கீசுரரும்
ஆயனேநீயுமறியலேயோ ஞாயமது
குண்டோமசாலி கொடியமாபாவியனுய்
பண்டோர்குரோணி பாதகன்றன்றுண்டமதாய்
பிறந்தானவனும் பேருதிரத்தன்கிழையாய்
இறந்தாரவர்களிரிரையாய் அவன்றனக்கு
ஆனபசிகள் ஆற்ருமலேயவனும்
வானமதுஅலேய வாய்விட்டான்கண்டாயோ
என்றுசிவனுரீ துரைக்க மாயவரும்
அன்றுமகாமால்லக் குண்டோமசாலினுக்கு
இறையாகத்தேவர்களை யேற்றநாங்கிலாக்கி
வரையானதைத்தூண்டி மறையைக்கயிருக்கி
வாயுவைத்தோணி வருணன்றனைநிரப்பாய்
தேயமதைச்சூளத் திரைகடலேத்தான்வருத்தி
ஓடையாய்ச்சதிர யுகம்வழியேதானேவி
தேடரிமாயன் திருவோணிதானேறி
மூவாதிமூவ ரோணிதனைத்தள்ளிவர
காவாலிமாயன் கன்னியிலேதூண்டலிட
சதிர்யுகமாமுஞ் சண்டித்தடிமூடன்
எதிரேவருமாற்றில் இரையைமிகக்கண்டாவி
நாடிப்பசிதீர நல்லயிரையாகுமென்று
ஓடிவந்துபாவி யுழுங்கினன் றூண்டல்தனை
தூண்டலுமுங்கிச் சுரண்டிமிகக்கொழுகி
மாண்டனன்காண்பாவி வலியமலேபோலே
பாவிமடிய பரமேகரனுரும்
தாவிச்சலத்தால் சதிரயுகமழித்தார்
சதுரயுகமழியத் தானவர்களெல்லோரும்
மதுரமொழியீசன் மலரடியைத்தான்பூண்டு
தேவர்மறையோர் தெய்வேந்திரன்முதலாய்
மூவர்களும் வந்து முதலோனடிபணிந்து

பரமனேநீரும் படைத்தயுகம்ரண்டதிலும்
வரமேதுங்கேட்டு வாழ்ந்தவரைக்கண்டிலமே
அந்தசந்தமில்லா தாணுவங்கள்தனேமில்லா
இந்தவகைச்சாதி இல்லாமலீசுரரே
பிறந்தாலவனும் பெரியோனடிவணங்கி
வரந்தாருமென்று வாளாயுதத்தோடே
வலுவும்பெலமும் வாய்த்தசூரப்படையும்

**நெடுயுகம், தில்லைமல்லாலன் மல்லோசி வாகனன்பாடு**

கொலுவும்பெரிய குவிந்தமதில்கோட்டைகளும்
கெட்டுக்கிளை பாணிக்கிரணமதுவுடனே
நாட்டுப்பயிரால் நாளும்பசிதீர்ந்து
இருந்துபொறுக்க இராச்சியமொன்றுண்டாக்கும்
வருந்திமகாதேவர் மலரோனடிவணங்கி
ஆதிசிவனுமதிக சந்தோசமதாய்
வேதியரைத்தான்வருத்தி விளம்புவாரீசுரரும்
மாலும்பிரமாவும் வாய்த்த பரமேசுரரும்
நாலுமறையோரும் நடுவர்மிகக்கூடி
முன்னுள்ளதுண்டமொன்றை ரண்டாக்கிவைத்து
பின்னேபிறப்புப் பிரமாவுருப்படைக்க
சிவாயப்பொருள்தான் சீவநிலைகொடுக்க
உபாயப்பொருள்தான் உல்லாசமேகொடுக்க
முண்டமிருபேரும் உருவாயுருவெடுத்து
தெண்டமதுகொண்டார் சிவனைமிகப்போற்றி
அப்போதுமாயன் ஆதியடிவணங்கி
இப்பொழுதீசுரரே இவர்களிருபேர்க்கும்
என்னபேர்தானு இடுவோமெனவுரைக்க
வன்னப்பரமேசுரனார் வகுத்துரைப்பார்
திறந்தான்பெருகுந் திருமாலே நீர்கேளும்
பிறந்தவசுரருக்குப் பேரிடவேணுமென்றால்
மாயனேநானுமொரு உபாயம்வகும்பேன்கேள்
ஆயனேநீயுமதுகேட்க வேணுமென்றார்
அண்டபிண்டங்காண ஆதிகயிலாசமதில்
தெண்டனிட்டு நிஸ்டைசெய்கிறான் சுருதிமுனி
இந்தமுனியடுக்க இவர்கள்ரண்டுபேரைவிட்டு
அந்தமுனிதவத்தை அழிக்கவேசொல்லிடுவோம்
என்றுசிவமுரைக்க எல்லோருஞ்சம்மதித்து
அன்றுபிறந்த அசுரர்களைத்தானேவ
போறானேசூரன் பொருப்பொருநூறானதுபோல்
வாரானேசூரன் வாய்களிருகாதவழி
சூரருடகைகள் தொண்ணூற்றிரஞ்சதுவும்
மூரன்கால்நூறு உயர்ந்த சிரசன்பதுவும்
கண்கள்ஒருநூறு வெண்டாளமிருகலமே
துங்கணங்களாகச் சூரரடந்தேறி

கண்கவிழ்ந்துயோகங் கருத்துருத்தாய் நிற்குகின்ற
வண்கவுழ்ந்த மாமுனியை வாரியெடுத்தவர்கள்
அலைமேலெறிய ஆர்ப்பரிக்குமளவில்
கலைமேல்ப்பரந்த கடியமுனிபகர்வான்
ஏனடாயென்னை இருந்ததவசழித்து
வீணடாசெய்தாய் விழலாயறமோடா
என்னையெடுத்து இக்கடல்மேல் போட்டாலும்
உன்னையறுக்க ஓர் அம்பாயுருவெடுத்து
பங்காயக்கண்மாயன் பக்கமதில்நான்சேர்ந்து
உங்களிருபேரை ஊருடுவநானறுத்து
இத்தக்கடலி லெடுத்துஉங்களையெறிந்து
உங்களுடவூரை வொக்ககரிக்காடாக்கி
நானும் வைகுண்டம் நற்பேருபெற்றிருப்பேன்
வானுதிருவாணையென்று மாமுனியுஞ்சாபமிட்டான்
உடனேமுனியை உயத்தியெடுத்தேசூரர்
கடல்மேலெறிந்தார் கர்மவிதிப்படியே
அந்தமுனியும் அரனரருளாலே
மந்திரபுரக்கணையாய் வாரியலைக்குள்ளிருந்தான்
சுருதிமுனிதனையுந் தோயமதில்விட்டெறிந்து
உறுதிகுடிசூரர் ஓடிவந்தேகயிலை
ஈசன்தனைத்தொழுது இறைஞ்சிநின்றாரம்மானை

விருத்தம்

சுருதிமுனியுட னெட்டைதொலைத்தவர்
கருதியசூரர் கைலைமேவியே
பருதீசூடும் பரமனைப்போற்றியே
வருதிகேட்டு வருந்தினர்சூரரே

நடை

சுருதிமுனிதவத்தை தொலைத்தேயவன்றனையும்
பொருகிக்கடல்மீதில் போட்டெறிந்து வந்தவர்கள்
ஈசன்தனைத்தொழுது ஏற்றவரங்கேட்டதினல்
வாசமுள்ளயீசன் மாதுமையைத்தானேக்கி
தூயவளே மாயவளே சூரரிருவருக்கும்
நேயமுள்ளதோர்வரங்கள் நீகொடுக்கவேணுமென்றார்
வரங்கொடுக்கவென்று மறையோனதிசயித்து
சிரசன்பதோனுடைய சீர்சூரனைநோக்கி
ஏதுவரமுங்களுக்கு இப்போதுதரவேணுமென்றார்
தீதுகுடிகொண்ட சிரசு அம்பதோனுரைப்பான்
மாவரேதேவர்களே மறையவரே மூவர்களே
ஆதவரேஎங்களுக்கதிய வரம்வேணுமென்றான்
அம்புவியிலுள்ள அஸ்திரங்கள்வாளாலும்
தம்பிரானுலுந் தாண்டமுடியாதவரம்
வானமதுபூமி மலைகளதுமூன்றிலுள்ள

தானவனுய் வாழுகின்ற தங்களாலெங்களையும்
கொல்லத்துலையாத கொடியவரமதுவும்
மல்லுக்குபாயமதும் வலுவும்பலமதுவும்
ஏவலாய்வானோர் என்னைத்தொழுதுநின்றிடவும்
தவருமலிந்தவரம் தரவேணுமென்றுரைத்தார்
உடனேசிவனுர் உற்றவசுரருக்கு
அடமாயவன்கேட்ட அவ்வரங்கள்தான்கொடுத்து
நீசனிருக்கநெடிய யுகம்வகுத்து
பாசனுக்குப்பேரு பகர்ந்தேவிடைகொடுத்தார்
விடைவேண்டிப்பாவி விமலன்றனைத்தொழுது
மடைப்பாவியான மல்லோசிவாகனனும்
தில்லைமலாலனுமாய் சேர்ந்தங்கிருபேரும்
வல்லசிவன்வகுத்த வையத்தில்வந்தனராம்
வந்தார்சிவன்வகுத்த வையத்திலம்மானை
அந்தவசுரர் அவரிருக்குமன்னளில்
உதிரமதுசூரர் ஒக்கவுதித்தெழுந்து
செதிர்சூரப்படையாய்ச் சேர்ந்தங்கிருந்தனராம்
இப்படியேசூரர் இவாசேர்க்கைதன்னுடனே
அப்படியே அந்தயுகம் ஆண்டிருந்தம்மானை
ஆண்டிருந்தசூரன் அவனிருக்கமேடைகளும்
தாண்டிருந்தவானத் தடாகவுயரமதே
சூரப்படைகள் தொழுதுவடி பணிந்து
பாதகனுக்குநித்தம் பணிந்தேவல் செய்திடுவார்
ஊழியங்கள் செய்து உற்றயிறையிறுத்து
பாளையங்களாக்கப் பணிந்திருந்தாரம்மானை
சூரன்கொடுமுடியைச் சூட்டியரசாண்டு
பாரமுள்ளகோட்டை பண்ணினனம்மானை
இப்படியேசூரனிவன் வாழுமன்நாளில்
முப்படியேசூரன் ஊழிவிதிப்படியால்
இறப்பதறியாமல் எரியைமிகக்கண்டாவி
உற்பொசிக்கச் சென்ற விட்டிலிறந்தாற்போல்
தப்பிதமயன்சந்ததிகள் மந்திரிமார்
முன்பிலுள்ளசூரர் முடுக்கமதைக்கண்டாவி
நம்பிபதமறந்து நாம்தாம்பெரிதெனவே
கெம்பினன்சூரன் கெட்டான்ம்மானை
சூரனவன்செய்த துட்டம்பொறுக்காமல்
வீரமுள்ளதேவர் விரைந்தேமுறையமிட
தேவர்முறையஞ் சிவனுர்மிகக்கேட்டு
காவலாய்நித்தம் கைக்குள்ளிருக்கின்ற
பெண்ணமுதைப்பார்த்து புகல்வாரங்கீசுரரும்
கண்ணேமணியே கருத்தினுள்ள்ளவளே
பூலோகந்தன்னிலுள்ள புருடராயுதத்தாலும்
மேலோகம்வாழும் விமலராயுத்தாலும்
மலைமேலேவாழும் மாமுனிவர்தன்னலும்

அளியாவரம் அச்சூரனுக்கேகொடுத்தோம்
தரியாமுடுக்கந் தான்பொறுக்காத்தேவரெல்லாம்
அரியோயெனமுறையே மனேகம்பொறுக்கரிதே
என்றீசர்சொல்ல இயல்கன்னியேதுரைப்பாள்
மலேலோகம்மேலோகம் வையமதிலாகாட்டால்
அலேமேல்றுயிலுமொரு ஆண்டிவுண்டுகண்டிரே
முன்னேயச்சூரனுக்கு முற்சாபமிட்டதொரு
வன்னச்சுருதிமுனி மந்திரபுரக்கணேயாய்
வளர்ந்திருப்பான்காண் மாயருடபக்கலிலே
கிளர்ந்தமொழிகேட்டு கிருபைகூர்ந்தேயீசர்
மாலேவரவழைத்து வழப்பமெல்லாமுரைக்க
சாலப்பொருளுஞ் சம்மதித்தாங்காரமுடன்
அலேயில்வளர்ந்த அதிகணேயெடுத்து
சிலேயேத்தியம்பைச் சிரித்துமிகத்தொடுக்க
அம்புபகையாலும் அதிகமால்பகையாலும்
பம்யழித்துச்சூரனூர் பர்ப்பம்போல்தாணுக்கி
சூரரிருவருட சிரசைமிகவறுத்து
வாரிதனில்விட்டெறிந்து வாளிசுனேயாடி
மலரோனடிவணங்கி வைகுண்டம் கேட்டிட்டவே
பலமானகுண்டப் பதவிமிகக்கொடுத்தார்
அவ்யுகத்தைமாயன் அன்றழித்துஈசரிடம்
செவ்வாகனின்று செப்பினரீசருடன்
இன்னமொருயுகத்தை இப்போபடைக்கவென்று
மன்னனதியதிருமால் மனமேமிகமகிழ்ந்து
சொன்வுடனீசுரரும் தொன்னூல் மறைதேர்ந்து
முன்னேகுரோணி முடிந்ததுண்டமாறதிலே
ஓரிரண்டுதுண்டமுகமாய்ப் பிறந்தழிந்து
ஈரிண்டுதுண்டமிருக்கிதுகாண் மாயவரே
நேர்முறையைப்பார்க்கில் நெடியயுகங்கழிந்தால்
மேலுகந்தானிங்கே மிகுத்தகிறேதாயுகந்தான்
இருக்குதுகாணென்று ஈசருரைத்திடவே
மருக்கிதழும்வாயார் மனமகிழ்ந்துகொண்டாடி
துண்டமொன்றைரண்டாய் தூயவனூர்தான்வகிர்ந்து
மண்டலங்கள்மெய்க்க வாணுள்கொடுத்தருளி
சிங்கமுகசூரனென்னுந் திரள்சூரர்பர்ப்பனென்றும்
வங்கணமாய்ப்பிண்டம் வகுத்தனர்காணம்மாணே
சூரனுடசிரசு தொளாயிரத்துநூறதுவும்
போரர்க்கால்கைகள் பொருப்பெடுக்கும் மாபிலமும்
சூரன்சுரோணிதத்தைச் சுக்கில்ங்கள் தாணுக்கி
ஊரேநீபோவென்றுற்ற விடைகொடுத்தார்
விடைவேண்டிச்சூரன் வேண்டும்படையோடே
திடமாகப்பூமி செலுத்தியரசாண்டிருந்தான்
வரம்வேண்டவென்று மலரோனடிவணங்கி
திரமானவோம்பிட்டுச் செப்புக்குடம்நிறுத்தி

நின்றதவத்தில் நெடியோனைக்காணுமல்
அன்றந்தச்சூரன் அக்கினியில்விழுந்தான்
சூரபர்ப்பன்விழவே சிங்கமுகவாகனனும்
பாரமுள்ள தன்சிரசைப் பறித்தெறிந்தானக்கினியில்
ஆனதாலீசுரரும் அம்மையுமயாளிரங்கி
இனமாஞ்சூரனுக்கேதுவரம் வேணுமென்ருர்
ஈசனுரைக்கயேற்றஅந்த சூரனுந்தான்
பாசமுடன் செத்தப் பார்ப்பனென்ற சூரனையும்
எழுப்பித்தரவேணும் யாங்கள்மிகக்கேட்டவரம்
மழுப்பில்லாவண்ணம் மரமருள்வீரென்றுரைத்தான்
சூரனிவன்கேட்க்கச் சீவனுரைகமகிழ்ந்து
பாரமுள்ளவோம பர்ப்பமதைத்தான்பிடித்து
சிவஞானவேதஞ் சிந்திப்பாரப்பொழுது
பவமானசூரர் பார்ப்பன்பிறந்தனனும்
இறந்துபிறந்தனர்க்கிழயான் அவன்றனக்கும்
சிறந்தபுகழீசர் செப்புவாரப்பொழுது
சூரனேயுங்களுக்குத் தோற்றமுள்ளபோர்வரங்கள்
வீரரேகேளுமென்று வேதனிவையுரைக்க
அன்னளில்சூரன் அகமகிழ்ந்துகொண்டாடி
உன்னலும் ஐந்துமுக முள்ளவர்கள் தன்னலும்
உலகத்தில்பணிவைத்த உத்தவாயுதத்தாலும்
இலகுமன்னராலும் இந்திரனுர்தன்னலும்
கொல்லத்துலையாத கொடியவரமதுவும்
வல்லவனேநீயும் வாழுங்கைலையதும்
தேவர்தேவேந்திரனும் திருக்கன்னிமாறையும்
ஏவலாயுன்னுடைய லோகமதிலுள்ளவர்கள்
முழுதுமெனக்கு ஊழியங்கள்செய்திடவும்
பழுதில்லாதிந்தவரம் பரமனேநீர்தாருமென்ருன்
தாருமென்றுசூரன் தன்மையுடன்கேட்க
ஆருமொப்பில்லா ஆதியகமகிழ்ந்து
கேட்டவரமுழுதுங் கெட்டியாயுங்களுக்கு
தாட்டியமாயிப்போ தந்தோமெனவுரைத்தார்
வரங்கொடுத்தீசர் மலைகைலக்கேகாமல்
பரமவுமையாளைப் பையயெடுத்தணைத்து
அலைமேலேயாயன் அருகிலேபோயிருந்து
மலைமேலேசூரன் வாய்த்ததென்றவ்வரங்கள்
கயிலைமுழுதுங் காவலிட்டுத்தேவரையும்
அகிலமுழுதும் அடக்கியரசாண்டனனே
அப்படியேசூரன் அரசாண்டிருக்கையிலே
முப்படியேவிட்டகுறை முடிவாகும் நாளையிலே
தேவரையும் வானவரைத் தெய்வேந்திரன்வரையும்
மூவரையும்பாவி முட்டுப்படுத்தினனே
ஆனதால்தேவர் அரிக்கே முறையமிட
ஈனமில்லாதாயன் எடுத்தார்ஒருவேசம்

ஈசனிடஞ்சென்று இயம்பினாரெம்பெருமாள்
வாசமுள்ளயீசுரரே மாபாவிசூரருக்கு
ஏதுவரங்களீந்தீர்காணென் றுரைக்க
தாதுகரமணிந்த தாமன்பின்னேதுசொல்வார்
வையகத்திலுள்ள வலுவாயுதத்தாலும்
தெய்வலோகத்தில் சிறந்தமன்னர்தன்னாலும்
அஞ்சுமுகத்தாலும் அழியாதவனுயிரும்
தஞ்சலிடவானோர் தையல்தெய்வக்கன்னிமுதல்
அகிலமுழுதும் அடக்கிவரங்கொடுத்தோம்
கயிலைமுழுதுங் கமண்டலங்களேழுமுதல்
என்றுவேதாவும் இவையுரைக்கமாலோனும்
நின்றுதியங்கி நெஞ்சமது புண்ணாகி
பேயனுக்கென்னுடைய பிறப்பைக்கொடுத்தல்லவோ
தேயமதில்யானும் திரிந்தலையக்காரணந்தான
என்றுதிருமாலிது சதயஞ்சொல்லியவர்
இன்றந்தசூரர் இருவர்தன்னைக்கொல்லவே
ஆறுமுகமாய் ஆயனளவிடவே
கூறிடவேசத்திதனைக் கொண்டார்வேலாயுதமாய்
நல்லசிவனாரை நந்தீசுரராக்கி
வல்லபிலமுள்ள வாய்த்திக்கெட்டிலுள்ள
பாலரைவீரர்களாய்ப் பண்ணினாரெம்பெருமாள்
வாலமுள்ளசன்னாசி மாரைப்பெருப்படையாய்
கந்தனெனநாமங் கனத்தசடையாண்டியுமாய்
கொந்துகொந்தாய் பீற்றைக்கூறைமிகவணிந்து
வேலுமிகப்பிடித்து வெண்ணீறுமேதரித்து
நாலுரண்டுசிரசில் நல்லருத்திராச்சமிட்டு
பத்துரண்டுகாதில் பைம்பொன்னாச்செம்பணிந்து
முத்திரிகளிட்டுக்கந்தப் பொக்கணங்கள்தோழிலிட்டு
சன்னாசிபோலே தானடந்தெம்பெருமாள்
நன்னாதானாவெனவே நாலஞ்சிகவிதான்பாடி
வந்துஒருமலைமேல் வாய்த்தகூடாரமிட்டு
சந்துமிகச்சொல்லி தான்விட்டார்சூரனுக்கு
சூரனிடத்தில் தூதாநீசென்றேகி
பாரமுள்ளகையிலை பருவதமுந்தேவருட
சிறைகளகற்றிவானோர் தேவரையும்நீயனுப்பி
திறவானாயாகச் சீமையரசாளுமென்று
இப்படியேஆகாட்டால் இன்றுகழித்தெட்டாம்நாள்
அப்படியேயுந்தனுக்கும் ஆனகந்தசுவாமியர்க்கும்
சண்டையென்று தான்கூறிவாவெனவே
அண்டர்பிரான்தூது அனுப்பினாரம்மானை
தூதன்மிகநடந்து சிவனேசெயலெனவே
காதமொன்றுதான்கடந்து கண்டானேசூரனையும்
கந்தசுவாமி கருத்தாயுரைத்ததெல்லாம்
அந்தவசுரனுக் கத்தூதன்றானுரைத்தான்

சூராகேள்கந்த சுவாமியருளென்றுரைக்க
ஏராதபாவி இகழ்த்தினனப்போது
தூதன்யென்ருேன் போகாமல்துடர்ந்துமிகப்பிடித்து
பாதப்பெருவிலங்கில் பாவியையென்றுரைத்தான்
ஆரடாநீதான் அறியாயோயென்பலங்கள்
பாரடாவுந்தன் கந்தன்படுகிறதை
ஈசுரனுமெந்தனுக்கிருந்த இடமுமருளி
மாயனிடம்போயலேயில் வாழ்ந்ததுநீகண்டிலேயோ
எமலோகம்வான இந்திரலோகம்வரையும்
நவகோமூநானல்லவோ நாட்டமறிந்திலேயோ
முப்பத்துமுக்கோடி உற்றதேவாதிகளுந்
நாற்பத்துநாற்கோடிரிசி நமக்கென்றறிந்திலேயோ
அறியாதவனேகாண் ஆண்டிக்குத்தூதுவந்தாய்
சிறியனென்றிராதே எனசிரகடம்புகண்டிலேயோ
உந்தனுடகந்த னுயரமதுநானறிவேன்
ஆனதாலென்னுடைய ஆங்காரமத்தனேயும்
கானகத்தில்வாழும் கந்தனுக்கேயுரைநீ
என்றுமதமாயிவன்பேச தூதனுந்தான்
அன்றுவச்சூரனுக்கு அறையாமலேதுரைப்பான்
நீயோதானெங்கள் நிமலன்தனக்கெதிரி
பேயோரிநாய்நரிகள் பிய்த்துப்பிடுங்கியுன்னே
கண்டயிடத்தில் கழுக்கள்மிகப்பிடுங்கி
கொண்டோடித்தின்ன வேலாயுதங்கொண்டுவந்தார்
தேவர்சிறையுந் தெய்வமடவார்சிறையும்
மூவர்சிறையும் மும்முடுக்கமுந்தீர்த்து
உன்னுடையசேனே உற்றபடையழித்து
நின்னுடையகோட்டை நீறுபொடியாக்கி
அரசாள்வாரெங்கள் ஆறுமுகவேலவனர்
என்றேதான்தூதனிவை உரைக்கச்சூரனுந்தான்
அன்றேமனது உளந்துணிந்தேதுரைப்பான்
ஆனலறிவோம் ஆண்டிதனேயுமிங்கே
போனலென்னேடே போருசெய்யயேவிடுநீ
சூரனிவையுரைக்கச் சூலாயுதப்பெருமாள்
தூதன்மிகநடந்து சொன்னன்சுவாமியர்க்கு
சுவாமிமிகமகிழ்ந்து சூரன்றனேயறுக்க
காமிவேலாயுதத்தைக் கையிலெடுத்தாரம்மானே
வேலாயுதமெடுத்து வேதப்படைசூழ
சூலாயுதப்பெருமாள் துடியாய்நடக்கலுற்ருர்
கந்தனர்வேசங் கலந்திருந்தமாயவரும்
வந்தார்காண்சூரன் வலுவீளந்தானம்மானே
சூரனவன்கண்டு தோசப்படையணிந்து
மூரன்படைக்கு முன்னேநடக்கலுற்ருன்
கண்டாரீராறு கரத்தோனகமகிழ்ந்து
பண்டாரவேசம் பண்பாய்யெடுத்திருக்கி

முன்னேவருஞ்சூரன் முகத்தையவர்பார்த்து
பின்னேசுவாமி புத்திமிகவுரைப்பார்
வம்பிலிறவாதே வாழ்விழந்துபோகாதே
தம்பிதமையன் தளங்களிழவாதே
பர்ப்பக்கிரீடப் பவுசுயிழவாதே
அற்பமிந்தவாழ்வு அநியாயம்விட்டுவிடு
கரணமீதில்லாமல் கவ்வையில்லாவாழ்ந்திருந்து
மரணம்வந்துஜீவன் மாண்டுபோகும்போது
நன்மையதுகூட நாடுமேயல்லாது
தின்மைவராது தேவரையும்விட்டுவிடு
தீர்ச்சையுடன்புத்தி செவ்வேநேரிட்டுவொரு
மோச்சமதுதேட முடுக்கமதைவிட்டுவிடு
இத்தனையும்நாதன் எடுத்துமிகவுரைக்க
புத்திகெட்டபாவி போர்சூரனேதுரைப்பான்
இரந்துதிரிகின்ற இரப்பனுக்குள்ளபுத்தி
பரந்தபுவியாளும் பாரமுடிக்காவலர்க்கு
ஏர்க்குமோஞானம் இரப்போருக்கல்லாது
ஆர்க்குமேசெல்லாது ஆண்டிவுன்ஞாயமதை
சண்டைக்குவாவெனவே தான்கூறித்தூதுவிட்ட
பண்டாரமென்ற படைக்காரனும்நீயோ
என்னுடையசேனை எல்லாமிகஅழித்து
என்னையும்நாய்நரிக் கிடுவேனென்றதுநீயோ
என்றேவச்சூரன் இயம்பிமிகநகைத்து
பண்டாரத்தோடே படையெடுத்தானம்மானை
சூரனுடபடைகள் துண்டுதுண்டாய்விழவே
வீரர்களும்வந்து வெட்டினாரம்மானை
வெட்டதினால்செத்தார் மிகுசூரக்குலங்கள்
பட்டார்களென்று பார்சூரன்தான்கேட்டு
வந்தேயெதிர்த்தான்காண் மாயாண்டிதன்னைதேட
இன்றுவந்துவாய்த்ததென்று எம்பெருமாள்மகிழ்ந்து
வேலாயுதத்தை விருமாபதஞ்சேவித்து
மேலாம்பரனார் விமலனருளாலே
எறிந்தார்காண்சூரன் இறந்தானேமண்மீதில்
பறிந்தேவேலாயுதமும் பால்க்கடலில் மூழ்கியதே
சூரன்மடிந்து துடித்துயிர்போகுகையில்
வீரமுள்ளநாதன் விண்ணவன்முன்பில்வந்து
சொன்னமொழியெல்லாஞ் சூச்சமாய்க்கேளாமல்
இன்னிலமேல்ப்பாவி இறந்தாயேவம்பாலே
நாட்டமுடனுரைத்த நல்லமொழிகேளாமல்
கோட்டையுமுன்னுடைய குஞ்சரமுந்தோற்றுயே
தந்துவிட்டசொல்ப்படிக்கு தந்தரசாளாமல்
விந்துக்குலங்களற்று வீணாநீமாண்டாயே
மாளாவரங்கள் மகாகோடி கற்றேமென்று
பாழாகமாண்டாயோ பண்டாரங்கையாலே

என்றந்தஆதி இத்தனையிந்தான்கூற
முந்துபிறந்த முப்பிறப்புச்சூரமதாய்
என்னையோகொல்ல இரப்பனுவேலுவது
உன்னையோகொல்ல ஒட்டுவனோநான்துணிந்தால்
வேலாயுதத்தாலே வென்றுகொன்றதல்லாது
ஏலாதுன்னாலே இளப்பமிங்கேபேசாதே
என்றுனேசூரன் எம்பொருமாள்கோபமுடன்
கொன்றாரேசூரன் குறவுயிரை அம்மானை

### விருத்தம்

சூரனைத்துணிந்தசக்தி சூலமுங்கடலில்மூழ்கி
வீரமால்பதத்தைப்போற்றி விளம்புவாள்சத்திமாது
மூரனைச்செயிக்கமுன்னே மூர்ச்சூலமாய்சபித்தசாபம்
தீரவேணுமென்று திருப்பதம் வணங்கிநின்றாள்

### நடை

ஆதியேனாதி ஆதித்திருவுளமே
சோதியேஎன்னுடைய சூல்சாபந்தீரும்
என்றுவுமையாள் எடுத்துமிகவுரைக்க
நன்றெனவேயந்த நாராயணருரைப்பார்
சாபமதுதீர சாந்திமிகவளர்த்தார்

### அவ்வுகத்தில் இரணியன் பாடு

தாபமுடன்மாயன சாந்தியதுவளர்க்க
அம்மைஉமையாளின் ஆனசாபந்தீர்த்து
செம்மையுடன்கயிலே சென்றனர்காணம்மானை
சத்திசாபந்தீர்த்துத் தவலோகமேயனுப்பி
த்த்தியாய்ச்சூரனையுஞ் சங்காரஞ்செய்துஅந்த
சூரனார்தன்னைத் தீயோன்தனக்களித்து
வீரசூரன்றனையும் மேலுமந்தயுகத்தில்
பாரஇரணியனைப் படைத்தார்காணம்மானை
சூரன்இரணியனாய் தோன்றினான்அவ்யுகத்தில்
மாயனொருகோலம் மகவாயுருவெடுத்து
வாயினடையில்வைத்து மாபாவிசூரனையும்
நெஞ்சையவர்நகத்தால் நேரேபிளந்துவைத்து
வஞ்சகனோடேமாயன் மிகவுரைத்து
சூரபர்ப்பனகைத் தோன்றினனன்னாளில்
ஊரிரப்பனகை உருவாக நான்தோன்றி
கொன்னேனனென்று கூறினேனப்போது
அந்நேரம்நீதான் ஆண்டியல்லகொன்றதென்றாய்
வேலாயுதத்தாலே வென்றாய்நீயல்லாது
ஏலாதுன்னாலே என்றன்றுபேசினையே
ஆயுதங்களம்பு அஸ்திரம்வாளில்லாமல்
வாயிதமாயென்னகத்தால் வகிர்ந்தேநானுன்வயிற்றை
என்றுமாயனுரைக்க ஏதுரைப்பான்சூரன்
பத்துமலையைப் பாரநகமாய்ப்பதித்து
இத்தலத்திலென்னை இறக்கவைத்தாயல்லாது

ஏலாதுன்னாலே இந்தமொழிபேசாதே
மாலானவேதன் மனதுகோபம்வெகுண்டு
உன்னையின்னமிந்த உலகில்பிறவிசெய்து
கொன்றாலேவிடுவேன் கிறேதாயுகம்வைத்து
திகைந்தல்லோபோச்சு திறேதாயுகம்பிறந்தால்
முப்பிறவிதுண்ட உயிர்ப்பிறவிசெய்கையிலே
இப்பிறவிதன்னிலிசைந்த மொழிகேள்ப்பேனான்
என்றுஇரணியனை இரணச்சங்காரமிட்டு
அன்றுகிறேதாயுகம் அழித்தாரம்மானை
அந்தக்கிறேதா யுகமழித்தன்னாளில்
கந்தத்திருவேசம் கலந்திருந்தமாயவனார்
செந்தூர்ப்பதியில்ச் சேர்ந்திருந்தாரம்மானை
அந்தப்பதியில் அலங்கரித்தநாள்கழித்து
ஆதிகயிலை அரனாரிடத்தில்வந்து
வேதியரும்நன்றாய் விளம்புவாரம்மானை
சூரப்பர்ப்பனென்ற சூரக்குலங்களைத்துணித்து
வீரம்பறைந்ததினால் மேலுமந்தயுகத்தில்
கொன்றுகிறேதா குவலயமுனைழித்து
முன்னுகலந்திருந்த ஆறுமுகவேசம்

## கிரேதாயுகத்தில் ராவணன் பாடு.

செந்தூருவாரித் திரைமடக்கில்வாழ்ந்தீரென்று
வந்தோங்காணையா மலர்பாதந்தெண்டனிட
என்றேதானாதி ஈசரோடேதுரைப்பார்
அன்றேதானீசர் அருளுவாராயருக்கு
முன்னேகுறோணி முடிந்ததுண்டாறதிலே
இன்னுமுனுதுண்டு இருக்குதுகாண்மாயவரே
என்றீசர்சொல்ல எல்லாருந்தான்கூடி
அனறிருந்ததுண்டம் அதிலொருதுண்டமதை
உருவாய்ப்படைத்து உயிர்கொடுக்குமவ்வளவில்
அருகேயிருந்த அச்சுதருமேதுரைப்பார்
முன்னே இவனும் முற்பிறப்பானதிலே
என்னோடேபேசி எதிர்த்தான்காண்ஈசுரரே
ஆனதாலிப்பிறப் அரக்கனிவன்றனக்கு
ஈனமில்லாச்சிரசு ஈரஞ்சாய்ப்படையும்
பத்துச்சிரசும் பத்துரண்டுகண்காதும்
தத்துவங்களோடே தான்படையுமென்றுரைத்தார்
மாயனுரைக்க மறையோனகமகிழ்ந்து
வாய்ச்சிரசுபத்தாய் வகுத்தார்காணம்மானை
கூடப்பிறக்க குண்டிலிட்டாத்தமதை
வாடவரக்கர்குலமாய்ப் பிறவிசெய்தார்
அப்போபடைக்கும் அவ்வளவில்மாயவனார்
மெய்ப்பானமேனிதனில் வியாவைதனையுருட்டி
விபீசணனென்று மெய்யுருவந்தானாக்கி

கவுசலமாயரக்கன் தம்பியெனக்கருத்தாய்
கூடியிருந்து அறக்கன்குறியறிந்து
வேடிக்கையாக வீத்திரென்றுதானுரைத்தார்
பத்துத்தலையான் பாவியரக்கவன்
மற்றுநிகரெவ்வா வாய்த்தபரமேசுரரை
வணங்கித்தவம்வேண்ட மனதில்ப்பிரியமுற்று
இணங்கியேஈசர்பதம் இறைஞ்சிநின்றான்ஈசுரரை
தவத்தருமைகண்டு தலைபத்தரக்கனுக்கு
சிவத்தலைவரானோர் செப்புவாரம்மானை
காதுரண்டுபத்து கண்ணிருபதுள்ளோனே
ஏதுவரம்வேணும் இப்போதுசொல்லுமென்றார்
அப்போதுஈசுரரை அரக்கனவன்வணங்கி
இப்போதுஈசுரரே யான்கேள்க்குமவ்வரங்கள்
தருவோமெனவே தந்திமுகன்பேரில்
உருவாயெனக்கு உறுதசெப்புமென்றுரைத்தான்
அப்படியேயீசர் ஆணையிட்டுத்தான்கொடுக்க
சொல்படிகேட்டேயரக்கன் சொல்லுவானப்போது
மூன்றுலோகத்திலுள்ள முனிவர்தேவாதிகளும்
வேண்டும்பலவாயுதமும் விதவிதமாய்அம்புகளும்
வீரியமாய்நானிருக்கும் விட்டகிகோட்டைசுத்தியந்த
சூரியனுஞ்சந்திரனுஞ் சுற்றியதுபோயிடவும்
சிவனாரொருகோடி செய்யவரந்தரவும்
புவனம்படைக்கும் பிரமாவொருகோடி
உமையாளொருகோடி உற்றவரந்தரவும்
இமையோரரக்கோடி இப்படியேயுள்ளவரம்
மூணரைக்கோடி உள்ளவரமத்தனையும்
தாணரேயெந்தனுக்கு தாருமென்றானம்மானை-யெ
துடுக்கனிவன்கேட்ட சுத்தவரமத்தனையும்
கொடுக்குமளவில் குன்றெடுக்கும்தன்தேவி
அலைமேல்துயிலும் அச்சுதனார்தன்தேவி
சிலைவேலெடுத்து செயிக்கவல்லானதேவி
அலங்காரமாகி அன்றயப்பொழுததிலே
கலங்காதான்தேவி கைலையுமையாளருகே
மணிமேடைதன்னில் மகிழ்ந்திருக்குமவ்வளவில்
கெணியாமலேயரக்கன் கெடுவதறியாமல்
அம்மைதனைக்கண்டு அயர்ந்துமுகஞ்சோர்ந்து
கர்மவிதியால்க் கைமறந்துநின்றனனே
நின்றவுணர்வை நெடியசிவமறிந்து
அன்றந்தரக்கனுக்கு ஆதிவரங்கொடுத்து
கேட்டவரங்கள் கெட்டியாய்த்தான்கொடுத்து
நாட்டமுடன்சீதை நகையாலழிவையென்று
இரக்கமில்லான்கேட்ட ஏற்றவரங்களெல்லாம்
அரக்கனவன்றனக்காதி மிகக்கொடுத்தார்
ஆதிகொடுத்த அவ்வரங்களத்தனையும்

நீதியில்லான்வேண்டி நெடியோன்றனைவணங்கி
கொண்டுபோகும்போது குன்றெடுத்தமாயவரும்
கண்டுமறித்து கவுசலமிட்டேமாயன்
அரைக்கோடிவரமாய் ஆக்கிவிட்டார்மாயவரும்
சரக்கோடிமூனுந் தான்தோற்றுப்போயினனே

### விருத்தம்

ஆதியைத்தொழுதுபோற்றி அரக்கனும்வரமும்வேண்டி
சீரியசீதையாலே சிவனுக்கிடறும்பெற்று
வாரியமூணுகோடி வரமதுதோற்றுப்பின்னும்
மூரியன்மூன்றுலோகம் முழுதுமேயடக்கியாண்டான்

### நடை

முக்கோடிவரத்தை உச்சிக்கொண்டார்மாயவனுர்
அக்கரைக்கோடி அரக்கன்வரங்கொண்டேகி
தேவரையும் மூவரையுந் தெய்வேந்திரன்வரையும்
நால்வரையும் வேலைகொண்டு நாடாண்டானம்மானை
வாசுஅரக்கன் மணிமேடைதூராட்டால்
வீசுவேன்வாளால் வெட்டுவேன்பாருவென்பான்
வருணனவன்மேடை வந்துதெளியாதிருந்தால்
மரணம்வரும்வரையும் வல்விலங்கில்வைப்பேனென்பான்
சந்திரருஞ்சூரியருஞ் சாய்ந்துமிகப்போகாட்டால்
சந்துசந்தாக சரத்தாலறுப்பேனென்பான்
தெய்வமடவார்கள் திருக்கவரிவீசாட்டால்
கைவரைந்துகெட்டிக் கடுவிலங்கில்வைப்பேனென்பான்
நாலுமறையும் நல்லஆறுசாஸ்திரமும்
பாலுக்குடஞ்சுமந்து பணிந்துமுன்னில்லாட்டால்
அஸ்திரத்தால்வாந்து அம்மிதனில்வைத்துரைத்து
நெற்றிதனில்கொட்டிடுவேன் நிச்சயமென்பானரக்கன்
வானவர்களெல்லாம் மலரெடுத்தென்காலில்
தானமதுபண்ணி தாழ்ந்துநில்லாதேயிருந்தால்
சாகும்வரைக்கும் தடியிரும்பிலிட்டவரை
வேகும்படிக்கு வேள்விதனிலிட்டிடுவேன்
மாமறலிமூவர் வந்தென்சொல்லைக்கேளாட்டால்
காமனையும்ஈசன் கண்ணாலெரித்ததுபோல்
என்னுடையகண்ணால் எமனையுங்காலனையும்
துன்னுடையவல்ல தூதனையும்நானெரிப்பேன்
இவ்வுலகத்திலுள்ள ராசதிராசரெல்லாம்
முவ்வுகமுங்கர்ப்பமிங்கே முன்னடித்தாராட்டால்
நெருப்பெடுத்திட்டிடுவேன் நேரேகொண்டுவாராட்டால்
எரிப்பேனோர்அம்பால் ராசாதிராசரையும்
இப்படியேபாவி இந்திரலோகம் வரையும்
அப்படியேஅரக்கன் அடக்கியரசாண்டிருந்தான்
அப்படியேஅரக்கன் ஆண்டிருக்குமன்னாளில்
முப்படியேவிட்டகுறை முடிவாகும்நாளையிலே

தேவாதிதேவர் தினம்ஏவல்செய்திடவே
மூவாதிமூவர் ஊழியங்கள்செய்திடவே
மூர்க்கமதால்பாவி ஊழியங்கள்கொண்டதினல்
பொறுக்கமுடியாமல் பூலோகத்தார்களெல்லாம்
தெய்வஸ்த்திரீயும் தேவாதிதேவர்களும்
அய்யாதிருமாலுக்கபைய்யமபையமிட
அபயமிடும்மொலியை அச்சுதருந்தானமர்த்தி
கபயமிடுவேதன் கயிலையதுதானேகி
ஆதிபர்மன் அடியைமிகப்போற்றி
சோதித்திருமால் சொல்லுவாரம்மானை
பத்துத்தலையுடைய பாவியரக்கனுக்கு
மற்றும்பலகோடி வரங்கள்மிகயீந்ததினல்
தேவரையும்மூவரையும் தெய்வேந்திரன்வரையும்
நால்வரையும்வேலைகொண்டு நாடாண்டானம்மானை
ஆனதால்தேவர் அரிக்கேமுறையமிட
ஈனமில்லாதேகேட்டு இருக்கமுடியுதில்லை
பள்ளியுறக்கம் பரிவாய்வருகுதில்லை
தள்ளினல்தேவரையுந் தற்காப்பாராருமில்லை
என்னவசமாய் எடுப்போஞ்சுருபமது
தன்னிகரில்டாதவனே சாற்றுவீரென்றனராம்
மாயனுரைக்க மறையோனகமகிழ்ந்து
தூயவருமங்கே சொல்லுவாரம்மானை
பாவியரக்கனுச்கு பண்டுநாமீந்தவரம்
தாவிப்பறிக்கத் தானுகதென்னலே
என்றரனுர்சொல்ல எம்பெருமாளச்சுதரும்
அன்றெம்பெருமாள் ஆலோசனையாகி
என்னமகவாய் யெடுக்கத்தசரதரும்
முன்னைவரங்கேட்டு உல்கிலவனிருக்க
அன்னுகத்திலுள்ள வாச்சன்தினகரனும்
பொனனுதிருவை பிள்ளையெனவந்தெடுக்க
நெட்டையாயரச்சர் நெடுநாள்தவசிருக்க
சட்டமதைப்பார்த்துத் தானனுப்புமீசுரரே
பின்னும்பெருமாள் பெரியோனைப்பார்துரைப்பார்
முன்னுமுறையாய் முறைப்படியேதேவரையும்
வானரமாய்ப்பூமியிலே வந்துபிறந்திருக்க
தானவரேயிப்போ தான்படைக்கவேணுமேன்ருர்
ஏவலாய்யெந்தனக்கு இப்பிறப்பானதிலே
பள்ளிகொண்டுநானிருந்த பாம்புராசன்றனையும்
வெள்ளிமணிமெத்தையையும் வீற்றிருக்குமாசனமும்
இம்மூன்றுபேரும் என்றேடுடன்பிறக்க
சமூலப்பொருளே தான்படைக்கவேணுமென்ருர்
மாயனுரைக்க மறையோனகமகிழ்ந்து
தூயவருமந்தப்படியே தெளிந்திருக்க
படைக்கும்பொழுதில் பரதேவரெல்லோரும்

அடைக்கலமேமாயன் அடியெனத்தெண்டனிட்டார்
தெண்டனிட்டுத்தேவரெல்லாம் செப்புவாரம்மானை
மண்டலமெங்கும் மயமாய்நிறைந்தோனே
எங்களைலோகமதில் இப்போபடைப்பீரால்
மங்களமாயுள்ள வலுவும்பிலமதுவும்
ஆயனுக்குநாங்கள் அடிபணிந்தேவல்செய்ய
நேயனேநீரும்நெறியாய்ப் படையுமென்றார்
இசர்மகிழ்ந்து இப்படியேதான்படைக்க
வாசத்தசரதரும் வந்துதினகரனும்
மகவாசையுற்று மகாபானைத்தானோக்கி
அகபாசமற்று அதிகத்தவமிருந்து
நாதனறிந்து நல்மறயைத்தரன்பார்த்து
பாதகரைக்கன் பத்துச்சிரத்தானை
தேவர்துயரமறத் திருமால்தசரதற்கு
மூவருடன்கூடி உலகமதிலேபிறக்க
அரக்கர்குலமறவே அம்மைசீதாலட்சுமியை
இரக்கம்போலுள்ள ஏற்றதினகரருக்கு
மகவாய்ப்பிறக்க மறைதான்விதித்தபடி
செகமீதில்ஞான சிருஷ்டிசிவமயமாய்
இப்படியேவேதத்து எழுத்தின்படியாலே
அப்படியேயீசர் அமைக்கத்துணிந்தனராம்
உடனேதசரதர்க்கு உற்றதிருமாலை
திடமாய்ப்பிரவிசெய்ய எனத்துணிந்தார்
அப்போதுராமர் அய்யாதிருமாலை
இப்போதுபடைக்க ஈசுரனார்சம்மதிக்க
படைக்கும்பொழுது பரமசிவனார்
நடக்குந்திருமால் நாதனைப்பார்த்தேதுரைப்பார்
அவ்வுலகிலென்னை அதிகதசரதர்க்கு
இவ்வுலகுவிட்டங் கென்னைப்பிறவிசெய்ய
வந்தவிபரம் வகைவகையாயீசுரரே
எந்தனக்குத்தாமைத் தென்னையனுப்புமென்றார்
மாயனதுகேட்க்க மறையோனகமகிழ்ந்து
தூயவருமங்கே சொல்லுகிறாரம்மானை
பரலோகமென்ற பைம்பொன்கையிலையதில்
சாலோகந்தன்னில் தானிருந்தமாமுனிவர்
துசுவீசுமாமுனியுஞ் சுகசீலமாமுனியும்
விசுவாசமாயிருந்து விசாரமதிட்டனராம்
வாருந்துசுவீசு மாமுனியேநீகேளும்
நீரும்நாமும்கூடி நீனிலத்தில்போயிருந்து
நானுமொருபெண்மதலை நல்லமகவாக
தானுமோராண்மதலை தலைவனறனைவாங்கி
சமமந்தமாகித் தானிருந்துநாடாண்டு
உம்மந்தமான உதவிபெறவேணுமென்று
இருபேருமிருந்தெனை நினைந்துமாமுனிவர்

உருவேத்திவேள்வி ஓமமதுவளர்க்க
இந்தப்படியே இவர்களிருமாமுனியும்
எந்தன்றனைநோக்கி யிருந்தார்தவசுகண்டீர்
அல்லாமல்பின்னும் அரக்கன்ராவணான்றனக்கு
கொல்லாமல்கொல்ல ஒருகுறுமுனிவன்சாபமுண்டு
அரக்கன்வரம்வேண்டி அவன்போகுமவ்வளவில்
இரக்கமாய்மாமுனியும் இருந்தான்தவசியிலே
தவசுநிலைபாராமல் தலைபத்துஅரக்கனுந்தான்
பவிசுமதமாய்ப் படுவதறியாமல்
முனியையவன்காலால் ஒத்தினனம்மானை
அநியாயப்பாவி அரக்கனவன்றனக்கு
கூறினான்மாமுனியுங் கொள்ளைகொண்டசாபமது
தூறினசாபத் துல்லியத்தைநீர்கேளும்
மாலைமிகப்போற்றி வாய்த்ததவம்நிக்கையிலே
காலெடுத்துவொத்தினையே கள்ளாவுன்றனக்கு
இந்தத்தவசுதனி ஈசுரரைத்தானினைந்து
உந்தன்றனையறுக்க ஒருராமபாணமது
வந்துபிறந்திடவும் மாயனதையெடுத்து
துறுவாசமாமுனிவன் தசரதராய்ப்பூமிதனில்
பிறந்துயிருந்திடவும் பின்னுஞ்சுகசீலன்
மாமுனியும்தினகரராய் வந்துபிறந்திடவும்
வேமுனிக்குலச்சுமியும் வில்லோடுதித்திடவும்
இராமபாணத்தோடே இராமர்தசரதர்க்கு
முராகமத்தின்படியே உலகிலுதித்திடவும்
பாணமதுதன்னாலும் பத்தினிதன்கர்ப்பாலும்
நாணமதுகெட்டரக்கா உன்நல்லதலைபத்திழந்து
சேனைதளமிழந்து சிரசிழந்துவாழ்விழந்து
வானரங்கள்வந்துன் வையகத்தைசுட்டழித்து
உன்சடலமெல்லா முழுத்துப்புழுப்புழுத்து
சஞ்சலப்பட்டுச் சண்டாளாநீமடிவாய்
வேண்டுவேன்தவசு விமலன்தனைநோக்கி
ஆண்டுபன்னிரண்டா யவன்றவசுநின்றனனே
நின்றதவத்தில் நிலமையறிந்துமையாள்
அன்றைக்குவந்தருளி ஞாயிழையும்
உரைத்தமொழிகேட்டு உத்தமுனிதனக்கு
துரைத்தனமாயித்தனையுஞ் சொல்லிவிடைகொடுத்தேன்
இப்படியேமாமுனிக் கீந்திருக்குமிவ்வரங்கள்
அப்படியேதூசுவீசு மாமுனியுஞ்சுகசீல
மாமுனியும்நம்மை வருந்திநெட்டைசெய்யுகிறான்
அல்லாமல்தேவாதி யபயம்பொறுக்கரிது
எல்லாமிதுகண்டிப் பிறவிசெய்தோமென்றார்
நல்லதுகாணென்று நல்லதிருலெட்சுமியை
வன்னமுள்ளபெட்டகத்தில் வைத்தார்காணீசுரரும்
இராமபாணமதையும் நன்றாய்ப்பிறவிசெய்ய

சீராமசிறியம்பகனுஞ் சிவனும்யகமகிழ்ந்து
என்னவிதமா யிதுபிறவிசெய்வோமென்று
பொன்னம்பலத்தோர் புத்திநொந்துதானிருந்தார்
ஈசுரருமப்போ இரத்தநக்கிரிதனிலே
ஈசுபரனும் வேள்வியதுவளர்க்க
வேள்விவளர்த்து விமலனுருவேற்ற
ஆவித்திருமால் அப்போதுபாயமதாய்
திருக்கணைக்காலில் செய்யநரம்புருகி
கருக்கணமாய்ராம பாணக்கணையெனவே
உறுதிகொண்டுவேள்விதனில் விட்டெறிந்தாரம்மானை
பிறுதிகொண்டுலட்சுமியும் பிலத்ததிருக்கரத்தில்
சுண்டுவிரலில் துய்யநரம்புருகி
வேண்டும்பெரிய வீரவில்லீதெனவே
ஆருமிந்தவில்லை அம்பேற்றக்கூடாமல்
ஸ்ரீராமரேற்றச் சிந்தித்தாளம்மானை
உடனேயதுவில்லாய் ஓமமதிலேபிறக்க
திடமாகராமர் திருக்கணங்காலுள்நரம்பு
பாணமதுவேள்விதனில் பரிவாய்ப்பிறந்திடவே
தாணரும்வானோரும் சங்கத்தோருங்காண
எல்லோருங்கண்டிது கண்மாயமெனவே
வல்லோர்களான வாய்த்ததேவாதியெல்லாம்
சங்கடங்கள்தீர்ந்துதென்று சந்தோசங்கொண்டாட
அங்கணங்களான அலகைமிகக்கூத்தாட
இராமபாணத்தாலே ராவணசூரனையும்
ஸ்ரீராமர்சென்று தென்னிலங்கைதன்னிலுள்ள
அரக்கர்குலமறுப்பார் அச்சுதனரென்றுசொல்லி
இரக்கமுள்ளதேவர் இரங்கிமிகக்கொண்டாட
வில்லோடுடன்பிறந்த வீரலெட்சுமியெனவே
வில்லோர்களாராலும் வந்திந்தவில்லதையும்
வளைத்தோர்க்குநல்ல மாலைசூட்டலாமெனவே
தளைத்தசுகசீலத் தாட்டிகமாமுனியும்
தினகரராய்ப்பூமியிலே செய்துவைத்தலட்சுமியை
மனகரமாய்ப்பூமியிலே வைத்தபெட்டகத்தோடே
வில்லோடேபிறக்க விமலனருளினராம்
நல்லதுசுவீசு மாமுனியைநாடதிலே
தெசரதராய்த் தோன்றவைத்துதேசாதிராசனுக்கு
விசைமாலைராமருமாய் வீரக்கணையோடே
கூடிப்பிறக்க குன்றெடுத்தார்தான்துயிலும்
நீடஅரவணையை நீதலட்சுமணராக்கி
தலையணைமெத்தையையும் சத்துருபரதனுமாய்
நிலைவரமாமீசன் நெறியாய்ப்பிறவிசெய்ய
தேவரையும்வானரமாய்ச் சிவனார்பிறவிசெய்ய
மூவரையும்பிறவி உள்ளதெல்லாஞ்செய்திடவே
கொடுமுடியாய்ப்பிறந்த கோளிலங்கைப்பாவிகளை

முடியடிவேரில்லாமல் முழுதுமறுப்பதற்கு
வேண்டும்பிறவியெல்லாம் விமலனருளிமிக
தாண்டவசங்காரம் தானிதென்றாரம்மானை

விருத்தம்

இராவணன் தன்னைக்கொல்ல ராமபாணங்களோடே
சீராமராய்மாயன்றானும் தசரதன்றனக்குத்தோன்ற
வீராகனமாதுசீதை வில்லுடனுதிக்கத்தேவர்
மராமரக்குலங்களாகி வந்தனர்புவியின்மீதே

நடை

ஸ்ரீராமராய்ராவணனைச் செயிக்கவொருவிதமாய்
ராமபாணத்தோடே நாட்டில்ப்பிறந்தனராம்
தென்னிலங்கைதான்முடிய சீதைசிறையிருக்க
பொன்னதியவில்லோடுடன் பிறந்தாள்பொன்மாது
தேவரெல்லாம்வானரமாய்த் தென்னிலங்கைசுட்டழிக்க
பூவர்சுகுமுனிவர் போர்விசுவகர்மனெனும்
வானரத்துக்கேற்ற மந்திரிதானுகை
தானவரையுமனுப்பித் தரணிதனிலெம்பெருமாள்
இலட்சுமணரெனவே ஏற்றசத்துருபரதன்
கச்சியுடன்மாயன் கணையோடுடன்பிறந்தார்
இப்படியேராவணனுக் கெல்லோரும்பகையாய்
முப்படியேயுள்ள முறைநூல்ப்படியாலே
வந்துபிறந்தார்காண் மாயவருமம்மானை
இப்படியேராமர் ஏற்றதசரதர்க்கு
அப்படியேயிறந்தங்கிருந்தாரம்மானை
சீதைவளரத் திருவில்லுந்தான்வளர
கோதைகுழல்சீதை கோமான்மிகவளர
சீராமர்பிறப்போர் சிறப்பாய்வளர்ந்திடவே
இராமர்குலங்கள் இரகசியமாய்வளர
அரக்கன்கொடுமை அண்டமளவேவளர
சீதைவளர்ந்து திருவில்லுந்தான்வளர
மாதைமணமிடவே மாதாமனதிலுற்று
தன்புருசனோடே தையல்நின்றேதுசொல்வாள்
அம்புவில்லும்வளர ஆயுளையும்வளர
பக்குவங்களாச்சே பைங்கிளிக்குமாலையிட
ஒக்குவதென்ன உரைப்பீரென்னுத்தமரே
என்றுமடமாதேற்றித் தினகரரை
நின்றுவணங்கி நேரிளையுஞ்சொல்கையிலே
வில்லுவளைத்தல்லவோ மெல்லிமணஞ்சூடுவது
வல்லகலைக்கோட்டு மாமுனியைத்தான்வருத்தி
இன்னபடியீதென்றெடுத்துரைக்க மாமுனியும்
அன்னப்பொழுதில் அருளுவான்மாமுனியும்
பூராசமான புவியன்பத்தாறிலுள்ள
இராசாதிராசரெல்லாம் இப்போவரவழைத்து
வில்லைவளைத்தவர்க்கு மெல்லிமணஞ்சூட்டுமென்று

சொல்லியேமாமுனியுந் தசரதனுர்கண்மணியை
கண்டுநின்றுமாமுனியுங் கண்ணனுர்க்கேதுரைப்பான்
பண்டுஉனக்குப் பரமசிவனும்
வில்வளைத்துமாலேயிட விதியில்விதித்திருக்க
செல்லந்தமன்னன் தினகரனுர்கண்மகள்க்கு
இன்றுகலியாணம் இப்போதங்குசென்ருல்
பண்டுவமைத்த பலனுனக்குகிட்டுமிப்போ
என்றுகலேக்கோட்டு மாமுனியுந்தானேகி
சென்ருன்தினகரரின் செல்விமணந்தனிலே
அனறன்பத்தாறு அரசருக்கும்ஆளனுப்பி
தேசாதிதேசர் திசைவென்றமன்னரெல்லாம்
மேசாதியாரேரும் மேவுந்தெய்வேந்திரனும்
இராவணசூரன் இராமர்முதலானவரும்
இராமகுலச்சாதி நல்லமன்னர்வந்தனராம்
வில்லேவளேத்து வில்லேநாண்பூட்டாமல்
முல்லேமன்னரெல்லாம்முகம் வாடிப்போயிருந்தார்
இராமரெடுத்து இராமசரமேற்றி
ஸ்ரீராமர்மணஞ்செய்தார் சீதைதிருமாதை
மணமுகித்துவானேர் மங்களக்கீதத்துடனே
துணேவர்தலேவரோடு சென்ருரயோத்தியிலே
அய்யோத்தியாபுரியில் ஆனதம்பிமாரோடு
கையேத்துவந்த கன்னிதிருவோடும்
வாழ்ந்திருக்கும்நாளில் மாதாகைகேசியம்மை
தாழ்ந்தமொழிசொல்வதிஞல் தம்பிபரதனேயும்
நாடாளவைத்து நல்லஸ்ரீராமருந்தான்
கூடயிருதம்பியோடும் குழல்சீதைமாதோடும்
நாடிநடந்தார் நல்லவனவாசமதில்
வாடிவந்துகானகத்தில் வாழ்ந்திருக்கும்நாளேயிலே
இலட்சுமணரும் இனியகனிதான்பறிக்க
கச்சியுடன்நடந்து காட்டில்மிகப்போக
சூர்ப்பனகைமகனுந் துய்யதவசுநிற்க
ஆர்ப்பரவாயீசர் ஆகாசத்தேவழியே
வாளேயனுப்பிஞர்காண் வாய்த்தபரமேஸ்வரரின்
தாழையவர்போற்றி தாமனந்தலட்சுமணன்
கண்டந்தவாளே கைநீட்டித்தான்பிடித்து
துண்டாகஆலேத் துஞ்சிவிழவெட்டிஞர்காண்
பட்டந்தஆலும் படபடெனச்சாய்ந்திடவே
வெட்டந்தவீழ்ந்தான் மீண்டுதிரம்பாய்ந்ததுவே
அரக்கன்ருய்கண்டு அலறிவெகுண்டெழுந்து
இரக்கமில்லாச்சூர்ப்பனகை லட்சுமணரைத்தேடி
நாடியெனேத்தாவுமென்று நாணமில்லாதேயுரைத்தாள்
தேடிச்ஸ்ரீராமர் சீர்பாதங்கண்டணுகி
என்பாரியிங்கே இருக்கஒருபேர்கள்
தன்பாரிதன்னே தான்விரும்பேன்போடியென்ருர்

போடிநீயென்ற புத்திதனைக்கேட்டரக்கி
தேடியேலட்சுமணரைச் சேரவுறவாடிநின்றுள்
உறவாடிநின்ற வொயிலையவரறிந்து
பறபோடியென்று பம்பத்தனமூக்கரிந்தார்
மூக்கும்முலையும் முகமும்வடிவிழந்து
நாக்குரைக்காவாடி நாணங்கெட்டதீயரக்கி
தன்னுடனேகூடித் தமயனெனப்பிறந்த
மன்னன்ராவணன்றனக்கு வகையாயுரைக்கலுற்றுள்
காட்டிலொருபெண் கமலத்திருமகள்போல்
நாட்டிலொவ்வாக்கன்னி நான்கண்டதில்லையண்ணே
உந்தனுக்காகுமென்று உற்றவளைநான்பிடித்தேன்
எந்தனுடமூக்கரிந்தோர் இருவருண்டல்லாது
மற்றவர்களங்கே வாழ்ந்திருக்கக்கண்டதில்லை
கற்றொருவர்காணுது கையிலம்புகாணுது
மருவனையஅண்ணே உன்வாய்த்தவிரலதிலே
ஒருஇறைக்கேயுண்டு உற்றவர்தன்னுயரம்
என்றந்தரக்கி ஈனம்பலதுரைக்க
அன்றந்தராவணனும் ஆகாசத்தேரேறி
பிச்சைக்கெனவே புறப்பட்டான்காடதிலே
அச்சமில்லா லட்சுமணரானதிருராமருமாய்
மானின்பிறகே மனம்வைத்துநின்றிடவே
வானின்செயலால் வானவர்கள்பார்த்திருக்க
நாராயணர்தேவி நல்லதிருலட்சுமியை
ஏராதபாவி லெச்சைகெட்டதீயரக்கன்
தேரிலேஅம்மைதனைத் திருடிக்கொண்டேகினைம்
பாரிலேயுள்ள பட்சிபறவைகளும்
கண்டுபதறிக் கதறிமிகஅழவே
அண்டர்மூனிதேவர் எல்லோருந்தானழவே
மான்வேட்டையாடி மாரீசனையறுத்து
தான்வேட்டையாடுந் தகையாலேதம்பியுடன்
வந்தாரிலட்சுமியாள் வாழ்ந்திருக்குமண்டபத்தில்
பந்தார்குழலனையப் பாவையரைக்காணுமல்
கலங்கிமிகவாடி கண்ணீர்மிகச்சொரிய
மலங்கியேலட்சுமணர் மண்ணில்புரண்டழுதார்
என்னேமணியே எனைப்பெற்றமாதாவே
பொன்னேயமுதே பெற்றவளேஎன்றழுதார்
இராமர்முகம்வாடி நாயகியைத்தான்தேடி
ஸ்ரீராமர்மிகக்கலங்கிச் சினேகமுடனழுதார்
அன்னமயிலோடும் அன்றில்குயிலோடும்
புன்னைமலரோடும் புலம்பிமிகவழுதார்
வண்ணமுள்ளயானை வாய்த்தசிங்கத்தோடும்
பெண்ணமுதைக்கண்டீரோ பிதற்றிமிகக்கேள்ப்பார்
இப்படியேராம ரிளையபெருமாளும்
அப்படியேசொல்லி அழுதழுதுதான்வாடி

சோலைமரத்தின்கீழ் சோர்ந்துமுகம்வாடி
மாலவருந்தம்பி மடிமேல்துயின்றிருக்க
அஞ்சனையாள்பெற்ற அனுமன தில்வந்தடைய
சுக்ரீபனும்சாம்புவனும் சுத்தமுள்ளவீரர்களும்
ஒக்கவொருமுகமாய் உடையோன்பதமடைய
கெருடன்மிகமறித்துக் கேலியிட்டஞாயமதும்
திருடன்கொடிய தீபாவிராவணனும்
அம்மைதனைக்கொண்டு அவன்கோட்டையானதிலே
செம்மையில்லாப்பாவி சிறையில்வைத்தஞாயமது
எல்லாமறிந்து எம்பெருமாள்கோபமுடன்
வெல்லத்துணிந்தார் மிகுபடைகள்தான்திரட்டி
எழுபதுவெள்ள யேற்றவானரங்களையும்
முழுதும்வருத்தி ஒப்பமிட்டெம்பெருமாள்
விசுவகம்மாளனையும் விரைவாய் அருகழைத்து
விசுவாசுமைந்தன் வாய்த்தஅனுமனையும்
அனுமன்றனையேவி ஆனமலையெடுத்து
துனுமனுடனே தோயக்கடலதுக்குள்
கோட்டையதிட்டுக் குக்குழித்தங்கேகி

## திரேதாயுகத்தில் ராவணன்பாடு

ஓட்டனுய்விட்டார் உற்றவனுமனையும்
பூட்டமுடன்வாயு புத்திரன்ருன்மகிழ்ந்து
நாட்டமுடனிலங்கை நாடாளும்பாதகனை
கண்டுமுடுக்கி கருத்தழியத்தான்பேசி
கொண்டுஇலங்கை குப்பையிடத்தீக்கொளுத்தி
மால்கொடுத்தவாழி மாதுகையில்கொடுத்து
வால்கொண்டுவீசி வனங்காவு தானழித்து
கேதாரமாமலையும் கீர்த்தியுடன்குதித்து
பாதாரமென்று பணிந்தானேராமரையும்
அரக்கனவன்பேசும் ஆங்காரமத்தனையும்
இரக்கமுள்ளஎம்பெருமாள் எழுந்தார்படைக்கெனவே
படைக்குஇவர்நடக்க பார்த்துவிபூசணனும்
அடைக்கலமென்று அவர்பாதஞ்சேர்ந்தான்காண்
சேர்ந்தவுடனே திருமால்மனமகிழ்ந்து
ஓர்ந்தபடையோடு உடன்யுத்தஞ்செய்திடவே
அரக்கன்படையும் அச்சுதனர்தன்படையும்
இரக்கமதில்லா இருபேருஞ்சண்டையிட்டார்
படைபொருதிவெல்லாமல் பத்துச்சிரத்தோனும்
கடகரியுந்தோற்று கையிழந்தானம்மானை
பத்துத்தலையும் பார்மீதிலத்துவிழ
மற்றுநிகரொவ்வா மாயத்திருநெடுமால்
அரக்கனுடவுயி ரங்குமிங்கும்நிற்கையிலே
இரக்கமுடனின்றங் கேதுரைத்தாரம்மானை
கேளாய்நீராவணு கிறேதாயுகந்தனிலே

பாளாய்இரணியனுய்ப் பாரில்பிறந்திருந்தாய்
உன்னிடுக்கம்கண்டு உன்புதல்வனுகைி
தன்னடுக்கல்வந்துனேயுஞ் சங்காரஞ்செய்தேனுன்
மகனுய்ப்பிறந்து வதைத்தேனுன்பாரறிய
பகைநானென்று பண்புமிக்கூடி
அப்போதுநீயும் அன்றுரைத்தவார்த்தையினுல்
இப்போதுன்னிலங்கை எல்லாஞ்சரமறுத்து
நாணமில்லாதுன்னிலங்கை நகரிதீயாலழித்து
பாணமொன்ருலுன்னே படைய்தேன்கண்டாயே
அல்லாமலுந்தனக்கு அங்கமொருநூறு
எல்லாரும்வெல்லா ஈசன்கயிலேயதும்
எடுத்தபிலமுமுண்டே ஈரஞ்சுசென்னியுண்டே
கடுத்தபலமுள்ள காலாள்க்கள்போரவுண்டே
இந்திரனேவென்ற ஏற்றபுதல்வருண்டே
சந்திரசூரியருந் தன்னிடத்திலுண்டல்லவோ
மூனுலோகத்தாரும் உந்தனுக்குண்டல்லவோ
ஆணுவங்கள்பேசினேயே அம்பொன்றில்மாண்டதென்ன
கோலுபோலேஉயர்ந்த கொடும்பாவிநீகேளு
நாலுமுளமல்லவோ நல்தலேயொன்றல்லவோ
என்கைவாழி எடுத்துவிடத்தாங்காமல்
உன்கைகாலற்று உயிரழிந்துமாண்டாயே
பத்துமலேபோல் பருந்தலேகள்பெற்றதெல்லாம்
இத்தலத்தில்கண்டிலனே என்கையால்மாண்டாயே
மாண்டாய்நீயென்று வசைகூறக்கண்டரக்கன்
ஏண்டாமழுப்புகிருய் இராமனேகொல்லுவது
தம்பியெனப்பிறந்து சத்துருபோல்தான்சமைந்து
என்பிலங்களெல்லாம் எடுத்துரைத்தானுந்தனுக்கு
ஆனதாலென்னுடைய அடையாளம்பார்த்துலெக்காய்
ஊனமுடனெய்தாய் உயிரழிந்தேனல்லாது
நீயோடாஎன்பலங்கள் நிலேபார்த்துக்கொல்லுவது
பேயாநீபோடா புலம்பாதேஎன்னிடத்தில்
அப்போதுமாயன் அதிகசீற்றத்தோடே
ஒப்பொன்றில்லாதார் உரைப்பார்காணம்மானே

## விருத்தம்

உன்னுடையதம்பியாலே உயிர்நிலேயறிந்துயானும்
என்னுடைசரத்தால்க்கொன்றேன் என்றியம்பியஅரக்கா
பின்னுகப்பிறப்புதன்னில் பிறப்புநூருேடுங்கூடி [வுன்னே
அன்னுகந்தன்னில்தோன்ற அருளுவேனுன்னே நானே

## விருத்தம்

என்னெருதம்பியாலே என்னேயுங்கொன்ருயென்று
தன்னெருமதத்தால் நீயுஞ்சாற்றியவரக்காவுன்னே
பின்னெருயுகத்தில்நூறு பேருடன்பிறவிசெய்து
இன்னெருஆளின்கையால் இறந்திடச்செய்வேனுன்னே

நடை

என்னுடையதம்பியாலே நீஎன்னுயிரழித்தா
உன்னுடையஅம்பால் உயிரழிந்தேனல்லாது
என்னைநீகொல்ல ஏலாதெனஉரைத்தாய்
உன்னைநானிப்போ ஓருபிறவிசெய்யுகிறேன்
என்றுசொல்லிமாயன் எண்ணவொண்ணுக்கோபமுடன்
அன்றுகயிலே அரனிடத்தில்சென்றிருந்து
முன்னுள்ளதுண்டம் ஓரிரண்டுள்ளதிலே
ஒன்ருருதுண்டம் ஒருநூறுபங்குவைத்து
துவாரயுகம்வகுத்து துரியோதனனெனவே
கிறேதாயுகமழித்துக் கீழுலகில்தோணவைத்தார்
பாவிபிறக்க பச்சமால்தான்கூட
தாவிப்பிறந்த தம்பியர்மூவரையும்
விபூசணனும்நல்ல வெத்திச்சாம்புவனையும்
அய்வரையும்பூமி அதிலேபிறவிசெய்தார்
மொய்குழலான மெல்லிதுரூபதையாய்
அம்மைதிருகுளலில் அமர்ந்திருந்தபொற்சடையை
நன்மைவிபூசணர்க்கு நல்மகளாக்கிவைத்து
அரக்கர்குலமறுத்து அம்மையெழுந்தருளி
இரக்கர்புரமேகி இருக்குமந்தநாளையிலே
தோழியாய்முன்னிருந்த துய்யதிருச்சடையை
நாழிகைதன்னில் நாதன்பிறவிசெய்தார்
பின்னுமந்தமாயன் பெரியோனடிவணங்கி
நின்றுகரங்குவித்து நெடியோனுரைத்தனராம்
எழுபதுவெள்ள ஏற்றவானரங்களுடன்
முழுதும்இலங்கை முடித்துநான்நிற்கையிலே
என்படைகளான எழுபதுவெள்ளமதிலும்
உன்படைகளெல்லாம் உயிரழிந்தாரெனவே
ஆராய்ந்துஎன்படயை அளவிட்டுநிற்கையிலே
தோராதமன்னன் துடியானசேவகன்ருன்
ஒருவன்தனைக்காணேன் உடனேமறலிதனை
வருகஅழைத்து வகையேதெனக்கேள்க்க
நானில்லையென்றே நமன்ருன்மிகவுரைக்க
ஏனில்லையென்று இறுக்கிநான்கேள்க்கையிலே
அய்யாவேஉம்முடைய ஆளானவீரனைத்தான்
கையாலமுள்ளகும்ப கர்னனொருசமரில்
பிடித்துநசுக்கி பிசைந்துதிலகமிட்டான்
அடுத்துநின்றுபார்த்து அரக்கன்வனுயிரை
கொண்டேகினானும் கொடுநரகில்வைத்திருக்கு
என்றேதான்மறலி இந்தனையுஞ்சொன்னுன்காண்
ஆனதால்கும்ப கர்ணனவன்தனையும்
ஈனமுள்ளகஞ்சன் எனப்படையும்இவ்வுகத்தில்
என்றேதான்மாயன் இதுரைக்கயீசுரரும்

அன்றேதான்கும்பனேயும் அப்படியேதான்படைத்தார்
செந்தமிழ்சேர்மாயன் சிவனுரையும்பணிந்து
எந்தனக்கேற்ற ஈரஞ்சாயிரமடவை
கன்னியராயெனக்கு கவரியிடநீர்படையும்
பன்னீர்குணம்போல் பைம்பொன்னிறத்தக்கவராய்
ஆயர்குலத்தில் அநேகமடவாரை
பாயமுறவாடிருக்கப் படைப்பீர்காண்ஈசுரரே
லட்சுமியைப்பூமா தேவியெனவகுவும்
கச்சியாயென்னைக் கருணையுடன்படையும்
தாயாகப்பெண்கள் தான்படைக்கவேணுமென்றார்
படைத்தசடமதுக்குப் பரமனுயிர்கொடுக்க
சடத்தைமிகயெழுப்பித் தானனுப்பிஈசுரரும்
துவராயுகமெனவே தொன்முறையைத்தான்பார்த்து
தவருவண்ணம் தான்படைத்தாரெல்லோரும்
அப்படியேஈசர் அன்றுபடைத்தபடி
இப்படியேவந்திவர்கள் பிறந்தனராம்
முன்னுள்ளபீடத்து உதிரமெல்லாமெழுந்து
அன்றுள்ளபாவி அவன்கூடத்தானிருக்க
அரக்கராவணனும் அதிகதுரியோதனனுய்
மூர்க்கன்பிறப்போர் ஒருநூறுபேரோடு
வந்துபிறந்தான் வையகத்திலம்மானே
சந்துபயில்மாயன் தன்னேடுடன்பிறந்த
தம்பிபரதன் சத்துருக்கன்லட்சுமணன்
நம்பிவிபூசணனும் நல்லதொருசாம்புவனும்
அய்வரும்பூமிதனில் அப்போதுதோன்றினராம்
தெய்வதிருச்சடையும் தேவிதுரூபதையாய்
ஐவருடதேவிஎன்று ஆயிழையுந்தோன்றினளாம்
கும்பகர்னனென்ற கொடும்பாவிகஞ்சனுமாய்
வம்பகனுய்வந்து மதுரைதன்னில்பிறந்தான்
இப்படியேஐபேரும் ஏற்றரியநூற்றுவரும்
அப்படியேபங்கு வகைபாதியாய்ப்பிறந்தார்
இராச்கியத்திலுள்ள இறைதானமுள்ளதெல்லாம்
தராச்சியமாய்ப்பாதியெனத் தங்கள்சிலநாடாண்டார்
கஞ்சனவன்பிறந்து கடியகொடியவனுய்
வஞ்சகனைப்பெற்ற மாதாபிதாக்களையும்
சிறையதிலேவைத்து தேசமதைத்தானுண்டு
இறைமிகுதிவேண்டி இராச்சியத்தைஆண்டனனே
ஆனதினுலேஅவர்கள் புவியிலுள்ளோர்கள்
ஈனதுன்பமாகி இருந்தோர்பயமடைந்து
தேவரெயும்வானவரையும் தெய்வேந்திரன்வரையும்
மூவரையும்சற்று முனியாமலேபாவி
தெய்வமடவாரைத் திருக்கவரிவீசிடவே
வைப்பேன்பிடித்து வாவெனவே ஆள்விடுவான்
வருணனுடன்வாயுவையும் வலுவிலங்கிலேபோட்டு

அருணமுதலாய் அந்திவரும்வரையும்
வேலையவன்கொண்டு விடுவான்அவன்றேழிலாய்
மாலைநினையான் மறையைமிகநினையான்
ஆலயங்கள்கோவில் அழிந்தமடங்கள்வையான்
சாலையங்கள்செய்யான் தர்மசிந்தனைகள்செய்யான்
அந்தணர்க்குஈயான் அன்னதானங்களிடான்
பந்தலிட்டுத்தண்ணீர் பக்தர்தனக்கீயான்
ஆவுதனையடைத்து அதற்கிரைகள்போடாமல்
கோவுகளைக்கொல்வான் கொடும்பாவிநெட்டூரன்
கண்டவழக்குரையான் கைக்கூலிகேட்டடிப்பான்
சண்டனைக்கண்டாருவென்பான் தன்னைப்பாவித்திருப்பான்
எம்மைப்படைக்க ஏலுமோமற்றொருவர்
நம்மைப்படைத்தது நான்தானெனவுரைப்பான்
இப்படியேகஞ்சன் எதிரியில்லையென்றுசொல்லி
அப்படியேசொல்லி ஆண்டான்காணம்புவியில்
மேலோகந்தன்னில் மிகுத்ததெய்வக்கன்னியரில்
வானலோகமான வாய்த்தகன்னிதெய்வதியும்
ரோகணியாளென்னும் நுதல்மடவாரண்டுபேரும்
புரோகணியமான பொய்கைநீர்தானுடி
அக்காளுந்தங்கையுமாய் அவர்களிருமாமயிலும்
மிக்கானபட்டுடுத்து மேவிவழிவரவே
மாயன்சிறுமதலை வடிவெடுத்துத்தானழவே
ஆயனுடகோலம் அறியாமல்மங்கையர்கள்
தெய்வகியும்பார்த்துச் செப்புவாள்தங்கையுடன்
நெய்நிதியக்கன்னி நெடியவிழிரோகணியே
இன்னுஅழுது இதில்க்கிடக்கும் ஆண்மதலை
பொன்னுனபூமியிலும் பெண்ணேநான்கண்டதில்லை
காலில்சிவசக்கரமும் கையில்மால்சக்கரமும்
மேலில்சக்திசக்கரமும் விழிசரசுசக்கரமும்
வாயுபகவான் வடிவுமிகப்போலே
ஆயும்பலகல்வி ஆராய்ந்தவச்சுதர்போல்
கண்கொள்ளாக்காச்சி கைமதலைதன்னழகு
விண்கொள்ளாக்காச்சி மெல்லியரேஇம்மதலை
இம்மதலைதன்னை எடுத்துநாம்தாலாட்டி
பொன்மதலைதன்னைப் போட்டுவைத்துப்போவோம்நாம்
என்றுசொல்லிமாதர் இருபேருஞ்சம்மதித்து
வண்டுசுத்துமெல்லி வந்தெடுத்தாரம்மானை
மதலைதனையெடுத்து மார்போடுதானணைத்து
குதலைமொழிஅமர்த்திக் கோதையிருமாமயிலும்
கைலையதுக்கேகி கரைக்கண்டார்பாதமதில்
மைலனையமாமயிலார் வந்தார்காணம்மானை
வந்தமடவார்கள் மார்பில்அமுதிழகி
அந்தப்பரமேசுரனுர் அவரறிந்து
கன்னியரேயுங்கள் கற்புஅகன்றதென்ன

மின்னித்தனங்கள் மெல்லியுடலானதென்ன
பச்சநிறமேனி பால்வீச்சுவீசுவதென்ன
அற்சமில்லாக்கொங்கை அயர்ந்துஉடல்வாடினதேன்
ஏதெனவேசொல்லுமென்று ஈசுரனுர்தான்கேட்க
சூதகமாய்நின்ற தோகைபோல்வாடிநின்ருர்

**விருத்தம்**

வாடியேமடவார்தானும் மார்பதில்துயிலைமூடி
கோடியேஅயர்ந்து ஏங்கிக்குருவதைப்பாராவண்ணம்
நாடியேதாழ்ந்துபெண்கள் நாணியேநின்றதன்மை
தேடியேமாயன்செய்த செயலெனஅறிந்தார்ஈசர்

**விருத்தம்**

அறிந்தார்மாயன்சேயாகி அழுதேயிரங்குங்குரலதினல்
செறிந்தார்குழலாரிவர்கள்சென்று சேர்த்தேயெடுத்து
வணைத்ததுவும்
பறிந்தேயிவர்கள்நாணினதும் பால்தான்தனத்தில்பாய்ந்
ததும்
அறிந்தேகன்னிஇருவரையும் அழித்தேபிறவிசெய்தனராம்

**விருத்தம்**

பிறவியதுதான்செய்யவென்று பெரியோனுரைக்கப்
பெண்ணுர்கள்
அலறியழுதுமுகம்வாடி அரனுரடியைமிகப்போற்றி
திறவிமுதலேதிரவியமே சிவமேஉமதுசியலைவிட்டு
இறவியானுலெங்களுக்கு இனிமேல்பிறவிவேண்டாமே

**விருத்தம்**

வேண்டாமெனவேமெல்லியர்கள் விமலனடியைமிகப்போற்றி
மாண்டாரெலும்பைமார்பணியும் மறையோன்பின்னும்
மகிழ்ந்துரைப்பார்
தூண்டாச்சுடரோன்திருமாலைச் சேயென்றெடுத்த
செய்கையினல்
ஆண்டாருனக்குமகனுகி அதின்மேல்பதவியுங்களுக்கே

**நடை**

மெல்லியரேயுங்கள் மெய்வரம்புதப்பினதேன்
சொல்லஏதுவாச்சு சீமைபிலேஅம்மானை
என்றேஅரனுர் இருகன்னியோடுரைக்க
அன்றேமடவார் ஆதிதனைநோக்கி
ஆதியேஞதி ஆனந்தமெய்ப்பொருளே
சோதியேஅனுதிச் சொருபத்திருவிளக்கே
அல்லாய்ப்பகலாய் ஆரிருளாய்நிற்போனே
வல்லாய்ப்புவியை வார்த்தையொன்ருல்ப்படைத்த
ஆதிப்பொருளே அனுதித்திருவிளமே

சோதிப்பொருளே சொல்லொணுதோவியமே
எட்டாப்பொருளே எளியோர்க்கெளியோனே
முட்டாதசெல்வ முதலேமுழுமணியே
கண்ணுண்மணியே கருத்திலுண்ணேவியமே
பெண்ணுமாணுகிப் பிறப்பில்லாநின்றேனே
இறப்புப்பிறப்பில்லா எளியோர்க்கெளியோனே
பிறப்புஇறப்பில்லா பேசமுடியாதவனே
கருவிதொண்ணூற்ருறுங் காவலேந்துபேருடனே
உருவுபிடித்து உயிர்ப்பிறவிசெய்தோனே
மூவருமுந்தன் முடிகாணமாட்டாமல்
தேவருந்தேடி திரிந்தலேயவைத்தோனே
மௌவ்வொவ்வாகி வருந்தியவ்வுமொவ்வாகி
செவ்வவ்வாய்நின்ற சிவனேசிவமணியே
மாயனெடுத்த மகவானகோலமதை
நேயமறியாமல் நெறிதவறிப்போனதனுல்
பின்னேநீரெங்களேயும் பிறவிசெய்யவேண்டாங்காண்
என்னேரங்கயிலே இப்பூமியானதிலே
தெய்வப்பசுப்போல் தேவரீரெங்களேயும்
மெய்யறிவுகூடிமிகப் படையும்மேலோனே
அல்லாதேபோனுல் அடியார்கள்எங்களேயும்
இல்லாதேசெய்யும் இனிப்பிறவிவேண்டாங்காண்
அம்மைஉமையாளருகே மிகஇருந்து
உம்மையும்போற்றி உம்ஊழியங்கள்செய்து
பூவுலகில்நாங்கள் பெண்ணுய்ப்பிறந்ததுண்டால்
பாவிகள்க்குவேலே பண்ணிமுடியாதே
பூவுமுடித்துப் பூமேடையும்பெருக்கி
நாவுலகுமெய்க்க நல்லகவிதான்பாடி
தம்புறுவீணே சத்தக்குழலுடனே
இன்புருகரகரா இசைந்தமுறைதாணிகள்த்தி
நரசென்மம்வாழும் அசுரக்குலங்களிலே
அரசேநீர்எங்களேயும் அழுந்தப்படையாதேயும்
இப்படியேகன்னி இரங்கியழுதிடவே
அப்படியேகன்னி அவர்கழூக்காதியுமே
சொல்லுவார்வேதச் சுடரோன்அதிசயித்து
நல்லதுகாண்பெண்ணே நம்மைரண்டுஞ்சொல்லாதே
மாயன்துவரா வையகத்தில்போய்ப்பிறக்க
உபாயமாயுங்களேயும் முறைதாய்தானுக்க
நாமென்னசெய்வோம் நவ்விமால்செய்ததற்கு
போமென்னஈசர் பிறவிசெய்தாரம்மானே
வாயுமகாதேவன் வடிவென்றயிச்சையினுல்
ஆசையாலுங்களுக்கு அவனேபுருசனென்ருர்
சங்குசரங்கொண்ட தம்பியென்றஇச்சையினுல்
அங்குபகவதியும் அச்சுதருமுங்களுக்கு
மதலேயெனவந்துதிப்பார் வையமதுகொண்டாட

விலங்குசிறையும் மிகுசிறையுமுங்களுக்கு
மலங்குவதுமெத்த மாச்சலுண்டாகியபின்
ஸ்ரீகிருஷ்ணனாய்த் திருமாலுதித்திடவே
குறுக்கிட்டதோசக் கொடுமைமிகத்தீர்ந்து
பின்னேபதவி பேறுண்டுமுங்களுக்கு
மின்னேரொளியை விமலன்பிறவிசெய்தார்
பிறவியான்செய்ய பிறந்தார்காண்பூமியிலே
திறவியதுவிட்டுத் தெய்வகியும்ரோகணியும்
மதுரைதனில்வந்து மாபாவிகஞ்சனுக்கு
இருதையலாரும் ஏற்றபிறப்பெனவே
கூடிப்பிறந்தால்க் கொடியதோசமெனவே
தேசவொருராசன் சிறுவியெனப்பிறந்தார்
பிறந்தேதான்கஞ்சனுக்கு பிறப்பெனவேபேசும்வளம்
இப்படியேகஞ்சன் இவர்களிருதங்கையையும்
அப்படியேகூட்டி அவன்வேட்டையாடிவர
மாமுனிவன்றனக்கு வாய்த்திருந்தமாம்பளத்தை
தாமுனிந்துகஞ்சன் தானக்கனிபறித்து
தங்கையருக்கீந்தான் சையோகமுனியறிந்து
மங்கையர்க்குவந்த மகனலழிவையென்று
மாயவனேவலினல் மாமுனியுமப்போது
பாயமுள்ளகஞ்சனுக்குப் படுசாபமிட்டனனே
சாபமதுகஞ்சன் தானறியாவண்ணமுந்தான்
பாவமேநாடோறும் பண்ணிவரும்நாளையிலே
வேதியனைத்தான்வருத்தி மிகுத்தகேடுள்ளகஞ்சன்
சோதிருள்சங்கேள்க்கத் தொடர்ந்தான்காணம்மானை
அப்போதுசோதிரிசி அன்றுமுனிசாபமதால்
எப்பொழுதானலும் இடுக்கம்வருமென்றுரைத்தான்
சோதிருசங்கேட்டுத் துக்கமுற்றுக்கஞ்சனுந்தான்
வேதியனைதான்வருத்தி மிகுத்தகேடுள்ளகஞ்சன்
கலியாணிஞ்செய்யக் கருத்தல்லவென்றுசொல்லி
வலியானகஞ்சன் வைத்திருந்தானம்மானை
அந்தச்செய்தி அறிந்தந்நாரதரும்
வந்துகஞ்சன்றனக்கு வளப்பமெல்லாஞ்சொல்லலுற்ருர்
கேளாய்நீகஞ்சா கீர்த்தியுள்ளசாஸ்த்திரங்கள்
வாழாதமங்கையரை வைத்திருந்தால் ராச்சியத்தில்
தர்மந்தலைகெடுங்காண் சாத்திரத்துக்கேராது
வானம்வந்துசிக்கும் மாரியதுபெய்யாது
கோத்திரத்துக்கேராது குடும்பந்தழையாது
சூத்திரநோய்கள் சுற்றுமடாவக்குடும்பம்
மானம்வரம்புகெட்டு மனுநீதிதானழிந்து
ஊனமடாவக்குடும்பம் உலகத்துக்கேராது
கோட்டையழியும் குளங்கரைகள்தானழியும்
நாட்டையழிக்குமடா நல்லகன்னிகாவல்வைத்தால்
பொன்னனசீதை பிலத்தகர்பானதினல்

கண்ணன இலங்கை கரிந்ததுவுங்கண்டிலையோ
இப்படியேவேதம் இயம்பியிருப்பதினால்
அப்படியேபெண்ணார் அவர்களிருபேரையும்
காவலிட்டுவைத்தால்க் கர்ப்பதினாலுந்தனுக்கு
பாவம்வந்துசுற்றும் பலிக்குமடாவேதமது
ஆனதால்பெண்கள் அவர்களிருபேரையுந்தான்
மானமுள்ளமன்னனுக்கு மணஞ்செய்துதான்கொடுத்து
கெர்ப்பமதுண்டாகிக் கீழேபிறக்கையிலே
அப்போநீகொன்றாலும் ஆனாலும்பாரமில்லை
என்றந்தநாரதரும் இத்தனையுந்தான்கூற
நன்றுமொழியெனவே நவ்வியேகஞ்சனுந்தான்
எனக்குப்படிப்புரைத்த ஏற்றவாசுதேவன்
தனக்குஇவர்களையும் தான்சூட்டவேணுமென்றான்
வேணுமென்றுசீடடோட விரும்பிவசுதேவனுந்தான்
வாணுபங்களோடே வந்தான்மதுரையிலே
தெய்வகியைரோகணியைச் சிறப்பாயலங்கரித்து
வைபோகமுள்ள வாசுதேவனையுமொப்புவித்து
சங்கீதத்தோடே தையல்ரண்டுபேர்களையும்
மங்களத்தோடே வாசுதேவன்தாலிவைத்து
கட்டிக்கைப்பிடித்துக் கனசீதனத்தோடே
கோட்டிதிமிர்த்தூதும் குழலோடேவீற்றிருந்தார்
வாழ்ந்திருந்துபெண்கள் வயிறுவளருகையில்
ஆய்ந்தறிந்துகஞ்சன் அருவிலங்கில்வைத்தனனே
தெய்வகியாளுமழுது சிந்தைமுகம்வாடிருப்பாள்
மெய்யன்வசுதேவன் மிகக்கலங்கித்தானிருப்பாள்
மங்கைரோகணியும் வாடியழுதிருப்பாள்
சங்கையுள்ளதேவர்களும் தையல்தெய்வகன்னிகளும்
எல்லோருங்கஞ்சன் இடுக்கமதுதன்னாலே
அல்லோருமெத்த அறமெலிந்தாரம்மானை
இப்படியேசெய்யும் இடுக்கமதுக்காத்தாமல்
அப்படியேமாயனுக் கபயம்அமரரிட
நிலந்தேவியாகாய நீர்தேவியார்கூடி
தலந்தேவிமன்னனுக்கே முறயமிட
தேவாதிதேவர் தேவிமுறையாற்றாமல்
மூவாதிமுத்தன் முளித்தார்காண்பள்ளியது
கண்டுதேவாதிகளும் கன்னிபுவிமகளும்
ஆதியேனாதி அய்யாநாராயணரே
சோதியேவேத சுடரேசுடரொளியே
பக்தர்க்குநித்தர் பரனேத்தார்க்கேத்தோனே
சித்தர்க்குச்சித்தர் செயலொத்தார்க்கேத்தோனே
மூவர்க்கனாதி முழுமணியாய்நின்றோனே
தேவர்க்குநல்ல சிநேகமாய்நின்றோனே
கிட்டவரார்க்குக்கிட்டாத கிருஷ்ணாஉன்பதத்தை
கட்டவருமட்டானக் கருணாகரகடலே

உச்சிச்சுழியே உம்மென்றெழுத்தோனே
அச்சிச்சுளியே அம்மென்றெழுத்தோனே
அஞ்செழுத்துமூன்றெழுத்து ஆதியாவென்றெழுத்தும்
நெஞ்செழுத்தும் எட்டெழுத்தும்நீயாகிநின்ருேனே
என்ருெருபத்தென்னிரண்டு இவ்வேநடுவாக
ஒன்றெழுத்தாயிநின்ற உடையபெருமாளே
தண்டரளத்தூணகித் தருவைந்துபேராகி
மண்டலத்துறலுமாய் மாயமுமாய்நின்ருேனே
போக்குவரத்துப் புகுந்துரண்டுகால்வீட்டில்
நாக்கிரண்டுபேசி நடுநின்றநாரணரே
அல்லாய்ப்பகலாய் ஆணகிப்பெண்ணகி
எல்லார்க்குஞ்சீவன் ஈயுகின்றபெம்மானெ
பட்சிபறவைபல சீவசெந்துமுதல்
இச்சையுடன்சேய்நடப்பியல் கணக்குச்சேர்ப்போனே
ஒருபிறப்பிலும்மை உள்க்கொள்ளாப்பேர்களேயும்
கருவினமாயேழு பிறப்பிலுங்கைகேள்ப்போனே
ஆறுபிறப்பில் அரியேஉன்னேப்போற்ருமல்
தூறுமிகப்பேசித் தொழாதபேராஞலும
ஏழாம்பிறப்பிலும்மை எள்ளளவுதானினேத்தால்
வாழலாமென்றவர்க்கு வைகுண்டமீய்ந்தொனே
இப்படியேஏழு பிறப்பதிலும்உம்மையுமே
அப்படியேவோரணுவு அவர்நீனேயாதிருந்தால்
குட்டங்குறநோய் கொடியகன்னப்பித்துடனே
கட்டம்வந்துசாகக் கழுத்தில்கண்டமாலேயுடன்
தீராக்கருவங்குந் தீன்செல்லாவாய்வுகளும்
காதானதுகேளா கண்ணேகுருடாகும்
புத்திவித்தையத்து பேருறுப்புமில்லாமல்
முத்திகெட்டபுத்தி முளுக்கிரிகைதான்பிடுத்து
பிள்ளேயத்துவாழ்வுமத்துப் பெஞ்சாதிதானுமத்து
தள்ளேயற்றுவீடுமற்றுச் சப்பாணிபோலாகி
மானிலத்தோரெல்லாம் மாபாவிஎன்றுசொல்லி
வானிஞத்துமாண்டு மறலிஉயிர்கொள்கையிலே
நாய்நரிகள்சென்று நாதியத்தான்தனுடலே
தேசமதுகாணத் திசைநாலும்பிசசெறிந்து
காக்கைவிடக்கைக் கண்டஇட்ம்கொண்டுதின்ன
போக்கடித்துப்பின்னும் பொல்லாதான்தன்னுடலே
மறலிகொடுவாச்சே வலியதண்டாலடித்து
குறளிமிகக்காட்டிக் கொடும்பாவிதன்னுயிரை
நரகக்குழியதிலே நல்மறலிதள்ளிடவே
இரைநமக்கென்று எட்டிப்புழுப்பிடித்து
அச்சுதரைநினேயான் அய்யர்வைதானினேயான்
கச்சிமனதுடைய காமாச்சியைநினேயான்
வள்ளிக்குந்தேவ மாலவருக்காகாமல்
கொள்ளிக்குப்பிள்ளேயில்லாக் கொடும்பாவியென்றுசொல்லி

கவ்வியிழுத்துக் கடித்துப்புழுப்பொசிக்கும்
என்றுநீரெழுதி இராச்சியங்கள்தானறிய
அன்றுபறைசாற்றி அருளிவைத்தவச்சுதரே
வானமதுபூமியிலே மடமடனவீழாமல்
தானவனேஉன்விரலால் தாங்கிவைத்தபெம்மானே
வாரிவரம்பைவிட்டு வையகததில்ச்சொல்லாமல்
காரிரியமாய்ப்பள்ளி கடலில்துயினரேனே
மானம்வரம்பு மகிமைகெட்டுப்போகாமல்
ஊனமில்லாதேயுறும் பொருளாய்நின்றேனே
சீவனுள்ளசெந்துகள்க்குத் தினந்தோறுமேபுசிப்பு
தாவமுடனீயுகின்ற தர்மத்திறவானே
வலியோரெளியோர்க்கு மண்ணாருஞ்செந்துகள்க்கும
கலிதீரஞாயங் கண்டுரைக்குமபெம்மானே
சீவசெந்துக்கெல்லாஞ் சீவனுமாய்நின்றேனே
பாவபுண்ணியமாய்ப் பாராகிநின்றேனே
கண்ணாகிமூக்குக் கருணாகரராகி
மண்ணாகிவேத மறையாகிநின்றேனே
சாத்திரமும்நீயாய்ச் சந்திரனும்நீயாகி
சூத்திரமும்நீயாய்ச் சுழியாகிநின்றேனே
நச்சேத்திரம்ாகி நாள்க்கிரகம்நீயாகி
இச்சேத்திரமா இருக்கின்றபெம்மானே
மெய்யனுக்குமெய்யாய் மேவியிருப்போனே
பொய்யனுக்குப்பொய்யாய் பொருந்தியிருப்போனே
இமசூட்சமாகி எங்கும்நிறைந்தோனே
நமசூட்சமான நாராயணப்பொருளே
செல்வத்திதுவாய்ச்செவ்வாகிநின்றேனே
கல்வித்தமிழாய்க் கனபொருளாய்நின்றேனே
அண்டபிண்டமாகி அநேகமாய்நின்றேனே
கண்டயிடமுங் கண்ணுக்குள்ளாரேனே
ஈசரர்கொடுத்த ஏதுவரமானாலும்
வேசமிட்டுவெல்ல மிகுபொருளாய்நின்றேனே
நடக்கஇருக்க நடத்துவதும்நீயல்லவோ
திடக்கமயக்கஞ் செய்வதுநீயல்லவோ
ஆருமொருவர் அளவிடக்கூடாமல்
மேருபோலாகி விண்வளர்ந்துநிற்போனே
எண்ணத்துலேயா ஏதுசொரூபமது
கண்ணிமைக்குமுன்னே கன்கோடிசெய்வோனே
மூவராலுன்சொரூபம் உள்ளறியக்கூடாத
தேவராலுந்தெரியாத திருவுருவங்கொள்வோனே
ஆயனேஎங்கள் ஆதிநாராயணரே
மாயனேகஞ்சன் வலிமைதனைமாற்றுமையா
பாவமாய்க்கஞ்சன் பலநாளாயெங்களையும்
ஏவல்தான்கொண்ட இடுக்கமதைமாற்றுமையா
ஊழியஈகள்செய்து உடம்பெல்லாம்நோகுதையா

ஆழியடைத்த அச்சுரேஎன்றுரைத்தார்
வாணனென்றகஞ்சன் மாபாவியேதுவினல்
நாணமதுகெட்டு நாடுவிட்டுப்போருேங்காண்
நரபாலனென்ற நன்றிகெட்டகஞ்சனுந்தான்
வரம்பானதுகுழறி மானமதுகெட்டோமே
இத்தனையுங்காத்து இரஞ்சிக்கவேணுமையா
முத்தியுள்ளதேவர் முறையபயமிட
பூமாதேவி புலம்பிமுறையமிட
நாமாதுலெட்சுமியும் நன்ருய்முறையமிட
நாராயணர்பதத்தை நாயகியுந்தெண்டனிட
சீரானலட்சுமியும் செப்பினர்காணம்மானை
என்னைப்போல்பெண்ணல்லவோ இவள்தானிடுமுறையாம்
வன்னமுள்ளமாலே மனதிரங்கிக்காருமையா
உடனேதாஞதி ஓலமிட்டதேவருக்கு
திடமானபூமா தேவிக்குஞ்செப்பலுற்ருர்
வந்துபிறப்பேன்காண் மாபாரதம்முடிக்க
நந்திகுலம்வாழ நாம்பிறப்போம்கண்டீரே
சாரமில்லாக்கஞ்சன் தனைவதைத்துப்பூமியுட
பாரமதுதீர்ப்போம் பாரதமும்முத்திவிப்போம்
துவராயுகத்தில் துரியோதனன்முதலாய்
தவருதவம்பன் சராசந்தன்வரையும்
அவ்வுகத்திலுள்ள அனியாயமுமடக்கி
செவ்வுகத்தமன்னவர்க்குச் சினேகமதுசெய்வதற்கும்
உங்களுக்குநல்ல உதவிமிகச்செய்வதற்கும்
அங்குவந்துதோன்றி ஆயருடன்வளர்வேன்
போங்களென்றுபூமா தேவியையுந்தேவரையும்
சங்குவண்ணமாலோன் தானேவிடைகொடுத்தார்
விடைவேண்டித்தேவர் மேதினியில்தான்போக
படைவீரரான பச்சமால்தான்எழுந்து
ஆதிகயிலே அரனிடத்தில்வந்திருந்து
சோதிமணிதான் சொல்லுவாரம்மானை
வாணநரபாலனென்ற மாபாவிகஞ்சனினல்
நாணமதுகெட்டோமென்றே நாடித்தேவரெல்லாம்
பூமாதேவிமுதல் பொறுக்கமிகக்கூடாமல்
ஆமாஅரியே ஆதிமுறயமென்ருர்
முறயம்பொறுக்காமல் முடுகிஇங்குவந்தேனென்று
மறைவேதமாமணியும் மகிழ்ந்துரைத்தாரம்மானை
அதுகேட்டுஈசர் அட்சுதர்க்கேதுரைப்பார்
இதுநான்மிகக்கேட்டிருக் கிதுகாண்இம்முறையம்
ஆனதால்க்கஞ்சன் அவனைமுதல்கொல்லவே
ஏனமதுபாருமென்று எடுத்துரைத்தார்ஈசரும்
பாருமென்றுஈசர் பச்சமாலோடுரைக்க
ஆருமிகவொவ்வா அச்சுதருமேதுரைப்பார்
மேருதனில்முன்னுள் வியாகர்மொழிப்படி

பாருபாரதமுதலாய்ப் பாரதப்போர்தான்வரையும்
நாராயணராய் நாட்டில்மிகப்பிறந்து
வீரானபார்த்தன் மிகுதேரையோட்டிவித்து
சத்தபிலமுள்ள சராசந்தன்வரையும்
மற்றவனோடாறு வலியபலக்காரரையும்
கொல்லவகைகூறி குருநிலையத்தானுரைத்து
வெல்லப்பிறப்பாரென வியாகர்மொழிந்தபடி
அல்லாமல்பின்னும் ஆனதெய்வரோகணியும்
நல்லமகவான நாராயணர்நமக்கு
மகவாயுதிப்பேனென்று மகாபரனர்சொன்னபடி
தவமாயிருந்து தவிக்கிருள்தெய்வகியும்
இப்படியேயுள்ள எழுத்தின்படியாலே
அப்படியேஎன்னை அனுப்புமென்றாரம்மானை

**விருத்தம்**

முன்னேமொழிந்தபடி முறைநூல்தவறிப்போகாமல்
தன்னைமதலையெனவெடுக்கத் தவமாயிருந்ததெய்வகிக்கு
சொன்னமொழியுந்தவறாமல் துயறமறவேதேவருக்கும்
என்னைப்பிறவிசெய்தனுப்பும் இறவாதிருக்கும்பெம்மானே

**நடை**

முன்னேவியாசர்மொழிந்த மொழிமாறாமல்
என்னைஅந்தப்பூமியிலே இப்போபிறவிசெய்யும்
செந்தமிழ்சேர்மாயன் சிவனரையும்பணிந்து
எந்தனுக்கேற்ற ஈரஞ்சாயிரமடவை
கன்னியராய்எந்தனுக்கு கவரியிடநீர்படையும்
பன்னீர்க்குணம்போல் பைம்பொன்னிறத்தக்கவராய்
ஆயர்குலத்தில் அநேகமடவாரை
பாயமுறவாடிருக்கப் படைப்பீர்காண்ஈசுரரே
உருப்பிணியாய்லட்சுமியை உலகில்பிறவிசெய்யும்
கரும்பினியதெய்வக் கையிலாசமாமணியே
சத்தபிலமுள்ள தத்துவத்தார்தங்களையும்
மெத்தவரம்பெற்ற மிகுஅசுரர்தங்களையும்
எல்லோரையும் இப்பிறவி இதிலேவதைத்திடவே
அல்லோரையும்பிறவி ஆக்கியவையுமென்றுரைத்தார்
எந்தனுக்குநல்ல ஏற்றகிளைபோலே
விந்துவழிக்குலம்போல் மிகுவாய்ப்படையுமென்றார்
இப்படியேமாயன் இசையவந்தஈசுரரும்
அப்படியேபிறவி அமைக்கத்துணிந்தனராம்
துணிந்தாரேமாயன் தொகுத்ததெல்லாமாராய்ந்து
அணிந்தாரமார்பன் வகைப்படியேசெய்யலுற்றார்
தெய்வகியாள்வயிற்றில் திருமால்பிறந்திடவே
ஐவருக்குறுதியிட அச்சுதருந்தோன்றுவாராம்
கலக்கமுடன்விலங்கில் கவிழ்ந்திருந்தமாதுவுட
மலக்கமதுதீர மலரோன்பிறக்கலுற்றார்

ஐவருக்குபகாரம் அன்பாகச்செய்திடவே
தெய்வதிக்கும்ரோகணிக்கும் சிவகெதிகளீவதற்கும்
கஞ்சனுடவலுமைக் கட்டழித்துக்கொல்வதற்கும்
விஞ்சைவரம்பெற்று வீறுசெய்யும்பேர்களையும்
சத்தபிலமுள்ள தத்துவங்கள்ளுளோரை
தத்தியாய்வீமனையுந் தன்னுளாயாக்கிவிட்டு
கொல்வதற்குந்தேவருட கூமுறயந்தீர்ப்பதற்கும்
வெல்வதற்கும்பூமியுட விதனமதைமாற்றுதற்கும்
முன்னேவியாசர் மொழிந்தமுறைப்படியே
தன்னிகரில்லாத தையல்தெய்வகிவயிற்றில்
பிறக்கிறுரென்று பெரியோர்கள்கொண்டாட
இறக்கிறுர்பொல்லாதார் என்றுமிகக்கொண்டாட
முன்பெற்றபிள்ளை முழுவதுமவன்கொன்றதினுல்
வன்பற்றமாது மக்கையந்ததெய்வதியும்
மெத்தமயங்கி முன்னம்விதிதன்னைநொந்து
கர்த்தன்செயலோ கரியமால்தன்செயலோ
என்றந்தக்கன்னி இருபேருந்தான்புலம்பி
விண்டுசெல்லாத விதனம்மிகவடைந்து
அழுதுகரைந்து அவளிருக்கும்வேளையிலே
பழுதில்லாதாயன் பாவைவயிற்றிலுற்றுர்
பகவதியுமங்கே பாவைஅயோதைவயிற்றில்
சுகபதியுமங்கே தோன்றினள்காணம்மானை
மாயனந்ததெய்வதியாள் வயிற்றிலுற்றதவ்வளவில்
தேசமெல்லாம்நன்ருய் செழித்ததுகாணம்மானை
கெர்ப்பமுற்றுதெய்வதியாள் கெஞ்சுகவாயஞ்சுகமும்
நர்பமதாய்த்தேகம் நாட்டமுடன்கோட்டியுமாய்
பத்துமாதந்திகைந்து பாலன்பிறந்திடவே



சுற்றமதில்காவல்வைத்த துடியோர்வலுவிழந்து
வசுதேவன்காவில்லிட்ட வாய்த்தவிலங்குமத்து
விசுவாசமாதருட விலங்கதுதானுமத்து
தாள்திறந்துநேரந் தாள்விடியுமுன்னுகை
கண்டாளேதெய்வதியும் கனத்தமதலைதனை
கொண்டாடித்தானெடுத்துக் கூறுவாரம்மானை
கண்ணனேசீவகனே கரியமுகில்மாயவனே
வண்ணனேதெய்வேந்திரனே மறையவனேதூயவனே
ஐயோநான்முன்பெற்ற அதிகமதலையெல்லாம்
மெய்யோதானிம்மதலைக் கொவ்வாதுமேதினியே
என்றுபிரியமுற்று ஏற்றமதலைதனை

அன்றுகொடுத்து அனுப்பினுள் அயோதையிடம்
கொண்டுவசுதேவன் அயோதைகுடிலேகி
கண்டுவயோதை கன்னியங்கேபெற்றிருந்த
பெண்மதலேதன்னைப் பூராயமாயெடுத்து
ஆண்மதலேதன்னை அயோதையிடமிருத்தி
வந்துவசுதேவன் மங்கைகையில்கொடுத்து
புத்திமிகநொந்து போயிருந்தானம்மானே
அந்தியிராவிடிந்து அலேகதிரோன்தோன்றியபின்
கந்தமனசுள்ள கஞ்சனவன்தனக்கு
ஒற்ருளாய்த்தூதன் ஒருவன்மிகவோடி
பெற்ருளுன்தங்கை பிள்ளேயெனவுரைத்தான்
கேட்டானேகஞ்சன் கெறுவிதமாய்த்தானெழுந்து
பூட்டானநெஞ்சன் பிள்ளேதனேவந்தெடுத்து
தூக்கிநிலத்தில் திண்ணெனவேதானடிக்க
ஆக்கிரமத்தாலே அவன்தூக்கயேலாமல்
சோருறவேகஞ்சன் துடியிழந்துநிற்கையிலே
பாரழந்தோன்தங்கை பகவதியுமேதுசொல்வாழ்
என்னேயெடுத்து ஈடுசெய்யாதேகெடுவாய்
உன்னேவதைக்க உற்றயெங்கள்அச்சுதரும்
ஆயர்பாடிதன்னில் அண்ணர்வளருகிருர்
போய்ப்பாரெனவே போளுள்பகவதியும்
கேட்டந்தக்கஞ்சன் கிலேசமிகவாகி
வீட்டிற்குப்போயிருந்து விசாரமுற்ருனம்மானே

விருத்தம்

அய்யோமுனிதான்சபித்தபடி ஆயர்பதியில்போகறியேன்
மெய்யோதளருடல்மெலியு மெல்லிமொழிந்தவிசளமதால்
கையோசலித்துக்காலயர்ந்து காலவிதியால்கருத்தயர்ந்து
பையோராளேத்தானழைத்துப் பார்க்கவிடுத்தான்கஞ்சனுமே

நடை

அய்யோமறையோன் அன்றுசபித்தபடி
சையோ இடையர் தன்பதியில்போகறியேன்
தங்கைவயிற்றில் செனித்தபிள்ளேயானதுண்டால்
பங்கம்வரும்எந்தனுக்குப் பதறுதடாஎன்னுடம்பு
என்றுமனங்கருகி இயலழிந்தகஞ்சனுந்தான்
அன்ருெருதூதனேயும் அனுப்பினன்காணம்மானே
வாராய்நீதூதா மற்ருேரறியாமல்
பாராய்நீதூதா அயோதைபதியேகி
என்றந்ததூதனேயும் ஏகவிட்டான்கஞ்சனுமே
நன்றுநன்றுஎன்று நடந்தானேதூதனுந்தான்
தூதன்மிகநடந்து தோகைஅயோதைமனேயில்
புகுந்தந்தப்பிள்ளே பொற்தொட்டிலிலேகிடக்க
கண்டந்தத்தூதன் கஞ்சனுக்குநஞ்செனவே
விண்டுபறையாமல் விரைவாகப்போயினனே

போயந்தத்தூதன் பெறையுள்ளகஞ்சனுக்கு
வாயயர்ந்துசிந்தை மறுகியேசொல்லலுற்ருன்
காமனேசீவகனே கண்ணனேசந்திரனே
மாமதனேசூரியனே மறையவனேஇறையவனே
நாமத்திறவானே நாராயணன்ருனே
சோமத்திருவிழமோ தெய்வேந்திரன்ருனே
ஈசனேவாசவனே இந்திரனேசந்திரனே
மாயனேவுன்னை வதைக்கவந்தமாத்தானே
ஆரோயெனக்கு அளவிடவுங்கூடுதில்லை
பேரோஅயோதை புதல்வனெனக்காணுதில்லை
தெய்வதியாள்தேகச் திருச்சுவடுதோணுகொஞ்சம்
மெய்பதியனுன விஷ்ணுபபோல்முச்சிவடு
என்றந்தக்கஞ்சனுக்கு இத்தூதன்சொல்லிடவே
அன்றவனைக்கேட்டு அயர்ந்திருந்தானம்மானை
என்செய்வோமென்று இருக்குமந்தநாளையிலே
முன்செறியும்பூத மூரிதனையேவியவன்
கொல்லவேவிட்டான் குழந்தைதனைஅம்மானை
வல்லபிலமுள்ள மாபூதம்பட்டபின்பு
பின்னுமேதான் பிலஅரக்கரையேவி
கொன்றுவாவென்ருன் குழந்தைதனை அம்மானை
கொல்லவந்தபேரைக் கொன்றதுதானக்குழந்தை
வெல்லவிட்டபேரிழந்து மெலிந்திருந்தான்கஞ்சனுமே
ஆயர்குடியில் அரியோன்மிகவளர்ந்து
மாயன்விளையாடி மடந்தையோடுங்கூடி
வென்றுபால்வெண்ணை மிகப்போசித்துக்காடதிலே
கன்றுபசுமேய்த்துக் காளியன்றனைவதைத்து
கஞ்சனுடஏவலினல்க் காட்டில்வந்தசூரரையும்
துஞ்சுவிடக்கொன்று தொலைத்தனர்காணம்மானை
ஆயர்க்குவந்த ஆபத்துஅத்தனையும்
போயகற்றிநந்தன் பிள்ளையெனவேபிறந்தார்
மதுரைதனில்வாழும் மாபாவிகஞ்சனுக்கு
இறுதிவரும்போது ஏதுசெய்தான்கஞ்சனுமே
நந்திஇடயன்பாலன் ;நல்லஸ்ரீகிருஷ்ணனை
இந்திடத்தில்கொண்டுவர ஏவிவிட்டானேராளை
கஞ்சனுடதூதன் கண்ணர்ஸ்ரீகிருஷ்ணரை
அஞ்சலென்றுகண்டு அழைத்தாரும்மைக்கஞ்சனென்ருன்
அந்தவிசனம் அரிந்தரியோன்மகிழ்ந்து
வந்தவிசனம் வாய்த்ததென்றெம்பெருமாள்
கூடச்சிலபேரைக் குக்குளிக்கத்தான்கூட்டி
இடவியென்ற எக்காளசத்தமுடன்
குஞ்சரமும்பரியுங் குரவைத்தொனியுடனே
கஞ்சனரசரளும் கனமதுரைசென்றனரே
நாட்டமுடன்அயோதை நல்லமகன்வந்தேனென்று
கேட்டவிசனம் கெட்டியெனக்கஞ்சனுந்தான்

இங்கேநான்சென்றே ஏத்தவனைக்கொல்லவென்று
சங்கையத்தகோடி தத்திபடையுடனே
கொல்லவிட்டகஞ்சன் குதிரைத்தளம்படையும்
எல்லாந்திருமால் இறக்கவைத்தாரம்மானை
கஞ்சன்படைகள் கட்டழிந்துபோனவுடன்

கஞ்சன்பாடு

வஞ்சகனும்வந்து மாயனுடனெதித்தான்
மாயனுடபோரும் வஞ்சக்கஞ்சன்போரும்
தேசமெல்லாமதிரச் சென்றெதுத்தாரம்மானை
மாயனுக்குக்கஞ்சன் மாட்டாமல்க்கிழ்விழுந்து
உபாயமிட்டுக்கஞ்சன் மார்பிலேதானிருந்து
கஞ்சன்குடலைக் கண்ணியறத்தான்பிடுங்கி
வெஞ்சினத்தால்மாயன் விட்டெறிந்தார்திக்கதிலே
கஞ்சனையுங்கொன்று கர்மமதுசெய்தவரும்
தஞ்சமிட்டதேவருட தன்னிடுக்கமுமாற்றி
மாதாபிதாவுடைய வன்சிறையுந்தான்மாற்றி
சீரானஉக்கிர சேனனையும்ஆளவைத்து
அவரவர்க்குநல்ல ஆனபுத்திசொல்லிமிக
எவரெவர்க்கும்நல்லா இருமென்றுசொல்லியவர்
திரும்பிவரும்வேளையிலே தீரன்சராசந்தனவன்
எந்தன்மருமகனை இவனோதான் கொன்றதென்று
வந்தனனேமாயனுடன் வாதாடியுத்தமிட
அப்போதுமாயன் ஆராய்ந்துதான்பார்த்து
இப்போதிவனை ஈடுசெய்க்கூடாது
சத்தபலமல்லோ சராசந்தவேந்தனுக்கு
கொத்தவவீமனல்லோ கொல்லவகையுண்டுமென்று
இதுவேளைதப்பவென்று எம்பெருமாள்தானடந்து
செதுவோடுகூடிச் செகலதுக்குளேகினரே
கடலுக்குள்வந்து கனத்தமதிலிட்டவரும்
திடமுடனேமாயன் துவ்ரம்பதியிருந்தார்

விருத்தம்

பூதனைச்சகடனோடுப் பின்னுள்ளவரக்கர்தம்மை
சூதனையெல்லாங்கொன்று சுத்தமாய்மதுரைபுக்கி
நீதமேயில்லாக்கஞ்சன் நெஞ்சையும்பிளந்துகொன்று
கூதவன்துபரயன்பதியில் குணமுடனிருந்தாரன்றே

நடை

கஞ்சனையும்மற்றுமுள்ள காலவுணர்தங்களையும்
வஞ்சகமாயுள்ள வாணநரபாலனையும்
இம்முதலாயுள்ள ஏற்றவரக்கரையும்
அம்முதலாயுள்ளவரை அரியோனறுத்தனராப்
சத்தபிலமுள்ள தத்துவத்தார்தங்களையும்
வித்தகனர்கொல்ல மேல்நினைத்தாரம்மானை
கஞ்சன்வலிமைக் கட்டழித்துத்தேவருக்கு

அஞ்சலருளி ஆழிக்குள்வீத்திருந்தார்
வாரிக்குள்கோட்டை வளைந்துமணிமேடைவைத்து
வீரக்குருநாதன் வீத்திருந்தாரம்மானை
மாயன்துவரம் பதிவாழ்ந்துதானிருக்க
நாயனுக்குவந்த நல்லவுருப்பிணியை
விதியைஅறியாமல் மேலுமொருராசனுக்கு
திருமாங்கிலியஞ் சேர்க்கத்துணிந்தனராம்
அப்போதுநாரதரும் அரியோனடிபணிந்து
இப்போதுஉந்தனக் கிசைந்தவுருப்பிணியை
பாணிக்கிரணம் பண்ணப்பறையடித்தார்
நானிதையுங்கேட்டு நாடியுரைத்தேனென்ருர்
அம்முனிவன்சொல்ல அரியோன்மிகக்கேட்டு
இம்முனிவன்போக இசைந்தார்காணம்மானை
மோகத்திருமாலை முக்கோடிபொன்னதுக்கு
வேகத்தாலுண்டுபண்ணி விரைவாய்க்கொடுநடந்தார்
முழுத்திருமாலைதன்னை மொய்குழலாள்கன்னியுட
கழுத்திலேயிட்டுக் காமக்கண்நீட்டிடவே
மாயனுக்குமோகம் மாதுக்குமும்மோகம்
தேசமெல்லாமோகஞ் சென்றதுகாணம்மானை
முன்னலேகேட்டு முகூர்த்தமிட்டபேர்களையும்
அன்னளேகொன்று அவன்படையுந்தானறுத்து
உருப்பிணிக்குத்தேவரெல்லாம் ஓலமிடமாலையிட்டு
விருப்புகழ்ந்தமாயன் விமானமதிலேறி
மனேன்மணியையுங்கூட்டி மாயன்படையுடனே
வினேகரமால்தானும் விரைவாய்நடைநடந்து
கடலுக்குள்சென்றிருந்தார் காயாம்புமேகவண்ணர்
இப்படியேமுன்னம் இசைந்திருந்தபெண்ணையெல்லாம்
அப்படியேமாலையிட்டு அமர்ந்திருந்தாரம்மானை

## விருத்தம்

ஆயர்குடியில்வளர்ந்துவெண்ணை அருந்திமுறைமாதரை யணைந்து
தீயன்கொடியகஞ்சனையுந் திருக்கியறுத்துயசுரரையும்
உபாயமுடனேகுலையடக்கி உருப்பிணிமுதலாய்பெண்களையும்
தேசம்புகழமணமுகித்துத் துவரம்பதியிலிருந்தனரே

## நடை

உருப்பிணிமுதலாய் ஒத்துவந்தபெண்களையும்
திருப்பொருத்தம்பூட்டிச் செகலுக்குள்வீற்றிருந்தார்
கஞ்சனிடுக்கங்கள் களித்தந்தகாரணரும்
பஞ்சவர்க்குநன்மைசெய்யப் பார்த்தனர்காணம்மானை
பிறந்ததிரியோதனனும் பிறவியொருநூற்றுவரும்
சிறந்தபுகழ்ஐபேருந் தேசமதில்வாழ்ந்து
அவரவர்க்குத்தக்க ஆர்கமுள்ளவித்தைகற்று
எவரெவரும்மெய்க்க இவர்வளர்ந்தாரம்மானை

வளர்ந்துநிமிர்ந்து வரும்வேலையானதிலே
இழந்துருகிவாடும் இசைகெட்டமாபாவி
துடியாய்மனுவளக்குச் சொல்லித்துரியோதனனும்
முடியைவினைசூடி உலகாண்டானம்மானை
பாவியிருந்து பாராண்டசீமையிலே
கோவுகள்க்குநீர் குடிக்கக்கிடையாது
தர்மரவ்வீமன் விசையன்சகாதேவன்
நன்மைபரிநகுலன் நாடானநாடதுதான்
குருநாடெனவே கூறுவரான்னகரு
திருநாடுதன்னுடைய சிறப்புக்கேளம்மானை
துரியோதனுதி செலுத்தும்அஸ்த்திநபுரத்தில்
பரிவொட்டகமும் பலமிருகமானதுவும்
பசியால்த்தகையால் பச்சிபறவைமுதல்
விசையாய்க்குருநகரில் மேவித்தகையாறிவரும்
அஸ்த்திநபுரத்தில் அரதேசியாவரெல்லாம்
பத்தியாயுள்ள பஞ்சவர்களாண்டிருக்கும்
குருநாடுதன்னில்க் குழாங்கொண்டிருந்தனராம்
திருநாட்டுக்கொவ்வுஞ் சிறந்தகுருநாடு
ஒருநாடுமந்தக் குருநாட்டுக்கொவ்வாது
பருநாடுபத்தியுள்ள பஞ்சவர்கள்நன்னாடு
தேவரும்வானவரும் தெய்வத்திருமாலும்
மூவரும்நன்ருய் உகந்தகுருநாடு
ஆளியோடுசிங்கம் ஆனைருஞ்சுப்புள்ளும்
வேளிசமாயுள்ள வெகுஐந்துதலையரவம்
வெள்ளானைவெள்ளை மிகுசாரையானதுவும்
துள்ளாடிநித்தம் துலங்கிவரும்நன்னாடு
அன்னாடுநாடு அரநாட்டுக்கீடாகும்
பொன்னாடுநாடு புத்தியுள்ளார்தன்னாடு
அரனருளைப்பெற்றிருக்கும் அய்வருடநன்னாடு
இரவலர்க்குஈயும் ஏற்றதர்மர்தன்னாடு
மாயனருள்பெற்ற மன்னவர்கள்தன்னாடு
தாய்நாடுவான தமிழக்குருநன்னாட்டில்
மெய்யில்லாமன்னனுக்கு மேதினியில்பேர்பாதி
பொய்யில்லாத்தர்மருக்குப் பூபாதியாகவேதான்
ஆண்டார்சிலநாள் ஆளுக்கோர்பங்காக
தாண்டவராயர் தண்மையாலம்மானை
இப்படியேஆண்டு இருக்குமந்தநாளையிலே
முப்படியேவிட்டகுறை முடிவாகும்நாளையிலே
வணங்காமுடியுடைய மன்னன்துரியோதனனும்
இணங்காமல்பிணங்கி ஏதுசெய்தானம்மானை
தலைவீதம்பங்கு தான்வையாவண்ணமுந்தான்
நிலைபரிர்ந்துவிட்டோமோ நினைவுசற்றுமில்லாமல்
இனியவன்பூமிதனை யாம்பறித்துஅய்வரையும்
தனியேவனத்தில் தானனுப்பிராச்சியத்தை

அடக்கியரசாள்வேனென்று அவன்நினைத்துமாபாவி
உடக்கிச்சூதுபொரு தோட்டிவைத்தான்ஐவரையும்
பாவிதுரியோதனனும் பஞ்சவரையும்விரட்டி
சோவிதமாய்நாட்டைச் சுற்றியரசாண்டிருந்தான்
வனவாசந்தனில் வந்திருந்துஐபேரும்
இனமானதுபோல் இருந்தார்குகையதிலே
அப்போதுவேத வியாகரவரறிந்து
செப்போடுவொத்த திருமாலருகேகி
மாயவரேபஞ்சவர்க்கு வாரமதாய்த்தானிருந்து
தீயதுரியோதனனைச் செயிக்கவந்தபெம்மானே
பஞ்சவரைமாபாவி பழுதுசூதாடிவென்று
வஞ்சகமாய்ப்பாவி வனத்தில்துரத்திவிட்டான்
அய்பேரும்பத்தினியும் அன்னைபிதாவுடனே
பைப்போலலறிப் பசித்திருந்துவாடுகிறார்
அன்றுமகாமேர்பில் அடியேன்உரைத்தபடி
இன்றுபாரதமும்முடிக்க எழுந்தருளும்நாளாச்சு
என்றுமுனிதான் எடுத்துரைக்கமாயவரும்
அன்றுதிருமால் ஐபேரிடமேகி
வேதவியாகரரும் வேயூதும்வாயானும்
சீதகுணத்தர்மர்முன்னே சென்றனர்காணம்மானை
நாராயணர்வரவே நல்லதர்மாதிகளும்
பாரானதையாண்டோன் பதம்பூண்டாரம்மானை
கால்பிடித்துத்தர்மர் கண்ணர்பதந்தொழவே
மால்பிடித்துத்தர்மரையும் மார்போடுறவணைத்து
பதருதேபாண்டவரே பத்தியுள்ளபஞ்சவரே
கதருதேஐவரையும் காத்தருள்வோமென்றுரைத்தார்
அப்போதுதர்மர் அச்சுதரையும்போற்றி
இப்போதுஉங்களுக்கு ஏற்றபசிதீர
சூரியபாண்டந்தனை யழைத்துச்சுத்தமனே
ஆரியமான அன்னமருளுமென்றார்
அப்போதுமாயவனர் ஆதிதனைநினைத்து
மெய்ப்பானபாண்டம் மிகவருத்திவோரரியும்
கையாலெடுத்துக் கனத்ததர்மர்கைகொடுக்க
அய்யாயிரங்கோடி ஆள்க்கள்மிகவந்தாலும்
என்பேரரிதான் எணைநிணைந்துபாண்டமதில்
அன்பரேநீரை அதுநிறையவிட்டவுடன்
என்பேரரியை எடுத்ததிலிட்டதுண்டால்
அன்பாகயெல்லோர்க்கும் அமுதாய்வளருமென்றார்
இத்தனையுஞ்சொல்லி ஈந்தாரேயன்பருக்கு
சித்திரம்போல்வேண்டி தெளிந்திருந்தாரம்மானை
மாயனுஞ்சொல்லி மண்டபத்தில்போயினபின்
தூயவியாகருஞ் சொல்லுவார்தர்மருடன்
பஞ்சவரேஉங்களுக்கு பச்சமாலின்றுமுதல்
தஞ்சமென்றுசொல்லித் தான்போனார்மாமுனியும்

மாமுனியும்போக வனத்திலேந்துபேரும்
ஓமுனியேதஞ்சமென்று உகந்திருந்தாரம்மானை
பாவிதுரியோதனனும் பஞ்சவரைக்கொல்லவென்று
ஆவியவன்செய்த அனியாயமத்தனையும்
ஒக்கவொருமிக்க உரைக்கக்கேள்வொண்ணுதலே
நஞ்சைக்கலந்து நல்லதயிரென்றீந்தான்
அஞ்சலென்றுமாயன் அதுகாத்தாரம்மானை
பாதாளம்வெட்டிப் பார்வீமனையோட்டி
நீதாளமான நெடியோனதுகாத்தார்
கன்னிதனில்ப்பாவி கழுநாட்டியைவரையும்
கொன்றுவிடவைத்தான் குன்றெடுத்தார்காத்தார்
அரவதயும்விட்டு அருள்வீமனையும்வதைத்தான்
விரைவுடனேமாயன் விசந்தீர்த்துக்காத்தனரே
தண்ணீரில்நஞ்சைவிட்டுச் சதித்தானேஐவரையும்
மண்ணீரேழுமளந்த மாயனதுகாத்தார்
பூதமதையேவிப் போன்றவைத்தான்மாபாவி
நீதத்திருமால் நிலைநிலுத்திக்காத்தனரே
இப்படியேபாவி 'இடறுசெய்தஞாயமெல்லாம்
அப்படியேமாயன் காத்தாண்டனரேஅய்வரையும்
பாவியவன்செய்ததெல்லாம் பலியாமலேபேர்க்கு
சோவிதமாயன் துணைசெய்தாரம்மானை
பின்னுமந்தபஞ்சவர்க்கு பெரும்பாவிசொன்னபடி
பன்னிரண்டாண்டு பரிவாய்க்கழித்தபின்பு
மாயன்தூதுபோனார் வஞ்சமில்லாப்பஞ்சவர்க்கு
தீயதுரியோதனனுந் தீருமாலைப்பாராமல்
தாள்போறபுத்தி தானுரைத்துப்பஞ்சவர்க்கு
வாழ்பெறப்பூமி வாரேன்றூர்வாமனுமே
எள்ப்போலிடங்காண் ஈயேன்யென்றுரைத்தான்
மாயனையும்பாவி வாபோவெனப்பேசி
ஈயேனெனவுரைத்த இயல்புகேட்டெம்பெருமாள்
கர்னன்பிலமுங் கடியவிதுரன்பிலமும்
மன்னன்சிறுவீஸ்மர் வாழுந்துரோணன்பிலமும்
தென்னன்திரியோதனன் பிலமுந்தானழித்து
வன்னவிசயனுக்கு வாளிபலகொடுத்து
வீமனுக்குநல்ல விசைதண்டாயுதங்கொடுத்து
தாமன்சகாதேவனுக்கு சத்திசூலங்கொடுத்து
நகுலனுக்காயிதமும் நல்லபரிகொடுத்து
புகலானதர்மருக்குப் பொறுமைஅரிகொடுத்து
மங்கைதுரோபதைக்கு வாய்த்தகனல்கொடுத்து
செங்கையில்பாரதத்தை சேவித்தார்மாயவரும்
மாயருடகையில் வளர்ந்ததிருமுடியில்
ஓசையிடவொன் றெுத்துதேபாரதப்போர்
ஐபேருடபடையும் அரவககொடியோன்படையும்
கைப்போரும்விலப்போரும் கணையோடுவாள்ப்போரும்

அம்புபோருங்கருவி நச்சுப்போரும்பொருது
கர்னன்சகுனி கனத்தவலுசல்லியனும்
மன்னன்சிறுவீஷ்மர் வாய்த்ததுரோணர்முதல்
சராசந்தன்வரையும் சத்தியக்கீசனும்
பூராசவீமன் பெலியிட்டானம்மானை
இத்தனைபேர்மாண்டால் இருப்பாரோநூற்றுவரும்
அத்தனைபேரை அறுத்தானருச்சுனனும்
திரியோதனன்படைகள் சேரமடிந்தபின்பு
விரிமாறுதூவி வெளியில்வந்தான்மாபாவி
தம்பிபடைகள் தலைவர்புதல்வர்முதல்
வம்பிலிறந்தாச்சே வாழ்வதேனென்றுசொல்லி
எல்லாரிறந்திடிலும் எண்ணமில்லையென்றிடலாம்
வெல்லாரும்வெல்லா விசகர்ணன்மாண்டதினுல்
இருப்பதோபூவுலகில் இறப்பதுவேநன்றெனவே
விருப்பமுள்ளகர்ணனைத்தான் வெற்றிகொண்டஅர்ச்சுனனை
இன்றுகொல்லவேணுமென்றெழுந்தான் படைக்கெனவே
அன்றுமால்தானறிந்து அருச்சுதனைத்தானழைத்தார்
இத்தனைநாளும் என்னபோர்செய்தாய்நீ
அதினுலுன்மேல் அரவக்கொடியோனும்
வாருன்படைக்கெனவே வாள்வீமனையழைத்து
உந்தனுக்குநல்ல உறுவேட்டையின்றடவா
எந்தனுக்கின்றுமுதல் இளைப்பாறலாமடவா
வண்ணமகள்தனக்கு மயிர்முடித்தலின்றடவர
எண்ணமற்றுதர்மர் இருப்பதுவுமின்றடவா
என்றந்தவவீமனுக் கிசைந்தபோர்க்கோலமிட்டு
வண்டுசுற்றுமார்பனுக்கு வரிசைமிகக்கொடுத்து
வீமனுடதண்டதுக்கு விசைமால்விசைகொடுத்து
போமெனவேவீமனுக்குப் போர்க்குவிடைகொடுத்து
விசையன்பரிநகுலன் வெற்றிச்சகாதேவன்
இசையொத்ததர்மரையும் இன்றகலநில்லுமென்று
வீமனையுங்கூட்டி வெளியில்அரிவந்திடவே
காமக்கனல்மீறிக் கரியோனெழுந்ததுபோல்
வந்தானேபாவி வணங்காமுடியோனும்
சந்தானமான தமிழ்வீமன்ருனமாறி
எதிர்த்தாரிருவர் எனக்கெனக்கென்றேதான்
செதுத்தான்வலுமை செய்வதுகேளம்மானை
மண்விண்ணதிரும் வானமதுதானதிரும்
திண்திண்ணெனப்பூமி தெய்தோமெனவதிரும்
மலைகளசைந்து மடமடெனவோசையிடும்
கலைகள்கரிகள் கதறிமிகவோடும்
அலைகள்சிதறி அங்குமிங்கோடிடவே
இலைகளுதிர்ந்து இடிந்துவிழும்மாமரங்கள்
தூளெழும்பிச்சூரியனைத் தோன்ருமலேமறைக்க
வேளெழும்பிக்காட்டில் விழுந்தலறிஓடிடவே

தவமுனிவர்நெட்டை தானழிந்துதட்டழிந்து
திசைமாறித்திக்கில் திரிந்தலைந்துபோயினனே
வேதாசிவனும் வெம்மருண்டுதான்பதற
நாதாந்தமோதும் நல்மறையோன்தான்பதற
துரியோதனன்போருஞ் சுத்தவீமன்போரும்
எரியோடெரிதான் எதிர்த்துப்பொருதாப்போல்
ஒண்ணுக்குவொண்ணு விலகிப்புறஞ்சாயாமல்
மண்ணும்விண்ணுமதிர மண்டியுத்தமிட்டான்
திரியோதனனடிக்க துடிவீமன்சாயாமல்
மரியாதைவீமன் மாறியவனடிக்க
அடிக்கயவன்பிடிப்பான் அப்படியேசண்டையிட்டு
சாயாவிதத்தை தானறிந்திருபேரும்
வாயால்சபதம் வகுத்தேபொருவோமென்று
கட்டானகள்ளன் கசடன்வெகுகெடும்பன்
துட்டாளனை துரியோதனனுரைப்பான்
இத்தனைநேரம் இருபேரும்சண்டையிட்டு
புத்தியில்லாவண்ணம் பொருதோமேவம்பதினல்
உன்பலமுமுன்னுடைய உயிர்ப்பலமும்நீயுறைத்தால்
என்பலமுமுன்னோடே இயம்புகிறேனென்றுரைத்தான்
அப்போதுவீமன் அவனிலமைஅத்தனையும்
தப்பாமலேயுரைத்தான் சகலோரறிந்திடவே

## திரியோதனன் பாடு

கேட்டுத்திரியோதனனுங் கேளுநீயென்பலங்கள்
தீட்டுகிறேன்என்னிடது செய்யபுறமென்றுரைத்தான்
கள்ளன்கவுசலமாய்க் கபடுரைத்தனாயமெல்லாம்
எள்ளளவுபோலே இசையாதவீமனுக்கு
மெய்யுரைத்தானென்று மேலானபோர்வீமன்
கையாரத்தண்டால்க் கனக்கவடிததனனே
அடிக்கவேவீமன் அசையாமல்மற்றோனும்
திடக்கமுடனே சென்றவ்வீமன்பேரில்
மாறியவனடிக்க வாட்டமுற்றுப்போர்வீரன்
தேறியேமாயவரைச் சிந்தைதனில்நினைக்க
திலர்தமுள்ளமாயன் செயவீமனைநோக்கி
வலதுதுடைதனிலே மாயன்கண்காட்டிடவே
அடித்தானேவீமன் அதுதான்குறியெனவே
துடித்தான்கிடாய்போலத் துரியோதனன்விழுந்து
மூடத்தமாமரம்போல் முறிந்துகீழ்த்தான்விழுந்து
கூடத்தவுயிர்போல் குலைந்துவீழ்தனனே
அப்போதுமாயன் அரவக்கொடியோனிடத்தில்
தப்பாமல்வார்த்தையொன்று தான்கேள்க்கப்போயினரே
முன்னேபிறப்பில் முடிஇலங்கையாண்டிருந்தாய்
தென்னனிராவணனாய்ச் சிரசுபத்தாயிருந்தாய்
அப்போதுநீதான் அநியாயஞ்செய்ததினல்

செப்போடுவொத்த ஸ்ரீராமனாய்நான்தோன்றி
பத்துச்சிறசறுத்து பார்மீதிலேகிடத்தி
உத்துஒருவசனம் உரைத்ததேனுனுன்னிடத்தில்
தம்பியாலென்னைச் சரமறுத்தாயல்லாது
எம்பிராணன்வதைக்க ஏலாதுவென்றனையே
தம்பியொருநூற்றுடே தான்படைத்துஉன்னையுந்தான்
கொம்பிலோராளைவிட்டுக் கொன்றேனேவுன்னையென்றார்
என்றுரைக்கப்பாவி இகழ்த்துவானப்போது
தண்டுகொண்டேயடித்த தமிழ்வீமனல்லாது
இன்றுன்னாலேலாது இடையாபோவேன்றனனே
அப்போதுமாலும் அதிககோபம்வெகுண்டு
துப்புரைகள்தான்கேட்ட தீயனுக்கங்கேதுரைப்பார்
உன்னையின்னமிந்த உலகிலொருபிறவி
சின்னபின்னமாகச் சிரசொன்றதாய்ப்படைத்து
அறிவுபுத்தியோடு ஆணுபங்கள்தன்னோடும்
செறியுங்கலையோடுங் சிறப்போடுந்தான்படைத்து
என்பேரிலன்பு இருக்கவொருசாஸ்த்திரமும்
தன்போதமறியத் தான்படைப்பேன்கண்டாயே
முன்னேயுனக்கு உற்றபிறப்பாறதிலும்
என்னைநினைப்பு எள்ளளவுநம்பவில்லை
ஏழாம்பிறப்பில் என்னைநினையாதிருந்தால்
பாளாவாய்மேலும் பகையில்லையெந்தனுக்கு
என்றுதிருமால்இயம்ப துரியோதனனும்
அன்றவனைக்கொன்று அய்வரையுந்தான்வருத்தி
கர்மச்சடங்கு கழிக்கவிடைகொடுத்தார்
தர்மமுள்ளகர்ணனுக்கு சாஸ்த்திரத்திலுள்ளமுறை
எல்லாச்சடங்கும் இருவருக்கும்நூற்றுவர்க்கும்
உல்லாசமுள்ளதர்மர் ஒக்கமுறைசெய்தனராம்
முறைசெய்துகர்ணனுக்கு முத்திமோக்ஷங்கொடுக்க
மறைதேர்ந்தமாயன் வந்தாரவனருகே
அப்போதுவேத வியாகரவரங்குவந்து
செப்போடுவொத்த திருமாலோடேதுரைப்பார்
பாவியோடுகூடி படைசெய்தகர்னனுட

## கர்ணனுக்கு மோச்சமீதல்

ஆவிக்குமோக்ஷமருளுவதோ மாயவரே
என்றுரைக்கவியாகர் எடுத்துரைப்பாரெம்பெருமாள்
நன்றுநன்றுமாமுனியே நானுரைக்கக்கேட்டருள்வாய்
தொண்டுபணிநின்ற துய்யவானரங்களிலே
வல்லபிலமுள்ள வாலியிவன்முப்பிறவி
நல்லவனாய்முன்னே நாட்டிலிருக்கையிலே
ராவணனோடேகூடி ராமசரத்தாலிறந்தான்
ஸ்ரீராமனாய்நானிருந்து செயித்தவிதமறிந்து
வந்துபணிந்தானே வாலியவனென்காலில்

நன்றியுள்ளமாலே நானுன்னேவலனய்
முன்னேநீர்அமுர்தம் உவரிதனில்கடைய
என்னேவொருபுறத்தாய் யேவல்கொண்டமாயவரே
பத்துத்தலையுள்ள பாவியந்தராவணனை
கொத்திச்சிறமறுத்துக் கொல்லேனோனடியேன்
என்றந்தவாலி இறஞ்சிநின்றனெனையுமே
அன்றுவாலிதனக்கு அருளினதுநீகேளு
எனக்கேவலாக இப்பிறவிநீபிறந்து
தனக்கேராப்பாவிதனைச் சங்காரங்கொண்டதினல்
இனிமேலவனேடிருந்தென் சொல்கேள்க்கவைத்து
கனியானமோச்ச கயிலாசமேதருவேன்
என்றவனையழைத்து இப்பிறவிஅய்வரிடம்
முந்தியுதித்து முதல்ப்பிறவிசெய்தவனை
அரவக்கொடியோனிடத்தில் அனுப்பிவைத்து
இரவலர்க்குமீந்து என்புத்தியுள்ளிருத்தி
அன்னைபிதாசொல்லசராமல் அய்பேருக்கு
தன்னேஒருகணேமேல் விடேனென்றஉத்தமன்காண்
ஆனதால்முன்னே அருளிவைத்தசொல்ப்படிக்கு
மானமாய்மோக்ஷம் வகுத்தேனிவனுக்கென்றார்
நல்லதுதானென்று நல்முனிவன்தான்மகிந்தான்
எல்லைவைத்தபாரதப்போர் இன்றுமுடிந்ததென்று
கொண்டாடிஐபேருங் குருமுனியைத்தெண்டனிட்டு
வண்டாடும்வண்ணமகள் மயிர்முடித்துநீராடி
ஐபேரும்பத்தினியும் அச்சுதரையும்போற்றி
மெய்போகமான வியாகரரையுங்குவித்து
ஆண்டார்கள்சீமை அட்சுதனர்உண்டெனவே
பாண்டவர்கள்நன்றாய்ப் பாராளும்நாளையிலே
வைகுண்டமேக மனதிலுற்றெம்பெருமாள்
பொய்கொண்டவேசம் பொருந்திப்பொருப்பேறி
ஆங்காரமோகத் அம்புக்கணுவாலே
ஓங்காரமாமுனிவன் விடையேற்றுத்தான்மெலிந்து
பஞ்சவர்க்குள்ள பாரப்பிலன்களையும்
துஞ்சிவிடவாங்கித் தோற்றமுள்ளஅய்வருக்கு
மேல்நடப்புள்ள விசளமெல்லாம்தானுரைத்து
நூல்நடந்துவாருமென்று மோக்ஷத்திறவோனும்
சீரங்கமாபதியில் செல்கின்றவப்பொழுது
சாரங்கர்செய்த தன்மைகேளம்மானே
அரிகோணமாமலையில் அயோதவமுர்தகெங்கை
பரிகோணமாமலையின் பகுத்துரைக்கக்கூடாது
தேன்கமுகுமாங்கமுகு தென்னங்கமுகுகளும்

### சான்றோர் பிறப்பு

வான்கமுகுவாழை வழுவிலாநர்க்கமுகும்
சோலைமரமுஞ் சுகசோபனமரமும்

ஆலமரமும்அகில் தேக்குமாமரமும்
புன்னைமரமும் புஷ்பமலர்க்காவும்
தென்னமரமுஞ் செஞ்சந்தனமரமும்
மாவுபலாமரமும் வாய்த்தபிலாமரமும்
தாவுமரத்தின் தன்மைசொல்லக்கூடாது
சோலையிலேவீத்திருக்குஞ் சீர்பறவையின்பெருமை
தூலமின்னதென்று சொல்லத்துலையாது
பார்பதியும்ஈஸ்பரனும் பாவித்திருப்பதுபோல்
தேர்பதியுமேடைகளும் சிங்காசனங்காணும்
அலையில்த்துயில்வோர் அங்கிருந்தபாவனைபோல்
நிலையில்முனிவோர் நிர்ப்பதெண்ணக்கூடாது
கைலையிதென்று கண்ணுனைமாமுனிவர்
ஒயிலாகக்கூடி உவந்திருப்பதவ்வனத்தில்
வைகுண்டங்காண வந்ததர்மியெல்லோரும்
மெய்குண்டங்கண்டமென்று இருப்பாரவ்வனத்தில்
அப்படியேநல்ல அயோகஅமுர்தவனம்
இப்படியேநன்ருய் இயல்பாயிருப்பதுதான்
புட்டாபுரங்கிளக்குப் பூங்காவுநெர்மேக்கு
வட்டமுள்ளஸ்ரீரங்கம் வடக்குவன்ந்தெக்காக
தெக்கேதிரிகோணஞ் செங்காவுநேர்வடக்கு
மிக்கவகைமேக்கு மிகுத்தவனம்நேர்கிழக்கு
இவ்வெல்கைசூழ்ந்த வயோகஅமுர்தவனம்
அவ்வனத்திலுள்ள அமுர்தகெங்கையானதிலே
குளித்துவிளையாடி கூபந்தனிலறங்கி
களித்துமகிழ்ந்து கையில்நீர்தான்திரட்டி
ஈசருடமுடியிலிட்டுக் கரங்குவித்து
வாசமுடன்கைலை வாழ்ந்திருக்குமாமடவார்
மரகதவல்லி வள்ளிசலிகையெனும்
சரகதக்கன்னி சரிதைஅரிமடவும்
ஏழுமடவும் எண்ணெண்ணுமிப்படியே
நாளுமுறையாய்நடத்திவரும்நாளையிலே
மாலறிந்துகன்னிமுன்னே வந்தார்சன்னுசியென
ஏலறிந்துகன்னி இவரல்லஈசரென்று
சாய்ந்துவிலகித் தையல்நல்லார்போகுகையில்
ஆய்ந்துதெளிந்த அச்சுதருமுன்னேகி
பலநாளுமீசுரர்க்குப் பாவையரேநீங்களுந்தான்
செலந்திரட்டிமேல்முடியில் செய்தீரனுஷ்ட்டானம்
இனியெனக்குநீங்கள் எல்லோரும்மிக்கவந்து
கனிநீர்தனையுமென்றலையில் கவிழுமென்ருரெம்பெருமாள்
அப்போதுகன்னி எல்லாருமேதுரைப்பார்
எப்போதுந்தானுய் இருப்பவர்க்கல்லாது
மாயவர்க்குமற்றுமுள்ள மயேசுரர்தன்தனக்கும்
மாயமுள்ளவானவர்கோன் மறைமுனிவர்தன்தனக்கும்
எருதேரிநித்தம் இறவாதிருக்குகின்ற

ஒருவனுக்கேயல்லா தூளியங்கள்வேறில்லையே
கேட்டுச்ஸ்ரீகிருஷ்ணருங் கிளிமொழியோடேதுரைப்பார்
ஓட்டிலிறந்துண்ண ஊர்வழியேதான்திரியும்
ஆண்டிக்கேயல்லா அரவணையிலேதுயிலும்
காண்டீபனுக்கேவல் கருதோமெனவுரைத்தார்
தோகையரேகெங்கை இளிச்சுருட்டுவதைப்பார்ப்பமென
ஆகட்டென்று அட்சுதருங்கோபமுற்று
மேலோகமாயிருக்கும் வேதயேழுவுகத்தில்
சாலோகமான சத்திபரலோகமதில்
ஆதிரூபமில்லாத ஆகாச்சத்தியொன்று
சீருரூபமான சிவலோகமானதிலே
மெய்கொண்டவானோர் வித்தொன்றுதானதுவும்
வைகுண்டலோகமதில் வாய்த்ததர்மியானதிலே
தர்மியொருவித்துத் தானெடுத்துவேதாவின்
சென்மித்தெடுத்தார் சிவரிசியொன்றதிலே
தபோதனராய்ச்சண்டன் தன்னுகத்தில்வாழுவரில்
சகோதரராயென்று தானெடுத்தாரம்மானை
சொக்கலோகமதிலே ஸ்ரீராமர்தன்றனக்கு
பக்குவங்மளாகப் பணிவிடைகள்செய்வோரில்
நல்லகுலமான நயனவித்தொன்றெடுத்து
வெல்லமாகோன்வாழும் வெற்றித்தெய்வலோகமதில்
சத்தியுள்ளவித்தொன்று தானெடுத்தாரம்மானை
இப்படியேமேலரக யேழுயுகமதிலும்
அப்படியேயுள்ள ஆர்ககமுள்ளவித்தேழு
எடுத்துத்தருமால் இருதயத்திலேயடக்கி
கொடுத்துநின்றதாதாவைக் குவித்துப்பதம்போற்றி
கன்னியுடகர்ப்பதுக்குக் கருத்தேதுசெய்வோமென்று
உன்னிமனதில் ஒருமித்துப்பார்த்தனரே
பார்த்தனரேகர்ப்பதுக்குப் பக்குவம்வேறில்லையென்று
தீத்தழலாய்ப்போகத் திருவுருவங்கொண்டனேரே
பிரமாவுபதேசம் பிறப்புவுருவேத்தி
குரமாய்வருணன் குளிரத்தொழிந்திடவே
காமத்தணலாய்க் கருமேனியானதிலே
வேமக்கனல்போல் விளிகொழிந்திட்டெரிய
சாந்தணியுங்கன்னி தையல்தெய்வமாமணிகள்
கூந்தல்விரித்துக் கூபந்தனிலிறங்கி
அரிவோமெனவே ஆடிக்கரையேறி
தரிமோனவே சலக்கரையைவிட்டவர்கள்
உயரவரவே உள்ளுதறத்துள்ளல்கொண்டு
அயரக்கால்கர அங்கமெல்லாந்தொங்கலிட
கிடுகிடெனத் தேகங்கிழிமொழிவாய்க்கொட்டிடவே
திடுதிடெனவக்கினியைத் திரைபோல்வழையலுற்றூர்
கன்னியெழுபேருங் கனலைமிகவாவ
உன்னித்திருமால் ஓங்காரமோகமதால்

மங்கையேழுபேர்க்கும் வயிற்றிலுற்றதம்மானை
சங்குவண்ணமாலோன் சச்சுருவங்கொண்டனரே
உடனேஸ்திரீகளுள் தரித்தபிள்ளைகளை
தடமலேபெற்று சஞ்சலித்துமாமடவர்
வெருவிப்பயந்து விழிமடவாரெல்லோரும்
கருவிதொண்ணுத்தாறுங் கலங்கியேதாளுேடி
துயிலையெடுத்துடுத்து சுருட்டினார்கங்கைதனை
கையில்ச்சலந்தான் கட்டித்திரளாமல்
கலங்கியழுது கண்ணீர்மிகச்சொரிந்து
மலங்கியழுது மண்ணிலவர்புரண்டு
அய்யோபொருளை அறியாமல்விட்டோமே
மெய்யோடேகுத்தி விழுந்தழுதார் அம்மானை

**விருத்தம்**

கனலைத்துணையாமென்ருவிக் கர்ப்பையிளந்தோங்
கன்னியரே
புனலைத்திரட்டப்பிலனின்றி புத்தியழிந்தோம்பூவையரே
அனலைத்தரித்தவரன்முன்னே அங்கேசென்ருல்பங்கம்வரும்
இனத்தைப்பிரிந்தமானதுபோல் இருப்போம்வனத்தி
லென்றனரே

**நடை**

கன்னியர்கள்மேனி கனிந்துமினுமினுத்து
மின்னித்தனங்கள் மிகுபால்சுரந்திடவே
கற்புக்குழறிக் கைலையுகமானதற்கு
அற்புதவேள்கங்கை அவர்நினைப்பில்லாமல்
எல்லோருமிக்க ஈசுரரைத்தானினைந்து
வல்லோனேயென்று வரம்பெறவேநின்றனராம்
நின்ருர்தவத்தினிலமை கேளம்மானை
இன்றெங்கள்கற்பை ஈடளித்தமாமுனிவர்
வந்தெங்கள்தன்னை மாலையிடவேணுமென்று
பந்துதனமின்னார் பாவையேழுபேரும்
ஈசுரரேதஞ்சமென்று இருந்தார்தவசதிலே
மாசுவொன்றில்லா மாதர்ஏழுபேரும்
தெக்குமுகமாய்த் தேவியேழுபேரும்
மிக்கத்தவசு மிகப்புரிந்தாரம்மானை
கற்பழித்தெங்களுடன் கன்னிதிரளாமல்வைத்தோர்
பொற்பாதமுண்டெனவே பூவைதவசிருந்தார்
பாலிழகிநல்லமுர்தம் பாலாருய்வோடிடவே
காலிளகாவண்ணங் கடுந்தவசுசெய்தனரே
பிள்ளையேழுபேரும் பெற்றுப்பெருகிடவும்
கள்ளஞ்செய்தமாமுனிவர் கைப்பிடிக்சவெங்களையும்
மக்களையுமெங்களையும் மாமுனிவர்வந்தெடுத்து
ஒக்கவொருமித்து உலகாளவைத்திடவும்

நின்றார்தவசு நேரிழைமாரெல்லோரும்
நன்றானமாமடவார் நாடித்தவசிருக்க
பிறந்தபிள்ளை புதுமைகேளன்போரே
அறந்தழைக்கும் நாராயணர்மகவாகியதோர்
சான்றோர்பிறந்திடவுந் தரணியரசாண்டிடவும்
வேண்டும்பெரிய விருதுவகைபெற்றதுவும்
அய்யாவுரைக்க அடியோனதையெழுதி
மெய்யானபோத மேலோர்கள்முன்பதிலே
அன்பானயிந்த அகிலத்திரட்டம்மானை
தன்போதமாயிருந்து தாழ்மையுடன்கேட்டவர்க்கு
கற்முதல்ச்சஞ்சலங்கள் களியுமென்றாரெம்பெருமாள்
உண்மையுள்ளலட்சுமிக்கு உபதேசமாயுரைத்தார்
இப்படியேயிள்ளைதனை ஈன்றபின்புகன்னியர்கள்
அப்படியேசென் றவர்போய்தவசிருக்க
பிள்ளைகளைப்போட்டு புண்ணியனார்போகாமல்
வள்ளலந்தமாலும் மதலைதனையெடுத்து
ஆரிடத்திலிம்மதலை அடைக்கலமாய்வைப்போமென்று
விசாரித்துநன்றாய் விசாரமுற்றாரம்மானை
தெய்வேந்திரன்பசுக்கள் திரைமெயக்கண்டவரும்
கையதிலேசீங்குழலைக் கனிவாயில்வைத்திருத்தி
நிரைவாவெனவே நியமித்தங்கூதிடவே
அரைநொடியிலப்பசுக்கள் அங்கொன்றுமில்லாமல்
அங்குவந்துமாயனுடன் அழைத்ததென்னக்கேட்டிடுமாம்
சங்குதனில்பாலுமிள்ந்து தாருமென்றாரெம்பெருமாள்
பாலுமிள்ந்தாவு பலநாளும்பாலருக்கு
நாலொருநாள்மட்டும் நடந்துவரும்வேளையிலே
கன்றுக்குப்பால் காணமல்மேய்ப்போர்கள்
ஏதென்றெனப்பார்த்தியல் பறிந்துவானவர்கோன்
தானறியச்சொல்லிச் சண்டையிடவந்தனனே
வந்தவனுக்கெதிராய் மாமுனிவன்சூலமதை
இந்தாபாரென்று எறிந்தாரவன்பயந்து
ஆரோவெனப்பயந்து அய்ராவதத்தோனும்
போரொல்கிப்போனான் பொன்னுலோகமதிலே
நல்லதெனமாமுனிவன் நளினமுடன்மகிழ்ந்து

## காளி வரவு

செல்மகவான சிறுவர்தனைவளர்க்க
மாகாளியென்ற வடபத்திரகாளி
ஓகாளியென்ற உயர்ந்தபிலக்காறி
பெண்ணல்லப்போர்க்குப் புருடர்மிகப்போராது
விண்ணவரும்மண்ணவரும் விறுமாவும்போறாது
அப்படியேதுட்ட ஆங்காரமாகாளி
இப்படியேநன்றாய் இவளிருக்கும்நாளையிலே
ஆணொருவர்தன்னால் அளியாவாங்கள்பெற்ற

தானொருவன் றனையுஞ் சத்தியுமைதனையும்
கெணியாவரங்கள்பெற்றுக் கீழுமேலுமடக்கி
துணிவாகத்தேவர்களைத் தூளிபடயேவல்கொண்டு
தேட்டமுடனேழு செகல்கடந்தப்புறத்தில்
கோட்டயதிட்டுக் குறும்புசெய்தாண்டனனே
தேவர்கள்சென்று சிவனார்க்கபயமிட
மூவருமொத்திருந்து முழுதும்விசாரமிட்டார்
ஆனாலேதக்கனையும் அழிக்கவகையில்லையிங்கே
பூணாரம்பூண்ட புட்டாபுரக்காளி
காளிபடையுங் கமண்டலத்தில்சென்றதுண்டால்
தூளிபடத்தக்கன் சிரசறுப்பாளென்றுமிக
மாலுரைக்கஈசுரரும் மறையோரும்சம்மதித்து
வேலுகந்தகாளிதனை விளித்தார்காணம்மானை
உடனறிந்துமாகாளி உடையோன்பதம்பணிந்து
வடவக்கினிமுகத்தாள் வருத்தினதேனென்னையென்றாள்
தக்கன்தலையறுத்து சங்காரஞ்செய்திடவே
மிக்கநீபோவென்று விடைகொடுத்தார்ஈசுரரும்
விடைவேண்டிக்காளி விமலனடிபோற்றி
படைக்காரிபின்னுமொன்று பரமனோடேகேட்டாள்
என்னோடுதவி இயல்படையாய்த்தான்வரவே
வன்னபுதல்வர் வகிருமென்றாள்மாகாளி
அப்போதுஈசுரரும் ஆங்காரியைநோக்கி
கர்ப்போடுவொத்த கன்னியேயுந்தனுக்கு
தரித்துப்பிறக்கத் தகாதேமாகாளி
மரித்துப்பிறக்காத மாகாளியேயுனக்கு
விடையாயொருவசனம் விரிக்கக்கேளொண்ணுதலே
படைக்காகப்பாலர் பச்சமால்தாவெனவே
தவசுமிகப்புரிந்தால் சங்குசரத்தாமன்
விபுசுதனில்ப்பிறந்த வீரரேழுபேர்களையும்
உன்னையழைத்து உன்கையிலேதான்தருவார்
முன்னேதவசு மிகப்புரியபோவெனவே
அரனார்விடையும் அருளிமிகக்கொடுக்க
பரமானதேவி பச்சைமால்தந்தனைத்தான்
நினைத்துத்தவசு நெடுநாளாய்நின்றிடவே
அனைத்துயிருங்காக்கும் அச்சுதருந்தானறிந்து
மக்களேழுபேர்களையும் மாகாளிகைகொடுக்க
கொக்கரித்துக்காளி கொண்டாடித்தான்மகிழ்ந்து
வாங்குமளவில் மாமுனியைத்தானோக்கி
தாங்கிநின்றுபோத்த அடிதாழ்ந்துஏதுசொல்வாள்
வேதமுனியே வித்தைக்கருத்தோனே
மாதவங்கள்கற்ற மாமுனியேயிம்மதலை
ஆனோர்க்குநாமம் அருளிநீர்தாருமென்றார்
வானோர்கள்போற்றும் மாமுனியையும்மகிழ்ந்து
உள்ளதுதானென்று உடனேமனமகிழ்ந்து

வள்ளல்சிவனாரறிந்து மறைவேதனையழைத்து
முப்பத்துமுக்கோடி முனிவரவர்தங்களையும்
நாற்பத்துநாற்கோடி நல்லரிசிகளையும்
தேவர்முதலாய்த் தெய்வேந்திரன்வரையும்
மூவராறுவர் முதலோரையும்வருத்தி
கிணநாதர்வேதா கிம்புருடரையும்வருத்தி
குணமானதந்திக் குமரனையும்வருத்தி
சத்தியுமையுஞ் சரசுபதிபார்பதியும்
எத்திசையும்வானோர் எல்லோரையும்வருத்தி
சங்கமதுகூடிச் சாத்திரங்கள்தானோதி
மங்களவாத்தியங்கள் மடமடெனநின்றதிர
இப்படியேசங்கம் எல்லோருந்தான்கூடி

## சான்றோர்க்குப் பேரிடுதல்

அப்படியேதானிருக்க அருளுவார்அச்சுதரும்
பிறந்தபிள்ளையேழதுக்கும் பேரிடவேணுமென்று
அறந்தழைக்கும்ஈசர்முன் அவர்வைத்தாரம்மானை
அப்போதுஈசுரரும் அன்பாயகமகிழ்ந்து
இப்போதுமரயவரே எல்லோருக்கும்பொதுவாய்
நீர்தானேநாமம் இட்டாலதுபோதும்
பார்தானளந்த பால்வண்ணனென்றுரைத்தார்
கார்வண்ணருங்கேட்டுக் கரைக்கண்டரோடுரைத்தார்
தார்வணரேமுதல்பேர் தாமுரைக்கவேணுமென்றார்
நல்லதுதானென்று நாட்டமுற்றுஈசுரரும்
வல்லவனேஉன்னுத விந்தில்வந்துதோன்றினதால்
தோணுப்பொருளைத் துடர்ந்துகண்டமன்னவர்க்கு
சாணுரெனநாமஞ் சாற்றினார்ஈசுரரும்
முதல்பேர்தான்ஈசர் மொழிந்தபின்புவேதாவும்
மதமானவிந்து மாயமுனிசேயதற்கு
சான்றோரெனநாமஞ் சாற்றிநாவேதாவும்
ஆண்டாரிதுவுரைக்க அச்சுதரும்பின்சொல்வார்
நாடாள்வாரென்று நாமமிட்டார்பாலருக்கு
தாடாண்மையுள்ள சத்தியங்கேதுரைப்பாள்
அண்ணார்விநோதமதில் அவதரித்தபிள்ளைகள்க்கு
வண்ணமுள்ளபேரு வாழ்த்திவிடைகொடுப்பாள்
எங்கும்புகழ்பெற்று ராசபட்டந்தான்சூடும்
சங்குமன்னரென்று தானுரைத்தாள்சத்தியுமை
பேறுபெற்றபாலரென்று பிதனமுடன்மகிழ்ந்து
பார்வதிநாமம் பகருவாளம்மானை
சென்றயிடம்வென்று சீமைகெட்டித்தாறுண்டு
மண்டலங்கடோறும் வரிசைபெற்றுவாழ்ந்திருக்கும்
பொர்ப்பமுடிமன்னரென பேரிட்டாள்பார்வதியும்
கர்பகத்துக்கொத்த கன்னிசரசுபதி
வெள்ளானைவேந்தரென்று வெண்டாமரையுரைத்தாள்

பிள்ளையார்தானும் பிரியமுடன்மகிழ்ந்து
உள்ளபடிநாமம் உரைக்கிறாரன்போரே
நன்றானவீர நகுலவேந்தனெனவே
அன்றானைமுகத்தோன் அருளினர்காணம்மானை
சண்முகனுந்தான்மகிழ்ந்து தவலோகமன்னரென்று
விண்ணுகமும்மெய்க்க விளம்பினர்காணம்மானை
வானோர்கள்வேத மாமுனியோர்தான்மகிழ்ந்து
தானனமாயனவர் தான்பெற்றபாலருக்கு
தர்மகுலமன்னரென்று சாத்தினாரம்மானை
கர்மமில்லாதேவர் தரியமால்பாலருக்கு
மெய்யுடையபாலர் மென்மேலும்வாழ்ந்திருக்க
தெய்வகுலமன்னரென்று திருநாமமிட்டனரே
வீரியமாய்சூரியனுங் வெற்றிமால்பாலருக்கு
சூரியகுலவேந்தரென்று சொன்னார்காணம்மானை
வாசவனுந்தான்மகிழ்ந்து மாயனுடபாலருக்கு
வீசைவிசைய வேந்தரென்றுநாமமிட்டார்
இப்படியேநாமம் இவர்மொழிந்ததின்பிறகு
கர்ப்புடையசன்னாசி கருத்தாகவேயுரைப்பார்
நாட்டுக்குடைய நாதனுடகண்மணிக்கு
காட்டுராசனெனவே கருத்தாகநாமமிட்டார்
இப்படியேஈசர்முதல் எல்லோரும்நாமமிட்டு
அப்படியேபிள்ளைக் கவரவரேகாப்பணிந்து
சத்தியுமையுஞ் சரசுபதிபார்பதியும்
எத்திசையுமெய்க்க எடுத்துத்தாராட்டுவாராம்
அமிர்தமதுசேனையிட்டு எல்லோருந்தான்மகிழ
குமுர்தவாய்சொல்லுடையார் குரவையிட்டுத்தான்மகிழ்ந்து
அண்டர்முனிவோர்கள் அல்லோரும்பார்த்திருக்க
தண்டாமரைமாது தாலாட்டவுத்தரித்தாள்

## சரஸ்வதி தாலாட்டு

வைகுண்டக்கண்ணே வரம்பெற்றமாதவமோ
கைகண்டவிதத்தைக் கருத்தறிந்தவுத்தமரோ
தங்கமுடிபெற்றவனே சங்குமுடிகாவலனே
வங்கம்நிசங்கண்ட மங்காதசான்றவரோ
சிங்கமுகத்தண்டிகையும் சிலம்புணைந்தரத்தினமும்
சங்கக்கொடிவிருது சங்குரெட்டைபெற்றவனே
முத்துச்சிலாப முதலாளியானவனே
கொத்துமுங்கையாபரணம் கொடிவிருதுபெற்றவனே
மூலப்பொருள்கண்ட முதச்சாதியானவனே
தாலம்பாலுண்டு தானிருக்கும்மன்னவனே
நடைகாவணங்களிட்டு நல்லதீவெட்டியுடன்
படையோடேவீத்திருக்கும் பாரமுடிமன்னவரோ
வெள்ளானைமேலே வீதிவலஞ்சுத்திவந்து
துள்ளாடிச்சிங்காசனம் வீத்திருப்பவரோ

பூதமதுபந்தம்பிடித்து முன்னேதான்வரவே
நாதம்ரெட்டைஊதி நாடாளும்மன்னவரோ
எக்காளமூதி இடம்மடம்மானமுடன்
மிக்கானசீமையெங்கும் மேவிவரும்மன்னவரோ
வாரணங்கள்கட்டி வையகத்தைத்தாளுண்டு
தோரணங்கள்நாட்டிவைத்த தெய்வத்திருசான்றவரோ
தர்மமுடிபெற்றவரோ சாஸ்த்திரத்துக்கொத்தவரோ
கர்மமதில்லாமல் களிகூர்ந்திருப்பவரோ
உடக்கூறுசத்தி உயிரோடுதித்துவந்த
சடக்கூறுமூலச் சட்டமதுகொண்டவரோ
கல்விக்குகந்த கருணைகரரானவரோ
செல்விக்குகந்த சேமமதுகொண்டவரோ
தேவருக்கும்வானவர்கும் திருப்பதிகளாவதற்கும்
மூவர்க்குமுதவிசெய்து உதித்துவந்தகர்ப்பகமோ
சென்றவிடமெல்லாஞ் சிறப்புவெகுமானமுடன்
மண்டலங்கள்மெய்க்க வாழுகின்றசான்றவரோ
சாணருக்குள்ளே சர்வதுமேயடக்கி
கோணதமாயன் குருக்கொடுத்தீன்றகண்ணே
அறிவுஞானத்தோடு ஆதிப்பிறவியோடு
செறியுங்கலையோடுஞ் செடமெடுத்தசான்றவரோ
துட்டனென்றபேரைச் சூரசங்காரமிட்டு
கோட்டமிட்டுக்கோட்டை கொடிவிருதுபெற்றகண்ணே
ஆண்டிருக்கும்மன்னவரோ அச்சுதரின்பாலகரோ
தாண்டிவரம்பெற்று தரணியரசாண்டவரோ
பாண்டவரோஆண்டவரோ பால்வண்ணர்பெற்றெடுத்த
சான்றவரோ ராராரோ தழைத்திருக்கராராரோ

## விருத்தம்

தங்கமணியேநவமணியே சலத்தில்விளைந்ததரளமுதோ
சிங்கமுடிகள்பெற்றவரோ சீமையடக்கியாண்டவரோ
துங்கவரிசைபெற்றவரோ திருமால்விந்திலுதித்தவரோ
சங்கமகிழவந்தவரோ சான்றோர்வளர ராராரோ

## நடை

சந்தோசமாக சரஸ்பதிதாலாட்டி
வெந்தோசமெல்லாம் விலகவேநீராட்டி
வைகுண்டமூர்த்தி மாமுனிதன்கைகொடுக்க
மைகொண்டவேதன் மதலைதனைவாங்கி
ஈசர்முதலாய் எல்லோருங்கூடியிருந்து
வாசமுள்ளபிள்ளைகள்தான் வளரத்திருவமுர்தம்
சேனைமிகவூட்டுதர்க்கும் செல்வமுண்டாவதற்கும்
வானத்தமிர்தம் வருத்திமிகங்யவென்று
கைலைதனியிருக்கும் கண்ணனபேர்களுக்கும்
அகிலமதில்பாயும் ஆகாயவூறலதை
வருத்திக்கொடுக்கவென்று மாயவரும்ஈசரரும்

பொருத்தமுள்ளவானோரை போய்வேண்டிவாருமென்ருர்
அப்படியேவானோர் ஆகாயமீதேறி
செப்பமுடன்அமுர்தஞ் சென்றவர்கள்பார்க்கையிலே
ஆருருபமில்லாத ஆகாயமேல்வழியே
பாயுமளவில் பலசாஸ்த்திரங்கள்கற்ற
வீயுமறைவேதியனும் விழிநுதலாள்கன்னியரும்
அமுர்தமதையெல்லாம் அளளித்தலேமேலும்
குமுர்தமுடன்குடித்துக் கொழுத்துமிக்பாளேவைத்து
தேகமதுநிமிர்ந்து தேவியரும்மன்னவனும்
ஆகமதுகூர்ந்து அலங்கரித்துநிர்ப்பளவில்
வானோர்கள்பார்த்து வாய்தமுர்தங்காணுமல்
ஏனோயிதுமாயமென எண்ணிமிகப்பார்ப்பளவில்
கொண்டாடிநின்ற கூர்மறையவன்றனேயும்
பெண்டாட்டியான பெண்ணதையும்வானோர்கள்
பிடித்துமிகயிழுத்து பின்னுமுன்னுந்தள்ளிமிக
அடித்துச்சிவன்முன்னே அச்சுதரும்பார்த்திருக்க
கொண்டுவந்துவிட்டுக் கூறுவார்வானோர்கள்
பண்டுமுதலின்றுவரைப் பாய்ந்தஅமுர்தமெல்லாம்
உண்டுக்கொண்டுதேகம் உரத்துமிகப்பாழைவைத்து
வண்டுறுக்கிமிக்க வலுப்பேசினனெனவே
சொல்லிடவேவானோர் திருமாலதுகேட்டு
நல்லதுதானென்று நாடிச்சிவனோடுரைக்க
அப்போதுநல்ல ஆதிசிவமுறைப்பார்
எப்போதும்பாலர்க்கிவருண்ட அமுர்தமெல்லாம்
கொடுக்கும்படியாய்க் குருக்கவையுமென்றுரைத்தார்
அடுக்கநின்றதேவர் அதுகேட்டுச்சீக்கிரமாய்
மறையோனேயும்மாதுவையும் வந்தெடுத்துச்சாபமிட
இறையவரைப்பார்த்து ஏதுரைப்பான்மறையோன்
இப்போதுயிட்ட இச்சாபமானதுதான்
எப்போதுநீங்குமென்றே கேட்டான்மாமறையோன்
நீசகுலமறுத்து நெடியதிருமாலும்
மாசில்லாத்தர்ம வையகத்தையாளுதற்கு
அன்புசேகரிக்க அங்குவருவார்கள்கண்டீர்
வம்புமாழும்போது மாறும்உங்கள்சாபமென்ருர்
உடனேமறையோனும் ஓவியமுமுள்ளதென்று
தடமேல்நின்று தாலமெனவேவளர்ந்தார்
வளந்துஅமுர்தமதை மக்களேழுபேர்களுக்கும்
பழந்தமுர்க்காயோடு பலவகையுந்தாறுண்டு
அமுர்தமதைநீங்கள் ஆக்கிரகந்தானடக்கி
குமுர்தமுடன்நீங்கள் குடித்திருங்கோவென்றுசொல்லி
உங்களுக்குப்பாலமுர்தம் ஊறுமல்லாலித்தாலம்
எங்களுக்குஇத்தாலம் இசையாதுகண்டீரே
பாலருக்குஇந்தவரம் பரமயுகத்தோர்கொடுத்து
ஞாலமுள்ளகாளி நாயகியைத்தானழைத்து

பாலரையும்காளி பண்பாகவாங்குகையில்
ஆலமுர்தம்உண்ட அச்சுதருமேதுரைப்பார்
அடவுபதினெட்டும் அலங்காரவர்மமதும்
கடகரியின்றெழிலுங் கந்துகத்தின்றெழிலும்
மாவேறுந்தொழிலும் வாழ்வீசுந்தொழிலும்
பாவேறும்பாட்டும் பழையமறைநூலானதுவுங்
அடவுமேலான அதிகபலவித்தையதும்
திடமுமிகவருத்திச் சேஞதிபதியாக்கி
எல்லாவிதத்தொழிலும் இசைவானராகமதும்
நல்லாவருத்தி நாட்டமுடனேகொடுத்து
உயிர்ச்சேதம்வாராமல் ஒன்றுபோலென்மகவை
நெய்ச்சீதம்போலே நீவளத்துத்தாவெனவே
அல்லாமலென்மகவை யாதொருதாராஞலும்
கொல்லாமல்க்காக்கக் கூடுமோஉன்ஞலே
அன்பானகாளி அதற்கேதுசொல்லலுற்ருள்
என்பாலகர்தனேயும் ஈடுசெய்யயிங்கொருவர்
உண்டோகாணிந்த உலகிலெனக்கெதிரி
என்றேதான்காளி இப்படியேசொல்லியபின்
பாலரையுந்தானெடுத்துப் பரமசிவனருளால்
கோலமுள்ளமாயன் கொடுதாரொருவார்த்தைசொல்லி
சீலமுள்ளகாளிஎன் சித்திரப்பாலருக்கு
மதலேதனக்கோர்தீங்கு வந்ததேயுண்டாஞல்
குதலேயரேயுந்தனுக்குக் கொடுஞ்சிறைதான்சிக்குமென்று
சொல்லியேகாளிகையில் சிறுவரையுந்தான்கொடுத்து
வல்லபிலமுள்ள மாடுதனிலேறியும்
வேதாவும்நல்லநெற்றி விழியுடையாள்தன்தனேயும்
மாதாவுமான வாய்த்தசரசோதியையும்
தேவர்முதல்வானவரை சிட்டர்முனிவோர்களேயும்
மூவர்களேயுங்கயிலே ஊரேபோமென்றனுப்பி
காளியையும்பிள்ளேகளே கருத்தாய்வளர்த்திடென்று
ஆளியடைத்த அச்சுதருந்தானடந்து
ஸ்ரீரங்கமாபதியில் சென்றிருந்தாரம்மானே
சாரங்கர்ஸ்ரீரங்கந் தான்வந்தாரென்றுசொல்லி
ஸ்ரீரங்கமெல்லாஞ் செழித்துமிகவாழ்ந்து
பாரெங்கும்மெச்சிப் பரந்ததுகாணம்மானே
அப்படியேஅச்சுதரும் அப்பதியிலேயிருக்க
எப்படியும்ஸ்ரீரங்கம் இனிதழைக்குமென்றுமிக
மூவர்முதலாய் முப்பத்துமுக்கோடி
தேவர்முதலாய்ச் சிந்தைகளித்தேயிருந்தார்
ஸ்ரீரங்கமான திருப்பதிலின்வளமை
சாராங்கராயர் தானுரைத்தாரம்மானே
மாரியதுமூன்று வருசிக்கத்தான்பொழிந்து
ஏரிபெருகி ஏற்றசெங்நெல்தான்விளேந்து
படியொன்றுகோட்டையொன்ருய் பழுத்துவருஞ்செங்நெல்லது

கரும்புமுத்தீனுங் கசுவுங்கரைபுரளும்
அரும்புவனமும் அகில்தேக்குமாமரமும்
கோவுஞ்ஸ்ரீரங்கரெனக் கூப்பிடுங்காணச்சுதரை
மாவுஞ்ஸ்ரீரங்கரென வந்தழைக்குமச்சுதரை
மயில்குயில்மான்கலையும் வாய்த்தவணில்பட்சிகளும்
ஒயிலாகஅச்சுதரை உள்ளாக்கியாடிவரும்
அவ்வூரிலுள்ள அந்தணர்களெல்லோரும்
கவ்வைவேறில்லாமல் கரியமால்தம்தனக்கு
பூசைமுறைவைத்துப் பிராமணர்கள்சூழ்ந்துவர
ஆசையுடன்அச்சுதரும் அங்கேயினிதிருந்தார்
ஸ்ரீரங்கமாபதியில் சென்றிருக்குமப்போது
சாரங்கர்பெற்ற சான்றோர்களின்பெருமை
சொல்லுகிறாரெங்கள் திருமால்காணம்மானை
நல்லதுதானென்று நாடித்திருகேள்க்க
அன்பானசான்றோர்க் கானமாகாளியம்மை
தன்பாலர்போலே தான்வளர்த்துவித்தைகளும்
வருத்திக்கொடுத்து மன்னமன்னர்தானாக்கி
கருத்திலுறக்காளி கண்ணனமக்களுக்கு
வேண்டும்பணிகளெல்லாம் விதவிதமாய்த்தானெடுத்து
பூண்டந்தமக்களையும் பூத்தானமாய்வளர்த்தாள்
மிக்கநல்லபிள்ளை வீரரெனவாகுகையில்
தக்கனென்றசூரன் தன்பேரில்மாகாளி
படைக்குயெழுந்தருளி பாலரையுந்தான்கூட்டி
நடைக்குவதிகமுள்ள நாயகியும்பாலருக்கும்
போர்க்கோலமிட்டுப் புட்டாபுரங்கடந்து
ஆர்க்கமுள்ளகாளி அலகைபடையுடனே
சான்றோரைவிட்டுத் தக்கனையுந்தான்வதைத்து
மூன்றோரைநெஞ்சில்வைத்து ஓங்காரமாகாளி
தக்கனையுங்கொன்று சான்றோரவர்தனக்கு
மிக்கவரிசை மிகக்கொடுத்துமாகாளி
புட்டாபுரத்தில் பூதகணஞ்சூழ்ந்துநிற்க
கட்டாதகாளி கமலத்தில்வீத்திருந்தாள்
அப்போதுநல்ல ஆர்க்கமுள்ளபாலருக்கு
இப்போதுமாலையிட ஏழுபேர்க்கும்வேணுமென்று
பார்த்துவிசாரித்துப் பத்திரமாகாளி
நால்திசையும்பார்த்து நாரதமாமுனியை
அழைத்துகுநல்லமாகாளி அந்தமுனியோடுரைப்பாள்
விழைத்துநல்லபுத்தி விபரமிட்டுச்சொல்லுகின்ற
மாமுனியேஎந்தன் மக்களேழுபேர்களுக்கும்
நீமுயன்றுபெண்ணேழு நிச்சயிக்கவேணுமென்று
நல்லதுதானென்று நாரதமாமுனிவன்
வல்லவகையாலுன் மக்களுக்குப்பெண்ணேழு
பார்த்துவருவேனென்று பகர்ந்துமுனிபோயினனே
சாற்றுமொழிகேட்டுத் தானேகுமாமுனிவன்

நீதமுள்ளநல்ல நிருபதிராசனுந்தான்
பெற்றமததலேனப் பெண்கேள்க்கப்போயினனே
மாமுனிவன்கேள்க்க மன்னனதிசயித்து
தான்மகிள்ந்தேதோ தானுரைப்பானம்மானே
நல்லமுனியே நானுரைக்கநீகேளு
செல்லமகவுதேவிக்கும் எந்தனக்கும்
இல்லாமலேனேகநாள் இருந்தோந்தவமாக
நல்லானஈசர் நாட்டமுடனிரங்கி
ஆண்பிள்ளேயுந்தனக்கு ஆகமத்திலில்லேயென்று
பெண்பிள்ளேயேழு பிறக்குமென்றுசொன்னர்காண்
அப்போதுஈசுரரை அடியேன்மிகப்பார்த்து
இப்போதுஎந்தனக் கிரணமுடிவாகுகையில்
கொள்ளிவைக்கப்பிள்ளே ஒன்றுகொடுவுமென்றேன்
தெள்ளிமையாய்ஈசர் செப்புமொழிநீர்கேளும்
தெய்வச்சான்ருேராய்ச் சித்திரமாகாளி
கையதுக்குள்வந்துன் கன்னியேழுபேர்களேயும்
மாலேயிட்டுந்தனக்கு வருமாபத்தையெல்லாம்
மேவலராய்க்காத்து மேதினியோர்தானறிய
உந்தனுக்குநல்ல உதவிமிகச்செய்வதற்கும்
வந்தங்கிருப்பாரென்று வகுத்தாரேஈசுரரும்
ஆனதாற்பெண்ணேழு அவர்க்கேதானல்லாது
வானமுனியே மற்றெவர்ககுமாகாதே
என்றுநிருபதனும் ஏற்றமுனியோடுரைக்க
நன்றுநன்றென்று நாரதருஞ்சம்மதித்து
மன்னவனேகேளு மாகாளிதன்னிடத்தில்
சொன்னபிள்ளேயேழுஞ் சிறந்திருக்கிருரெனவே
அந்தமன்னரான ஆண்பிள்ளேகளானேர்கள்
இந்தமுகூர்த்தம் யான்கேட்கவந்தேனென
சொல்லமுனிமன்னவனுஞ் சோபிதமாய்மகிழ்ந்து
நல்லமுகிர்த்தம் நாளிட்டானம்மானே
நாளிட்டுநாரதரும் நல்லமாகாளியுட
தாளிணேயைப்போற்றித் தானுரைத்தாரம்மானே
மாகாளியுந்தனுட மக்களேழுபேர்களுக்கும்
வாகானமன்னன் வாய்ந்தநிருபனுட
மக்களேழுபெண்களேயும் மாலேமணஞ்சூட்டுதற்கு
மிக்கநாளிட்டு மேவிவந்தேன்மெல்லியரே
என்றுமுனிசொல்ல ஏற்றமாகாளிசொல்வாள்
நன்றுநல்லமாமுனியெ நான்வளர்த்தகண்மணிகள்
தெய்வப்பிறவியல்லோ திசைவென்றசான்ருேர்கள்
பேசிவந்தபெண்ணுக்கு பிறவியென்னமாமுனியே
உய்த்துவந்தபெண்ணேழு உற்பவஞ்சொல்மாமுனியே
அப்போதுபெண்ணர் ஆதிப்பிறவியெல்லாம்
செப்புகிருமென்று சிவகாளிதனேத்தெண்டனிட்டு
கேளாய்நீயென்று கிருபையுடனேதுரைப்பான்

நாளானநாளையிலே நல்லதெய்வலோகமதில்
தெய்வேந்திரனர்க்குச் சொல்லேவல்செயிதிருந்த
நெய்நொடியகன்னி நேரிளைமாரெல்லோரும்
வேலையின்னதென்று விரிக்கக்கேள்மாகாளி
மாலையிலுங்காலையிலும் வாசவர்கோன்றனக்கும்
பூவெடுத்திட்டுப் பூசைபுனக்காரமிட்டு
கோவெடுத்தராசனுக்குக் குஞ்சமிடவாடிநிதம்
ஏவல்புரியுகின்ற ராசதெய்வக்கன்னியர்கள்
நாவுலகுமெய்க்க நடந்துவரும்நாளையிலே
பூவுலகுமன்னர்களைப் பூத்தானமாகவெண்ணி
பாவினியகன்னி பஞ்சமதுவேருகி
பூவெடுக்கக்கன்னி போகாமல்வாட்டமதாய்
ஆவடுங்கங்கொண்டவர்களொருப்போலே
காய்ச்சல்குளிரெனவே கவ்வையுற்றுதானிருக்க
மாய்ச்ல்தனையறிந்தான் மகவானப்போது
ஆனதால்வேதாவின் அண்டைஅவனணிகி
தீனம்வந்ததேதெனவே தேவியர்க்குவேதாவே
வேதாதெளிந்து விரித்துரைத்தாரப்போது
சூதானமான தோகையேழுபேரும்
பூலோகமன்னருக்குப் பிரியமுற்றுமையல்கொண்டு
காலோயுதென்றுக் கவ்வையுற்றதல்லாது
வேறில்லையென்று வேதாவிதுவுரைக்க
தேறியேவாசகர்கோன் தேவியேழுபேர்களையும்
அப்படியேபூவுலகில் அமையுமென்ருர்வேதாவை
இப்படியேதான்வந்து இவர்பிறந்தாரென்றுமுனி
சொல்லச்சிவகாமி சிரித்துமனமகிழ்ந்து
நல்லதிதுமாமுனியை நல்முகுர்த்தம்பார்த்துரைநீ
உடனேமாமுனியும் உகர்ந்தமுகிர்த்தமென்று
திடமேநிருபனுக்குச் செய்திசொல்லஆளுமிட்டு
நாளைமுகூர்த்தமென்று நால்திசையுந்தானறிய
கோளையில்லாமன்னர் குலதெய்வச்சான்றோர்க்கு
முகூர்த்தமென்றுசாத்தி மூவுலகுந்தானறிய
பக்குவமாய்நல்ல பந்தலிட்டாரம்மானை
வைரக்கால்நாட்டி வைரவளைகளிட்டு
துயரமுள்ளதங்கத் தூண்கள்மிகநாட்டி
முத்துநிறைத்து முதுபவளவன்னியிட்டு
கொத்துச்சரப்பணியைக் கோர்மலையாய்த்தூக்கி
மேர்க்கட்டிகட்டி மேடைபொன்ஞலேயிட்டு
கால்க்கட்டிபட்டுக் கனமாய்அலங்கரித்து
வாழைக்கரும்பு வகைவகையாய்நாட்டிமிக
நாளைமணமென்று நாட்டுக்குப்பாக்குவைத்து
வெடிபூவாணம் மிகுத்தகம்பச்சக்கரமும்
திடிமனுடன்மேளஞ் சேவித்தார்பந்தலுக்குள்
வாச்சியங்கள்இன்னதென்ன வகைசொல்லக்கூடாது

நாச்சியார்மாகாளி நாயகியுங்கொண்டாடி
பாலருக்கேற்ற பணியெல்லாந்தான்பூட்டி
சாலமுள்ளசிங்கத் தண்டிகையில்தானிருத்தி
பட்டணப்பிரவேசம் பகல்மூன்ருராமூன்று
இட்டமுடன்பூதம் எடுத்துமிகச்சுற்றிவர
மண்டபத்துள்வைத்து மாபூதஞ்சூழ்ந்துநிற்க
தெண்டனிட்டுமன்னர் தோசதிசூழ்ந்துநிற்க
பதினெட்டுவாத்தியமும் பட்டணமெங்குமுழங்க
ததிதோமெனவே தம்புருசாரங்கிகெம்ப
பந்தமதுபிடித்துப் பலபூதஞ்சூழ்நதுநிற்க
நந்தகோபால நாராணர்மகிழ்ந்து
மைந்தருக்கின்று மணமுண்டுயென்றுசொல்லி
வைந்தபலதேவர்களை வாருமென்றுஅழைத்து
பாலர்முகூர்த்தம் பார்க்கப்போமென்றுசொல்லி
சீலமுடனனுப்பிச் ஸ்ரீரங்கமேயிருந்தார்
தேவர்தேவர்புகழ திசைவென்றசான்ருேர்க்கு
மூவர்களும்வந்து உதவிசெய்தாரம்மானை
நல்லமுகூர்த்தம் நாள்ப்பார்த்துச்சான்ருேர்கள்
எல்லாச்சடங்கும் இயற்றுவித்தாரம்மானை
சடங்குமுகித்துச் சான்ருேரையொப்பமிட்டு
தடங்காண்டமன்னசைத் தண்டிகையின்மீதேற்றி
அரசர்மிகச்சூழ அணியீட்டியாள்க்கள்வர
விரைவாகக்காளி வித்தகலையேறிவர
அரம்பையர்களாடிவர அயிராபதன்வரவே
வரம்பெரியதேவர் மலர்மாரிதூவிடவே
ஆலாத்தியேந்தி அணியணியாய்யதான்வரவே
மூலத்திகன்னி மோகினியாள்தன்னுடனே
பூதமதாடிப் பிடாரியதுசூழ்ந்துவர
நாதம்ரெட்டையூதி நடந்தார்மாப்பிள்ளைகொண்டு
விருதில்பெரிய வீரதெய்வச்சான்ருேரில்
நிருபன்மகளை நியமித்துமாலையிட
வீரியமாய்நல்ல விவாகமிடவாருரென்று
பூரியலில்ச்சொல்லிப் பேர்கள்சிலரூத
இப்படியேவாத்தியங்கள் இசைந்திசைந்தேயூதி
அப்படியேரிருப அரசன்மகள்தனையும்
மாலைமணமிட்டு வாழவந்தாரம்மானை
வாலையதுவான மாகாளிவாழுகின்ற
மண்டபத்துள்வந்து மகிழ்ந்திருந்தாரம்மானை
தண்டமிழுங்கன்னி சான்ருேர்களானேர்க்கு
கோட்டையுமிட்டுக் குமாரரையும்பெண்ணதையும்
தாட்டிமையாய்ச்சான்ருேருக்குந் தாந்தரமேமாளிகையும்
வைத்துக்கொடுத்தாள் வாழ்ந்தார்சான்ருேர்கள்
மெய்துப்புவிகொண்டாட மெல்லியர்தங்களுங்கு

## பாலருக்குப் பாலர் பிறப்பு

வயிற்றில்கெர்பமாகி மதலைபெற்ருரம்மானை
நெய்தெளியக்கன்னி நேரிளைமாரெல்லோரும்
இப்படியேகன்னி எல்லோரும்நன்ருக
அப்படியேமதலைபெற்று அகமகிழ்ந்தாரம்மானை
பாலருக்குப்பாலர் பதிவாய்மிகவளர
சீலமுள்ளவித்தை சிறக்கவரவருத்தி
எமத்திறைவராக எங்கும்புகழ்ந்திடவே
சமர்த்தரெனவே தலையெடுக்தாரம்மானை
முத்துவியாபாரம் முதல்யாயாரமுதல்
பத்தரைமாத்துப் பைம்பொன்யாபாரமுதல்
மாணிக்கயாபாரம் வைரப்பொன்யாபாரம்
ஆணிப்பொன்யாபாரம் அழகுகச்சையாபாரம்
கப்பல்யாபாரங் கறிமிளகுயாபாரம்
ஒப்பமுள்ளயாபாரம் ஒக்கமிகச்செய்தனராம்
தாலமதேறித் தைரியப்பால்வாங்கி
மேலுள்ளசான்ருேர் மிகுதியர்யாண்டிருந்தார்
நெய்த்தொழிலும் வில்த்தொழிலும்நெறடுவிதத்தொழிலும்
மெயத்தொழில்கள்கற்று மேலோரெனவளர்ந்தார்
சோழனதையறிந்துத் தெய்வச்சான்ருேர்களுக்கு
வேழம்பலகொடுத்து மிகுகரப்பமுங்கொடுத்து
நல்லமன்னரென்று நாடிமகிழ்ந்திருந்தார்
செல்லமன்னரான தெய்வச்சான்ருேர்களுக்கு
அடிக்கல்லெழுதி ஆயிரம்பொன்கொடுத்து
முடிக்குமுடிசோழன் முத்துமுடியுங்கொடுத்து
வீரவிருதுகளும் வேழம்பரிகொடுத்து
பாரமுள்ளசீமைதனில் பங்குமிகக்கொடுத்து
ஆழமுள்ளசான்ருேர் அரசாண்டாரம்மானை
சோழனுடனெதிர்த்துச் சூதுசெய்தமன்னரையும்
வேழமுடிமன்னர் வெற்றிகொண்டிருந்தார்
வெட்டாதபடையை வெட்டிவிருதுபெற்று
அட்டாளதேசம் அடக்கிஅரசாண்டிருந்தார்
இப்படியேசான்ருேர் இராச்சியத்தையாண்டிருக்க
அப்படியேசீமை அவர்க்குள்ளேயாக்கிவைத்து
தர்மமுடன்பூமி தாளுண்டிருக்கையிலே
வர்மம்வந்தஞாயம் வகுக்கக்கேளொண்ணுதலே
ஸ்ரீரங்கமானதிலே ஸ்ரீரங்கநாதருந்தான்
பாரெங்குமெய்க்க பள்ளிகொண்டிருக்கையிலே
நாட்டுக்குக்கேடு நாள்ப்பிடித்தசெய்திதன்னை
கூட்டுக்கிளியே கூர்மையுடனேகேளு
முன்னேகுருேணி முடிந்ததுண்டமாறதிலே
அன்னேகேளஞ்சு துண்டவனிதனில்பிறந்து
ஆதிதனைநினைத்து ஆளாமல்அவ்வுயிர்கள்

நீதிகெட்டமோச நீசனைப்போல்ருனுகி
முப்பிறவியோடாறு முதல்வோனைப்போற்ருமல்
அப்பிறவியாறு அழித்ததின்மேலாயினையே
குருமுனிவனுன கூர்மையுள்ளமாமுனிவன்
அருமுனிவனுன ஆதிமுனியைநோக்கி
சிவனெனவேபோற்றிச் சொல்லுவான்மாமுனிவன்
தவமேதவப்பொருளே தாண்டவசங்காரவனே

விருத்தம்

முன்னேபிறந்தகுரோணிதனை மூவிரண்டாகவுடல்பிளந்து
தன்னேஉயிரோடஞ்சுசெய்து சாமிதனைநினையாத்ததினுல்
வன்னத்திருமால்குலையடக்கி வந்தார்சடலமிழந்துகுண்டம்
இன்னப்பிறப்பொன்றுண்டல்லவோ இறந்தகுரோணிய
வன்றனக்கே

நடை

வாசமுள்ளநேசர் மற்ருேப்பிடில்லாதவனே
ஈசுனேநானுமொன்று இயம்புகிறேன்கேளுமையா
குரோணியவனுடலைக் கூர்மையுடனேபிளந்து
சுரோணிதமாயன் தொல்புவியில்விட்டெறிய
அஞ்சுதரமுயிர் அவனிதனிலேபிறந்து
பிஞ்சுமதிசூடும் பிஞ்ஞகனைப்போற்ருமல்
மாயனையும்மெண்ணுமல் மதமாயிருந்ததினுல்
ஆயனந்தச்சூரரையும் அழித்தார்காணீசுரரே
முச்சூரனேடாறுயுக முமுயிரழித்து
அச்சூரகுடும்பம் அறுத்தந்தமாயவரும்
கொண்டிருந்தபொய்ச்சடலக் கூட்டைமிகக்களைந்து
ஆண்டிருந்தகுண்டம் அவரடைந்தாரம்மானை
முச்சூரன்துண்டம் ஒன்றுண்டுஈசுரரே
அச்சூரன்பிறவி ஆறுென்றீர்ரையாவே
ஆருயுகத்தில் அமையுமென்ருர்மாமுனியும்
வீருகஈசுரரை விண்ணப்பஞ்செய்துநின்ருன்
நல்லதுதானென்று நாட்டமுற்றுஈசுரரும்
வல்லவனேமாமுனியே மாயனவரவேண்டாமோ
என்றுநல்லஈசர் இயம்பமுனிசொல்லுவான்
நன்றுநன்றுமாயவர்க்கு நாலுரண்டோராம்பிறவி
பிறக்கத்தவசு புரியப்போய்க்கீழுலகில்
உறக்கமெஞ்ஞான ஒளியிருக்கிருரெனவே
தேவமுனிசொல்ல சிவனுரகமகிழ்ந்து
கோவுகத்திலுள்ள குருவசிஸ்டர்தங்களையும்
தெய்வலோகத்திலுள்ள தேவரையுந்தான்வருத்தி
வைந்தலோகத்திலுள்ள வாய்த்ததற்மீதங்களையும்
கிணநாதர்கிம்புருடர் கிங்கிலியரையும்வருத்தி
இணையாகமேலோகத் தெல்லோரையும்வருத்தி
சத்திமறையுஞ் சாஸ்த்திரத்தையும்வருத்தி

அத்திமுகவனையும் ஆனவகும்பனையும்
சங்கமறையைவருத்தி தான்கேள்ப்பாரீசுரரும்
இங்குண்டோமாலும் மெங்கிருப்பதுண்டெனவே
எல்லோருங்கூடி இதமித்துச்சொல்லுமென்ருர்
அல்லோருங்கேள்க்க அரன்சொன்ஞரம்மானை
வேழமொத்ததேவரெல்லாம் மேகவண்ணரிங்கேயில்லை
கீழுலகில்மாண்டு கிடக்கிருரென்றுசொல்லி
ஒன்பதாம்பிறவி ஒடுங்கியவர்பீறக்க
இன்பமறக்கீழுலகில் இறந்துகிடக்கிருரெனவே
எல்லோருஞ்சொல்ல ஈசுரரும்நல்லதென்று
அல்லோருங்கேள்க்க அவரேதுபின்சொல்வார்
முன்னேபிறந்த முண்டசுரன்தன்னுயிரை
தன்னேடாறுபிறவி தான்செய்தோமசுரரென
ஆறுபிறவியிலும் அசுரரெனவேபிறந்து
வீறுடனேநம்மை விரும்பவும்நாம்கண்டிலமே
இப்போதவன்றனக்கே ஏழாம்பிறவியிது
அப்போதுநம்மை அவனிணையாதிருந்தால்
இல்லைமேல்ப்பிறவி இறப்புமுடிவாகுமல்லோ
நல்லபிறவியதாய் நம்மைத்துதிக்கப்புத்தியதும்
அழகுசவுந்தரிய அலங்காரமெய்யறிவும்
குளவுமிகப்புத்தி கூர்மையலக்காரமுடன்
மேலுமாலாறு முடித்தயுகங்கழித்து
நாலுமுளமென்றுதலை நல்லோரசுரர்களை
கொன்றுதானவ்வசுரர் கூறுதற்குச்சொல்லுமுண்டோ
இன்னமிந்தமாயன் எடுத்தவுருப்போலே
படைத்துநாம்வைத்தால் பகருமொழிவேறில்லையே
நடத்துவதேதெனவே நவிலுமென்ருர்தேவர்களை
அப்போதுதேவர்களும் ஆனமறைவேதியரும்
எப்போதுமிறவாதிருக்கும் முனிவர்களும்
நல்லதுதானென்று நாடியகமகிழ்ந்து
வல்லபிறவி வகுக்கத்துணிந்தனராம்
பிறவிவகுக்கவென்று பெரியோனகமகிழ்ந்து
திறவிமுதலோன் தெளிந்துநிற்கும்வேளையிலே
துண்டமதுபிண்டமதைத் துளைத்துக்கால்மேல்நீட்டி
மண்டைகீழ்க்கால்மேலாய் வந்துதித்தானம்மானை
எல்லோருங்கண்டு இதுகனமாயமெனவே
அல்லோரும்வந்து ஆதியோடேயுரைக்க
உடனேசிவமும் உள்ளமிகக்கழித்து
இடமேதான்பேர்ந்து எழுந்தருளிஈசுரரும்
அதிசயத்தைப்பார்ப்போமென்று அவரேகும்வேளையிலே
எதிராகநின்றுநந்தி ஏதுரைப்பாரம்மானை
மூவருந்தேவர்களும் மூர்த்திகளுங்காணுத
தேவரீரெழுந்தருளித் திசைநோக்கிவந்ததென்ன

## நந்தி வரவு

அப்போதுநந்தியுடன் ஆதிமிகவுரைப்பார்
இப்போதோர்அற்புதமாய் இருக்குதென்றாரெல்லோரும்
வானோக்கிக்காலும் மலர்நோக்கிச்சிரசும்
தானமதுமாறித் தலைகீழாய்நிற்பதுவும்
பார்த்துவாலாமெனவே பையநடகொண்டேனென்றார்
சாற்றுமொழிகேட்டுநந்தி தானுரைப்பானம்மானை
அங்கல்லத்தானம் அழிந்ததுகாணீசுரரே
இங்குநான்கண்டேன் எழுந்தருளிவந்ததினால்
தலந்தானிழகித் தான்வந்ததாலேதான்
குலந்தானழியுங் குசல்பிறக்கும்ராச்சியத்தில்
வரம்பழியுமார்ரி மனுநீதங்குன்றுமையா
பரம்பெரியவேதம் பழுதுவருங்கண்டீரே
என்றந்தமாமுனிவர் ஈசுரரையுங்கூட்டி
குன்றுபொன்னை கிரிமேவுத்தானிருந்தார்
நடந்தபுதுமையென்ன நாம்வருத்திப்பார்க்கவென்று
திடந்தெளிந்தமாமுனிவன் செப்பவேஈசுரரும்
சாத்திரவேதச் சதுர்மறையைத்தான்வருத்தி
சித்திரபுத்திரரைச் சீக்கிரத்திலேயழைத்து
வந்தபுதுமை வகையென்னநம்கணக்கா
இந்தககணக்கை எடுத்துரைநீஎன்றனராம்
அப்போதுஈசுரரை அன்போடுறவணங்கி
செப்போடுவொத்த சித்திரருஞ்செப்பலுற்றார்
சாஸ்த்திரத்திலுற்ற தண்மைமிகக்கேளும்
சீத்துவமாகச் சித்திரருஞ்செப்பலுற்றார்
முன்பிறந்தகுரோணி உடலாறுதுண்டதிலே
தன்பிறவியோடாறு தான்புறந்தான்சூத்திரமாய்
மண்தானுடம்பு வந்துதித்தோன்றனக்கு
விண்தானுடம்பு விலாசக்குருவோடு
சலந்தானுடம்புக்குறுதி தைரியங்கள்
வலந்தானிழகி வன்னியோடுங்கூடி
கலந்துதிரண்ட கட்டைமுண்டமானதுக்கு
பிலந்தூக்குவாயு பிராணன்காணம்மானை
முப்பனியோடாறு முயிரழித்தமாயனுக்கு
இப்போதுவந்தஇவன்றான்கொடிதுவையா
மாயனாலுமுழமாய் மனுச்சிங்முகமாய்
மாயமாய்நம்மைவதைத்தானேயென்றுசொல்லி
அன்றாயனெடுத்த அளவாயுருவெடுத்து
சென்றவனுடைய திறத்தைநாம்பார்ப்போமென்று
வேகத்தால்துண்டம் வெடித்ததுகாணிப்புதுமை
எகந்தானாளும் ஈசனேயென்றுசொல்லி
இப்படியேசித்திரரும் எடுத்துரைக்கவேஈசர்
அப்படியேவந்தவனுக் காயுசவன்பிலமும்

கரணமுதல்நடப்பும் கட்டாகநீதேர்ந்து
மரணமுதல்நடப்பும் வகுத்துரைநீநம்கணக்கா
அப்போதுசித்திரரும் ஆதியருள்நெஞ்சில்வைத்து
பொற்பாதமுண்டெனவே புகல்வாயெங்கணக்கா
அப்பனும்அம்மை அடக்கிமிகப்பெருமல்
கொப்புளித்துத்தாயைக் குருத்துவந்தநீசனுக்கு
தத்துவங்தொண்ணுத்தாறுந் தடிக்குணந்தான்
புத்திபுலனைந்தும் பொய்பூண்டபூதமுமாய்
சத்துருக்கள்கண்கால் தலையும்வெறுநீசம்
உற்றுணர்ந்துபாராத உடலுமவன்காலும்
மாயக்காயமதுக்கு வருசமொருநூறிருப்பு
தோயநாதத்துளிர் துகைபத்துநாறுயிரந்தான்
வாழ்வுவந்துசேர்க்கை வருசம்பதினலு
தாள்வுதசநரம்பு சனித்தமுப்பத்தோராண்டில்
ஆர்க்களலும்பு அடைக்குமநரம்புடனே
மூர்க்கத்தசையும் முதினுரப்புனலுடம்பும்
மண்தண்ணீரோடே வகைக்காகாப்பண்டமது
விண்பரந்தவீடு வெளிவாயிலோட்டலுமாய்
ஓட்டமடத்துக்கு ஒன்பதுகொந்துடனே
வீட்டைப்பிர்த்தால் விறகுக்குமாகாது
விசையிட்டுவாட்டும் வித்தாரப்பாவையிலும்
பசையில்லாப்பாவையிது பச்சியொன்றுடிவரும்
பச்சிக்குக்காயம் பகைத்துக்கிட்டமுட்டுகையில்
குச்சியைக்கீழ்ப்போட்டுக் குதித்தோடுமக்குருவி
இக்குருவிக்கூடு இவன்மணியம்ஈசுரரே
அக்குருவியேகும் அள்வளவுமின்நீசன்
பண்ணுகிறநீசம் பரமனுக்குமேராது
கண்ணிமைக்குமுன்னே கனவுருட்டுச்செய்திடுவான்
இபபடியேயுள்ள இயல்வும்அவன்னினைவும்
அப்படியேநீசம் அடைந்தமனவீடு
உள்ளவனைவந்து உருவெடுத்தானுகையினல்
எள்ளளவுநன்றி இருக்காதுஈசுரரே
என்றுகணக்கர் எடுத்துரைக்கஈசுரரும்
அன்றவன்றனக்கு ஆளனுப்பித்தான்வருத்தி
ஆரைவிடுவோமென்று ஆராய்ந்துஈசுரரும்
சூரமுள்ளகாலன் தூதனேமன்றனையும்
துட்டமுள்ளபூதக் கிங்கிலியார்துக்கையையும்
மொட்டைக்குறளிகளையும் முக்கோடிக்கூளியையும்
விட்டழைத்துவாருமென்று விடைகொடுத்தார்ஈசுரரும்
துட்டக்குணத்தோர் துடியாய்மிகநடந்து
கொட்டங்கீழாக குருத்துநின்றபாதகனை
ஈசரழைத்தார் எழுந்திருந்துவாவெனவே
நீசன்றனையழைக்க நெழிந்தேயுருண்டவனும்
பிரண்டுருளப்பிண்டம் பிசைபிசைந்துதான்மலங்க

## நீசன் பிறப்பு

மருண்டவிழியால் மாகமதுகலங்கி
மண்ணைவிட்டுயர மண்டைவரமாட்டாமல்
விண்ணெல்லாமெத்த வெம்மருண்டுதம்மானை
கைலேகிடுகிடெங்கும் கண்டபேர்தான்பதற
அகிலங்கிடுகிடெங்கும் அழைக்கவந்தோர்தான்பதற
அரனரிடத்தில் அவர்கள்சிலரோடி
சிரமானதுவெயில் செல்லவரமாட்டாமல்
பூமிகலங்கிப் பொறுக்கமிகக்கூடாமல்
சாமியந்தநீசன் தான்வரவேமாச்சலுண்டு
என்றந்ததூதர் இப்படியேசொல்லிடவே
அன்றுசிவனர் அதற்கென்னசெய்வோமென்று
தம்மாலேயாகுந் தந்துதெழிந்தெடுத்து
கம்மாளன்வேலேயினல் கவ்வையொன்றுவேண்டிவந்து
குத்திப்புறத்தே கோதிவையுமென்றுசொல்லி
எத்திசையும் நந்தீசுரனர்கைகொடுத்து
வேண்டியந்தநந்தி விரைவாயவர்நடந்து
ஊண்டிநின்றநீசனையும் ஒருகௌவையால்க்கேரதி
வெளியிலேவைக்க வெப்பெடுத்தபாதாளம்
பளீரெனவேவந்து பொருந்தியதேயம்மானை
பூமிதனில்வெடித்த பொல்லாத்தநீசனையும்
சுவாமிமுன்பானதிலே சுறண்டியதனைவிழுத்து
கொண்டுவந்துவிட்டார் குருநாதர்முன்பதிலே
கண்டந்தஈசர் கனமாய்விசேசமுத்து
உந்தனக்குவேணுமென்று உகந்ததெல்லாமிப்போது
எந்தனிடங்கேளென்று ஈசுரனர்தானுரைக்க
உடனேயவனும் உள்ளமிகக்களித்து
விடமேதான்பூண்டு விதிக்கந்தைதானுடுத்து
மேலெல்லாங்குப்பை மிகப்பூசியானையுட
தோலிலிருப்பவனே சொன்னதெல்லாந்தாறதொதான்
என்றுகளிப்பாய் ஈசுரரையன்னீசன்
அன்றுமொழிய அமரரதையறிந்து
பொல்லாதநீசா பொருளறியமாட்டாமல்
எல்லோரைப்போலே ஏசாதேஈசுரரை
லோகம்படைத்தவர்காண் உறுபொருளாய்நிற்பவர்காண்
ஏகம்நிறைந்தவர்காண் இறவாதிருப்பவர்காண்
பச்சிப்பறவை பலஜீவசெந்துகள்க்கும்
நிச்சயமாய்ப்பொசிப்பு நிதமுமழிப்பவர்காண்
மாயவனும்நான்முகனும் மறையுமிகக்காணமல்
தேயவாறுங்காணத் திட்டிக்கவல்லவர்காண்
இத்தனையும்நீசனுக்கு இயம்பஅமரர்களும்
புத்திக்குநட்பும் போதாமல்பின்சொல்லுவான்
ஆனல்தான்தேவர்களே அப்படிநீரொப்பினீரே

தானயிருந்து சருவதுமுண்டாக்கிவைத்த
ஆனலெனதுடைய அளவில்ளவாக
மானரொருகுழலை வகுக்கச்சொல்பார்ப்போங்காண்
என்றந்தநீசன் இழிவாகச்சொல்லிடவே
அன்றந்தஈசர் அவரறிந்தேதுரைப்பார்
நல்லதுநீகேட்டதுதர நாம்படைத்துதாரேமென்று
வல்லபரமேசுரனர் வகையேதெனப்பார்த்து
உந்தனுக்குநேரே வொத்தபலம்போலே
அந்தமுடன்பிறந்தால் ஆகுமோவென்றுரைத்தார்
அப்போதுமாநீசன் அரனர்தனைநோக்கி
ஒப்பமாகாதொன்பலத்தில் ஒன்றிலரைப்பலமாய்
அழகிலதிகமுமாய் ஆங்காரம்பாதியுமாய்
குழகியவாயழகாய் குரும்பத்தனத்தழகாய்
மேனியழகாய் விழியழகாய்வீச்சழகாய்
யோனியழகாய் யொடுங்குமிடையழகாய்
கரமழகாய்க்காலழகாய்க் கண்ணழகாய்ப்பல்லழகாய்
சரக்கூடுமுன்னழகாய் தலைக்கண்டம்பின்னழகாய்
துடையழகாய்விரலழகாய்ச் சொல்லழகாய்ப்பல்லழகாய்
நடையழகாய்வீச்சழகாய் நல்லகுழலழகாய்
இடையழகாய்மேனி இறுக்கத்துடன்யழகாய்
உடையழகாய்த்தேகம் ஓங்காரத்தொங்கலுமாய்
அழகுக்குயேற்ற அத்தர்மணத்தோடு
களபகஸ்தூரி கம்மென்றவாசனைப்போல்
மூவர்தேவர்களையும் மோகமயமயக்க
சீவனதுகொடுத்து திட்டித்துத்தாருமென்ருன்
அப்போதுஈசுரனர் அகமகிழ்ந்துகொண்டாடி
இப்பொழுதுகேட்டதற்கு என்னசெய்வோமென்றுசொல்லி
அருகில்சிவனர் ரகமதிலேவீத்திருக்கும்
திருவுக்குநன்ருய்த் தெரிவித்தாரம்மானை
கேட்டமாநீசனுக்குக் கீர்த்தியென்னமாமயிலே
தேட்டமுடனிப்போ செப்பென்றெனவுரைத்தார்
அப்போதுசத்தி ஆதியடிவணங்கி
ஒப்பொன்றில்லாத உடையபெருமாளே
பாதியாய்நீசனையும் பகிர்ந்தேயவனுடம்பில்
விதியாமிடது விலாவிலொருயெலும்பை

## நீசனுக்குப் பெண்பிறப்பு

தட்டிக்கழற்றிச் சச்சுருவந்தானக்கி
திட்டித்துநீசனுக்குச் சிணங்கொடுவும்ஈசுரரே
என்றுவுமையாளிப்படியே சொன்னவுடன்
அன்றந்தநீசன் அரையிலோராக்கையிட்டு
இறுக்கக்கீள்கட்டி எழுந்திருநீயென்றவுடன்
பொதுக்கெனவேயிடது புறத்திலொருயெலும்பை
தெறிக்கவதையுஞ் சிவனர்மிகப்பார்த்து

வெறிகொண்டநீசன் விலர்வில்வெடித்ததினல்
நீசன்பலத்தில் நேர்பாதியாகுமென்று
வாசமடவாய்வரவே மதன்றனைநினைத்தார்
மதனையானினைக்க மானீசன்றன்னெலும்பை
வதனமடமாதாய் வந்ததுவேயம்மானை
நீசன்நினைத்த நினைவுபோலம்மடவை
பாசகலைதூவ பகட்டிவிளித்தாள்மருட்டி
மும்மடங்காய்மோக முருகுழல்சரிய
கம்மடங்கத்தோசங் கரைபுரளத்தான்பிறந்தாள்
கண்டானேமானீசன் கண்கொள்ளாக்காட்சியுடன்
அண்டாமைச்சென்று ஆவிமுகத்தோடணைத்து
நன்ருகதர்மம் நாள்தோறுஞ்செய்துகுண்டம்
கண்டாரைப்போலே கட்டினன்மங்கையரை
மங்கையரைநீசன் வாயாரமுத்தமிட்டு
கொங்கைதனைக்கண்டு கொண்டிாடிஆசையுற்று
எடுப்பானவளை இடுப்பிலேவைத்திடுவான்
படுப்பமோவென்று பாய்விரிக்கநின்றிடுவான்
பெண்ணேடுறவாடிப் பேதலித்துஅன்னீசன்
மண்ணேடுமண்ணும் மருவுவதுபோல்மருவி
ஆசையவள்பேரில் அங்கமெல்லாந்தானுருகி
நீசனவள்பேரில் நினைவாகநின்றதல்லால்
படைத்தருளிவைத்த பரமனையுமெண்ணமல்
தடதடெனப்பெண்ணைத் தானெடுத்துமுத்திடுவான்
அப்போதுதேவர் அமரர்களும்பார்த்தவனை
இப்போதுன்விழி ஏக்கும்படியாக
பெண்படைத்துத்தந்த பெரியோனைத்தான்வணங்கி
மண்பரந்தமன்ன வரங்கேழுயென்றனராம்
என்றபொழுது இயல்வுகெட்டமானீசன்
அன்றந்தஈசர் அடிவணங்கியேதுசொல்வான்
உந்தனக்கேற்ற இளமயிலையுண்டாக்கி
தந்தருளுங்கோவே சருவதயாபரனே
இனியெனக்கேற்ற இயல்வரங்களானதெல்லாம்
கனியிதழும்வாயானே கையில்த்தரவேணுமென்ருன்
அப்படியேஈசர் அவனைமுகம்நோக்கி
இப்படியேயுந்தனக்கு ஏதுவரம்வேணுமென்ருர்
என்றபொழுது இயல்கெட்டமானீசன்
தெண்டனிட்டஈசர் திருவடியைத்தான்பூண்டு
கேட்பான்வரங்கள் கீழும்மேலும்நடுங்க
வீழ்ப்பாரங்கெட்ட விசைகெட்டமானீசன்
மாயவனர்தன்னுடைய வாய்த்தமுடிதனையும்
தூயவனர்சக்கரமுஞ் சூதமுடன்தாருமென்ருன்
அரனுடையவெண்ணீர் அந்தணரின்தன்பிறப்பும்
வரமுடையசத்தி வலக்கூறுந்தாருமென்ருன்
சிவமூலஞ்சத்தி திருமூலமானதுவும்

தவமூலம்வேதாவின் தன்னுடையமூலமதும்
மாலுடையமூலம் வாய்த்தலச்சுமிமூலம்
மேலுடையதெய்வ விதமூலமுந்தாரும்
காலனின்மூலம் காமாச்சிதன்மூலம்
வாலசரசோதி மாகாளிதன்மூலம்
கிணபதியுன்மூலங் கிங்கிலியர்மூலம்
துணைபதிபனுன சுப்பிரமண்ணியர்மூலமதும்
ஆயிரத்தெட்டு அண்டம்நிறைமூலமெல்லாம்
வாயிதக்கண்ணே வரமாகத்தாருமென்றான்
அல்லாமல்பின்னும் அன்னீசன்கேட்டவரம்
பொல்லாதவித்தை புகலக்கேளொண்ணுதலே
கூடுவிட்டுக்கூடு குதிக்கக்கருவதுவும்
நாடுபாடாக்கி நகரிகொள்ளையாக்கிடவும்
துயில்வோர்போலுலகம் துஞ்சவைத்துக்கொள்ளைகொண்டு
அயதிமோகினிக்கருவும் அரனேநீர்தாருமென்றான்
ஆவடக்குமோகினியும் அழைக்கவெகுமோகினியும்
நாவடக்குமோகினியும் நருளழைக்கும்மோகினியும்
ஆண்பெண்பிரிக்க அதிகவெகுமாறணமும்
கோண்பிரித்துக்கெட்டி குடியலைக்குமாறணமும்
கொல்லவுச்சாடணமும் குடிகெடுக்கமாறணமும்
தொல்லைவருத்தி சோலியுட்சாடனமும்
லோகமதுவாளாமல் உள்ளமுங்கித்தாழ்ந்திடவும்
ஏகத்தம்பனமும் இதின்கருவுந்தாரும்
கொட்டிக்கலைக்கக் கூறுடையசல்லியமும்
ஒட்டியமுந்தாரும் உள்ளகருவுந்தாரும்
பூசைமுறையும் புவனசக்கரமுடனே
தீச்சைவிதிமுறையும் சிவவிதியுந்தாருமையா
சலமேல்க்கனல்மேல் தானிருக்குமோடிகளும்
கலைமேல்குடைபிடிக்க கருவதுவுந்தாரும்
மிருகமதைவருத்தி வேலையதுகொண்டிடவும்
இருக்கமுள்ளவாதை எனக்குவிட்டுத்தாருமையா
அட்டகருமமெட்டு அட்க்கிவரந்தாருமையா
மொட்டைக்குறள்களையும் முன்னேவலாய்தாரும்
மந்திரசாலம் மாய்மாலத்தந்திரமும்
இந்திரசாலம் எனக்கருளுமென்றுரைத்தான்
நோவுகிரகம் நுழையாமலெந்தனக்கு
தாவுருகெவனக்கதுளிகை தாருமென்றார்மானீசன்
வந்தபிணிதீர்க்க வைத்தியவாகடமும்
தந்துதந்தாகப்பல சாஸ்த்திரமுந்தாரும்
மூவருடவடிவும் உதித்துவந்தமுப்பிறப்பும்
தேவருடபிறப்பும் தெளிந்தெடுத்துத்தாருமென்றான்
பறக்குங்குளிகை பரனைஅழைக்குங்குளிகை
மறைக்குங்குளிகை மாலைவருத்துங்குளிகை
சாலக்குளிகை சத்திவருத்துங்குளிகை

வாலைக்குளிகை மறையைவருத்துங்குளிகை
காளிதனைவருத்திக் கைக்குள்விடுங்குளிகை
கூளிகணத்தைவருத்திக் கொண்டுவரும்நற்குளிகை
தேவரையும்வானவரைச் சென்றழைக்குங்குளிகை
மூவரையும்வருத்தி ஓடிவரும்நற்குளிகை
பழிசெய்தால்வெல்ல பாரத்தொழில்கள்முதல்
சுழிவரைகள்தானறிய சூதானமாய்த்தாரும்
மருட்டுவிதமும் மாஞாலக்குண்டணியும்
உருட்டுங்கொடிய உரம்பேசியமதமும்
வாள்வெடிகளாயுதங்கள் வாய்தடுக்கத்தந்திரமும்
வேழவருத்திவேலைகொள்ள விசையடக்குத்தந்திரமும்
துட்டமிருகம் தூறுவிசங்கொண்டதெல்லாம்
கெட்டுக்குள்கெட்டி கீழ்ப்படியத்தந்திரமும்
கட்டுச்சுருக்குங் கடியபலவித்தைகளும்
நட்டுமுட்டுள்ள நவனிதியவஸ்துக்களும்
தந்திந்தப்பெண்ணுடனே சார்ந்துவிளையாடிருந்து
விந்துசனங்கள் மிகுவாகத்தானுதித்து
கிளையோடேவாழ்வு கெறுவிதமாயாண்டு
வழையானமாதை மறவாமலெப்போதும்
புத்திக்கருத்தும் பெண்பேரிலெந்தனுக்கு
சற்றும்நிகழாமல் தாரும்வரமென்றுரைத்தான்
அப்படியேயுள்ளவரம் அன்னீசனுக்கருள
எப்படித்தானென்று எண்ணினாரீசுரரும்
எண்ணியேஈசர் ஏந்திழையாள்சத்தியுடன்
புண்ணியநாதன் புகலுற்றார் அம்மானை
முப்பத்திரண்டறமும் முகித்திருந்தவொண்ணுதலே
செப்புத்தனத்தழகும் செவ்வேகருங்குயிலே
வின்னோதநீசன் விபரிதமாய்க்கேட்டதற்கு
இன்னவிதமென்று இயம்புநீபெண்மயிலே
அப்போதுசத்தி ஆதியடிவணங்கி

## அகத்தீஸர் பிறப்பு

நற்போதும்மறவா நல்லகன்னியேதுரைப்பாள்
சாஸ்த்திரமும்வித்தைகளும் தந்திரமாய்க்கேட்டதினால்
சூத்திரச்சித்தனென்று சுறுக்காயுண்டாக்குமென்றாள்
உடனேதானீசர் உள்ளங்களிகூர்ந்து
திடமாய்தானீசர் சிந்தைதனிலுத்தரித்து
அகத்தீசனென்று ஆதிமனத்துள்ளிருந்து
செகத்தோர்கள்காணச் சித்தாதிதானாகி
சாத்திரமும்வித்தை சமூலக்கருவுடனே
குத்திரச்சித்தாதி தோன்றினன்காணம்மானை
எல்லோருங்கண்டு இவராகுமென்றுசொல்லி
அல்லோரும்மெச்சி அகமகிழ்ந்துகொண்டாட
நல்லதென்றுஈசர் நன்முனியைத்தானோக்கி

வல்லகவியோடு வந்துதித்தசாஸ்திரியே
என்னென்னசாஸ்த்திரங்கள் ஏதுக்கானாலும்
இன்னுநிற்கும்நீசனுக்கு ஈந்துகொடுவுமென்றார்
அப்போதகத்தீசர் ஆதிமறைமுதலாய்
மைப்போடும்வித்தை மாஞாலவச்சரமும்
கொடுத்தோமெனவே கூறினார்மாமுனியும்
கடுத்தமுள்ளநீசன் கையதிலேதான்வேண்டி
நிக்கவெபின்னும் நிகழ்த்துவான்மாமுனியும்
அக்கறுகுசூடும் ஆதிமுதலந்தம்வரை
வசமாகும்வித்தை மரணம்வராவித்தைகளும்
நிசமாக்கும்வித்தையெல்லாம் நீசனுக்கேகொடுத்தோம்
கொல்லவேமெத்தக் கோபத்தால்நீசனையும்
வெல்லவகையில்லையல்லோ விடையேறும்ஈசுரரே
இன்னீசன்லோகமதில் இருந்தாளும்நாளையிலே
அன்னீதமல்லால் அறம்மறியமாட்டானே
செய்வதெல்லாம்பாவச் சிந்தனையேயல்லாது
மெய்வரம்புசற்றும் மிகவறியமாட்டானே
அல்லாமல்ப்பின்னும் அச்சுதனார்சக்கறமும்
பொல்லாதான்கொண்டு போகிறான்மால்கிரீடமும்
இவ்வரிசைரண்டும் இவனிடத்திலேயிருந்தால்
எவ்வொருதரால்வதைக்க ஏலாதுநீசனையும்
என்றந்தஅகத்தீசர் இப்படியேகூற
அன்றுஸ்ரீரங்கர் ஆண்டிவுருத்தானாகி
தலைவிரித்துக்கந்தை சற்றேகலைபூண்டு
சிலையில்லாவெங்கையால் சென்றாரேநீசனிடம்
நீசனிடத்தில் நெடுமால்தான்முன்னேகி
வாசமுடன்வார்த்தை வழுத்தினாரம்மானை
ஈசனிடத்தில் இறஞ்சிவரம்பெற்றதிலே
தேசயிரப்பனுக்குச் சிறுகாஈயென்றுரைத்தார்
தாராதேபோனால்ச் சாபமிடுவேனுனக்கு
பாராய்நீயென்று பகட்டினாரெம்பெருமாள்
அப்போதுநீசன் ஆண்டிதனைப்பார்த்து
இப்போதுபோடா இரப்பனோடேதுசண்டை
மாயன்வரவேணும் வலுப்பார்த்துவிட்டிடுவேன்
பேயனுடனெனக்குப் பேச்சென்னநீபோடா
என்றந்தநீசன் இவ்வழமைகூறிடவே
அன்றுபரதேசி அவனோடேங்கேதுரைப்பார்
பிச்சைக்காரன்றனக்குப் பிலமில்லையென்றோநீ
அச்சமதில்லாமல் அடமாயிதுவுரைத்தாய்
பண்டாரந்தன்பலமும் பழிநீசாவுன்பலமும்
சண்டையிட்டுப்பார்த்தால் தான்தெரியும்மாநீசா
என்றுபண்டாரம் இதுவுரைக்கஅன்னீசன்
குன்றுகரந்தெடுத்த கோபாலரோடுரைப்பான்
ஆள்படைகளில்லாமல் ஆயுதங்களில்லாமல்

வேழ்படைகளில்லாமல் வெட்டவாளிங்குமில்லை
தடியில்லைசக்கரமுந் தானில்லவுன்கையிலே
முடிவிரித்துக்கந்தை உடுத்தவனோடுயுத்தமிட்டால்
ஆண்மையில்லையெந்தனக் காயிளைவாரேசுவாரே
தாண்மைமொழிப்பேசாதே தலைவிரித்தபேயாநீ
மூவர்முதலாய் முப்பத்துமுக்கோடி
தேவரையும்வேலைகொள்ளச் சிவமூலம்பெற்றிருக்க
ஒன்றில்லாப்பேயனோடு யுத்தமிட்டாலெந்தனையும்
நன்றினியபெண்கள் நகைப்பார்நீயப்புறம்போ
என்றந்தநீசன் இயம்பத்திருமாலும்
நன்றுநன்றுநீசா நானுரைக்கநீகேளு
பண்டாரத்தோடே படையெடுத்தாலாண்மையில்லை
என்றேதானிப்போது இயம்பினையேமானீசா
பண்டாரமென்றும் பைத்தியக்காரனென்றும்
ஓண்டியாய்வந்தவனோடு யுத்தமிடமாட்டேனென்றும்
பிச்சைக்காரன்யெனவும் பெரியஇரப்பனென்றும்
கச்சையில்லானென்றும் கணைகம்பில்லாதானேன்றும்
இப்படியேபண்டாரம் என்றிருக்கும்பேர்களுக்கு
எப்படியும்வம்புசெய்வ தில்லையென்றுண்மையுடன்
சத்தியமாகத்தானுரைநீ பார்ப்போமென்றார்
புத்தியில்லானீசன் புகலுவான்பின்னாலே
பண்டாரமென்றும் பரதேசியானவரை
தண்டாளக்கந்தை தலைவிரித்தஆண்டிகளை
அட்டியதுசெய்யேன் அவரோடேசண்டையிடேன்
முட்டியேவம்பு ஒருநாளுஞ்செய்வதில்லை
என்றான்காணீசன் என்பெருமாள்தானுரைப்பார்
நன்றாகயிப்படியே நட்டிசெய்யமாட்டேனென்று
ஆணையிட்டுத்தாவென்று அருளினாரெம்பெருமாள்
வீண்படனீசன் விளம்புவானப்போது
ஆரார்கள்பேரில் ஆணையிடவேணுமென்று
பேராகச்சொல்லு பிச்சையெடுப்போனேயென்றான்
அப்போதுபண்டாரம் அகமகிழ்ந்துகொண்டாடி
இப்போதுநீதான் ஈசர்தனைவணங்கி
வேண்டியேபோற வெகுவரங்கள்பேரதிலும்
பெண்டவள்பேரதிலும் பிலமாகவிப்போது
ஆண்டிபரதேசி ஆகிவந்தபேர்களையும்
வீண்டிறடுசெய்யேனெனவே நீயாணையிட்டால்
ஆணைக்கிறடுசெய்து ஆண்டிகளைச்சில்லமிட்டால்
வீணேபோமென்வரங்கள் வீட்டுப்பெண்டார்கள்முதல்
பெண்டோற்றுநானும் பெற்றவரமுந்தோற்று
மண்டோற்றுவாழ்வு மக்கள்கிளைதோற்று
சேனைதளம்தோற்று சீமையரசுதோற்று
ஆனைபடைதோற்று அரசுமேடைதோற்று
என்னுயிருந்தோற்று என்கிளையோடேநானும்

வன்னரகில்போவோமென்றே வாக்குரைத்திடுநீ
அப்போதுநீசன் ஆண்டியுரைத்தபடி
எப்போதுமறவேன் இதைமறந்துவம்புசெய்தால்
சொன்னபடியெல்லாம் தோற்றிறந்தென்னுயிரும்
வன்னரகில்போவேனென்று ஆணையிட்டான்மாநீசன்
நல்லதுதானென்று நாட்டமுற்றுச்சன்னாசி
வல்லபலமுள்ள மாநீசாநீகேளு
மந்திரங்களாலே மகாகோடிஆயுதங்கள்
தந்திரங்களாலே தான்வருத்தலாகிடுமெ
அப்படியேயொத்த அச்சரங்கள்தானிருக்க
இப்படியேஆயுதத்தை எடுத்துச்சுமப்பதென்ன
நீகேட்டசக்கரத்தை நிமலரவர்தந்தாரே
தொனிகெட்டவெற்றிரும்பைச் சுமவென்றுதந்தாரோ
இரும்பைச்சுமந்தால் இல்லைகாணென்றுபயன்
தரும்பொருள்போலுள்ள சம்பாத்தியந்தாறேன்
மண்டலங்கள்தேசம் வாழ்வுகளுண்டாவதற்கு
கண்டார்கள்மெய்க்க கனகதிரவியம்போல்
தருகிறேனுந்தனுக்குத் தான்வேண்டுநீயெனவே
பருமுறுக்காயாண்டி பகர்ந்தாரேநீசனுக்கு
அப்போதுநீசன் அகமகிழ்ந்துகொண்டாடி
இப்படியேதாருமென்று ஈன்றானேசக்கரத்தை
சக்கரத்தைவேண்டி சங்குசரத்தாமன்
மிக்கப்பணமாக்கி மிகுத்தசக்கிராயுதத்தை
சபிக்கவேமாயன் சக்கிராயுதங்கேள்க்கும்
நீசனிடத்தில் என்னைப்பணமாக்கி
ஈயுறீரேசுவாமி இப்போதுசாபமிட்டு
இப்போதிடுஞ்சாபம் எப்போதுதீருமென்று
அப்போதுசக்கரமும் ஆண்டியைப்போற்றிடவே
கலிமாறும்போது கடருமென்றானுன்சாபம்
வலியானசக்கரமும் வாய்த்தபணமாகியதே
பணமாகிக்கீழே பறந்துகுதித்திடவே
குணமானநீசன் எட்டியதான்பிடித்து
கண்ணில்மிகவொத்திக் காரிகையாள்கைகொடுப்பான்
பெண்ணேநமக்குப் பிலங்கள்வந்துவாய்த்துதெடி
என்றுபிரியமுற்று ஈசுரரைத்தான்வணங்கி
மன்றுதனில்போக வரந்தாருமென்றுரைத்தார்
அப்போதுதன்னில் ஆண்டியவரங்குசென்று
இப்போதிங்கேவைத்து இவன்றான்மொழிந்ததெல்லாம்
தப்பாமலாகமத்தில் தானெழுதிவையுமென்றார்
ஆகமத்திற்பதித்து ஆண்டார்துரிசமுடன்
நாகரீகநாதன் நடந்தார்ஸ்ரீரங்கமதில்
நீசனையுமூரேபோ வென்றுநிமலனுந்தான்
ஈயுகிறபோது ஏதுரைப்பாள்சத்தியுமே
வன்னச்சிவனாரே மாபாவிகேட்டவரம்

என்னென்னவாயமதமாய் இருக்குதுகாணுத்தமனே
வலியானமாதே மானீசன்கேட்டதுதான்
கலியுகம்போலிருக்குக் கண்ணமுதேயென்றுரைத்தார்
சிவம்வாய்திறந்து செப்பக்கலியுகமாய்
இதமானதேவர் எழுதினாராகமத்தில்

### விருத்தம்

கலியுகமெனச்சிவங் கருதிடத்தேவர்கள்
பொலிவுடன்சேர்த்தனர் புராணமீதிலே
சலிவுடனீசனுந் தரணியில்போர்ந்திட
வலியுள்ளமாயன் ஸ்ரீரங்கமேவினர்

### நடை

மாயனுக்காணை மானீசனிட்டதெல்லாம்
தூயபெருங்கணக்கில் தொகுத்தெழுதிவைத்தனராம்
நீசக்கலியன் நிறைவோன்பதம்போற்றி
தேசமதில்வரவே சென்றான்காணம்மானே
கலியன்கலிச்சிக் கட்டாய்வருகையிலே
சிலிரெனவேலோகந் திணுக்கிடவேயம்மானே
தர்மமாய்ப்பூமி தாணண்டிருக்கும்நாளையிலே
வர்மமாய்னீசன் வரவேகண்டப்புவியில்
நல்லபறவை நல்லமிருகமூர்வனமும்
வல்லவகைனீதம் மாற்றக்கேளன்போரே
வெள்ளானைவெள்ளை வேங்கையோடுவெண்கடுவாய்
தள்ளாதசர்ப்பந் தலையைந்துகொண்டதுவும்
வெள்ளன்னம்வெண்குயில்கள் வெண்புருவெள்ளைமயில்
கள்ளமில்லாவெண்சாரை கடியபலவெண்கருடன்
நல்லஅனுமன் நாடுங்காண்டாமிருகம்
வல்லவெண்ணரிகள் வளர்ந்துவரும்வெண்காகம்
ஆளியோடுசிங்கம் ஆனைருஞ்சிப்புள்ளும்
வேளிசைவெண்கலைமான் வெண்புள்ளுவெண்ணணிகள்
மிருகமதில்வெள்ளைகொண்ட மேல்மிருகமானதெல்லாம்
அறியவேகுண்ட மதுநோக்கிப்போயிடவே
பால்நிறமான பட்சிபறவைகளும்
மேலாம்பரனுர்குண்டம் மிகநோக்கிநாடிடவே
வெண்சாரையைந்துதலை விஷஅரவமானதெல்லாம்
துஞ்சாதநாதன் துணைதேடுநாடுமாம்
முன்னிருந்தசாஸ்த்திரமும் முறையும்பஞ்சாங்கமதும்
பின்வந்தனீசனினல் போகவழிதேடிடுமாம்
நீசனுக்குமுன்னிருந்த நீதநெறிமானுபவங்கள்
போய்அகல்வோமென்று புத்திதனிலெண்ணிடுமாம்
முன்னிருந்தரத்தினங்கள் முத்துவைடூரியங்கள்
பன்னுமறைசாஸ்த்திரமும் பாதையதுகொண்டிடுமாம்
சங்குசமூலஞ் சலக்கண்சலத்தில்விழ
பொங்குநவரத்தினமும் போகவழிதேடிடுமாம்

கடல்விளைவெல்லாங் கண்காணுதேதோடிடுமாம்
தடவரையிலுள்ள தங்கமதுமண்கோர்க்க
சிலைகள்பதிகள் தெய்வத்திருச்சமூலம்
அலையுள்ளும்பூமி அதனுள்ளும்போய்மறைய
மாரிமறைய மலர்க்கண்மிகமறைய
ஏரிபாளாக எண்ணினதேயம்மானை
கர்மக்கலியதனல் கடல்கோபித்தேயடிக்க
தர்மந்தலைகவுந்து தானிருந்தம்மானை
தர்மமெய்நீதமதுந் தாரணியிலூர்வனமும்
பொறுமையுடைய பெரியமிருகமதும்
நாகமணிதங்கமணி நவரத்தினமாமணியும்
தாகமுள்ளமுத்து சாத்திரமாமறையும்
நீதத்தோரெல்லாம் நீலவர்ணன்சங்குடனே
பாதத்திருக்குண்டம் பாதையதுதேடிடுமாம்
நடந்தோர்களெல்லாம் நாடிவழிவரவே
கடந்தார்கள்வல்லக் கலியைவிட்டுக்காடதிலே
காடதிலேசெல்லக் கனத்தபஞ்சபாண்டவர்கள்
வாடலுடலாய் வைகுண்டந்தானேக
கண்டாரேதர்மர் கடந்துநின்றநீதமதை
பண்டாரத்தர்மர் பகர்ந்தாரதினேடு
நாட்டிலுள்ளநீதமெல்லாம் நடந்துகாணுதேசென்ருர்
வீட்டிலுறுதியுள்ள மேல்வீடுகாண்பதற்கு
போவேனேதர்மம் போனதினல்நாயடியேன்
சேர்வேனுகுண்டஞ் செய்தர்மமில்லையென்ருல்
என்றுரைக்கப்பாண்டவர்கள் இயல்தர்மமேதுரைக்கும்
பொன்றுவந்துலோகம் பொய்பூண்டதானதினல்
எங்களுக்கங்கே இருந்தாலாகாதெனவே
செங்கண்மாலயனையுந் தேடியேபோறெனென்ருர்
அப்போதுபாண்டவர்கள் அன்பாய்ப்பதம்பணிந்து
இப்போதுஉங்களையும் இழந்துவிட்டிங்கிருந்தால்
கர்மக்கலிமூழ்கிக் காண்பதேதுகுண்டமதை
தர்மத்தோடங்கே தான்வருவோங்கண்டீரே
தர்மமும்நீதமதும் தாட்டிகப்பாண்டவரும்
வர்மமில்லாக்குண்ட வழிநோக்கிச்செல்லுகையில்
மேலானமாமிருகம் வேதக்காராவுகளும்
நாலானவோர்தலையும் நல்லஅரவமதும்
வெண்பச்சியான மேலானபட்சிகளும்
இன்பச்சியெல்லாம் எங்கினிபோவோமென்று
கதறியழுதுகனைத்துநின்ருர் காடதிலே
பதறியழுது பறவைமிருகமோடு
நிற்குமளவில் நீலவண்ணர்தாமறிந்து
பக்குவப்பிராயப் பண்டாரமாகிவந்து
ஏதுகாணீங்கள் இந்தவனவாசமதில்
ஓதிக்கரைய உங்கள்விதியானதென்ன

செப்போடுவொத்த திருமால்தனைப்பார்த்து
அப்போதுயெல்லாம் அழுதழுதேதுசொல்லும்
நீசக்கலியன் நீனிலத்தில்வந்ததினால்
தேசமதிலெங்களுக்குச் செல்லவிருப்பில்லையையா
என்றுரைக்கச்சன்னாசி யேதுரைப்பரன்போரே
பாண்டவரைத்தர்மமதைப் பாரநீதமதையும்
ஆண்டவைகுண்டம் அடையப்போவென்றுரைத்தார்
தெய்வக்காராவைச் சிறந்தவெள்ளானைகளை
மெய்வரம்புகொண்ட மிகுத்தமிருகமெல்லாம்
கும்பக்குருமலையில்க்கூடியே நீங்களெல்லாம்
சாம்பசதாசிவத்தைத் தாள்போற்றிஉள்ளிருத்தி
நீசன்றனையறுத்து நீதயுகந்தானாள
வாசமுடனேவரவே வரம்வேண்டநில்லுமென்று
ஐந்தலைநாகமதை அந்தமுனிதானழைத்து
உந்தனக்குச்செய்தி உரைக்கிறேன்கேளெனவே
அலைமுகத்தில்நூத்தொன்று ஆழம்வரைக்கீழே
நிலைதனிலேநின்று நெடியோனையுள்ளிருத்தி
கலியைஅழித்துக் கடியதர்மமாகவேதான்
வலியயுகமாழுதற்கு வைகுண்டர்வாவெனவே
நிற்பாய்தவசு நீபோவெனவனுப்பி
சர்ப்பமதுக்காக சங்குவெள்ளைச்சாரைதனை
பர்ப்பக்கிரிதனிலே பைம்பொன்னிறப்பொய்கையிலே
வம்பையழித்து வாய்த்ததர்மராச்சியத்தில்
அன்பரோடேயரசு ஆளத்திருமால்வரவே
வேணுமென்றுநெட்டை விரும்பிச்செய்யென்றேதான்
ஆணுவநாதன் அதர்க்குவிடைகொடுத்தார்
அன்னப்பச்சியான அதிகப்பறவைகளும்
பொன்னம்பலகிரியில்ப் போய்த்தவசுபண்ணுமென்றார்
சாத்திரமாமறையைத் தானெடுத்துமாமுனியும்
சூத்திரநெஞ்சத்து உள்ளிருத்திவைத்தனராம்
இருத்திஸ்ரீரங்கம் யேகவென்றெம்பெருமாள்
கருத்திலுறயிருத்திக் கட்டாய்வருகையிலே
ஞானமுனியினோடு நல்லகலைமுனிவன்
தானமுள்ளமாமுனிவர் தலைகவிழ்ந்தேதவசு
சடைத்துமுகம்வாடித் தானிருக்குமப்போது
திடத்தமுடனேநல்ல திருமாலருகேகி
நன்றியுள்ளமாமுனியே நல்லகயிலாசமதில்
கண்டதுண்டுங்களையுங் காட்டில்வந்தவாறேது
அப்போதுமாமுனிவர் ஆதிபதம்பணிந்து
செப்போடுவொத்த திருமாலேநாங்களுந்தான்
கைலாசமீதில்க் கரைக்கண்டர்பாதமதில்
ஒயிலாகப்போற்றி ஒழுங்காயிருந்தவர்காண்
இருக்குமந்நாளையிலே எங்களிருபேர்களையும்
தருக்குகந்தசுசர் தன்னையவர்வருத்தி

மாயன்மேல்பிறக்க மண்ணுலோகந்தனிலே
காயமிழந்து காணாதுருவெடுத்து
மறைந்திருக்கிருரெனவே வானோர்கள்சொல்வதினால்
சிறந்தபுகழ்மாயனுக்குத் தேரும்சிங்காசனமும்
மண்டபங்கள்மேடை வாய்த்தநீராவிகளும்
பண்டுள்ளநல்ல பைப்பொன்னிறப்பொன்பதியும்
உண்டுகாண்துவார யுகத்திலேயென்றுசொல்லி
கண்டுகொண்டானாலக் கலியனதை ஆண்டுகொள்வான்
முன்போய்த்தானீங்கள் உவரிதனைவருத்தி
இன்பமுள்ளவைகள் எல்லாமதினுள்ளேவைத்து
வைகுண்டரிங்கே வந்தாலிதைக்காட்டி
மெய்கொண்டவுங்கள் இடத்திலேபோவுமென்று
அல்லாதேபோனால் அக்கினியாலுங்களையும்
இல்லாதேசெய்வார் என்றுசொல்லிவாருமென்று
அனுப்பினாரெங்களையும் அதற்காகயிங்குவந்தோம்
துனுப்பாகவாரிதனைச் சொல்லியேசட்டம்வைத்து
ஏகினோங்கயிலை இடைவழியில்மானீசன்
தாவிவரக்கண்டு தவலோகமேமறைந்து
கர்மவிதிப்பயனால்க் கலக்கமிகவடைந்து
தர்மச்சிறப்பில்லா தலைகவிந்திருந்தோமென்றார்
அப்போதுஅச்சுதரும் அந்தமுனிதங்களையும்
இப்போதுகூட்டி யேகின்றயப்பொழுது
கருங்குரங்குக்காரானை கடியகடுவாய்புலியும்
இருங்கருடனூர்வனமும் எறும்புஈமூட்டைகளும்
கள்ளக்கசடுள்ள கரியமிருகமதும்
கொள்ளைகொண்டஊர்வனமும் குசலானபட்சிகளும்
வரவேகண்டெம்பெருமாள் மாமுனியைத்தான்பார்த்து
ஈதேதெனவே எனக்கேள்க்கமாமுனிவர்
நீசனுதிரம் நீதிகெட்டவிம்மிருகம்
வாயமுள்ளபட்சிகளும் மானிலத்திலூர்வனமும்
பிறந்துதித்துவந்து பேருலகிலம்மானை
சிறந்தறிந்தெம்பெருமாள் செவியிலேகையறைந்து
விலகியேபோக வேணுமென்றெம்பெருமாள்
மலங்கியமாமுனிவர் மாயனடிபோற்றி
எங்களுக்கெங்கே இருக்கவேசொல்வீரென
அங்கந்தமாயவரின் அடிதொழுதாரம்மானை
அப்பொழுதெம்பெருமாள் அந்தமுனிக்கேதுரைப்பார்
இப்பொழுதுநீங்கள் ஏகுங்கோசெந்தூரில்
செந்தூர்ப்பதியில்ச் சிறந்தவாரிக்கரையில்
நந்தகோபால நாராயணாவெனவே
மாயநீசக்கலியை வதைசெய்துதர்மமதாய்
ஞாயமுடன்வைகுந்தர் நாட்டையொருசொல்லதுக்குள்
ஆளவரவேணுமென்று அருந்தவசுபண்ணுமென்று
வேழமொத்தமாமுனிக்கு விடைகொடுத்தார்மாயவரும்

விடைவேண்டிமாமுனிவர் வேலனுறைந்திருக்கும்
கடலானதர்க்கரையில்க் கடுந்தவசுபண்ணினரே
அப்படியேமாமுனிவர் அங்கேதவசிருக்க
இப்படியேமாயன் இசைந்தஸ்ரீரங்கமதில்
போகின்றவேளையிலே போகனென்றமாமுனிவன்
தாவுமொருமலையில்த் தலைசிதறிச்சாகவென்று
வேகித்துமாமுனிவன் விசையாகமுட்டுகையில்
ஆகமுற்றெம்பெருமாள் அவனோடங்கேதுரைப்பார்
மலைதனிலேமுட்டி மாளவென்றுமாமுனிநீ
குலைந்துகுலைந்துமாமுனியே கூறுநீயென்றனராம்
அப்போதுமாயவனார் அடிபோற்றியேதுரைப்பான்
செப்பமுள்ளமாயவரே சீமைதனையளந்த
மாயவரேநானுமினி மாழ்வதல்லால்இங்கிருக்க
ஞாயமில்லைஐயா நாராயணப்பொருளே
என்றுரைக்கமாமுனியும் ஏதுரைப்பாரெம்பெருமாள்
உன்றுவசனம் உரையென்றார்மாமுனியை
என்றெம்பெருமாள் இதுவுரைக்கமாமுனியும்
அன்றுமுனிசொன்ன வசனங்கேளன்போரே
தர்மநீதமதுவும் தரணிதனில்மானிபமும்
நன்மையெல்லாம்நாடுவிட்டு நடந்துமறைந்ததினால்
வர்மமதுவையகத்தில் வந்தபடியாலும்
நானிருந்தநிஷ்டை நாலிரண்டாகையிலே
மானிபங்கள்தர்மம் மறையத்தான்போனதினால்
என்றவன்றான்வம்பில் இழந்தேனேயென்றுசொல்லி
தன்தலையைத்தான்சிதறிச் சாகவேணுமெனவே
மலைதனிலேமுட்டி மாண்டுவிடவேணுமென்று
அலைமேல்துயின்ற ஆண்டியோடேயுரைத்தான்
நல்லதென்றுமாயவனார் நல்முனியைக்கொண்டாடி
வல்லவனேயுந்தனுக்கு மாளவென்றால்வேறில்லையோ
கல்லிலேமுட்டி கண்தவர்ந்துசாவதென்ன
சொல்லுநீயென்று திருமாலிதுவுரைக்க
அப்போதுமாமுனியும் அந்தமலைப்புதுமை
இப்போதுசொல்லுகிறேன் என்றேயுரைக்கலுற்றார்
வேதாவிதித்த மேலான ஆகமம்போல்
நாதாந்தவேதம் நாலுண்டுகண்டீரே
கலியன்பிறந்தபின்பு கட்டானவேதமொன்று
சலிவாகிவேதந் தான்விளங்காவண்ணமுந்தான்
இழகாமல்கற்போல் இருந்ததுகாணவேதமது
குழைவானவேதா குறியாயதையறிந்து
கல்வியிழகாமல் கற்போலிருந்ததினால்
பல்லுயிர்கள்வாழும் பாரிலொருபங்காக
மலையாய்வளர்ந்து வைகுந்தர்வருகையிலே
அலைபோலிளகி அவனிதனில்பாயவென்று
சபித்தார்காண்வேதா தானறிந்துவேதமது

குபிந்தானமான குன்றுபோல்தான்வளர்ந்து
அன்றந்தவேதம் ஆனதினலடியேன்
இன்றென்சிரசை இதிலிறடிமாண்டதுண்டால்
வைகுண்டங்கிட்டுமென்று மாளவந்தேனிம்மலையில்
கைகண்டவேதக் கருணகரக்கடலே
என்றுரைக்கமாமுனிவன் எம்பெருமாள்நல்லதென்று
அன்றுமுனியை அவரோடுடன்கூட்டி
போகின்றவேளையிலே போகனென்றமாமுனிவன்
ஏகின்றவேளை யெம்பெருமாளேதுசொல்வார்
மாமுனியேநீகேளு மாச்சலாயென்னுடம்பு
தாமுனியேஎந்தனுக்குச் சடைவாயிருக்குதுகாண்
ஆனதால்கெங்கை பார்த்ததிலேகுளித்துமிக
போனல்சுகமெனவே போகனேடேயுரைத்தார்
அப்போதுநல்ல அருள்கொண்டமாமுனிவன்
இப்போதுமாயவரே இதோதெரியுகின்ற
அருணகிரிமலை அருவியொன்றுண்டுமையா
கருணையிரங்கினதால்க் காட்டியேதாரோமென்றான்
நல்லதுதானென்று நல்லமுனியோடே
வல்லதிருமேனி வாவிதனைக்கண்டார்காண்
கண்டுதிருமேனி கனத்தநீராவிதனில்
சென்றிறங்கிமேனிதனில்ச் செலங்கோரிவிட்டிடவே
ஆவிதனிலிறங்கி அச்சுதனார்நின்றிடவே
தேவியொருபெண் செலமெழுந்துமாயனையும்
வந்துபணிந்திடவே மாயனதைப்பார்த்து
சந்துபயில்மாமுனியே தண்ணீரைக்காணமல்
பெண்ணகவந்த புதுமையென்னமாமுனியே
கண்ணனமாமுனியும் கட்டுரைப்பானம்மானே
பெண்ணேடுகேட்டால்ப் புதுமையதுதெரியும்
எண்ணதெண்ணி யேதுரைப்பான்மாமுனியும்
என்றுரைக்கமாமுனியும் யேந்திளையோடேதுரைப்பார்

சலந்தவசு

நன்றுநன்றுபெண்ணேநீ நதியாயிருந்ததுவும்
பெண்ணகவந்ததுவும் பேசுநீயொண்ணுதலே
தண்ணீராய்நின்ற தார்குழலாளேதுரைப்பாள்
அய்யாவேநானும் ஆதிகைலாசமதில்
மெய்யாகஈசுரர்க்கு வேலையதுசெய்திருந்த
வருகிறவேளையிலே மனங்குளறிநானடியாள்
அரையில்கலைபூண ஆவியிலேசென்றிறங்கி
குளித்தேனதையும் கொன்றையணிவோனறிந்து
அழித்தேயெனையும் ஆவிபோலேபடைத்தார்
படைக்கும்பொழுதில்ப் பரமனேடிச்சாபம்
கடருவதெப்போதெனவே கரைக்கண்டரோடுரைத்தேன்
ஆவியாய்நீகிடந்தால் அச்சுதனரங்குவந்து

தாவிக்குளிக்கச் சாபமதுமாறுமென்றூர்
என்றுரைக்கப்பெண்ணுள் எம்பெருமாளேதுரைப்பார்
அன்றந்தப்பெண்ணதையும் ஆகமப்போகனையும்
நாஞண்டிருந்த நல்லதுவராயுகத்தில்
தானுகஆண்டு தானிருக்குமப்போது
சூரியவொளிகாந்த துலங்குவைடூரியத்தில்
வீரியமான வெற்றிவிருதுக்குடையும்
தங்கப்பொன்னுயுதமுந் தளிருநிறச்சக்கரமும்
பங்கமில்லாமுத்துப் பவளநிறக்குடையும்
கட்டானவைரக் கல்கோட்டைவாவிகளும்
மட்டானசெம்பவள வயிரக்கால்மண்டபமும்
உண்டுகாணத்தனையும் உடனேபோய்நீங்களுந்தான்
என்றுநான்வருவேன் இதுவரைக்குங்காத்திருங்கோ
நான்வந்தபோது நல்லகெதியுங்களுக்கு
தான்தருவேன்போகுமெனத் தங்களிருபேர்களுக்கும்
விடைகொடுத்துஸ்ரீரங்கம் மேவியவரிருக்க
திடமுடனேபோகமுனி தேவிசலமடவும்
வந்தந்தமாயவரின் வாழ்வெல்லாங்காத்திருந்தார்
மாயன்ஸ்ரீரங்கம் வாழ்ந்திருக்குமப்போது
மாயக்கலிசெய்த மாயங்கேளன்போரே
சாஸ்த்திரத்தையாருய்த் தான்வகுத்துவேதமதை
மாத்திரமேநாலாய் வைத்தனர்காணம்மானை
நச்சேத்திரத்தை நல்லிருபத்தேழாகப்
பொய்ச்சேதிரமாய்ப் பிரித்தான்காணம்மானை
கோளொன்பதுக்குக் கூடுபன்னிரண்டாக
நாளேழுவாரம் நாட்டிவைத்தானம்மானை
பக்கமதுபத்தஞ்சு ஆகப்பவம்பிரித்து
தக்கமதுலோகந் தாஞண்டிருக்கையிலே
மாந்திரத்தால்செய்த வறுமைகேளன்போரே
பாந்தள்வாய்கட்டிப் பருசுகெடவாட்டிடுவான்
சந்திரனைமங்கவைப்பான் சமுத்திரத்தைப்பொங்கவைப்பான்
மந்திரத்தால்தெய்வமதை மாடுபோல்வேலைகொள்வான்
கற்பைக்கலக்கிடுவான் கன்னியழித்திடுவான்
வெர்ப்பைத்தகர்த்திடுவான் வெடியைத்தடுத்திடுவான்
ஆண்பெண்கள்தன்னை அலச்சல்மிகச்செய்திடுவான்
கோண்பிரித்துக்கெட்டி குடிகெடுப்பான்மானிடரை
பசுவையடைத்துப் பட்டினிகள்போட்டிடுவான்
கசுவைமறைத்திடுவான் கண்ணைக்கெடுத்திடுவான்
மிருகம்வாய்க்கெட்டி மொன்றியிடாக்கொன்றிடுவான்
மானிடர்க்குகுஷ்டம் வருத்தியேகொன்றிடுவான்
வீணிலேமானிடரை விஷமடக்கிக்கொன்றிடுவான்
மாரிதனைமறைப்பான் வருத்தவென்றூலழைப்பான்
ஏரிதனைவெட்டி இயலழியச்செய்திடுவான்
அடப்பமிடத்தாயை ஆளாக்கிவைத்திடுவான்

குடைபிடிக்கப்பிதாவைக் கொண்டிடுவான்வேலையது
பேயைவருத்தி பூசைமிகக்கொடுத்து
தேயமதில்மானிடரைச் செத்திறக்கவைத்திடுவான்
கடலதுக்குமாமலைக்குங் கல்கோட்டைதாண்டவிட்டு
தடவரைகளெல்லாந் தகர்த்துப்பொடிபடுத்தி
பூலோகதேசம் புவனமெல்லாம்பரந்து
மேலோகமெல்லாம் மிகப்பரந்தானம்மானை
கைலையிமலோகங் கரியதெய்வலோகமெல்லாம்
அகிலமெல்லாம்புரண்ட அதிசயங்கேளன்போரே
சிவந்தானினைத்தால்ச் செல்லார்கள்தேவரெல்லாம்
தவந்தானிளகித் தான்வந்ததாலேதான்
மூவர்களுரு முறமைமிகத்தவறு
தேவர்களுருந் தியங்கிமிகத்தான்புரள
ஈசுரனுரைப்போ ஏதெனவேதான்வெகுண்டு

## நந்தி வரவு

வீசுபுகழ்நந்திதனை விரைவாய்வரவழைத்து
மாமுனியேகையிலை வரம்பழியக்காரணமேன்
ஓமுனியேநீயும் உள்ளதெல்லாஞ்சொல்லெனவே
என்றந்தநந்தியோடு ஈசுரனுர்தான்கேள்க்க
அன்றந்தமாமுனியும் அரனுரடிபணிந்து
நல்லதுகாணீசுரரே நம்தனக்கிங்கேதான்
செல்லாதுஇங்கிருந்தால் சிவனேயெனத்தொழுது
பூலோகமேழும் பொன்னுலோகமேழும்
ஈரேழுலோகம் இருபுத்தியானதெல்லாம்
சொல்லவேணுமென்ருல் சிவகைலைவிட்டேநாம்
நல்லபரலோகமதில் நாம்போவோமீசுரரே
என்றந்தஈசுரரை இறஞ்சிமுனிதான்கூட்டி
அன்றந்தமாமுனியும் அரனுருந்தானேகி
சென்ருர்பரலோகச் சீமையிலேவந்திருந்து
வண்டாடுஞ்சோலை வயிடூரியக்கோயில்
கோவிலவர்புக்கிக் குருவைமிகப்போற்றி
ஆவலுடனே அருளுவான்மாமுனியும்
நல்லபரமேசுரரே நாடுதடுமாறினதால்
எல்லாம்நீர்கேள்க்க எடுத்துரைப்பேனென்றுமுனி
மாமுனிவனீசுரரை வணங்கிப்பதங்குவித்து
ஓமுனியும்நன்ருய் உரைப்பான்காணம்மானை
கேட்டீரோஈசுரரே கேடுவந்தசெய்தியெல்லாம்
தீட்டுகிறேனென்று செப்புவாரன்போரே
மாயன்வைகுண்டம் மறையவென்றுபொய்ச்சடலக்
காயமிழந்து காணுதுருவெடுத்து
ஏகிவரும்வழியில் ஏந்திழையாள்தெய்வகன்னி
தாவிச்சுனையாடித் தாங்கள்நிற்கும்வேளையிலே
கண்டந்தமாயன் கன்னியர்மேலிச்சைகொண்டு

பண்டந்தயோகமுனி பச்சமால்தந்தனக்கு
மேலோகத்தார்களெல்லாம் விஷ்ணுவின்றதமதில்
பூலோகந்தன்னில்ப் பிதிராவாறென்றெனவும்
பிதிரிற்றவமிருந்து பிறந்தவழிதன்னையெல்லாம்
சதிராகவந்தெடுத்துத் தர்மயுகம்ஆழ்வரென்று
யோகமுனியிட்ட உறுசாபமத்தனையும்
லோகமதில்மேலோகப் பிறப்பெல்லாந்தோணவைத்து
கன்னிவயிற்றிலுறக் காட்டில்மிகப்போந்து
தன்னிகரில்லாத சான்றோரெனவளர்ந்தார்
வளர்ந்தார்கள்ராச்சியத்தை வகையாகவாண்டிருக்க
இழந்தகலிதோன்றி இவன்சென்றனவ்வுகத்தில்
கலியனவன்செல்லக் கைமறந்தவ்வுலகில்
பொலிவுள்ளதர்மம் பொன்றிச்சேநீதமது
முன்னிருந்தசாஸ்த்திரமும் முறையுமிகத்தவறி
பின்னுதித்தநீசன் பிரித்தான்காண்வெவ்வேறாய்
ஆனதால்பூலோகம் அழிந்துமிகத்தவறி
ஊனமடைந்தார் உலகிலுள்ளசான்றோர்கள்
தந்திரமந்திரத்தாற் சான்றோரைத்தான்மயக்கி
பந்தியழித்ததினல்ப் பத்தினியாள்பெற்றமக்கள்
ஒண்ணுக்குளொன்று எதிர்த்தொத்துமிகவாழாமல்
பெண்ணுக்குஆணும் பிரிவுமுறிவாகி
தாய்க்குத்தான்பிள்ளை தாளாமலேபேசும்
வாய்க்குவாய்சொன்னலும் மங்கைநல்லாளென்றிடுவார்
பிதாவைமிகநம்பார் புண்ணியமென்றேபாரார்
இதாகவெல்லாநீசன் இடறுவரச்செய்ததினல்
ஆனதாலிந்த வழிவழியேயங்குழது
போனதால்நீசம் பொன்னுலகம்வரையும்
ஏகிச்சுதையா இடறுநீசக்கலியும்
கோவிச்சுதையா கொடுங்கலியுமங்கேகி
இதெல்லாம்பின்னும் இன்னஞ்சிலநாளில்
ஏதெல்லாமாகுதென்று ஈசுரரேபார்த்திருவும்
மாயனையும்வருத்தி வார்த்தைகேளாதிருந்தால்
தேயமிருள்மூடிச் சென்றிடுங்காணீசுரரே
அப்பொழுதுஈசுரரும் அதுக்கேதுசெய்வோமென்று
செப்போடுவொத்த சிவனும்நொந்திருந்தார்
மாமுனியேமாயவனை வருத்தவென்னசெய்திடுவோம்
ஓமுனியேநீயும் உரையென்பாரன்போரே
அப்போதுமாமுனியும் அரனரடிவணங்கி
இப்போதுதானதவம் இல்லையேலோகமதில்
தவஞ்செய்துமாயவரைத் தான்வருத்தவென்றாலும்
பவஞ்செய்தகாலம் படுமொதவசிருக்க
என்றுரைத்துமாமுனியும் இன்னமொன்றுசொல்விடுவான்
நன்றுநன்றுஈசுரரே நானுரைக்கக்கேட்டருளும்
இருள்கொண்டகாலமதால் ஏற்றதர்மஞ்செல்லாது
மருள்கொண்டகாலமதால் வம்புக்குநேராகுமையா

## பேய்ப் பிறப்பு

ஆணுவஞ்சேர்பேய்க்கணங்க ரம்பைக்கோர்மாலேதனே
பூணுநீர்தவசு புரிந்தாலரிவருவார்
என்றுமுனிசொல்ல ஈசுரனுர்சம்மதித்து
அன்றுபேய்க்கணங்கள் வசுமாலேயேயணிந்து
இருந்தார்அரிதான் இப்போவரவேணுமென்று
தருந்தாரமார்பன் தானறிந்தேதெனவே
இருக்கவகையில்லா எழுந்திருந்தாகாயமதில்
சுறுக்காயுதித்துத் தோன்றிஞர்ஈசன்முன்னே
அப்போதுமாயவரை ஆதியாவிப்பிடித்து
இப்போதிதுவரையும் எங்கேநீர்போனீர்காண்
என்றுதானீசர் எய்த்திளேத்துச்சொல்லிடவே
அன்றுதானீசுரரை அரியாவித்தான்சேர்த்து
பாண்டவர்க்குபகாரம் பண்ணியிருந்ததுவும்
வீண்டதுரியோதனனே வெற்றிகொண்டசெய்தியதும்
பொருப்பேறிப்பொய்ச்சடலம் போட்டுச்ஸ்ரீரங்கமதில்
இருப்பதுவுஞ்சொல்லி எனேவருத்துவானேனென்ருர்
அப்போதரனுர் ஆதிமாலோடுரைப்பார்
இப்போதுகலியன் இராச்சியத்திலேபிறந்து
பதிஞலுலோகமதும் பாரயிருள்மூடினதால்
இதுநாள்வரையும் யானும்மைக்காணுமல்
மனங்கலங்கிப் பேய்க்கணங்கள் மாலேயிட்டுநானிருந்தேன்
கனங்கொண்டமாயவரே கைலேயிருள்மாற்றுமென்ருர்
நல்லாயிருக்கிறதுகாண் நவின்றதெல்லாங்கேள்பதற்கு
எல்லாமிருக்கட்டென்று ஈசுரரேயும்முடைய
கழுத்தில்தரித்ததையுங் கழற்றியெறியுமென்ருர்
வழுத்திடவேஈசர் மாலேதனேக்கழட்டி
கோபத்தாலக்கினியிற் குறியாயெறிந்தனரே
வேகத்தால்மாலே வெடித்ததுகாண்பேய்கணம்போல்
கொள்ளேகொண்டபேய்கள் கோடாமுக்கோடியுமாய்
துள்ளிக்குதித்துச் சுற்றிக்குதித்தாடும்
அப்போதுபேய்கள் அரனுரடிவணங்கி
இப்போதுஈசுரரே எங்கள்பசிதீர்த்து
மந்திரசால மாய்மாலமாறணமும்
தந்திரசாலஞ் சருவதுமேதாருமையா
கொல்லாச்சாசங்கிலியும் கொன்றவரைத்தானெழுப்ப
வெல்லப்பிளசங்கிலியும் வெடிப்பாகத்தாருமையா
ஈசுரருந்தேவர்களும் என்கபடத்துள்ளாக
வீசுபலவரங்கள் விடையாகத்தாருமையா
அப்போதுபேய்கள் அதுகேட்டதத்தனேயும்
இப்போதுகொடுக்க ஈசுரரும்சம்மதித்து
மாலோடும்வேதா மறையவனேடுங்கேள்ப்பார்

கேட்டிருந்தநாரணரும் கிருபையுடனீசுரரை
தேட்டமுடன்பார்த்துச் செப்புவாரம்மானை
ஈசுரரேபேய்களுக்கு இவ்வரங்கள்ஈந்தாக்கால்
வீசுங்காண்லோகமதை விழுங்குங்காணிப்பேய்கள்
தூயவரேபேய்கேட்ட சத்தவரமத்தனையும்
ஞாயமில்லையென்று நானுரைக்கப்போகாது
ஆனாலும்பேய்களுக்கு அருளினாலிவ்வரங்கள்
ஞானேந்திரமான நாரதமாமுனியை
வருத்தியே பேய்களுக்கு வரங்கொடுத்தவன்கையிலே
இருத்தியணயவைத்து யேழ்ப்பிவியும்பேய்களைத்தான்
பேய்களுடபேரில் பிழைத்ததுதான்குற்றமென்றால்
தேயக்கலிமாழுகையில் சிவவடகயிலாசமதில்
முனிசிறையும்பேய்களுக்கு உயிரளிவுவென்றுசொல்லி
துனிவானமுனியுடனே சொல்லியனுப்புமென்றார்
அப்போதுவீசுரரும் அந்தமுனியைவருத்தி
இப்படியேசொல்லி ஏழ்ப்பித்தனுப்பிடவே
மாமுனியுஞ்சம்மதித்து வரவேண்டிப்பேய்களுந்தான்
தாமுனிந்துபூலோகந் தன்னிலேவந்திடுமாம்
பேய்பூலோகத்தில்ப் போயிடவேஈசுரரும்
ஆயனாரோடே அருளுவாரன்போரே
கைலையிருளைக் கடத்திவைக்காதிருந்தால்
அகிலமதிலிருப்பு இல்லையேஅச்சுதரே
அப்போதுமாயவனார் ஆதிதனைநோக்கி
இப்போதுநீங்கள் எல்லோருமிருக்கவேதான்
நன்றாகஆண்டிகள்போல் நற்றாவடங்களிட்டு
பண்டாரவேசமதாய்ப் பதிந்திருங்கோவென்றுசொல்லி
நடந்தார்ஸ்ரீரங்க நகரிதனிலெம்பெருமாள்
மாயனுரைமாறாமல் வாய்த்தமேலோகமுள்ளோர்
ஈசர்முதலாண்டியென இருந்தார்காணம்மானை
ஆனதால்கலியன் அங்கேயனுவிலகி
மானமனுப்போலே வாழ்ந்திருந்தாரம்மானை
பூலோகமெல்லாம் பொய்யானமாகலியன்
மாலோசனையிழந்து மாறியேமானிடவர்
சாதியினம்பிரித்துத் தடுமாறிமானிடவர்
ஊதினங்களாக ஒன்றுக்கொன்றேயெழிதாய்
பிரட்டுருட்டாய்மானிடரேப் பிலமுள்ளோர்தானடித்து
மருட்டும்புரட்டுடனே மானீசனாளுகையில்
மாரியதுபொழிந்து வைகையதுவுடைத்து
ஏரிவழிந்து இராச்சியத்தைத்தானெடுக்க
வெள்ளம்பெருகி வெம்மருண்டதம்மானை
உள்ளமகிழ்சோழனுக்கு உடனேதானோடி
மனுநீதிகாவலவா வைகையடையாதிருந்தால்
இனித்தேசந்தன்னை யான்தேடஞாயமில்லை
ஊரையரித்து உவரிதனில்கொண்டேகும்

பாரைமிகவாளும் பத்தியுள்ளசோழமன்ன
என்றுகுடியானவர்கள் இராசனுக்கேயுரைத்து
அன்றுதான்வகை அணையடைக்கவேணுமென்று
எல்லாவகைச்சாதி இப்போவரவழைத்து
வல்லபுகழ்மன்னன் வைகையணையில்வந்து
மண்ணோடுகல்லும் மரங்கள்மிகவைக்கோலும்
எண்ணெண்ணக்கூடாத ஏதுவகையானதெல்லாம்
கொண்டுவந்தேயணையில்க் கூறிட்டுத்தானடைக்க
அன்றடைபடாமல் அறிவழிந்துசோழமன்னன்
அய்யோபாழாக அவனிதான்போகுதென்று
மெய்யோடுமெய்குளறி வெம்மருண்டுநிற்கையிலே
கோழனென்றமானீச குலத்திலுதித்துவந்த
ஈழனொருபொல்லாதான் என்சொல்வானம்மானை
மன்னவனேயிந்தவைகை மலையெடுத்துவைத்தாலும்
இன்னமிதுகேளா ஏலாதுநம்மாலே
தெய்வகுலச்சான்றோராய்ச் சித்திரமாகாளி
கையதுக்குள்பிள்ளையெனக் கட்டாய்வளருகிறார்

## சோழன் வினை

அந்தச்சான்றோரை அழைத்திங்கேகொண்டுவந்து
இந்தஅணையடைக்க ஏலுமென்றானம்மானை
அப்போதுசோழன் அன்னீசக்கலியதினால்
இப்போதேமயங்கி என்சொல்வான்மன்னனுடன்
மந்திரியேநம்முடைய வாய்த்தபடைத்தலைவர்
தந்திரியேநீங்கள்சென்று சான்றோரைத்தான்கூட்டி
வாருமென்றுசொல்லி மன்னவனேவிடவே
சேருமென்றுசொல்லச் சேவுகர்தான்விரைந்து
அழைத்துவந்தார்சான்றோரை அரசன்மிகக்கொண்டாடி
தழைத்தபுகழ்சான்றோரை சந்தோசமாகவிப்போ
வைகைதனையடைக்க வழிபாருமென்றுரைத்தார்
செய்கைமுடிச்சான்றோர் தேசமன்னனோடுரைப்பார்
நல்லதல்லமன்னவனே நம்மோடிதுவுரைக்க
இல்லையிந்தவேளை இதற்குமுன்னேகேட்டிலையே
வெட்டாப்படையை வெற்றிகொண்டோமும்மாலே
பட்டாங்குயெல்லாம் பகர்ந்தாரேசோழனுடன்
மாயக்கலியாதலினால் மன்னவனுங்கேளாமல்
ஞாயமொன்றும்போகாது நழிமொழிகள்பேசாதே
குட்டையினால்மண்ணெடுத்துக் குளக்கரையைத்தானடைக்க
கேட்டியல்லால் வேறுகெறுவிதங்கள்பேசாதே
என்றுரைக்கச்சான்றோர் இயம்புவாரம்மானை
நன்றுநன்றுமன்னவரே நமக்குவழக்கல்லவே
இவ்வேலையொன்று எங்களொடேயாமல்
எவ்வேலைசொல்வீரோ யாமதற்குள்ளதென்றார்
கேட்டந்தமன்னன் சிறுக்கமுடனிருக்கி

திட்டினன்சான்றோரைச் சினத்தான்காணம்மானை
அப்போதுசான்றோர் அதுக்கிசையாமல்நின்றார்
இப்போதுசோழன் ஏதுசொல்வானம்மானை
நான்வேலைசொன்னால் நகட்டுவதோவுங்களுக்கு
தான்பாருவென்று தன்தளகர்த்தருடன்
வேலைகொள்ளுமென்று விசைகாட்டினன்கெடுவான்
தூலமறியாமல்த் துள்ளியேசேவுகர்கள்
சூழவளைந்து துய்யச்சான்றோர்களையும்
வேழம்பலத்தை விட்டுப்பிடித்திடவே
சான்றோரடுக்கல் சாரவகையில்லாமல்
மீண்டகலத்தோற்று வெளியிலேநின்றிடவே
அப்போதுசோழன் அவனைகொண்டுவந்து
இப்போதுசான்றோரை ஏறிப்பிடித்தனனும்
சான்றோர்கள்சோழனையுந் தட்டப்படாதெனவெ
நன்றியுடனின்றார் நாடியவன்பிடித்து
குட்டையெடென்றிடவே கூடாதெனவுரைக்க
தட்டினன்வைகையிலே தலையைச்சான்றோர்தனக்கு
ஆனைதனைவிட்டு அரசனந்தச்சோழமன்னன்
சேனைத்தலைவர் சிறந்தசான்றோர்கள்தன்னில்
கொன்றானொருவனையும் குளக்கரையிலம்மானை
பின்னாலொருவனையும் பிடித்துக்கொடுவாருமென்றான்
குட்டையெடென்று கூறினன்மாபாவி
திட்டமுடனண்ட தெய்வகுலச்சான்றோர்
முன்னிறந்தமன்னனிலும் மோசமோநாங்களுந்தான்
இன்னமிந்தகுட்டை யாங்கள்தொடோமென்றனராம்
பின்னுமந்தச்சோழன் பிடித்தொருவன்றனையும்
கொன்றான்காண்வைகைதனில் குஞ்சரத்தைவிட்டிறடி
நன்றிமறந்து நாடாண்டசோழமன்னன்
கொன்றான்காண்ரண்டு குலதெய்வச்சான்றோரை
அப்போதுவித்தியாதா முனிவன்தானறிந்து
செப்போடுவொத்த திருமாலருகேகி
மாயவரேயும்முடைய மதலையேழுபேரில்
காயமழித்தான் கரிக்காலச்சோழனவன்
என்றபொழுது எம்பெருமாளப்போது
அன்றுபுட்டேயருந்தி அவளாலப்போல்கோலமது
கொன்றுகுமாரர்களைக் குசல்செய்ததும்பார்த்தது
அன்றுவைகையடைத்து அடிகள்மிகப்பட்டவரும்
ஸ்ரீரங்கந்தன்னில்ச் சிறந்தகோபத்தோடே
சாரங்கர்வந்து தானிருந்தாரம்மானை
மாகாளிதானறிந்து மக்களைத்தான்கொன்றதினால்
ஓகாளிசோழன் ஊர்வறுமையாகிடவும்
பன்னிரண்டாண்டு பாரில்மழைபெய்யாமல்
உன்னினுள்மனதில் உடனேமழைசுவறி
பெய்யாமல்சோழன் பேருலகம்பஞ்சமதால்

அய்யமதீயாமல் அறிவழிந்துவாடினனே
இறந்தசான்ரோர்களுட ஏந்திழைமாரெல்லோரும்
சிறந்ததவம்புரியச் சென்ருர்காணம்மானே
சென்றதவத்தின் செய்திகேளன்போரே
அழுக்குக்கலையணிந்து அந்தப்பொன்ருளாமல்
இழுக்குச்சொல்லீந்த ஈளன்பழிகொளவும்
இறந்தமன்னவர்கள் எழுந்திருந்தெங்களையும்
சிறந்தமனத்தோடு உடன்சேரவந்திடவும்
பழிசெய்தசோழனூர் பகல்நரியோடிடவும்
அழிவாகிச்சோழன் அவன்மாண்டுபோயிடவும்
வரந்தாருமென்று மாயவரைநெஞ்சில்வைத்து
பரமானபெண்கள் பாரத்தவசுநின்ருர்
இப்படியேமாதர் இங்கேதவசிருக்க
அப்படியேமாயன் அவர்ஸ்ரீரங்கமதில்
இருக்கும்பொழுது இரணியநீசக்கலியன்

## ஸ்ரீரங்கம்விட்டு சுவாமி அனந்தபுரமேகல்

கருக்காகலோகங் கண்டவிடமேபரந்து
ஸ்ரீரங்கமானதிலே சேர்ந்திருக்கும்வேதியர்கள்
நீதங்குழறி நெறிதவறிப்போனதினல்
முறைவைத்தபூசை முந்திமுறையெனவே
மறையவனும்பூச வந்தேமுகித்திடவே
பொருமல்மற்ருெருவன் பூசையெனக்கென்றுசொல்லி
மறவாதமாயவரை வணங்கிநிஷ்டைசெய்யவென்று
முப்பதுவேழ்வி மொகுமொகெனத்தான்வளர்த்து
இப்போநான்வீழ்வேன் இதில்மாயன்வாராட்டால்
என்றவன்யெண்ணி ஏற்றவோமம்வளர்த்து
அன்றவன்வீழ ஆர்ப்பரிக்குமவ்வளவில்
முறைவைத்தபூசை முந்திமுறையெனவே
மறையவனைமாயன் வந்தெடுத்துப்புத்திசொல்லி
நிறையொத்தமாயன் நெடுமறையோனைக்கூட்டி
ஸ்ரீரங்கம்விட்டுத் திருவனந்தம்நோக்கி
சாரங்கர்போகத் தானேகும்வேளையிலே
நன்ருனசேத்திரனும் நல்லமறைவேதியனும்
அன்றிளக்கிச்சென்று அரனர்திருக்கோயில்
வந்தபொழுது வானமதிலுள்ளோரும்
நந்தகோபால நாராயணரிடத்தில்
சென்றுதொழுது தேவரெல்லாந்தெண்டனிட்டு
இன்றுபெருமாள் இங்கேயெழுந்தருளி
வந்தவகையேது மாயவரேஎன்றுசொல்லி
அந்தமுனிதேவர்களும் அட்சுதரோடீதுரைக்க
நல்லதென்றுஅய்யா நாராயணர்மகிழ்ந்து
வல்லபரமேசுரரை மிகவாழ்த்தி
ஈசுரரேயெந்தனக்கு இங்கிருக்ககூடாமல்

தேசமதைப்பார்த்துத் திருவனந்தமேகி
இருக்கவேயென்று எழுந்தருளிவந்தேன்காண்
மருக்கிதழும்ஈசுரரே மாமுனிவர்தேவர்களும்
நீசனுய்த்தோன்றி நிரந்துபரந்திருந்த
தேசதிருவனந்தஞ் செல்லவகையேதுவையா
அல்லாமல்நீசன் அவனிடத்தில்போயிருந்தால்
எல்லாமவன்றனக்கு ஈடாகிப்போகுமல்லோ
கைவாய்த்ததென்று கலியவன்கொண்டாடி
பரிகாசஞ்செய்வானே பார்முழுதுமானீசன்
ஆனதாலங்கேக அச்சுதரேஞாயமில்லை
மானமழிந்தாச்சே மாகலியன்வந்ததினுல்
எல்லாங்கலியை ஈடழிக்கப்பாருமயா
இல்லையேயானுல் எங்களுக்கிங்கேதான்
சென்றயிடமெல்லாஞ் சிறைபோலிருக்குதையா
என்றுதான்தேவர் ஈசர்முதல்சொல்லிடவே
அன்றுமவர்களுக்கு அச்சுதருமேதுசொல்வார்
நன்றுநன்றுவானவரே நல்லபரமேசுரரே
கலியதுநீசம் காணேதுவையகத்தில்
சலிவேதுராச்சியத்தில் தானேதும்நானறியேன்
அனந்தபுரம்போக ஆதியிலெந்தனக்கு
தானந்தசுகமுனிவன் சாபமுண்டெந்தனக்கு
கொஞ்சநாளானுலுங் குடியிருக்கவேணுமங்கே
வஞ்சகங்களில்லாத மாயன்வழிகொண்டனராம்
ஈசர்தனையனுப்பி எம்பெருமாள் அச்சுதரும்
வாசமுள்ளசேத்திரனும் மறையவனுந்தேவர்களும்
சங்கமதுகூடித் தத்திதத்தியாய்வரவே
வங்கத்திருவனந்தம் வழிநோக்கித்தான்வரவே
வழியிலோர்அற்புதந்தான் மாயவனுர்கண்டுமிக
கழிகூர்ந்தவருடனே கட்டாகவேதுரைப்பார்
மாமுனியேதேவர்களே வழியிலொழுங்கொழுங்காய்
ஓ முனியேநின்றதையும் உரைப்பீர்காணென்றுரைத்தார்
அப்போதுமாமுனி அருணமுனிவனென்று
செப்போடுவொத்த திருமாலையும்பணிந்து
மாயவரேநான்முகனும் வாழும்பிரமமதில்
ஆயகலையிருள்சி அன்பத்தொருநான்கோர்
பிரமன்பிறப்பை புகுந்தெடுத்திவ்விருள்சி
வரமானபுத்தகத்தை மாருட்டஞ்செய்ததினுல்
அறிந்துவேதாவும் அவர்கள்தனையழைத்து
செறிந்தயிருள்சிகளைச் சிலைக்கல்லாய்ச்சாபமிட்டார்
அப்பொழுதிவ்விருள்சி அரனைத்துதிச்சாபம்
எப்பொழுதிச்சாபம் ஏகுமென்ருர்மாயவரே
வேதாதெழிந்து விஷ்ணுஸ்ரீரங்கம்விட்டு
தீதோர்திருவனந்தஞ் செல்லவரும்வேளையிலே
வந்துசிலைதனையும் மாயவனுர்தொட்டிடுவார்

சிந்துதிருக்கைதான் சிலைமேலேபட்டவுடன்
தீருமுங்கள்சாபமென்று சிவயிருள்சியாலுர்க்கு
பேருலகம்படைத்த பிரமன்விடைகொடுத்தார்
அந்தப்பொழுதில் அன்பத்தொருநான்குரிசி
இந்தக்கல்ச்சிலையாய் இவரிருந்தாரெனவே
மாமுனிவன்சொல்ல மாயவரும்நல்லதென்று
தாமுனிந்துகல்ச்சிலையைத் தான்தொட்டாரம்மானை
உடனேயிருள்சிகளாய் உருவெடுத்துமாலடியை
தடமேலேவீழ்ந்து தாணுவியேகுவித்து
அன்றுபிரமா அடியார்க்கிட்டசாபம்
இன்றகலவைத்து இரட்சிக்கவந்தவரே
எங்களுக்குநல்லகதி ஈந்துதாருமெனவே
திங்கள்முகமாயருட திருப்பாதம்போற்றிநின்றார்
நல்லதுதானென்று நாராயணர்பதத்தை
வல்லயிருள்சிகளே வாழ்வெங்கேவேணுமென்றார்
மேலோகவாழ்வு வேணுமோவல்லவென்றால்
பூலோகவாழ்வு போதுமோவென்றுரைத்தார்
அப்போதிருள்சியெல்லாம் அவனியிலெங்களுக்கு
இப்போவரங்கள்தந்து யேகவைத்தால்போதுமையா
நல்லதுதானென்று நல்லயிருள்சிகளும்
வல்லதிருமால் வரங்கொடுப்பாரம்மானை
பிச்சையதுவாங்கிப் பெருமையதாயருந்தி
மிச்சமதுவைக்காமல் விழிபரந்துபாராமல்
சீமைக்கொருயிருள்சி செல்லுங்கோவாண்டியென
தாழ்மைபரதேசி தாணுகவீத்திருந்து
பூசைபெலிகள் பீடமிட்டேராதிருந்து
ஆசைக்கருத்தை அறுத்துவொருநினைவாய்
மாசணுகாமல் மனதில்நமைத்துதித்து
வைகுண்டமென்று வையகத்தோர்வாழுமென்று
பொய்குண்டம்நீக்கிப் பூலோகமேயிருங்கோ
தந்தவரத்தில்த் தப்பிநடந்ததுண்டால்
வந்தங்கிருந்து வருத்தியுங்கள்தன்னையெல்லாம்
அவரவர்கள்செய்த அக்குற்றந்தான்கேட்டு
எவரெவர்க்குந்தக்க இயல்வேதருவோமென்றார்
நல்லதுதானென்று நாடியிருள்சியெல்லாம்
செல்லப்பரதேசிகளாய்ச் சென்றாரேசீமையிலே
இருள்சிகளைத்தானனுப்பி எம்பெருமாள்தான்மகிழ்ந்து
துருசமுடனனந்த சீமைநோக்கிநடக்க
தேவர்களும்வானவருஞ் செயசேயெனநடக்க
தாவமுடனனந்தம் தானேக்கிமால்நடக்க
அனந்தபுரம்நோக்கி அச்சுதனார்போகுகையில்
புனந்தனிலோர்பொருப்பும் பெண்போலுருகிடக்க
கண்டெம்பெருமாள் கால்கொண்டுதைத்திடவே
குன்றுபோலேயுடம்புங் குஞ்சரம்போல்கைகாலும்

துண்டுமலைபோல் துய்யமுக்குமுலையும்
வாய்கண்ணெருமலையாம் வயறுமூணுமலையாம்
கொண்டைபன்னிரெண்டு குறுக்கமுண்டன்போரே
பண்டேதிருமால் பம்பளித்ததாடகைபோல்
நின்றாளேயண்டபிண்டம் நிறைந்தசொரூபமதாய்
கண்டாரேயெம்பெருமாள் கனத்தவிசேடமென்று
தேவர்களேவானவரே சேத்திரனேவேதியனே
பாவலரேகல்த்தான் பரும்பெண்ணாய்வந்ததென்ன
சொல்லுவீரென்று திருமாலுரைத்திடவே
வெல்லும்புகழ்தேவர் விளம்புவாரம்மானை
ஏமனிணையான வெக்காளத்துர்கையிவள்
சுவாமிசிவனார்தன் வார்த்தையிவள்தட்டினதால்
கோபித்தவனைக் குன்றுபோல்சாபமிட்டார்
ஏகிவரும்போது இவள்தானும்ஈசுரரே
வணங்கியிச்சாபமெப்போது மாறுமென்றாள்மாயவரே
அணங்குக்குஈசர் அருளினதைக்கேளுமையா
அனந்தபுரந்தனிலே ஆனநதிமேலே
வனந்தமால்பள்ளிகொள்ள வருகின்றதவ்வழியில்
உன்சாபந்தீர்த்து உன்னைஉலகத்திலே
பின்சாபமிட்டுப் போகவிடைதருவார்
என்றுசிவமுரைக்க இப்படியேவந்தவளும்
குன்றுபோலேகிடந்தாள் குருவேயுன்பாதமதால்
அவள்சாபந்தீர்ந்து ஆயிளைபோல்வடிவாய்
இவள்தானும்வந்தாள் எனச்சொன்னார்தேவர்களும்
நல்லதென்றுநாரணரும் நாரிதனைக்கொண்டாடி
வல்லவளேயெக்காள மடந்தையேயுந்தனுக்கு
ஏதுனக்குவேணுமென்று என்னோடுகேளுமென்றார்
வாதுக்குவல்லவியாள் மாயருடன்கேட்பாள்
நாரணரேஐயாவே நாந்தான்முர்க்காலமதில்
பாரமுள்ளசெந்திருள்சிப் பாரியாய்நானிருந்தேன்
அப்போதுளந்தனக்கு அழகிதுவில்லைஐயா
செப்போடுவொத்த சிவகாமிபோலழகு
நன்றாகவென்னுடைய நல்லபர்த்தாவுடனே
ஒன்றாகவாழ்ந்து உறவாடிருக்கையிலே
என்பேரிலிச்சை ஏமன்மிகக்கொண்டாடி
வம்புசெய்தென்னுடைய மன்னவனைக்கொன்றான்காண்
ஆனதாலேமனுக்கு அழிவுவரவேணுமென்று
மானத்தவசிருந்து வருந்தினேன்ஈசுரரை
அப்போதுஈசுரரும் அடியாள்மனந்திருத்தி
இப்போதுஅந்தகனை இறக்கவைத்தால்ராச்சியத்தில்
நருள்பொருத்துப்பூலோக நாடுதரியாதெனவே
பொறுத்துக்கோகொஞ்சம் பூவையேயென்றுரைத்தார்
என்னைமனந்திருத்தி எமனோடேசேர்த்தாலும்
மன்னனைவதைத்ததுதான் மறவாமலெப்போதும்

திவசமொருநேரம் சிவனுரைதானேக்கி
பவதயியமனுக்குப் பகையாகக்கேட்டிருந்தேன்
ஆனதால்ஈசர் அறிந்தேயெனைநோக்கி
ஈனமுடன்பேசி இகழ்த்திஞர்ஈசுரரும்
கொஞ்சம்பொறுக்கவென்று கூறினேன்பெண்கொடியே
மிஞ்சவல்லோசெய்தாய் எனவெகுண்டாதிபரன்
மலைபோலுடம்பும் வயிறும்மிகப்பருத்து
அலைபோல்ப்பரந்த அங்கம்பெரும்புடமாய்
கல்லதுபோல்க்கிடந்து காலனைக்கொல்லுவகை
வல்லவகையாலும் வருந்திக்கோவென்றுசொல்லி
கோயித்தார்முன்னே குன்றுபோலேகிடக்க
சாபித்தாரென்னைச் சாமியுன்பாதமதால்
தோன்றினேன்என்சாபத் துயரறுத்தேன்மாயவரே
வீன்றியவந்தகனை வேருேடறுத்திடவே
வரந்தாருமையா மாயவரேயென்றுசொல்லி
சிரமுரத்தபெண்கொடியாள் தெண்டனிட்டாள்மாயவரை
அப்போதுமாயவரும் அவளைமுகம்நோக்கி
இப்போதுபெண்கொடியே யான்சொல்லக்கேட்டிடுநீ
அந்தகனைக்கொல்லவென்று அருந்தவசுபண்ணிடுநீ
வந்தயுகமாறி வலியபிலத்தர்மயுகம்
உதிக்கும்பொழுதில் உன்தவசின்படியே
சதிக்குகந்ததானுற் சண்டனழிவாகுமென்ருர்
அப்போதுபெண்கொடியும் ஆனதவம்வளர
இப்போவிடை அருளென்றேகேட்டுவேண்டியவள்
நின்ருள்தவத்தில் நீலியாய்ச்சண்டனுக்கு
வண்டுறியக்கன்னி மன்னன்பழிவாங்க
ஆதியைப்போற்றி அருந்தவசுபண்ணிடவே
சோதித்திருமால் திருவனந்தம்நோக்கி
நடக்கத்திருமால் நளினமுடன்மகிழ்ந்து
வடக்குக்கயிலாச வழியேவருகையிலே
தெய்வலோகத்திலுள்ள தேவாதிதேவர்களும்
வைகுண்டலோகமதில் வாழுகின்றதர்மிகளும்
சிவலோகம்வாழும் சிட்டர்முதல்வானவரும்
தவமானவேதச் சதுர்மறையோன்தன்னுகத்தில்
கருதிரிசிமுதலாய்க் கட்டாகநால்புவியில்
இருக்கின்றவானவர்கள் எல்லோருமெண்ணமுற்று
மானவரம்பு மகிமைகெட்டேகுமுன்னே
வானமதுவிட்டு வடகயிலைபோவோம்நாம்
கையிலைவரம்பழிந்து கட்டுமிகத்தப்பினதால்
அகிலமழிவதற்கு அடையாளமித்தனைதான்
அல்லாமல்குரோணிமுதல் அன்னீசக்கலியன்வரை
எல்லாஞ்சரியாகி எவ்வோர்களானுலும்
கல்லாதபொல்லாக் கலியனுடமாய்கையினல்
நல்லோராய்மேல்ப்பிறந்து நளினமுற்றுவாள்வீரென்று

வேதாகணக்கில் விதித்துரைத்தார்முன்னுளில்
நாதாந்தவேதம் நழுவிமுகப்போகாமல்
இப்படியேதேவர் எண்ணமுற்றுவாடினரே
முப்படியேயுள்ள ஊழிவிதியெனவே
கடைச்சாதியான கலிச்சாதியானதிலே
படைக்காமல்நம்முடைய பங்குவம்மிசத்தோராய்
ஒண்ணுமதுக்குலந்தான் உயர்தெய்வச்சான்ரூரில்
வண்ணமுள்ளவேதா மனுவாய்ப்பிறவிசெய்ய
ஒன்ருகநாமளெல்லாம் உகந்துதவஞ்செய்வோமென்று
நின்ருர்தவத்தில் நிறைவோன்பதம்போற்றி
தங்கள்குலமான சான்ருர்கள்தன்குலத்தில்
எங்கள்தனைப்பிறவி இப்போசெய்யவேணுமென்று
பிறந்திறந்தபோதும் பின்னுமந்தப்பிதிரில்
மறந்திடாவண்ணம் மனுவிலுதித்திடவும்
ஆதிமகாமூலத்து ஆதிநாராயணரே
நாதியாயெங்களையும் நாடிமிகவந்தெடுத்து
எங்கள்துயரம் எல்லாமவர்போற்றி
சங்கடங்களில்லாத தர்மபதியருளி
க்ரீடமுஞ்செங்கோலும் கீர்த்தியுள்ளமுத்திரியும்
வீரியமாய்த்தந்து மேலோகமும்மகிழ்ந்து
என்றுஞ்சாகமல் இருக்கும்பவிசுதந்து
மண்விண்புகழ வரந்தாருமென்றுசொல்லி
நின்ருரதையும் நெடியோனதையறிந்து
கொண்டாடியேதெனவே கூறிஞர்தேவருடன்
நின்றநினைவை நெடுமால்தனக்குரைக்க
அனறந்ததேவர்க்கு கலையாதபுத்திசொல்லி
நல்லதுகாண்தேவர்களே நாடுவதுகாரியந்தான்
வல்லதவசு மனம்பிரியாச்செய்யுமென்ருர்
அச்சுதருந்தானடந்து அனந்தபுரமேகுகையில்
பச்சுடம்பாய்நின்ற பசுவுமோரேந்திழையும்
நாராயணுவெனவே நாடித்தவமிருக்க
சீராய்த்திருமால் சிறந்ததவங்கண்டருளி
ஏதுபசுவே யேந்திழையேயுங்களுக்கு
நேதுவிலாவண்ணம் நெடுந்தவசுபண்ணினதேன்
அப்போதுபசுவும் அச்சுதருக்கேதுரைக்கும்
இப்போதுமாயவரே என்னுடையபுத்திரனை
கொல்லும்படியாய்க் கோதையிவள்தவசு
செல்லும்படியாய்ச் சிந்தைமிகக்கலங்கி
புத்திரனும்மாண்டால் பிள்ளையாயெந்தனக்கு
உத்திரக்கன்ருய் உடன்பிறக்கவேணுமென்று
நின்றேன்தவசு நீலவண்ணருண்டெனவே
என்றேபசுவும் ஈதுரைக்கயேந்திழையும்
நன்ருகபார்த்து நாராயணருரைப்பார்
ஒன்ருெடியேயுந்தன் உற்றவளக்கேயுரைநீ

அப்போதுபெண்கொடியும் அச்சுதரைத்தானேக்கி
செப்போடுவொத்த தேவியருஞ்சொல்லலுற்ருள்
ஐயாவேயெனக்கு ஆளானவீரனைப்போல்
மெய்யாயொருமதலே விமலனருளினர்காண்
ம்தலேவளர்ந்து வயதுபதினுலாகுகய்யில்
குதலேமொழிகேட்டுக் கொண்டாடிநான்மகிழ்ந்து
இருக்குமந்தநாளில் இப்பசுவின்புத்திரன்தான்
உருக்கமுடனென்பேரில் உள்ளாசைகொண்டான்காண்
அதட்டினேனுனதர்க்கு ஆகட்டெனவுறுக்கி
மதட்டிமதலேதனே மாளவைத்தான்மாபாவி
ஆனதினுலடியாள் தான்மெலிந்துதான்வாடி
போனேன்பிரமா பூசாந்திரக்கணக்கில்
உள்ளவிதியோ ஊழிவிதிப்படியோ
கள்ளக்கணக்கன் கண்மாயமோவெனவே
பார்த்தேன்மகன்ருன் படவிதியங்குமில்லே
ஆர்த்தேனுனகோபம் அக்கினிபோலேமீறி
சிவனுக்கபயஞ் செவியறியவிட்டேனுன்
இவளுக்குவேண்டி யேதுசெய்வோமென்றுசொல்லி
ஒருவரும்யென்னுடைய ஊழிவிதிகேள்க்கவில்லே
வருவதுவரட்டெனவே வந்தேதவசுநின்று
மகன்பழிதான்வாங்க மாயவரேயுன்னருளே
அகமிருத்திநானும் அருந்தவசுசெய்தேனே
என்றுரைக்கயேந்திளேயும் எம்பெருமாளேதுரைப்பார்
நன்றுநன்றுபெண்கொடியே நல்லதவம்புரிந்தால்
நினேத்தபடியே நிறைவேறுமென்றுரைத்து
கனத்தபசுவேநீ கட்டாய்த்தவமிருந்தால்
உந்தனக்குச்சித்திரனும் ஒருகன்ருய்த்தான்பிறந்து
எந்தமகனுர்க்கு யேவல்செய்யவைத்திடுவேன்
என்றுபசுவுக்கும் யேந்திளேக்குந்தானுரைத்து
அன்றுதிருவனந்தம் அவர்நோக்கித்தானடந்து
கேத்திரனும்வேதியனும் கிஷ்ணரடிபணிந்து
மூர்த்திகளுங்காணுத முதலேமுதப்பொருளே
உன்மகவாய்வந்துதித்த உயர்ந்தகுலச்சான்ருேர்
தன்மகவோரங்கே தவித்துமுகம்வாடிருக்க
நீசனுடகுடியில் நீர்போகக்காரியமேன்
தேசமெல்லாநீசனுட செய்திகேட்டேயிருந்தும்
போவதோதேவரீர் பொல்லாதவன்குடியில்
தேவரீரும்முடைய சிந்தையெள்ப்போலறியோம்
என்றுரைக்ககேத்திரனும் யேதுரைப்பாரெம்பெருமாள்
நன்றுநன்றுகேத்திரனே நான்சொல்லக்கேட்டுநீ
சான்ருேர்க்குபகாரம் தான்செய்யுமுன்னுகை
பொன்றுகலிநீசனுக்குப் புத்திசொல்லவேணுமென்றும்
அல்லாமல்க்குருேணி அவன்மாயயிவன்வரையும்
எல்லாந்தான்சொல்லுக் கிடறுவையாதபடி

சான்ரோர்கள்தன்னிடத்தில் சூங்கமாய்போயிருந்து
ஆன்ரோர்தானெங்களையும் அழியவைத்தீரென்றுரைப்பான்
ஆனதால்நானும் அதர்க்கிடைகள்வையாமல்
ஈனமுறுநீசன் இடம்போறேனென்றுரைத்தார்
அப்போதுகேத்திரனும் அன்பாய்மிகமகிழ்ந்து
செப்போடுவொத்த திருமாலைத்தொண்டனிட்டு
மாயனேயுந்தன் மகிமையதையாரறிவார்
ஆயனேவும்முடைய அளவறியக்கூடாது
என்றுகேத்திரனும் இயம்புவான் பின்னுமொன்று
மன்றுளையழந்த மாயத்திருமாலே
பூசைபுனக்காரம் பெரியதீபத்துடனே
நீசனுமக்கு நினைத்துநித்தஞ்செய்வானே
எத்தனக்கென்ன லெக்குக்குறியெனவே
சிந்தைதெளிந்து செப்பிவிடைதாரும்
என்றுரைக்கக்கேத்திரனும் யேதுரைப்பாரெம்பெருமாள்
இன்றுநீகேட்டதற்கு இயல்புரைக்கக்கேளு
கலிநீசன்மானிலத்தில் கால்வைத்தன்றுமுதல்
சலிவாகியென்மேல் தண்ணீரறியாது
எண்ணையறியேன் லட்சுமியைநானறியேன்
வண்ணத்துயிலறியேன் மறுபுடவைதானறியேன்
பூசையறியேன் பொசிப்பறியேன்பூவறியேன்
ஆசையறியேன் அக்கக்கிளையறியேன்
மெத்தையறியேன் மேவுஞ்சொகுசறியேன்
ஒத்தைபோலானேன் உட்கார்ந்திருக்கறியேன்
மேடையறியேன் மெல்லியரைநானறியேன்
வாடையறியேன் மகிழுஞ்சிரிப்பறியேன்
தோளழகைநானறியேன் சுருதிமொழியறியேன்
ஆளவைகுண்டம் அரசுமேடையறியேன்
இத்தனைகடானறியா தெண்ணமதுநானறியேன்
புத்தியுள்ளகேத்திரனே பூசைபூவேர்ப்பதெல்லாம்
மாயக்கலியறுத்து வாய்த்தநாடாள்வதற்கு
ஞாயமுள்ளபட்டம் நான்சூட்டித்தர்மமதாய்
இராட்சியத்தையாள வைத்தித்தனையுமேர்ப்பதல்லால்
அதற்குமுன்பூசை புனக்காரமுதலேப்பதில்லை
இதற்குமுன்னேப்பவர்கள் எனக்காகாதேபோவார்
என்றந்தக்கேத்திரனுக்கு இத்தனையுந்தான்கூற
அன்றந்தநீசன் அவ்வூரிலெம்பெருமாள்
நீசனிடத்தில் நீலவண்ணர்வந்ததுதான்
தேசமறியச் செச்சைப்புலச்சிகண்டு
ஒழித்தாரொருவிடத்தில் ஊர்தேசமுமறிய
விழித்தாள்புலச்சி விதமறிந்தெல்லோரும்
நீசனறிந்து நெருங்கமணிமேடைவைத்து
வீசைமுறுக்கி விசையாகவன்னீசன்
கோவில்சிவாலயங்கள் கொந்துக்கொந்தாயமைத்து

மேடைக்குக்கால்கள் மிகுத்ததங்கத்தால்நிறுத்தி
பாவித்துப்பூசை பண்ணத்துணிந்தனனே
வாடைகமகமென வாத்தியங்கள்நின்றதிர
தீபம்புலச்சித் தீவெட்டிதான்கொடுக்க
பாவக்குடும்பத்தோர் பண்ணினார்பூசையது
நம்பூரிவேதியர்கள் நாடியகமகிழ்ந்து
பம்பைபரத்தை பகட்டுக்கைகாட்டலோடு
நாடிமகிழ்ந்து நல்லவனந்தபுரம்
கோடிநூறாயிரம்போல் கூண்டரியதீபமோடு
தேடரியமாமறையோர் சிந்தைகளித்தேயிருக்க
நாடதிகமாகி நல்லவனந்தபுரம்
மாதமும்மாரி வருசிக்கத்தான்பொழிந்து
வாரமுடன்சென்னல் மாறுமலேவிளைந்து
தென்னங்குலைசிதறித் தேர்ப்போலலங்கரித்து
என்னென்னபவுசி யெல்லாமிகப்பெருத்து
ஒப்பில்லாத்தேசம் உற்றஅனந்தபுரம்
செப்பத்துலையாது சிறந்தபெருமையது
நன்றாகச்சீமை நாடோறுமேவாழ்க
அன்றுஸ்ரீரங்கர் அங்கேயகமகிழ்ந்து
நீசன்நினைத்த நினைவுபோலெம்பெருமாள்
தேசப்பவுசுஞ் சிறப்புமிகக்கொடுத்து
நீசன்றனக்கெதிரி நீனிலத்திலையென்று
தோசக்கலிபுவியைச் சூட்டியரசாளுகையில்
மதலையதில்லாமல் மனஞ்சலித்துமானீசன்
குதலையினேதுவினால் கொஞ்சஞ்சடைவாகி
ஆதித்திருமால் அடியைமிகப்போற்றி
சோதியேயெந்தனக்குச் சிறுவனென்றுதாருமென்றான்
அப்போதுநாராயணர் அகமகிழ்ந்துகொண்டாடி
இப்போதுந்தனக்கு இங்கிருந்தால்மதலை
கிட்டாதுகாசிதனில்க் கீர்ந்தநதிக்கரையில்
திட்டமுடன்தவசு செய்யப்போயங்கிருந்தால்
மதலையு துயரம் மாறுங்காணுந்தனுக்கு
மதலைமொழிநீசனுக்குப் பகர்ந்தார்காணம்மானை
கேட்டந்தனீசன் கெட்டிதானென்றுசொல்லி
நாட்டுக்குச்சீட்டெழுதி நருட்களையுந்தான்வருத்தி
போனானேனீசன் புகழ்பெரியகாசிதனில்
சேனைபதிகள் திக்கெங்குஞ்சூழ்ந்துநிற்க
நீசன்றவசு நிற்கவொருமறையோன்
வாசக்குழலோடு மருவினன்காணம்மானை
கண்டந்தனீசன் காமம்பொறுக்காமல்
தண்டுமீறிக்காமஞ் சலத்தில்விழுந்ததுவே
இரைநமக்கென்று எட்டிவொருகொக்காவி
விரைவாய்விழுங்க மிகுத்தகெர்ப்பமுண்டாகி
தண்ணீரில்பிள்ளை தான்பெற்றுதம்மானை

வெண்ணிறமான மிகுத்தபிள்ளைதாமிதந்து
போகும்பொழுதில்ப் புனலரிசிமாமுனிவன்
தாபமுடன்சிசுவைத் தானெடுத்தாரம்மானை
மதலைதனையெடுத்து வளர்த்துப்பருவமதில்
குதலைதனையாற்றில் குழியோடனீச்சலதும்
தோணியேறுந்தொழிலும் சுருக்குக்கப்பலேற்தொழிலும்
ஆணிப்பொன்முத்தும் அதுவளருந்தலமும்
வெள்ளித்தலமும் மிகுந்தபொன்தலமும்
உள்ளவித்தையான உற்றரசவாதமுதல்
கள்ளவுபாயக் கபடுபலதந்திரமும்
வெள்ளைநீசனுக்கு விதமாய்வரவருத்தி
செங்கோமட்டியெனத் தேசகசுருணிகளில்
பெண்கள்ரண்டுபேரைப் போய்மணமுகித்து
இருத்தினன்மாமுனிவன் ஏற்றசெங்கோமட்டியில்
பருத்தவெள்ளைநீசன் பண்பாகவங்கிருக்க
நின்றதவசு நெறியழிந்துமானீசன்
அன்றந்தப்பாவி அனந்தபுரம்வந்தனனே
வந்துசடைவாய் மானீசன்ருனிருக்க
சந்துபயில்மாயவரும் தானறிந்தேதுரைப்பார்
மன்னவனேயுந்தனக்கு மதலையதுகிட்டினதோ
என்னவிதங்காண் ஏகிவந்ததென்றுரைத்தார்
அப்போதுநீசன் அவனேதுசொல்லலுற்ருன்
இப்போதுமாயவரே யான்தவசுநிற்கையிலே
மறையவனுந்தேவியோடு மருவினதைக்கண்டாவி
இறையவரேயெந்தனக்கு இந்திரியந்தானிளகி
ஆனதாற்றவசு அழிந்தேனதினுலே
ஈனமுடன்மதலை இல்லையென்ருரீசுரரும்
மதலையில்லாதேதிருந்தால் வையகத்துக்கேராது
குதலையல்லோவேணும் குவலயத்தையாழுதர்க்கு
செங்கோலரசு செலுத்தியரசாளுதர்க்கு
முன்கைசிதைத்து முறைக்கருமம்செய்திடவும்
பிள்ளையில்லாதேயிருந்தால் போதுமோபுண்ணியரே
வள்ளலந்தமாலும் மறுத்துரைப்பாரம்மானை
சொந்தமுள்ளசோதிரியைச் சுருக்காய்வரவழைத்து
உந்தனக்குப்பிள்ளை உண்டோதானில்லையென்று
வருத்திக்கேள்போ வகைசொல்வான்சோதிருள்சி
பொருத்தமாயவன் புகன்ருரேனீசனுக்கு
நல்லதென்றுவேதியனை நாடியவனழைத்து
சொல்லவென்றுநீசன் தொகுத்தவனேடேகேள்க்க
அப்போதுசோதிருள்சி அன்னீசனைப்பார்த்து
இப்போதுகேளுநீ ஆகமத்திலுள்ளமுறை
பெற்ருலுஉன்மகவு பேருலகமாளாது
மற்ருேர்பெற்றுன்மருகன் வாழுவான்வையகத்தை
என்றேதான்சாத்திரமும் இசையுதுகாண்மன்னவனே

அன்றேதான்சோதிரியும் அன்னீசனுக்குறைத்தான்
நல்லதென்றுநீசன் நாடியகமகிழ்ந்து
வல்லவகையாலும் வைத்தபங்குகிட்டுமென்று
சோதிரியைத்தானனுப்பி துயர்நீங்கியேயிருந்தான்
ஆதிமுறைப்படியே அவன்மருகன்றனக்கு
பட்டந்தானென்று பறைசாத்தியாண்டிருந்தார்
திட்டமுடனீசன் தேசமதையாளுகையில்
முன்னீசன்விந்தில் உதித்துவந்தேயிருந்த
அன்னீசனுன வசுபக்கிரிவளமை
சொல்லவேநாதன் தொகுத்துக்கேளன்போரே
வல்லசெங்கோமட்டி வையத்திலன்னீசன்
வெள்ளிமலைமிகுத்தத் தங்கப்பொன்மலையும்
கள்ளமில்லாவாதங் கைகண்டவித்தையதாய்
நிதியில்ப்பெருத்து நெருங்கப்படைகூட்டி
பரியானைஒட்டகங்கள் பலபடைகள்சேகரித்து
ஆளும்படையும் ஆயுதங்கள்அஸ்த்திரமும்
வேழும்பெரிய வெகுவாணுபங்கூட்டி
தன்னுேடினங்கள் சதாகோடியாய்ப்பெருத்து
என்னுேடெதிர்க்க யாதொருவரில்லையென்று
அவர்தானொருவேதம் ஆகமங்கடான்பிரித்து
எவர்தானெதிரி என்றெண்ணமுற்றிருக்கையிலே
நச்சேத்திரத்தை நகட்டிருபத்தேழாக
வைத்தானேமாதம் வருசமதுமாருய்
முன்னீசன்வைத்த முறமையிலுங்கூட்டி
பின்னந்தனீசன் பிரித்தானென்றேத்தமுடன்
அரிநமாவென்ற அச்சரத்தைவிட்டவனும்
வீரியாயநுதியென விளம்பினுன்வையகத்தில்
இப்படியேவைத்த இவன்வேதமானதற்கு
அப்படியேமற்றேரை அகப்படுத்தவேணுமென்று
பணமானதைக்கொடுத்துப் பகட்டினன்மானிடரை
சிணமாகமானிடவர் சேர்ந்தாரவன்வேதமதில்
இப்படியேவேதம் மொன்றிவன்பிலத்தாலுண்டாக்கி
அப்படியேதானிருக்க அவனேதுதானினைப்பான்
ஆணுவங்கள்சேனை ஆயுதங்கள்வெகுவாய்
ஆணுபங்கள்ரெம்ப வம்மிசத்தோரெம்பரெம்ப
படையாலுமற்றொருவர் பணத்தாலும்நம்மையுந்தான்
தடைசெய்துநம்மைத் தடுப்பவராரென்றுசொல்லி
ஆரெதிரியென்று அவன்பார்த்திருக்கையிலே
பூராயமாயொருதன் போதித்தானவன்றனக்கு
சோழனென்னுஞ்சேரனென்னுஞ் துய்யபாண்டியனென்னுஞ்
வேழமுடிமன்னர் விபரீதமாயாண்டிருந்த
தேசமதன்பத் தாறுண்டுசெந்துரையே
வாசமுடனுண்டு வகையாயிருக்கையிலே
வேசையொருதாதி விழிநுதலாள்தன்வயிற்றில்

பேசரியவோர்மதலை பிறந்ததுகாண்மாயமுடன்
மதலைபிறந்து வையத்திலேயிருந்து
குதலைவளர்ந்து குடுமிவளர்கையிலே
சேரனுக்குஞ்சோழனுக்குஞ் சிறந்தபாண்டியனுக்கும்
வாரமுள்ளதெய்வ மாதருடசாபமதால்
அவர்கள்கிளையிறந்து ஆணுவங்கள் தானழிந்து
இவர்களும்போய்க்கடலில் இருந்தார்கள்கல்லெனவே
ஆனதினால்மூன்று அவனிதனையாளுதற்கு
மானமுள்ளபேர்கள் மறுத்தேதானில்லாமால்
மாயமுடன்தாதி மகன்றானும்சீமைதன்னை
ஞாயமில்லாவண்ணம் நாடாண்டிருந்தனனே
சென்றால்த்தானந்த சீமைநமக்காகுமென்று
அன்றேதான்சொல்ல அவன்கோபத்தால்வெகுண்டு
வந்தானேயந்த மானீசன்றன்பேரில்
செந்தாரமாயன் சேனைவருவதையும்
அறிந்தேநீசனுக்கு அச்சுதரும்சொல்லலுற்றார்
வெறிந்தமுள்ளநீசன் வேண்டும்படைகூட்டி
நசுறுணியான நல்லவெண்ணீசனுக்கு
திசுவானமானீசன் திருமாலின்றன்னருளால்
எற்றுக்கொடாமல் இவன்வெற்றிகொண்டனனே
மற்றுமந்தனீசன் மாறியவன்போயிருந்தான்
அப்போதுஇருந்த வன்னீதமானீசன்
இப்போதுபடையை யாம்வெற்றிகொண்டோமென்று
கோட்டைபின்னுமிட்டுக் கொடியவிருதுகெட்டி
தாட்டிமையாயுலகில்ச் சட்டமதுவைத்தனனே
வைக்கும்பொழுதில் மாயவரைத்தானோக்கி
செய்க்கும்பெரிய திருமாலேயெந்தனக்கு
கைக்குள்ளேயேவல் கருத்தாகச்செய்வதற்கு
மெய்க்குணம்போலுள்ள விதமானசாதியொன்று
வருவித்தெந்தனுட மணிவாசல்காத்திருக்க
தருவித்துநல்ல சாதியொன்றென்றுரைத்தான்
அப்போதுமாயன் அதற்கேதுசெய்யலுற்றார்
இப்போதுஉந்தனுக்கு யேவல்த்தொழில்கள்செய்ய
ஆகின்றபேரை அழைத்துக்கோவென்றுரைத்தார்
வேகுன்றநீசன் விளம்புவான்மத்தருடன்
ஆரைக்கொடுவரலாம் அருகிவிட்டுவேலைசெய்ய
ஏரையொத்தமன்னவரே இயம்புமெனக்கேட்டனனே
அப்போதுமந்திரிகள் அன்னீசனுக்குரைப்பார்
இப்போதுவேறொருவர் இருந்தாலாகாதெனவே
நல்லவகையான நாடுஞ்சான்றோர்களைத்தான்
வல்லவகையாலும் வருவித்துரைப்பீரால்
ஆகுமந்தச்சாதியென்று அன்னீசனுக்குரைத்தார்
வேகும்பொழுதில் வெற்றிச்சான்றோர்கள்க்கு
ஆள்விட்டுவருத்தி அதிகநிதிகொடுத்து

வாள்கொடுத்தாயுத பாணிமிகக்கொடுத்து
சட்டைகுல்லாக்கொடுத்துத் தலைப்பாமிகக்கொடுத்து
பட்டயமுங்கொடுத்து பாரயிறைகூலிவிட்டு
வாசல்மணிமேடை வகையாகக்காரெனவே
வாசமொழிக்கலியன் மாய்கையால்சான்றோர்கள்
ஊழிவிதியாலுடையோனை நெஞ்சில்வைத்து
காளிவளர்த்த கண்மணிகள்காத்திருந்தார்
அப்படியேகாத்திருந்தவர் வருகும்வேளையிலே
முப்படியேவந்த முழுக்கலியன்றேசமதால்
அந்தநீசன்றனக்கு அழிவுவரும்வேளையிலே
இந்தசான்றோர்கள் இவர்தூக்கம்வைத்திடவே
நீசன்வம்சத்தோர் நேர்கூறேயறிந்து
வாசமிட்டுனீசனையும் வதைத்தாரேயவ்வினத்தோர்
சீவன்போகும்வேளை செப்புவாள்சாபமொன்று
காவலாய்நீரிருந்து காட்டிக்கொடுத்தீரென்று
சாபித்தான்சான்றோர்க்கு சத்தியில்லானீசன்
என்குடும்பத்தோர்கள் இராச்சியத்தையாளுமட்டும்
உன்குடும்பத்தோர்கள் ஊழியங்கள்செய்துமிக
அழுந்தப்படுவாரெனவும் அன்னீசன்சான்றோர்க்கு
விழுந்தமொழியாய் விரைந்துரைத்தானேனீசன்
சொல்லியந்தனீசன் சோர்ந்திறந்தானவனும்
வல்லியுடன்பிறந்த மகன்தேசமாண்டிருந்தான்
நீசனுடசாபம் நீனிலத்தில்சான்றோர்க்கு
மாயவலையாய் வளைந்ததுகாண்அன்போரே
தேவரிதையறிந்து திருமாலிடமேகி
மேவலர்கள்வந்து விளம்பிறைப்போது
மாயவரேயெங்கள் வழியிலேவாழ்சான்றோர்க்கு
பாவனீசன்சபித்த பழிச்சாபம்கேட்டீரே
சாபதுல்பமெல்லாம் தானுரைத்தாரச்சுதர்க்கு
தாமத்திருமேனி தானுரைப்பார்தேவர்க்கு
மன்னதியதேவர்களே வாய்த்தபுகழ்சான்றோர்க்கு
அன்னீசன்சாபம் அதுவுங்குறிதான்காண்
வம்புள்ளனீசன் வழக்கெல்லாமேப்பதற்கு
அன்புள்ளசான்றோர்க்கு அவனிட்டசாபமது
எத்தனைக்குத்தம் இவர்செய்துபோட்டாலும்
அத்தனையும்நீசன் அவனேக்ககாரியந்தான்
நல்லதுகாண்தேவர்களே நாடும்சான்றோர்களுக்கு
தொல்லைவந்தாலுந்தீரத் தொகைவைத்தலக்குமுண்டு
சோழனுக்குசான்றோர் செய்தநன்றிமெத்தவுண்டு
வேழமிட்டிருபேரை வெட்டினன்பாரறிய
நீசனுக்குச்சான்றோர் நித்திரைகளில்லாமல்
வாசல்நடைகாத்ததற்கோ வலுதுயரச்சாபமிட்டான்
எல்லாம்அறிவார் ஈசர்முதல்லோகம்வரை
வல்லாமையான வாய்த்ததேவாதிகளே

நாமென்னசெய்வோம் நாட்டில்விதிவந்ததற்கு
போமென்னதேவருக்கு பெரியோன்விடைகொடுத்து
மாயவருமங்கே மனஞ்சடைத்துத்தானிருந்தார்
மாயக்கலினீசன் வையகத்தையாண்டிருக்க
நீசனிட்டசாபம் நீதிச்சான்றோர்களுக்கு
மாயவினைபோலே வழைந்ததுகேளன்போரே
தம்பிதமயனுக்குச் சத்துருபோல்தானாகி
வம்புக்குங்கோழு மானீசனோடுரைத்து
அடிக்கவேகைக்கூலி அவனுக்கேதான்கொடுத்து
முடிக்கும்வரையும் முறைமுறைகோள்ச்சொல்லிடுவான்
இப்படியேசாள்றோர் இவர்கள்நினைப்பில்லாமல்
அப்படியேனீசன் அன்னீதத்தால்வேறாய்
பிரிந்துதான்சான்றோர் பெருத்தகிலேசமுற்றார்
அறிந்துதான்ஈசர் அவர்க்குத்தொகாச்செனவே
தாலிக்குவாயம் சருகுமுதலாயம்
காலிக்குவாயம் கம்புதடிக்காயம்
தாலமதேறுஞ் சான்றோருக்காயம்
தூலமுடனருவாள் தூருவட்டிக்கேயாயம்
தாலமதுக்காயம் தரணிதனிலேவளர்ந்த
ஆலமரம்வரைக்கும் அதிகயிறைவைத்தனனே
வட்டிக்குமாயம் வலங்கைச்சான்றோர்கருப்புக்
கட்டிக்குமாயங் கடுநீசன்வைத்தனனே
பாழிலேச்சான்றோர்க்குப் படுனீசன்கொள்ளுகின்ற
ஊழியங்களெல்லாம் உரைக்கக்கேளன்போரே
பனைகேட்டடிப்பான் பதனீர்கேட்டேயடிப்பான்
கனத்தகற்கண்டு கருப்புக்கட்டிகேட்டடிப்பான்
நாருவட்டியோலை நாள்தோறுங்கேட்டடிப்பான்
வாதுக்குநொங்கு வாய்கொண்டுகேட்டடிப்பான்
நெடுமட்டைகேள்ப்பான் நெட்டோலைதான்கேள்ப்பான்
கொடுவாவெனவே கூள்ப்பதனிகேட்டடிப்பான்
சில்லுக்கருப்புக்கட்டி சீரகமிட்டேவூற்றி
கொல்லைதனில்ச்சான்றோரை கொண்டுவாவென்றடிப்பான்
மீச்சுக்கருப்புக்கட்டி மிளகுபலகாரமிட்டு
வீச்சுடனேகொண்டு வீட்டில்வாவென்றடிப்பான்
வட்டிக்கருப்புக்கட்டி மணற்கருப்புக்கட்டியோடு
வெட்டக்கருப்புக்கட்டி வெண்கருப்புக்கட்டியோடு
தோண்டிக்கும்பாய்க்கும் சுமடதுக்குமோலை
வேண்டியதெல்லாமெடுத்து விரைவில்வாவென்றடிப்பான்
காலைப்பதனீர் கண்முத்தாநொங்குகளும்
மாலைப்பதனீர் வற்றக்காயும்பதனீர்
கொதிக்கும்பதனீர் கொண்டுவாவென்றடிப்பான்
விதிக்குகந்தசான்றோர் விரைவாய்க்கொடுத்திடவே
இத்தனையும்வேண்டி இவன்கொண்டுபோனாலும்
பத்தியுள்ளசான்றோர்க்குப் படுந்துயரமாறாதே

பணையிலுள்ளவஸ்துபலநாளுமிப்படியே
விணைகொண்டபாவி வேண்டியவன்போனாலும்
சான்றோர்க்குநன்மை சற்றுசெய்யவேணுமென்று
மாண்டோர்கணீசன் மனதில்வைக்கமாட்டேனே
உய்கொண்டசான்றோர் உடம்புருகுந்தேட்டையெல்லாம்
நொய்கொண்டநீசன் நோகப்பறித்தானே
இப்படியேசான்றோர் இவர்தேடுந்தேட்டையெல்லாம்
அப்படியேனீசன் அவன்பறித்துத்தின்றாலும்
ஞாயமுள்ளசான்றோர் நாமமதுகேட்டதுண்டால்
நீயகுலத்தோர்விரட்டி நெடுந்தூரம்கொண்டடிப்பான்
பின்னுமந்தசான்றோரைப் பொல்லாதான்கொள்ளுகின்ற
அன்னீதமெல்லாம் அருளக்கேளாயிளையே
உப்பாலுவரா உபயமெடுத்தவரை
ஒப்பமுள்ளசான்றோரை ஊழியங்கள்கொண்டடிப்பான்
குளம்வெட்டச்சொல்லி கூலிகொடுக்காமல்
களம்பெரியசான்றோரைக் கைக்குட்டைபோட்டடிப்பான்
சான்றோர்கள்தன்பணையில்த் தான்முளைத்தவோலையெல்லாம்
வீணாகநீசன் வெட்டித்தாவென்றடிப்பான்
வெட்டிக்கொடுத்தாலும் வெற்றியுள்ளசான்றோரை
கட்டிச்சுமவெனவே கைக்குட்டைபோட்டடித்து
சுமந்துபோனாலுந் தொகையெண்ணமுங்கேட்டு
பவந்துமொழிபேசிப் பணமும்மிகக்கேட்டடிப்பான்
அய்யோசான்றோரை அன்னீசன்செய்ததெல்லாம்
வையமதுகொள்ளாதே மாதேவுன்னோடுரைத்தால்
ஈசருக்கும்வேதா இவர்களுக்குந்தேவாதி
வாசமுடன்பதறி வணங்கிநின்றவேலையைப்போல்
நேசமுள்ளசான்றோர் நெடுநாளுமேபதறி
நீசனுக்குச்செய்த நிதவேலையொக்குமல்லோ
ஈப்புலிபோல்னீசன் ஈயைப்போலேசான்றோர்
நாய்ப்புலிபோல்னீசன் நல்லாடுபோல்சான்றோர்
கீரியைப்போல்நீசன் கிருணம்போலேசான்றோர்
பாரியைப்போல்நீசன் படுத்தினான்சான்றோரை
பண்டுநீசன்சபித்த படுசாபந்தன்னாலே
விண்டுரையாவண்ணம் விசையடக்கித்தாழ்ந்திருந்தார்
இப்படியேவூழியங்கள் எண்ணலெக்கில்லாதபடி
அப்படியேசான்றோர் அவனூழியங்கள்செய்து
அல்லாமல்நீசன் ஆர்க்கமுள்ளசான்றோர்க்கு
வல்லாண்மையான வரிசையிறைகள்வைத்து
கரியிறைபாட்டவிறை கண்டபாட்டவிறையும்
தரிசிறைகாணாத தறைபாட்டவிறையும்
ஆமிசங்களில்லாத அன்நீதவம்பிறையும்
நேமித்துவைத்த நிலையுள்ளசான்றோரை
அடித்துக்கைகெட்டி ஆண்பெண்வரைக்குமிட்டு
இடித்தடைத்துப்பட்டினிகள் இரவுபகல்போட்டு

பெண்ணுனுடைய பெருமைமிகக்குலேத்து
மண்ணுண்டசான்ருேரை வரம்பளித்துமாநீசன்
சான்ருேரைக்கண்ணில் தான்காணஒட்டாமல்
வீணுட்டஞ்செய்து விரட்டியடித்துமிக
பம்பழித்துச்சான்ருேரை பலசாதியின்கீழாய்
தும்பழித்துவேலே தூறுபடக்கொண்டனனே
பறையன்புலேயன் பகல்வரான்போகுமிடம்
மறையொத்தசான்ருேர் வந்தால்பிழையெனவே
மூக்காலிகட்டி முதுகிலடித்துமிக
மிக்கானபொன்பணங்கள் வேண்டினுன்பிழையெனவே
சான்ருேர்தன்வஸ்து தரணிதனக்குயிராய்
ஆளுலுஞ்சான்ருேர்க்கு அடியொருநாள்மாருது
கோவில்சிவாலயங்கள் கூடஞ்சிங்காசனங்கள்
நாவுலகுங்கள்ளாய் நாடியிருந்தாலும்
சாணுன்கள்ளேறியெனச் சண்டாளநீசனெல்லாம்
வீணுகச்சான்ருேரை விரட்டியடிப்பான்காண்
சாணுடம்புகொண்டு தரணிமிகஆண்டாலும்
வீணுடம்புகொண்டு விரித்துரைத்தேபாராமல்
சாணுன்சாணுனெனவே சண்டாளனீசனெல்லாம்
கோணுதுளத்தோரைக் கோட்டிசெய்தேயடித்தான்
தரணிதனில்வந்து தலேயெடுத்தயாவருக்கும்
மரணம்வரைக்கும் வந்துதித்தவன்றுமுதல்
சேனேமிகவூட்டுதற்குந் தெய்வச்சான்ருேரமுர்தம்
ஈனமதில்லாமல் யாபேர்க்குமீந்தாலும்
பொல்லாநீசன் பொறுதியுள்ளசான்ருேரை
கல்லாதான்கூடிக் காணவிடாதேயடித்தான்
நீசன்குடியிருக்க நிறைந்தமணிமேடையெல்லாம்
வாசமுடன்சான்ருேர் வஸ்துவல்லாலாகாது
அப்படியும்சான்ருேர் அவருதவிசெய்திடினும்
எப்படியும்சான்ருேர் இடுக்கமதுமாறவில்லே
எவரெவர்க்குஞ்சான்ருேர் ஈந்துமிகவந்தாலும்
அவர்களுக்குநீசன் அனுப்போலுறவுமில்லே
பாலதியசான்ருேர் படுந்துயரங்கண்டிருந்து
மாலதிககோபமுடன் மாநீசனேப்பார்த்து
கேளடாசூத்திராவுன் கிளேயோடேமாழுதற்கு
வாழடாசான்ருேரை வம்புசெய்துவாறதுதான்
உந்தனுக்குமுன்கிளேக்கும் உள்ளோர்க்குநாடோறும்
எந்தனுக்குநன்மை இன்பமுடன்செய்துவரும்
சான்ருேரைநீயுந் தடிமுறண்டுசெய்கிறது
வாணுள்க்கிடறு வருமடாமாநீசா
முன்யுகத்தல்கேளு முகமைந்துகொண்டோனும்
உன்னேடுபிறவி ஒருயேழுவுண்டுமடா
ஒண்ணும்யுகத்துக்கு உற்றகுருேணியடா
மண்ணெல்லாங்குருேணி வந்தெடுத்துமூங்கையிலே

பூதக்குருமுனிவன் புத்திசொன்னனவ்வுகத்தில்
நீதமுடன்கேளாமல் நீசனவன்மாண்டான்காண்
அடுத்தயுகமதில் குண்டோமசாலினுக்கு
கடுத்தமுள்ளகோவிரிசி கரியபுத்திசொன்னன்காண்
கேளாதேமாண்டான் கிளையோடேயன்நீசன்
பாளாகிபின்னும் பதிந்தமூன்றும்யுகத்தில்
மல்லோசிவாகனென்று வந்தயிருவருக்கும்
நல்லபலரோமரிசி நாடிமிகப்புத்திசொன்னன்
கேளாதேமாண்டான் கிறேதாயுகந்தனிலே
தாளாதசூரபர்ப்பன் தம்பியவன்றனக்கு
வீரவாகுதேவர் விரைந்துமிகப்புத்திசொன்னர்
தாராமலச்சூரன் தன்கிளையோடேமாண்டான்
அவ்வுலகத்தில்வந்த அசுரனிரணியர்க்கு
செவ்வுகத்தசிங்கஞ் செப்பினதேபுத்தியது
சற்றுமவன்கேளாமல்த் தான்மாண்டானவ்வசுரன்
பத்துத்தலையான பாரவரக்கன்றனக்கு
தம்பிவிபீசணனும் தான்சொன்னன்புத்தியது
வம்பிலவன்கேளாமல் மாண்டான்கிளையோடே
பின்னுந்துரியோதனனைப் பிறந்தான்மறுயுகத்தில்
மன்னுகந்தவீஷ்மரும் வாழ்த்திமிகப்புத்திசொன்னன்
கேளாமல்மாண்டான் கேடுகெட்டமாபாவி
தாளாமலுந்தனுக்கு தர்ச்சொரூபத்தோடிருந்து
நாராயணராய் நானுதித்துந்தனக்கு
சீரானபுத்தி செப்புகிறேன்கேளடவா
உன்கிளையும்நீயும் உற்றூர்பெற்றூர்களுடன்
தன்கிளையோடேநீயுந் தரணியாளவென்றால்
சாதிதனிலுயர்ந்த சான்றோரவர்களுக்கு
நீதியுடனிறைகள் இல்லாமல்நீக்கிவைத்து
ஊழியமுந்தவிருநீ உலகாளவேணுமென்றால்
அல்லாமல்சான்றோரை அன்னீதமாயடித்தால்
பொல்லதநீசா புழுக்குழிக்காளாவாய்
கற்புள்ளசாணுத்தி கதறியுன்னைச்சாபமிட்டாள்
அப்படியுமுன்கோட்டை அழிந்துபொடியாகுமடா
சாணுத்தியுன்னைச் சாங்கமுடன்சபித்தால்
வாணுளழியுமுந்தன் வம்மிசங்கடான்முடியும்
தீத்தனலில்விந்து சிக்கிமிகப்பிறந்த
பார்த்தன்வழிகுலங்கள் பகைத்துனைநிந்தித்ததுண்டால்
கோட்டையிடியுமடா கோத்திரங்கடான்முடியும்
நாட்டைமுடிக்குமடா நல்லசாணுத்திகற்பு
சேனையழியுமடா உன்செல்வமதுகுன்றுமடா
வானமிடிந்து உன்வம்மிசத்தைக்கொல்லுமடா
திடம்பெரியசாணுத்தி தினமுனைநிந்தித்ததுண்டால்
கடல்வந்துன்சீமைதனைக் கட்டாயழிக்குமடா
ஊக்கமுள்ளசான்றோர்க்கு ஊழியங்களில்லையென்று

ஆக்கமுடன்பறைதான் அடித்தவனிதானறிய
அல்லாதேபோனல் அரசாளமாட்டாய்நீ
நல்லானசான்ருேர்க்கு நாட்டுமிறைதவிர்த்து
இறைகூலிதானம் இட்டுக்கொடுத்தவர்க்கு
தறைமீதுநன்ருய்த் தழைத்திருக்கவைக்காட்டால்
குஞ்சரமுமுன்னுடைய கொத்தளமுந்தானிடிந்து
வஞ்சகமாயுந்தனக்கு வலியகர்மஞ்சுற்றுமடா
கர்மவியாதிகளாய்க் கண்டமாலையுடனே
வறுமைவந்துசிக்குமடா மானீசாநீகேளு
தெய்வச்சாணுத்தி தினமுனைநிந்தித்ததுண்டால்
பொய்வகையால்க்கர்ம போகத்தால்நீமடிவாய்
என்றுநாராயணரும் ஏற்றபுத்திசொல்லிடவே
அள்றந்தநீசன் அதுக்கேதுசொல்லலுற்ருன்
மாயவரேகேளும் வாய்த்தசான்ருேர்களைத்தான்
ஆயரேநீரும் அபுருவமாய்ச்சொன்னீரே
சாதிகள்க்கீளான சாணுர்கள்தங்களுக்கு
வீரியமாயித்தனையும் விபரித்துச்சொன்னீரே
சாணுர்க்குவைத்த தலைவீதமுள்ளயிறை
என்வாணுலழிந்திடினும் மாற்றிவைக்கப்போறதில்லை
என்சீவனுள்ளளவும் ஏற்றசாணுன்றனக்கு
வன்பானவூழியங்கள் மாற்றிநான்வைப்பதில்லை
நீர்தானுமிந்த நிலைபெயர்ந்துசாணுரின்
ஊரானதிலே உறைந்திருக்கப்போனலும்
கேட்பதில்லைசான்ருேரின் கேள்விநான்கேள்ப்பதில்லை
தாட்ப்பதல்லால்சாணுரின் சங்கடங்கள்கேட்பதில்லை
என்றந்தநீசன் இத்தனையுமாயருடன்
தாவியுரைக்கச் சாற்றுவாரச்சுதரும்
பாவியுனது பவிசெல்லாந்தான்மாறி
ஆவிக்குநரகம் ஆவதற்கோயென்னுேடே
இந்தமொழியுரைத்தாய் ஏனடாமானீசா
உந்தனுடவூர்விட்டு ஓடிப்போவென்றனையே
ஆனலுஞ்சாணுர்க்கு அடியும்பலவூழியமும்
மானுந்திரயிறையும் மாற்றிவையென்றுரைத்தார்
அப்போதுநீசன் அச்சுதரைத்தான்பார்த்து
வெப்போடுகோப வெகுழியாய்த்தானுரைப்பான்
மாலைகாலைநேரம் மாயவனேயுந்தனக்கு
சீலமுள்ளபூசை செய்துவருவதற்கு
நித்தமொருநூறுபொன் நினக்குச்சிலவுமுண்டே
அத்தனையுங்கிட்டிடுமோ அவனிறைகடான்றடுத்தால்
அல்லாமலெந்தனக்கு ஆயிரத்திநூறுபொன்
எல்லாத்திருப்பதிக்கு எந்தனக்கும்வேணுமல்லோ
என்வேலையாக இருக்கின்றபேர்களுக்கு
பொன்பதினுயிரந்தான் போடணுமேசம்பளங்கள்
இப்பொன்னுக்கெல்லாம் யானெங்கேபோவேனடா

அப்பொன்னுக்கெல்லாம் அவனை அடித்தல்லவோ
வேண்டித்தானித்தனையும் விதானிக்கவேணுமல்லோ
ஆண்டியுன்சொல்லை யான்கேட்கஞாயமுண்டோ
என்னோடுதானிருந்து இந்தமொழிசொன்னாயே
உன்னோடுயெந்தனக்கு உறவென்னநீபோடா
முன்னெல்லாம்நீதான் உதவியோயெந்தனக்கு
இன்னிலத்தைவிட்டு எங்கானாலும்போடா
அதுக்குயந்தநீசன் யடடாவென்றிடவே
பொதுக்கென்றகோபமதைப் புத்திதனிலடக்கி
சொல்லுவார்பின்னும் சீவளம்போலுள்ளபுத்தி
பல்லுயிருக்கெல்லாம் படியளக்கும்மாலோனும்
இத்தனையும்வேண்டி யெந்தனக்குப்பூசையது
நித்தமும் நீசெய்யெனவே நின்னோடேகேட்டோனே
பூசைசெய்தாய்நீயும் பிராமணநம்பூரிகள்க்கு
தேசமறியாதோ செப்பாதோசாச்சியது
ஏக்காதிருப்பதற்கு யேற்ற அடையாளம்
தெக்கேதலையும்வைத்துச் சென்றதுவுங்காணலையோ
பின்னுமந்தப்பூசை புனக்காரமானதெல்லாம்
பின்னுகடைச்சாதி புலைச்சிகையெச்சித்தீதான்
அறியலையோநான்தான் அமுதேத்திருப்பதுதான்
வெறிகொண்டநீசா மேதினிகள்சொல்லாதோ
என்றந்தமாலும் இத்தனையுஞ்சொல்லிடவே
அன்றந்தநீசன் அதற்கேதுசொல்லலுற்றான்
நான்தந்ததொன்றும் நாவில்வைக்கவில்லையென்றால்
என்தொந்தமாக யென்னோடிருப்பதென்ன
போபோநீதானு போகுமிடந்தனிலே
நீபோவெனவே நிகழ்த்தினான்மாயவரை
அப்போதுமாயன் அதிககோபத்துடனே
இப்போதுநீசனைப்பார்த் தேதுரைப்பாரம்மானை
போறேநானுன்னுடைய புரத்தைவிட்டுச்செந்தூரில்
வாறேநானுன்னை வதைக்கவொருகோலமிட்டு
எளியசாணானெனவே யெண்ணம்வைத்தெந்தனையும்
நளியாகப்பேசி நகைத்தாயேமாநீசா
எளியோர்வலியோர் எவர்க்கும்வெகுநன்மைசெய்து
வெளியாகவுந்தனக்கு விபரம்போதித்தருளி
நீயறியத்தர்மம் நீனிலத்திலேநடத்தி
பேய்வெறியைக்கொன்று பேருலகமத்தனையும்
நாடாள்வார்தனக்கு நான்பட்டமுஞ்சூட்டி
ஒருபுத்தியாகி உள்ளென்னைக்கொண்டோர்க்கு
புதுப்புத்தியீந்து பூலோகமாளவைப்பென்
வருவேனானென்று வருமுன்னறிவதற்கு
நிருபமதுவெழுதி நீனிலத்திலேயனுப்பி
மரமரியசீவசெந்து மலையுமிகவறிய
திடமானவாயு சேடன்முதலறிய

வருணனறிய மதியுமிகவறிய
தருணம்வரும்போது சாணாரிடம்வருவேன்
அறிந்துபலசாதிமுதல் அன்பொன்றுக்குள்ளானல்
பிரிந்துமிகவாளாமல் பெரியோராய்வாழ்ந்திருப்பார்
என்றந்தநீசனுக்கு எடுத்துரைத்தெம்பெருமாள்
அன்றுதிருவனந்தம் அவனிவிட்டெழுந்தருளி
நீசனுடகோட்டை நெருநெரெனத்தாணிடிய
தேசமெல்லாம்நித்திரா தேவியிருள்மூட
எழுமேகமுங்கூடி இராட்சியத்தைத்தான்மூடி
வெளுவெளெனமாரி வெண்டுளிபோலேதொழிய
வாசுவதுதிரண்டு வையகத்தைத்தானரிக்க
வீசுவீசென்று விலாவியதுவீச
வாரியதுகோபமுற்று வையகத்தைத்தான்முழுங்க
மூரிபோல்மூச்செரிந்து மொகுமொகெனக்கோபமுற்று
மானீசனிட்டிருந்த வாய்த்தகல்க்கோட்டையெல்லாம்
தேனீயின்கூடதுபோல் செகலிடிந்துதம்மானே
கோட்டைதளமிடிந்து குஞ்சரங்கள்தானிறந்து
பூட்டைமிகப்பூட்டி போட்டிருந்தகாவலெல்லாம்
உழைந்துமிகவெருவி வோகோவெனஉழறி
கழைந்துஅவரோடக் கைமறந்துநின்றனனே
சீபாயியோடச் சுவேதாருந்தானேடை
அப்பப்பாவென்று அன்னீசன்றுனேடை
பிராமணநம்பூரி புலம்பிமிகத்தானழுது
ஸ்ரீராமனேயுங்காணலேயே தேசமிருளாகுதல்லோ
அய்யோகெடுத்தான் அரசன்நம்மையென்றுசொல்லி
மெய்யோடேகுத்தி விழுந்தழுவார்வேதியர்கள்
மாயனனந்த புரத்திலேவாழுமட்டும்
நீசனுடசட்டம் நின்றுதல்லோராச்சியத்தில்
ஸ்ரீபல்ப்பநாபரிந்தச் சீமைவிட்டுப்போனவுடன்
பிரிவாகநவ்வா பிடித்தானேசீமையெல்லாம்
என்றுபலபேர்கள் இப்படியேசொல்லிமிக
அன்றுபுலம்பி அழுவார்கள்சிலபேர்கள்
நம்பூரிவேதியர்கள் நாங்கெட்டோமென்றுசொல்லி
விம்பிடவண்ணம் வெளியிலுரையாதிருந்தார்
இப்படியேபூலோகம் எல்லாந்திணுக்கிடவே
அப்படியேமாயவரும் ஆனதேவருடனே
இன்றுமுதல்யானிருக்கும் இடங்களிலேசாதியெல்லாம்
ஒன்றுபோலென்னிடத்தில் வொத்துமிகவாருமென்று
சொல்லித்திருச்சம்பதி செனறிடவேதானடக்க
பல்லுயிரும்வந்து படிந்ததுகேளன்போரே
திருச்சம்பதியதிலே சென்றவர்கள்தானிருக்க
புரச்சமதுபார்த்தான் புகழுமொருநம்பூரி
அப்போதுசாத்திரத்தில் அவனிபலசாதியெல்லாம்
இப்போதுசும்மா இங்குவரலாமெனவே

அன்றந்தசாத்திரத்தில் அதுகண்டுமல்லாமல்
நன்றந்தசாணர்கள் நல்லதேருண்டுபண்ணி
தொட்டுக்கொடுத்துத் தேர்நடத்தவேணுமென்றும்
மட்டும்வெகுதானம் வலங்கையுயர்கொண்டோர்க்கு
கொடுக்கவேணுமென்றுங் கூறினர்சாத்திரத்தை
வெடுக்காகவந்து விபரிப்பெல்லாம்நடத்தி
வாரிக்ரையாண்டியென வாய்த்தநாமம்விளங்க
நேரியர்கள்சூழ நெடியோனங்கிருந்தார்
திருச்செந்தூர் தன்னில்த் திருமாலங்கேயிருக்க
விருச்சமுள்ளநீசன் வேசைநசுருணியவன்
வையகங்களெல்லாம் வரம்பழித்துமானீசன்
நெய்யதியச்சான்ரோர்கள் நெறியையெல்லாங்குலைத்து
பேரழித்துத்தர்மம் பெருமையெல்லாந்தானழித்தான்
மார்வரையேகூடும் மைபுரசுசஞ்சுவம்போல்
தானமழித்துச் சான்ரோரின்கட்டழித்து
ஈனகுலச்சாதிக்கு ஈடாக்கித்தான்கொடுத்து
பள்ப்பறையநீசனுக்குப் பவளத்தார் தான்கொடுத்து
கள்ப்பறையசாதிகட்குக் காலமிகக்கொடுத்து
சாதிவரம்புதானழித்து வெண்ணீசன்
மூதிமுன்னீசன் மும்முடியுந்தவிர்த்து
நவ்வாமுடியெனவே நாடியனடாகவேதான்
யெவ்வோரறிய இவன்தேசந்தானக்கி
ஆளாகமுன்னீசனையும் அவனைநாடாளவைத்து
பாழாகநீசன் பழையசட்டமும்மாற்றி
நீசனவ்வாவின் நினைவுபோல்ச்சட்டமிட்டு
தேசமெல்லாம்நவ்வா செய்தானேசட்டமது
மானம்வரம்பு மகிமைகெட்டுச்சான்ரோர்கள்
ஈனமடைந்து இருக்கின்றவேளையிலே
தேவர்களெல்லாம் திருச்சந்தூர்சென்றேகி
மூவரொருநித்தனுக்கு முறையிட்டாரம்மானை
ஆதிமுதல்பொருளே அய்யாநாராயணரே
சோதியேயெங்கள் துயரமெல்லாந்தீருமையா
இத்தனைநாளும் இருந்தோமொருமாணுபமாய்
கொற்றவரேநாங்களினிக் குடியிருக்கப்போகாது
சாதிக்கட்டையெல்லாம் தலையழித்துவெண்ணீசன்
மேதினிகளெல்லாம் மேவினனையாவே
தானமழிந்தாச்சே தம்பியர்கள்சான்ரோரின்
மானமழிந்தாச்சே வரம்பெல்லாங்கெட்டாச்சே
பூப்பியங்குலைத்துப் புரசியோடொப்பமிட்டு
காப்பிலியனேதுவினால் கட்டழிந்தார்சான்ரோர்கள்
இத்தனைநாளும் யாங்கள்முறையிட்டதுபோல்
புத்திதனில்வைத்தால் பொறுக்கயினிக்கூடாதே
தம்பிசான்ரோர்கள் சங்கடத்தைக்கேளாமல்
சம்பிமுகம்வாடித் தலைகவிழ்ந்திருப்பதென்ன

மக்களுடதுயரம் மனதிரங்கிப்பாராமல்
பக்கமாய்நீரும் பாராதிருப்பதென்ன
சான்றோர்படுந்துயரம் தானிரங்கிப்பாராமல்
ஆண்டோரேநீரும் அயர்ந்தேயிருப்பதென்ன
இதெல்லாமெங்களைநீர் ஏற்றசான்றோர்பிறப்பாய்
முதலெல்லாஞ்சான்றோருள் முடிந்துவைத்தகண்ணியினால்
பாவியந்தநீசன் படும்துயரமெல்லாம்
தாவிக்கையிலே சத்திசிவன்வரைக்கும்
பொறுக்கமிகக்கூடலையே புண்ணியவையாவே
மறுக்கமதைப்பாரும் மனதிரங்கியெங்களுக்கு
உகத்துக்குகங்கள் ஊழியங்கள்செய்ததெல்லாம்
அகற்றியருள்தந்த அச்சுதரும்நீரல்லவோ
மக்கள்யெங்களையும் வலங்கையுய்யோர்தானாக
ஒக்குறவுகெட்டோன் உலகில்படைத்திருந்தால்
இத்தனைபாடும் எங்களுக்கென்றேதான்
புத்திரனாயெங்களையும் பூமிதனில்பெற்றுவைத்து
நாங்கள்படும்பாடு நாரணரேகண்டிலையோ
தாங்களுக்குநெஞ்சஞ் சற்றுமிரங்கலையோ
இப்படியேதேவர் எல்லோருமுறையமிட
அப்படியேமுறையமிட்டு அவரங்கேநிற்கையிலே
நல்லவுமைத்திருவும் நன்றாயெழுந்தருளி
வல்லபொருளான வாய்த்தநாராயணரின்
அடியிலவள்வீழ்ந்து அழுதுகரைந்தேதுரைப்பாள்
முடியுமடியில்லா முதலேமுதப்பொருளே
அரி அரிநாராயணரே அண்ணரே அச்சுதரே
கரிகரிநாராயணரே கண்ணரேகார்வணரே
லெச்சைகெட்டபாவி யேமாளிக்கலியதினால்
அலச்சல்செய்தெங்களையும் அகற்றிவைத்துப்போனீரோ
பாவிக்கலியனுட பழிசாபச்சூட்சியினால்
பூவில்மண்டுகம் பொசித்துதேகாரணரே
கலியனுடயேதுவினால்க கபாலியுன்மைத்துனரும்
சலிவாகிமேனி சடலமிகத்திமிர்ந்து
இருள்முடிக்கண்கவுந்து இருக்கிறார்ஈசுரரும்
உருவுசுவடில்லை உம்முடையமைத்துனரும்
நின்னயமில்லாக்கலியன் நீசன்பிறந்ததினால்
என்னோடேபேச்சு இல்லையும்மைத்துனரும்
வானுறவுகெட்ட மானீசன்வந்தநாள்முதலாய்
நானும்பரமேசுரரும் நலநஷ்டமுந்தெரியோம்
பேசிப்பளக்கமிட்டுப் பெருத்தநாளுமுண்டுமண்ணே
தோசிக்கலியனுட சூட்சியினால்நாங்கள்படும்
பாட்டைவந்துபாராமல் பரிகாசம்பார்ப்பதென்ன
நாட்டைக்கெடுத்தானே நன்றிகெட்டமானீசன்
அல்லாமல்நம்முடைய அருமைச்சான்றோர்கள்படும்
பொல்லாங்கையெல்லாம் போய்ப்பார்க்கயெழுந்தருளும்

வரமீறியகலியன் மாய்கையினேதுவினுல்
பிரமன்பிறப்புப் பிசகித்தலைமாறி
முண்டம்போல்ப்பிறப்பு முகங்கண்ணில்லாய்பிறவி
பிண்டப்பிறவி பேருறுப்பில்லாப்பிறவி
தலையுடம்பில்லாதே சடலப்பிறவியைப்போல்
நிலைதவறிவேதா நினைவு தடுமாறினனே
சீவன்கொடுக்குஞ் சிவனுக்கிருநினைவாய்
பாவக்குணவுயிராய்ப் பகர்ந்தார்சிவனும்
படியளக்கநீரும் பண்புற்றிருக்காமல்
குடிகேடுமாச்சே குடிக்கக்கிடையாமல்
இத்தனையுங்கலியன் ஏதுவால்வம்பாச்சே
அத்தனையுங்நீர்தான் அறியாதவர்போலே
எங்கள்மேல்ப்பகைபோல் இருப்பதென்னவச்சுதரே
சங்கடங்களெல்லாந் தான்சொல்லக்கூடாது
கயிலைசிவனுர் காணுமலும்மையுந்தான்
அகிலமதைப்பாராமல் அயர்ந்திருக்கிருரென,வே
ஆனதாலென்னுடைய அண்ணரேவங்கேகி
மானமுள்ளபுத்தி உம்மைத்துனர்க்குச்சொல்லவாரும்
என்றுமையாளிப்படியே இன்பமாய்ச்சொல்லிடவே
அன்றுபெருமாளவள் முகம்பார்த்தேதுரைப்பார்
சிவனும்நீயும் தேசமதிலில்லாட்டால்
எவனுக்குமலச்சல் இல்லையோராச்சியத்தில்
உங்களால்யானும் உகத்துக்குகங்கிடந்து
சங்கடங்களுற்றுத் தவிக்கத்தலைவிதிதான்
நீங்களில்லையானுல் எனக்குஅலச்சலில்லை
ஏனுங்களோடே இப்பாடுயான்படத்தான்
அய்யோத்தியாபட்டணத்தில் அரசுண்டுமெந்தனக்கு
கையேத்துவந்த கன்னிதிருவுமுண்டு
ஏனிந்தப்பாடு யான்படக்காரணந்தான்
மானமூதாப்போலே மறுகுவாள்லச்பிமியும்
கைப்பிடித்தநாள்முதலாய்க் கலந்துவிளையாடறியேன்
மெய்ப்பிடித்தமான் மெல்லியருமங்கிருக்க
இரப்பனைப்போல்லோகம் எல்லாந்திரிந்தலைய
பரப்பிரமன்னம்மைப் படைத்ததுயிதர்கோவென
யெல்லையில்லாப்பாடு யான்பட்டதுபோதும்
நல்லகுலச்சான்ருேரை நான்பெற்றுவைத்தனென
வைத்ததெல்லோரும் மனதறியப்பார்த்திருக்க
பொய்த்தலைவனீசனையும் பிறவிசெய்யஞாயமுண்டோ
நீசனுடகையதிலே நின்மக்கள்தந்தையும்
பாசக்கயிறிட்டுப் பந்தடிக்கச்செய்தாரே
தொட்டாலும்நீசம் தொடருமதைத்கண்டாலும்
வெட்டாவெளியாய் விரட்டிப்பிடிக்குமல்லோ
காதில்தைக்கேட்டாலுங் கர்மம்வந்துசிக்குமல்லோ
ஆரிந்தநீசனையும் அழிக்கவகையாரறிவார்

மாய்கைகினைவொழிய மறுகினைவுவாராதே
போய்க்கலியனையும் முடிக்கவகையாரறிவார்
வாளாயுகத்தாலே மாளானேமாகலியன்
தூளாம்பிறவி சொல்லொணுவல்லமைதான்
முப்பிறவியாறு முடித்தவலுமையெல்லாம்
இப்பிறவிதன்னில் எட்டிலொன்றுபாரமில்லை
உகத்துக்குகம்பிறந்து ஓடித்திரிந்தவன்றே
அகத்தில்க்கொஞ்சம்வையாமல் அவர்மூப்பாய்ச்செய்தாரே
ஆனதாலின்னமினி அங்குவரவேணுமோகாண்
தானம்வைத்துப்பாராமல் சங்கையழித்தாரே
எங்கேயாஞலும் இறந்திடுவேனைதற்கு
சங்கையுள்ளசாணுர்க்கு தங்குமிடம்வேறில்லையே
தாய்தந்தையில்லாமல் தயங்குகின்றபிள்ளையைப்போல்
மாயக்கலியனிஞல் வாடுவரேசான்றோர்கள்
தகப்பனில்லாப்பிள்ளை சாணுர்களென்றுசொல்லி
அகப்படுத்திச்சான்றோரை அடிப்பானேனீசன்
தாயுந்தவமிருந்து சடைப்பாளேனைக்காணுமல்
ஆயுங்கலைதெரிந்த ஆயிளையும்வாடுவாளே
இப்படியேஞாயம் இருப்பதாலெந்தனக்கு
அப்படியேவேறு வழியல்லவேயானதிஞல்
எங்கேயினிப்போவேன் என்றெண்ணுதென்மனது
உங்களுடவூருக்கு ஒண்ணுதலேபோநீயென
கோபத்தால்தங்கையுடன் கூறிஞரித்தனையும்
வேகத்தாலம்மை விழியிட்டமூதனளே
கைலைக்குநீர்தான் கால்வைக்காதேயிருந்தால்
அகிலமதொன்ருய் அழியுமொருநொடியில்
நல்லகுலச்சான்றோர் நாடுங்கலியதஞல்
தொல்லைமிகப்பட்டு துயருற்றுவாடுவரே

## எம்பெருமாள் செந்தூர்விட்டுக் கைலைக்கு ஏகல்

நானுமெந்தன்ஈசுரரும் நல்லகைலையிலே
மானுங்கலைபோல் மறுகியிருப்போமே
கைலைமுனிதேவர் கட்டழிந்துவாடுவரே
மயிலனையீசர்சொல்லை மறந்துயிருந்தாரே
கன்னிப்பெண்ணுர்கள் என்கற்பனையைத்தான்மறந்து
உன்னுதலாய்ப்பெண்கள் ஒருவர்க்கோர்மூப்பாச்சே
அய்யோகைலை அங்கும்வரம்பழிந்து
பையரவம்பூணும் பரமன்மவுனமாச்சே
அண்ணரேகோவே அடியாள்தனக்கிரங்கி
எண்ணமில்லாக்கைலைக்கு எழுந்தருளவேணுமையா
என்றேஅறம்வளர்த்தாள் இறங்கிஅண்ணர்கால்தனையும்
சென்றுபிடித்துச் செய்யத்தாள்தான்வணங்கி
மனதிரங்கியெம்பெருமாள் மார்போடுதங்கையரை
தனதில்பிரியமுற்றுத் தங்கையரோடேதுரப்பார்

உன்னோடுபிறந்த ஊழிவிதியானதினல்
நன்னுடோடேவாழ நமக்குவிதியில்லையே
உந்தனுக்காகவல்லோ ஊருக்கூரே திரிந்து
சந்தோசமற்றுச் சடைக்கவிதியாச்சே
என்றுபெருமாள் யேற்றபிறப்போடு
இன்றுகைலைக்கு எழுந்தருளவேணுமென்று
தேவர்முனிவரோடு திருக்கன்னிமாரோடு
மூவருடநடுவன் முகமலர்ந்தேகூடி
நடக்கவேணுமெனவே நளினமுற்றெம்பெருமாள்
கடற்கரையில்வந்து காலமேதெனப்பார்த்தார்
இந்தச்சொரூபமதாய் இங்குவிட்டெழுந்தருளி
சித்தர்குடியிருக்குஞ் சீமையிலேகுமுன்னே
கலிமூழ்கிநாமள் கரையேறப்போறதில்லை
பொலிவாகவேசம் புதுப்பிக்கவேணுமென்று
என்னசொரூபம் எடுப்போனுமென்றுசொல்லி
அன்னப்பெருமாள் ஆலோசனையாகி
மேல்யெல்லாம்வெண்ணீற்றை மிகவணிந்தெம்பெருமாள்
பாலொக்கும்நெஞ்சம் பரமனொருநினைவாய்
மாமோகவாசை மயக்கவெறியறுத்து
தாமோதரனர் சடைக்கோலமேபுனைந்து
காலில்சிவநினைவைக் களராமல்த்தானிறைத்து
மார்பினைந்துபூமணியே வகிர்ந்தாரேவேடமிட்டு
கண்ணில்மனேன்மணியைக் கண்ணுடியாய்ப்பதித்து
எண்ணரியதங்கை இன்பமுடனேவளர்த்த
முப்பத்திரண்டறத்தை உடலெல்லாமேபொதிந்து
செப்பமுடன்கந்தை துய்யவெண்கலையணிந்து
தண்டாளமான தடியொன்றுகைப்பிடித்து
அண்டர்களும்போற்றி அரகராவென்றுவர
தேவர்களுங்கூடிச் சிவசிவாகிவனேயென்று
தாவமுள்ளதேவரெல்லாந் தாரமிட்டேற்றிவர
அம்மைஉமையாளும் அவளுஞ்சடைவிரித்து
செம்மையுள்ளமாதுஞ் சிவசிவாவென்றேத்தி
எல்லோருடனே எம்பெருமாள்தானடந்து
வல்லோர்புகழும் வாழ்கைலைவந்தனராம்
கைலைதனில்வரவே காரிருளுந்தான்மறைய
மயிலையொத்தஈசர் மாயவரைக்கண்டாவி
சந்ததியைக்கண்டு தாயாவல்கொண்டதுபோல்
வந்தஈசுரரும் மார்போடரவணைத்து
இத்தனைநாளும் யானும்மைக்காணுமல்
புத்திரனுந்தாயைப் போகவிட்டார்போலிருந்தேன்
மாரிகாணுத வாய்த்தபயிர்போலும்
ஏரிகாணுத ஏற்றநீர்போலிருந்தேன்
இனம்பிரிந்தமான்போல் இருந்தேஉம்மைத்தேடி
துணையில்லார்போலே துணையற்றுநானிருந்தேன்

என்றுமகாமாலே யெடுத்தாவீஈசுரரும்
சென்ருவிக்கொண்டு சிணுங்கியழுதுசொல்வார்
இணையும்புருவதுபோல் இருந்தோமேமைத்துனரே
துணையுமெனைமறந்து தூரநீர்போனதென்ன
என்னைவிட்டுநீரும் எழுந்தருளுமென்றுமுதல்
வன்னஉமையாளின் வடிவைமிகவறியேன்
துணையிழந்தவன்றிலைப்போல் தினமுமுமைத்தேடி
கணவனில்லாப்பெண்போல் கலங்கினேன்காரணரே
உயிர்த்தோழமைபோல் உறவுகொண்டநாரணரே
மெய்தோழமையை விட்டுப்பிரிந்ததுமுதல்
பிரிந்துமலைந்தேன் பச்சைநிறமாலே
சரிந்துபள்ளிகொண்டு சதாவருடமாச்சுதல்லோ
இத்தனைநாளும் என்னமிகப்பாராமல்
மத்திமமந்திரியே மறந்தென்னைவைத்தென்ன
கைலைக்குமெந்தனக்குங் கட்டானமந்திரிதான்
அகிலமீரேழ்க்கும் அடக்கமுள்ளமந்திரிதான்
நீயல்லால்வேறுளதோ நெடியதிருமாலே
இந்தவிதமாய் இகாபரவிதத்தோடும்
உந்தன்றனைப்பிறவி உயர்ந்ததவஞ்சேய்தேனல்லோ
அப்படியேநீயும் ஆதிநாராயணராய்
முப்படியேவந்து உருவெடுத்தமாயவரே
கைலைதேவாதிகளுங் கண்ணுளமாதிருவும்
ஒயிலோன்மாமறையோர் உற்றயிருள்சிகளும்
கின்னரர்கள்வேதக் கிம்புருடர்கேதாரர்
மன்னர்முனிவர்களும் மறையும்பலசாத்திரமும்
வேதாவும்நந்தி விதருபச்சித்தர்களும்
இப்படியேமேலோகத் தெல்லோரையும்வருத்தி
அப்படியேவோர்வசனம் அவர்களோடேகேட்டு
கல்லைவலித்திழுத்துக் காலில்மிகப்போட்டவர்போல்
சொல்லைமிகக்கேட்டுச் சுமந்தேன்மிகுபாரம்
எல்லாவிதப்பாடும் யாம்பட்டதுபோதும்
வல்லவனேயுன்னுடைய வாக்கைக்கேளாதபடி
செய்தவிதத்தாலே செப்புதற்குநாணமுண்டு
மெய்யிசையுமாலே மெத்தக்கோவிக்கரித்து
எல்லாமுமது இச்சையதுபோல்நடத்தும்
சொல்லொன்றுக்குள்ளே சூட்டிநீராளுமென்று
மாலுக்குமனது மகிழ்ச்சிவரும்படிக்கு
பாலுக்குமோரோன் பகர்ந்தார்காணம்மானை
அப்போதுவச்சுதரும் அவரேதுசொல்லலுற்ருர்
எப்போதும்உமக்கு இப்படியேயுள்ளமுறை
நாஞேருவன்வேடனைப்போல் நாட்டில்திரிந்தலையை
ஏஞேகாணுங்களுக்கு இல்லையேசங்கடங்கள்
முன்னுதித்தபாவி முழுநீசக்குருேணியினல்
பின்னுந்துரியோதனனுய்ப் பிறந்தவன்மாழும்வரை

உகமாருனதிலும் உதித்தகுரோணியுயிரை
பகையாக்கிக்கொல்ல பட்டபாடெத்தனை தான்
யான்மிகப்பட்டபாடு ஆரும்படவரிது
தான்பட்டதெல்லாந் தான்போதுமென்றுசொல்லி
இனிமேல்ப்பகைதான் இல்லாமல்செய்வதற்கு
மனுவாய்ப்பிறக்க மக்களேழுபேரை
சேர்த்தெடுத்துவிந்தில் சேர்ந்துசெங்காவுதன்னில்
சார்ந்துவிளையாடித் தான்பெற்றபாலருக்கு
எல்லோருங்கூடி யேற்றதிருநாமமிட்டு
வல்லோராய்ப்பூமிதனில் வாழுமென்றுவைத்தோமே
அலுவலொழிந்ததென்றும் அலேச்சல்மிகயில்லேயென்றும்
மெலிவெல்லாந்தீர்ந்து மேவிஸ்ரீரங்கமதில்
இனிதிருக்கும்போது யென்னைநினையாமல்
மனிதனையும்பூமிதனில் வருத்தமென்னசொல்லுமென்றார்
ஆறுயுகமதிலும் அதிகபலக்காரர்களாய்
வீறுடனேபிறவி விதவிதமாய்ச்செய்தீரே
முன்பிறந்தகுரோணி முழுங்கினன்கைலேமுதல்
வன்பிறவிசூரனைத்தான் வதைக்கவேருருமுண்டோ
இரண்டாம்யுகத்தில் நன்றிகெட்டப்பாவி
குண்டோமசாலியனைக் குதித்தான்மகாபாவி
வான்லோகமுழுங்க வாய்விட்டலறினதால்
கோனேகிரிவேந்தே கொன்றதுவேருருமுண்டோ
மூன்ரும்யுகத்தில் மூளைத்தானேயப்பாவி
வன்ருனமல்லோசி வாகனென்றமாபாவி
தேவரையுந்தெய்வ ஸ்திரிகளையும்மூவரையும்
யேவலதுகொண்டு இடுக்கமதுசெய்தனரே
முறையமதாற்ருமல் ஓடிப்போவென்றுரைத்தீர்
சிறைபிடித்தபாவிகளைச் செயித்ததுவேருருமுண்டோ
நாலாம்யுகத்தில் நன்றிகெட்டசூரபர்ப்பன்
ஆலாவிருச்சம் அதுபோல்கிளையுடனே
நாட்டமுடனே நாடும்படையோடு
கோட்டையதிட்டுக் கொடியமாபாவியனைய்
கேட்டவரங்களெல்லாம் கெட்டியாய்நீர்கொடுத்து
தேட்டமுடன்கைலே சீமையதுவுங்கொடுத்து
இருக்கஇடமற்று எழுந்திருந்துநீரோடி
உருக்கமுடனிருந்த உவரியிலேகிவந்தீர்
தேவர்களைப்பாவி செய்தயிடுக்கமதால்
மூவர்முதல்உம்மிடத்தில் முறையிட்டயேதுவினல்
என்னைவருத்தி யேற்றமொழிகள்சொல்லி
சென்றவனைக்கொல்லுமென்று செய்திசொல்லிவிட்டீரே
விட்டவுடனானவனேடு வெகுநாளாயுத்தமிட்டு
பட்டபாடெல்லாம் பகரவெளிதாமோ
யுத்தமிட்டவனை ஒக்கத்தரமறுத்து
செயித்தேன்பின்னவனும் செத்தயுகமதிலே

இரணியசூரனென்று எனக்கெதிரியாய்ப்பிறந்து
தரணியிலவன்பேரைச்சாற்றிவளங்கலுற்ருன்
பின்னுமவன்றனக்குப் பிள்ளையாய்நான்பிறந்து
கொன்றுதரமறுத்தேன் குதித்ததுகாண்மற்றயுகம்
பத்துத்தலையோடு பாவியவன்பிறந்து
உற்றவன்கேட்டவரம் ஒக்கநீர்தான்கொடுத்து
அருகில்மிகவாழ்ந்திருந்த ஆயிழையைநீர்கொடுத்து
குருவிருந்தசோதிக் குன்றதையும்நீர்கொடுத்து
பாவியவன்மூன்று பாரடக்கியாண்டனனே
தேவியும்நானும் தேசமதிலேபிறந்து
அவனையழித்து அந்தயுகமுங்கருக்கி
சிவனேயுன்பாதிதனைச் சிறைமீட்டித்தந்ததாரு
சதியாந்துரியோதனனுய்த் தான்திரும்பவேபிறந்து
மதியாமலெந்தனையும் மறையுமிகநம்பாமல்
அன்போரையெல்லாம் அகப்படுத்திமாபாவி
வன்பானகள்ளன் மாய்மாலஞ்செய்ததினுல்
கொன்றவகைசொல்லக் கூடுமோகாரணரே
என்னென்னபாடு யான்பட்டமாய்மாலம்
கஞ்சனென்றபாவிக்குக் கடியவரம்நீர்கொடுத்து
வஞ்சகன்ருன்செய்த மாய்மாலமெத்தவுண்டு
அவனைவதைக்குமுன் அடியெத்தனைக்ளுண்டு
சிவனேயுமக்குச் சூடெண்ணஞ்சற்றுமில்லை
இருப்பிலிருந்துகொண்டு யெனக்கலச்சல்செய்வதுண்டு
எதிர்ப்பவராரர்சொல்லும் இந்தமாய்மாலமோடு
கலியென்றசொல்லுக் காதில்மிகக்கேட்டதுண்டால்
சலிவாகிமேனி சடலமிருளாகுமல்லோ
மெய்பேசவேணுமென்று மேவியிருந்தாலும்
பொய்பேசப்புத்தி பொலியும்பொடுபொடென
வாளாயுதத்தாலே வாய்த்தகணையம்பாலே
பாளாக்கவென்ருலும் படாதேமகாகலிதான்
மற்றப்பிறவி யாகவகுத்தாலும்
இத்தனையெண்ணம் இல்லையேயெந்தனக்கு
அய்யோயென்மக்கள் அதற்குள்ளகப்பட்டாரே
மெய்யோயினிமக்கள் விளங்குவதெக்காலம்
தீண்டிப்பிடித்தானே செத்தகலிமாய்மாலன்
வீண்டிறடுதீர்ந்துமக்கள் விளங்குவதெக்காலம்
ஆறுபிறவி அழித்ததுவுமெந்தனக்கு
நீறுபோலெண்ணுதுகாண் நிர்க்கலியைப்பார்க்கையிலே
என்னவிதத்தால் இவனையழிப்போமென்று
வன்னச்சிவனுரே மனதுவேறெண்ணுதுகாண்
நாடாச்சுதேசம் நக்ரியுங்கள்பாடாச்சு
வீடாச்சுகுண்டம் மேதினிகளங்காச்சு
தேசவழிபோறேன் செல்லாதுயிங்கேதான்
மாய்கைவலையைவிட்டு மறையவேபோறேன்காண்

பலபேர்களாட்டும் பாம்புபோலென்னையுந்தான்
அலேவிதமாயென்னை அமைத்ததென்னசொல்லுமென்றார்
அப்பொதுஈசுரர் அச்சுதரைத்தான்பார்த்து
இப்போதுநானும் இயம்புகிறேன்கேளுமென்று
முப்பிறவிநீரும் உதித்துவந்தநாளையிலே
இப்பிறவிதுயரம் எல்லாம்வரும்படிக்கு
பண்டொருபாபம் பகர்ந்தேனுன்மைத்துனரே
அன்றுசாபம்பகர்ந்த அதுகேட்டுக்கொண்டருளும்
குறோணியொருசூரக் கொடும்பாவிதான்பிறந்து
சுறோணிதமாய்வரவே தொல்புவியெல்லாமுழுங்கி
என்னோடுஈசொரியாள் எல்லோரையுமுழுங்க
நின்னோடுமாயவரே நீயொருவன்தப்பிமிக
என்னைநினைத்துத்தவம் இருந்தாய்நீகீழுலகில்
தென்னவனேநீயும் செய்ததவமதினால்
எழுந்தருளிநானும் என்னவரம்வேணுமென்றேன்
குளிர்ந்தகுணமான கோவேந்தேநீமாறி
கேட்டாயேசூரனுடல் கீறித்துண்டாருக்கி
தட்டாண்மையாக தரணிதனில்விட்டெறிய
வரந்தாருமென்று வாக்காகக்கேட்டவுடன்
தரந்தரமேதுண்டந் தரணிக்கெல்லாம்பிறந்து
மாத்தானுயுனக்கு வருமாறுயுகம்வரையும்
சீற்றத்துடனே செடமெடுக்குமென்றுசொல்லி
தந்தவரத்தின் தன்மையாலிந்தமுறை
எந்தன்மேல்க்கோபம் யேன்சொல்லப்போறீர்காண்
அன்றுமகாமால் அகங்களிகூர்ந்து
என்றந்தஈசர் இப்படியேசொன்னவுடன்
ஆனாலும்நான்கேட்ட அவ்வரங்களானாலும்
மானுபரனூய வரம்பழித்துப்போட்டீரே
இதற்குமுன்யேதாலும் என்னையறியாதவண்ணம்
ஓதுக்கிலிருந்தோர்வறுமை உங்களால்ச்செய்ததுண்டோ
மும்முறைபோலென்னை முவந்துகெணியாமல்
அம்முறையேநீரும் அழித்ததேன்ஈசுரரே
என்னைக்கெணியாமல் இக்கலியைச்செய்ததினால்
நன்னமூர்தஈசுரரே நம்மாலேகூடாது
அளிப்பதுவுங்கலியை அங்கயல்லகூடாது
விழிப்பதென்னநம்மாலே விபரமிடக்கூடாது
நம்மாலேயொன்றும் நடவாதுஈசுரரே.
சும்மாவென்னோடிருந்து சோலிபண்ணவேண்டாங்காண்
உகத்துக்குகங்கள் ஓடித்திரிந்தலேந்து
மகுத்துவமாய்ச்சந்துசதை முறிந்துநோகுதப்பா
தூங்கிவிழியாமல் திமிர்ப்போல்சரீரமெல்லாம்
ஏங்கிமிகவாடுதப்பா என்திருவைக்காணுமல்
பாவிகள்பண்ணிவிட்ட பாட்டைமிகவெண்ணுகையில்
ஆவிமிகவாடி அங்கமெல்லாஞ்சோருதையா

அந்தமுழுப்பாவிகளில் அதிகப்படுபாவியிவன்
சந்ததிக்குத்தாய்தகப்பன் தாள்ந்துநின்றேவல்செய்தால்
கொடியவனேபாவி கொஞ்சமிஞ்சமோயிவன்றான்.
முடியுமோபாவி யுயித்தயிடச்சென்றதுண்டால்
தர்மமறியாத சண்டித்தடிமூடர்கையில்
நம்மைபிடித்தங்கே நகட்டிவிடவேண்டாங்காண்
பட்டவடிவூறப் படுத்திருக்கபோறேனென்
ஒட்டொழியவென்னை ஒடுக்கிவிடவேண்டாங்காண்
என்றுதிரை யணர்தானுமிப்படியே
அன்றுதிரைதன் அவரோடிதுவுரைக்க
சிவனுமிகவயர்ந்து செப்புவார்மாயருடன்
புவனமதர்க்குடைய பொன்னேயென்மாதவமே
இப்படித்தான்மைத்துனரே ஈதுரைத்தீராகைக்கால்
எப்படித்தானாலும் ஏகமதுவாழுவது
சிவரல்லோமைத்துனரே சித்திரம்நானல்லவோ
கவரல்லோநாங்கள் கயமல்லோமைத்துனரே
மாயநல்லோயெங்களுக்கு மலையல்லோமைத்துனரே
ஆயனல்லோயெங்களுக் கணையல்லோமைத்துனரே
கொப்பல்லோநாங்கள் குருவல்லோமைத்துனரே
செப்பல்லோமைத்துனரே சிமிள்க்கூடுநாங்களெல்லாம்
நீர்தானுமிப்படியே நெகிழ்ந்தமொழிசொன்னதுண்டால்
ஆர்தானுமெங்களுக் அணைவுமொழிசொல்லுவது
மூடிப்படிக்குலுங்க மயங்காதோகொப்பதெல்லாம்
கூடிப்படிக்குலுங்க குலையாதோசீவனது
தேவமுனிசாஸ்திரிகள் சிறுபுத்தியைக்கேட்டு
மூவருன்னைப்பாராமல் முனிந்துசெய்தஞாயமெல்லாம்
பொறுத்தருளுமென்னுடைய புண்ணியமைத்துனரே
மறுத்துரைத்தால்நானுமினி வகுத்துரைக்கஞாயமில்லை
எல்லாம்பொறுத்து இனியுமக்குத்தேர்ந்தபடி
சொல்லொன்றுக்குள்ளே செலுத்தியரசாளுமென்று
ஈசுரனார்சொல்ல எம்பெருமாளேதுசொல்வார்
வீசுபுகளீசுரரே விரித்துரைக்கநீர்கேளும்
என்னையுமோகீழுலகில் இறந்துகிடந்தாரெனவே
சொன்னவரையெல்லாஞ் சுறுக்காகத்தானவரையும்
என்றந்தமாயவனார் இப்படியேசொன்னவுடன்
அன்றந்தயீசுரனார் அழைத்தாரவர்களையும்
உடனேதான்தேவர் முனியொக்கப்பயமடைந்து
தடதடெனவோடிவந்து தாழ்ந்துநமஸ்காரமிட்டு
அப்போதுமாயவனார் யவர்கள்தனைப்பார்த்து
செப்புகிறாரையா திருக்கண்பொறிபறக்க
கண்கள்சிவந்து கருமேனிதான்விறைத்து
விண்களதிர வெடுவெடெனக்கோபமுற்று
தேவர்திணுக்கிடவே தெய்வமுனிதான்பதற
மூவர்திணுக்கிடவே யுரைக்கிறாரெம்பெருமாள்

மண்டிண்ணெனவே மலைகள்பொடுபொடென
திண்டிண்ணெனவே தேவர்மிகப்பதற
சிவமுங்கிடுகிடெனத் சிவனுமையுந்தான்பதற
நமனும்பதற நாராயணருரைப்பார்
தேவரேவானவரே தெய்வமுனிசாஸ்திரியே
மூவரேநானும் மொழித்ததங்கேசொல்லுமென்றார்
சாகக்கிடந்ததெங்கே தப்பிவொழித்ததெங்கே
போகக்கிடந்தெங்கே போனதெங்கேசொல்லுமென்றார்
ஆளுக்கொருமுப்பா அரியிங்கேயில்லையென்று
கோமுரைத்தீரேஈசர் குருமுன்னேநீங்களெல்லாம்
சாஸ்திரத்தைதனைக்கிச் சரியாகச்சொன்னதிட்ட
சூஸ்த்திரத்தையெல்லாஞ் சொல்லுமென்றாரெம்பெருமாள்
சொல்லநாவில்லாமல்ச் சோர்ந்துமிகத்தேவரெல்லாம்
பல்வாய்சுண்டொல்கிப் பதைபதைத்துநின்றனரே
கண்தலைகவுள்ந்து கால்பெயர்த்துவைக்காமல்
விண்கவிழ்ந்தயோகமுனி வெக்கிநின்றாரன்போரே
நின்றநிலையறிந்து நெடியபரமேசுரரும்
அன்றெந்தனேடே அறம்பாடிசொன்னதெல்லாம்
இன்றெங்கேபோச்சுதுகாண் இரண்டுமிகச்சொல்லாமல்
நின்றிங்கேநீங்கள் நினைவயர்ந்துநிற்பதென்ன
பேச்சுப்பேசுங்கிளிக்குப் பின்பூனைநாட்டமுற்றால்
கீச்சுக்கீச்சென்றுகிளி கீழ்ப்பதுங்கவேண்டியதேன்
அன்றுநீர்சொன்னமொழி அயர்ந்துமிகப்போனதென்ன
இன்றுநான்கண்டிலனே இதற்குமுன்னுள்ளதிறம்
இப்படியேஈசர் யெடுத்துரைக்கத்தேவரெல்லாம்
எப்படிநாம்சொல்வோம் என்றேதிகைக்கலுற்றார்
எல்லாமறிந்து யெடுத்துரைப்பாரெம்பெருமாள்
பொல்லாதார்க்கெல்லாம் பிறப்பொன்றிசைந்திருக்க
சொல்லுகிறேன்நானுமொன்று சொல்வதைக்கேள்ப்பீரோ
நல்லதுதானென்று நாட்டமுற்றெல்லோரும்
அப்போதெம்பெருமாள் ஆதிசிவமோடுரைப்பார்
இப்போதுகேள்ப்பீரோ யான்சொல்லுநியாயமது
என்றுதிருமாலுரைக்க யெடுத்துரைப்பார்ஈசரரும்
மன்றுதனையளந்த மாலேயென்மைத்துனரே
வாருமெனவழைத்து மாலோன்றனையிருத்தி
சீருடனேவேதாவுஞ் சிவனுமையாளும்
எல்லோருங்கூடி இருந்தந்தமாயவரின்
நல்லாயருகிருத்தி நவிலுவார்சத்தியமாய்
இதற்குமுன்செய்த இழிவெல்லாம்நீர்பொறுத்து
கதுக்காகவும்முடைய கருத்தின்படியாலே
நடக்கும்படிசட்டமெல்லாம் நாராயணர்க்குத்தந்தோங்காண்
அடக்குடக்கெல்லாம் ஆதிக்குத்தந்தோங்காண்
இன்றுமுதலும்முடைய இச்சைபோலேநடத்தி
என்றுநடத்திக்கொள்ளும் என்றேவிடைகொடுத்து

சட்டமெல்லாமுமக்குத் தந்தோமினிநீர்தான்
இட்டசட்டமீறி இனியொருவர்செய்யோங்காண்
உம்மைநினையாமல் இக்கலியைச்செய்ததினால்
நம்மைவரநீர்தான் நடத்தும்படிநடத்தும்
என்றந்தஈசுரரும் மேற்றவுமையாளும்
அன்றந்தவேதாவும் அமரர்முனிதேவர்களும்
சத்தியமாகத் தானுரைத்தார்நாரணர்க்கு
மத்தியநாதன் மனமகிழ்ந்தேதுசொல்வார்
நல்லதுதானென்று நாட்டமுற்றெம்பெருமாள்
வல்லபரமேசுரரோடே தான்வகிர்வார்
கர்மம்போலொத்த கலிப்பிறப்பானதினால்
நம்மள்முதல்மாறி பிறக்கநாளாகுதுகாண்
ஆனதால்ஈசுரரே அருளுகிறேன்நீர்கேளும்
ஈனமுள்ளபாவி இயன்றதிரியோதனனை
கொன்றேனவனைக் குருநாடையவர்க்கீந்து
முன்னேமறையோன் மொழிந்தசாபத்தாலே
தேவர்முதல்வானோர் தெய்வமுனிதான்வரையும்
மூவருறையும் உற்றதெய்வலோகமேழும்
மேலோர்களெல்லாம் மேதினியிலெந்தனக்கு
பூலோகந்தன்னில் பிள்ளையெனவேபிறக்க
வேணுமென்றுமாமுனிவன் விட்டசாபத்தாலே
தாணுவேநீரறியத் தான்பிறந்தார்சான்றோராய்
ஏழுலகமதிலும் ஏற்றமுள்ளவித்தெடுத்து
கீழுலகில்ப்பெற்றேன் கீர்த்தியுள்ளசான்றோராய்
பெற்றுவைத்தஸ்ரீரங்கப் பூமியிலேபோயிருந்தேன்
மற்றுஞ்சிலநாள்க்கழித்து வாழுந்தெயிதிதனில்
அனந்தபுரம்நோக்கி யானேகும்வேளையிலே
தெய்வலோகத்திலுள்ள தேவதேவாதிகளும்
வைகுண்டலோகமதில் வாழுகின்றதர்மிகளும்
சிவலோகம்வாழுஞ் சிட்டர்முதலானவரும்
தவமானவேதாவின் தன்யுகத்தில்வாழ்பவரும்
வடகயிலாசமதில் வந்திருந்தார்வாட்டமதாய்
நடக்கும்வழியில் நானவரைக்கண்டேதான்
தாதுகரமணிந்த தானவரேதர்மிகளே
ஏதுகாணீங்கள் இங்குவரக்காரணமேன்
என்றவரோடேகேட்டேன் ஈசுரரேகேட்டருளும்
அன்றவர்களென்னோடு அருளினதைநீர்கேளும்
கலியன்பிறந்ததினால் கட்டழிந்துமானுபவங்கள்
சலிவாசியெங்களுட தானதவங்குன்றினதால்
இனியிருந்தாலென்னபலன் என்றுமிகயெண்ணமிட்டு
கனிந்துவுமைத்தேடிக் காணவந்தோமென்றுரைத்தார்
அப்போதுங்களுக்கு ஆகவேண்டியவளம்
இப்போதேசொல்லும் என்றேகேட்டேன்தேவருடன்
சொல்லுகிறாரந்தத் தேவர்கள்தானீசுரரே

நல்லதுதானிந்த நாட்டில்கலிவந்ததினல்
கலிக்குமுன்னுள்ளதுவுங் கலியில்மிகக்கண்டதுவும்
அலிக்கியமானதிளுல் அக்கலிமாழும்போது
சிவசத்திதான்முதலாய் சீவனுள்ளசெந்துகளும்
தவமுனிவராகிடினும் தரணிப்புற்பூண்டுவரை
மட்டைமருந்திலேயும் மலேகடலும்வாசுகியும்
திட்டமுடன்நாரணர்க்குச் சிந்தையொத்தபேர்களெல்லாம்
மேனியழுக்கறுத்து மேன்மூடிருளறுத்து
யோனிப்பிறப்பும் உற்றலிங்கப்பிறப்பும்
அவரவர்க்குள்ள அதிகப்பிறப்போடும்
எவரெவர்க்கும்பூமியொன்றில் இனிப்பிறக்கவேணுமல்லோ
ஆகும்பிறப்பும் ஆகுவதுமின்னளில்
சாகும்பிறப்புத் தவறுவதுமின்னளில்
அப்படியேமோசன் அவன்பிறந்தநீசமதால்
எப்படியும்ரண்டிலொன்று ஆகுவதுதிட்டமுண்டே
ஆனதாலெங்களுட அக்கமதிலிப்போது
மானமாய்ச்சான்ருேராய் வகுவுமென்ருர்ஈசுரரே
கொஞ்சம்பொறுவுமென்று கூறிவந்தேன்முன்னமே
இஞ்சொல்பார்க்கும்போது இவ்வுலகிலுள்ளோரை
பிறவிசெய்யஞாயமுண்டு பிள்ளைமொழிசொன்னதினல்
திறவிமுதப்பொருளே செய்தியென்னசொல்லுமென்ருர்
அப்போதுஈசுரனர் அச்சுதரைத்தான்பார்த்து
இப்போதுமைத்துனரே யானென்னசொல்லுவதுதான்
நீர்நினைத்ததுபோலே நிச்சயித்துக்கொள்ளுமென்ருர்
பாரனைத்துங்காக்கும் பரமேசுரருரைத்தார்

## மனுப் பிறப்பு

அப்போதுபாரளந்த அய்யாநாராயணரும்
முப்பொருளுமொன்ருய் ஒத்திருந்தேதுசொல்வார்
தேவரையுந்தான்வருத்திச் செப்புவாரையாவும்
பாவலரேநீரும் பார்த்துணர்ந்தோராமல்
மாலிங்கேயில்லையென்று மாருட்டஞ்சொன்னதற்கு
சூலின்கருத்திரண்டு தொல்புவிலேபிறக்கும்
உங்களினமாக ஒருபிள்ளைபெற்றதுண்டும்
அங்குபோய்ச்சான்ருேராய் அதில்பிறக்கப்போவுமென்று
சொல்லவேதேவரெல்லாஞ் சிரித்துமனங்கூடி
நல்லதுகாண்நாராயணரே நாங்கள்பிழைத்தோமெனவே
பிறக்கவேபோவோம் பிறந்தாலடியார்க்கு
இறக்கவிதியாகுமல்லோ இழிகலியனேதுவினல்
இறந்தால்பின்னந்த இனத்திலடியார்பிறக்க
வரந்தாருமென்று வணங்கிநின்ருரையாவை
அப்போதுஐயா அரிநமோநாரணரும்
செப்பரியநல்லகுலத் தேவர்களேதுரைப்பார்
மக்களேநீங்கள் வையத்திலேபிறந்தால்

வக்கலியனேதுவினுல் மாயமுங்களைச்சூழ்ந்து
என்பேருமீசர் யேற்றஉமையாள்பேரும்
தன்பேருஞ்சொல்லாதே யென்றுதடுத்தடிப்பான்
ஆனாலுஞ்சாவுவரும் ஆனாலுமுங்களுக்கு
மானமதுமாருமல் மாறியவ்வினத்திலுறும்
இப்படியேநானுங்களை இரட்சித்துக்காக்குமட்டும்
எப்படியுமுங்களுயிர் இதில்விட்டகலாதென்ரூர்
நல்லதுகாணென்று நாட்டமுற்றுத்தேவரெல்லாம்
வல்லவகையான வாய்த்தசான்ருேரினத்தில்
தேவருயிர்பார்த்து சென்றுதித்தார்தேவரெல்லாம்
மூவருரைமாருமல் மூர்க்கமுள்ளதேவரெல்லாம்
போகும்பொழுதில் பொன்னுலகத்தேவர்தனில்
தாவும்பெரியவொரு சம்பூரணத்தேவன்
பரதேவதையான பார்மறலிதன்னுகத்தில்
உரமானதேவியவள் உடையமன்னனைநோக்கி
தெய்வச்சம்பூரணனுஞ் சேர்ந்தவளோடெநடப்பாய்
மாயவனைமாய்கையினுல் மாறியவன்பேசினனே
நான்பிறக்கபோணுமென்ருல் நண்ணுதலையென்னோடு
தான்பிறக்ச்சொல்லித் தாரம்போலாக்குவீரால்
நான்பிறக்கப்போவேன் நாரணரேயல்லாது
தான்பிறக்கப்போவதற்குச் சங்கடங்களுண்டுமையா
என்றுரைக்கத்தேவர் எடுத்துரைப்பாரெம்பெருமான்
நன்றுநன்றுதேவாநீ நாணமென்னபேசுகிருய்
உன்பிறப்புயர்பிறப்பு யோவியத்தின்தன்பிறப்பு
பின்பிறப்யேமன் பூமிப்பிறப்பலவோ
அப்பிறவிக்கிப்பிறவி அடுக்குமோதேவாநீ
இப்பிறவிஞாயம் ஏனுரைத்தாய்மாதேவா
ஆனையோடுபூனை அணைந்துநலஞ்செய்திடுமோ
பூனையோடானை புல்குமோமாதேவா

வெண்பா

ஆனைமதமாய் அடர்ந்துமிகத்தேவா
பூனையோடுவந்துபுல்குமோ—பூனை
நாயோடுபுல்குமோ நல்லறிவில்லாததேவா
ஈயோடேசேருமோ இசல்

நடை

ஏனடாதேவாநீ இந்தமுறைசொன்னதென்ன
வீணடாவிவ்வாசை விட்டுவிடுநீதேவா
கீரிக்குப்பாம்பு கிளைவருமோவையகத்தில்
நரிக்குச்சிங்கம் ஒக்குமோமாதேவா
இப்படியேமாயன் எடுத்துரைக்கத்தேவாதி
எப்படியும்புத்தி இசையாமலேதுரைப்பான்
காவலரேமாமோகங் கண்டவிடமன்றலவோ
ஆவலதுகொண்டயிடம் அச்சுதரேசம்மதங்காண்

எந்தவிதமாகிடினும் எனக்கந்தபெண்கொடியை
தொந்தமாயெந்தனுக்குத் தொலேயாதயாசையதும்
தந்தருளிவைத்தால் தர்மமுண்டுங்களுக்கு
எந்தன்பிரானே இனிமாத்திச்சொல்லவேண்டாம்
என்றுரைக்கத்தேவன்' எடுத்துரைப்பாரெம்பெருமாள்
ஒன்றுநீகேட்டிலேயே உன்மனதொத்திலேயே
கீளுள்ளபெண்ணே மேலாக்கவேணுமென்ருல்
வேளமொத்ததேவா மிகுத்ததவஞ்செய்திடுநீ
மேலாகவேணுமென்று மெல்லியரும்நல்த்தவசு
காலால்க்கனலெழுப்பிக் கடுந்தவசுசெய்திடச்சொல்
தவசியிருபேருந் தாப்பிரியமாகநின்று
சிவசுவாசம்பெருக்கி சிறந்ததவஞ்செய்திடச்சொல்
நின்றதவத்தில் நிலேயாய்நினேத்ததெல்லாம்
அன்றுங்களுக்கு அருளுவேனுமொன்று
சொல்லிடவேதேவன் சிரித்துமனமகிழ்ந்து
நல்லதுதானென்று நாட்டமுற்றுத்தேவனுந்தான்
பரதேவதையான பைங்கிளியைத்தான்கூட்டி
விரைவாகத்தேவன் விருமாபதஞ்செபித்து
நின்ருன்தவசு நெடியோனுறுதியென்று
நன்ருனநன்னுதலும் நல்லசம்பூரணனும்

### தபோதனர் மனுப்பிறப்பு

நினேத்துத்தவசு நிற்கநிலேதேடிநின்ருர்
அனேத்துயிருங்காக்கும் ஐயாநாராயணரும்
ஏமனுலகமதில் இருக்குந்தபோதனரே
தாமனந்தபேர்கள் சருவதுமேயழைத்து
வாருங்கள்பிள்ளா வாய்த்ததபோதனரே
ஏதுங்கள்ஞாயம் என்னேடேசொல்லுமென்ருர்
உங்கள்குடும்பம் உடையோன்பதம்வணங்கி
எங்களுடமோச்சமதில் ஏகியிருப்பதினுல்
ஆனதாலவர்கள் அனுக்கிரகந்தன்னுலே
மானமுடனேமனுட வையகத்தில்வாழ்ந்திருந்தீர்
இன்னமுன்வழிகள் என்மகவாயங்கிருந்து
வன்னமுடனவ்வழிதான் வாய்த்தசாணுரினத்தில்
போய்ப்பிறந்துநன்ருய்ப் புவிமீதிலேவளர்ந்து
மேல்ப்பிறவிவந்திடினும் மேவும்தவ்வழியில்
இப்படியேபிறந்து என்றுமிடறுசெய்து
எப்படியுமென்குடும்பத் தாலேயிருளகன்று
உன்பிறப்போர்தன்னுல் உதவிபெற்றுவாழுமென்று
என்பெருமாள்சொல்லி இனத்தில்பிறவிசெய்தார்

### சொர்க்கலோகத்தார் மனுப்பிறப்பு

சொர்க்கலோகத்தாரை சுறுக்காய்வரவழைத்து
மிக்கவுங்கள்செய்தியென்ன விடுத்துரையும்மேவலரே
நான்பிறவிக்கெல்லாம் நம்பிக்கூடப்பிறந்து

என்பிறகேவந்து எனக்கேவல்செய்ததினால்
இன்னம்பிறவி இனத்திலுயிரென்மகவாய்
வன்னமுள்ளசான்ருேர் வழியிலிருப்பதினால்
காலக்கலிதான் கட்டளித்தென்மகவு
மேலுகமாள விடைநித்திச்சிருப்பதினால்
நீங்களும்போயங்கே நிங்களுடதன்வழியில்
மங்களமாய்த்தோன்றி வாழுங்கோவென்மகவாய்
வாழுகின்றநாளையிலே வருவேனுனுங்களிடம்
நாளும்பலவூழியங்கள் நமக்குமிகச்செய்திருங்கோ
ஏவல்கண்டுங்களைநான் இரட்சித்துஆண்டுகொள்வோம்
போவெனவேசொல்லிப் புகன்ருரவர்களுக்கு
பிரமலோகத்திலுள்ள பிலத்தயிருள்சிகளை
வரவழைத்தையா நாராயணர்வகிர்வார்
வாருங்கோபிள்ளா வாய்த்தரிசிமாரே
ஏதுங்கள்ஞாயம் என்ருேடுறையுமென்ருர்

### ரிசி மனுப்பிறப்பு

அப்போதுநல்ல அந்தரிசியேதுரைப்பார்
இப்போதையாவே யெங்களைப்பூலோகமதில்
படைக்கவேனுமெனவே பகர்ந்தமொழிமாருமல்
நடக்கக்கருமமது நாரணரேபொய்யாது
முன்னமேயெங்கள் முறைவழியிலொருயிரை
வன்னமுள்ளசாணுராய் வகுத்தீரேயும்மகவாய்
அல்லாமலெங்கள்வழி ஆனரிசிதங்களிலே
பொல்லாதகுற்றம் பிரமனுக்குச்செய்ததினால்
அன்பத்திநாலிலொன்றிரிசி அவனிதனில்போகவென்று
இன்புற்றநாரணரே ஈந்தீரவர்கேட்டவரம்
ஆனதாலவர்கள் அவனிதனிலேதிரிய
ஏனையாளெங்களைநீர் இப்போபிறவிசெய்தால்
இனம்பிரிந்துநாங்கள் இருப்போமேபூமிதனில்
கனம்பொருந்தும்நாரணரே கட்டுரைக்கவேணுமென்ருர்
நல்லதுதானென்று நாராயணருரைப்பார்
வல்லரிசிமாரே வகையாகக்கேட்டீரோ
அதற்குவிபரம் அருளுவேன்கேளுமென்று
மதுக்குகந்தமன்னன் வழுத்துவாரன்போரே
சென்றரிசியெல்லாம் செடமெடுத்துப்பூமிதனில்
மண்டலங்கள்தோறும் வாழுவார்கண்டீரே
என்னவிதமாய் இருப்பாரென்றேயினமாய்
துன்னயமாய்நீங்கள் துணிந்துநன்ருய்க்கேட்டிடுங்கோ
மான்ருேலிலேயிருப்பான் வானமதைத்தான்பார்த்து
தீன்சோறருந்தாமல் செலங்குடித்துநாடோறும்
கர்பமுண்டோமென்று கலியில்மிகப்பட்டுளன்று
அர்பமுடன்கொஞ்சி அவன்சிலநாள்தானிருந்து
பிரமவைகுண்டம் பிறப்பெடுத்துநான்ருனும்

வரம்வைத்தவனை வதைத்துப்பின்னுன்னினத்தில்
படைத்துத்தருவேன் பார்த்துக்கோலெக்கெனவே
இந்தப்படியே இருள்சியன்பத்தைந்துவரும்
ஆளுக்கொருவிதமாய் அருந்துவதுமிருப்பும்
நாளுமுறையால் நடத்துவதும்நீகேளு
ஒக்கவிபரமதாய் உரைக்கநேரம்பெருகும்
மிக்கத்திரட்டாய் விடுகிறேனீகேளு
நல்லமிளகுதின்று நவகண்டிதான்பூண்டு
கொல்லமிளகுதின்று குப்பைமேலேபுனைந்து
வெள்ளித்தடுக்கில் வீத்திருப்பாரேசிலர்கள்
ஆனைத்தோலிட்டு வருந்தாமல்நாடோறும்
கானகத்தில்வாழ்ந்து கண்மூடாரேசிலர்கள்
மரத்தைமிகக்காலிலிட்டு வார்சிலிந்திக்கோர்வையிட்டு
சரத்தையுள்ளேகொண்டு தானிருப்பாரேசிலர்
மீட்டைக்கொடியும் மிளகுவெற்றிலைக்கொடியும்
இட்டமுடன்நிஷ்டை இருப்பார்சிலர்பேர்கள்
உப்பில்லாதன்னம் ஒருபோதுதான்குடித்து
அப்பிலிட்டுத்தின்று அக்கினியிலேகாய்ந்து
இருப்பார்சிலபேர் இன்னமுநன்றாய்கேளு
பொருப்பிலிருப்பார் பூமியில்வாரூமென்பார்
கள்ளிப்பாலுண்டு கவிழ்ந்திருப்பாரேசிலர்
கொள்ளித்தளலுங் கொள்ளைகொண்டகஞ்சாவும்
உண்டோங்காண்லோகமதை உழுங்குவோமென்பார்சிலர்
புல்லையருந்திப் புலித்தோலின்மேலிருந்து
தில்லைப்பாலுண்டு திரிகுவோமென்பார்சிலர்
புகையிலைச்சாறு புகட்டுவோமென்பார்சிலர்
தகையில்லாக்கற்பந் தானுண்டோமென்பர்சிலர்
பூவில்ப்படுப்போம் புகட்டுவோமாவின்பால்
காவிலுறைந்து கலைதரியாதிரிப்பார்
உடையுடாதேகழுற்றில் உத்திராட்சமேபுனைந்து
நடைட்யொற்றைக்காலால் நடப்பார்சிலபேர்கள்
இப்படியேநன்றாய் இவரிவர்க்கோர்விதமாய்
அப்படியேதேசம் அன்பத்தாறதிலுந்திரிவார்
சோழக்குருநாடு தேசமதுநன்னாடு
ஆளவைகுண்டர் அவர்வளரும்நன்னாடு
இன்னாட்டில்வாழும் இராசருடவளமை
சொன்னால்துலையாது சொல்லவெளிதலவே
இப்புவியில்வாழும் எந்தன்வைகுண்டரிடம்
எப்புவியில்வாழும் இருள்சிசன்னாசியெல்லாம்
வரம்வைக்கச்சொல்லி வதைக்கவந்தவைகுண்டர்காண்
பரம்பெரியவைகுண்டப் பதியாளவந்தவர்காண்
சன்னாசியெல்லாம் தலைவீதம்வாழுகின்ற
மின்னான்சீமை விரிக்கக்கேள்நீங்களெல்லாம்
பாண்டியனான பரிகொங்கைநன்னாட்டில்

ஆண்டிருப்பான்சன்ஞசி அவனொருவன்கேட்டிருநீ
வருசமொருநேரம் மாற்றிப்பிறந்தேனென்று
புருசனெனேவந்தெடுத்தால் புள்ளையுண்டென்றுசொல்லி
இருப்பான்சிலநாள் இவனொருசன்ஞசி
சிங்களநன்னாட்டில் சீகண்டன்ராச்சியத்தில்
புங்கம்பாலுண்டு பூவையரைப்பாரோமென்று
ஆடையுடுக்காமல் அவனிருப்பானொருவன்
கோரக்கநாடு குருக்கேத்திரன்ராச்சியத்தில்
சூரக்கோல்கைபிடித்துச் சூலாயுதமேந்தி
தன்மதத்தால்பேசித் தானிருப்பானேசிலநாள்
கன்மதத்தாற்சாவான் கடியமூன்ருன்பேர்தான்
இப்படியன்பத் தாறூரிவைகளுக்கும்
அப்படித்தானிருக்கும் ஆனசன்ஞசிகள்க்கு
ஒண்ணெண்ணடையாளம் உரைக்கிறேன்சீக்கிரமாய்
துண்ணெனவேநீங்கள் துணிந்துமிகக்கேளுமென்று
நாலாஞ்சன்ஞசி நயனமிமையாதிருப்பான்
காலேக்கைக்கொண்டுக் கட்டிறுக்கியேயிருப்பான்
அஞ்சாஞ்சன்ஞசி அன்னங்குடியாமல்
பிஞ்சிருமிச்சியிலே பிசைந்துதின்றேயிருப்பான்
ஆருஞ்சன்ஞசி ஆனகஞ்சாகுடித்து
நீருக்கித்தேகமதை நெட்டைபோல்த்தானிருப்பான்
ஏழாஞ்சன்ஞசி இடுப்பிலோர்சீலேகெட்டி
பாழாகப்பச்சி பறவைதின்றேயிருப்பான்
எட்டாஞ்சன்ஞசி இருந்துமிகக்கண்மூடி
கட்டாய்ச்சுவாசமதைக் கவர்ந்துகவர்ந்தேயிருப்பான்
ஒன்பதாஞ்சன்ஞசி உமிழ்நீரிறங்காமல்
இன்பவிறுவிறுத்து தீரவம்போல்கண்வெளுத்து
தூங்கிஞற்போலே சூழச்சூழவிளித்து
பாங்குக்கள்தேடிப் பரிவாகநாள்தோறும்
பத்தாஞ்சன்ஞசிப் பரிவாகநாடோறும்
சித்தாமணக்கிலேயில்த் துயிலுவான்தண்டீரே
பதினேராஞ்சந்நாசி பவளமணிக்கோர்வையிட்டு
துதியாயொருவர்மூலஞ் சொல்லித்தினஞ்சேவித்து
கயிறைகொண்டேதான் கட்டிக்கொண்டேயிருப்பான்
உரியஉழுந்து ஓயாமல்க்கஞ்சாவும்
சதமென்றுநம்பித் தானிருப்பானொருவன்
பந்திரண்டாஞ்சன்ஞசி பாாக்கல்லுக்கோர்வையிட்டு
உந்திக்கிலுப்பையிலே உழக்குச்சாறேகுடித்து
இருப்பான்பதிமூன்ருன் இவனினத்தைக்கேளு
பருப்பானவலும் பழமுமிகவருத்தி
கோவையிலேயுங் கொடுப்பயிலேயும்பறித்து
சேர்வைப்பணிநித்தம் செய்திருப்பானறிவீர்
பதிஞலாஞ்சன்ஞசி பண்ணுமுறைகேளு
துதியாயொருமூலஞ் சொல்லித்தினஞ்சேவித்து

கயிறைதேற்றிக் கட்டிக்கொண்டேயிருப்பான்
பதினைந்தாஞ்சன்னாசி பார்க்கெந்தமாலையிட்டு
மதியகத்தேயுண்டு மலர்ந்துதுயின்றேகிடப்பான்
ஆடையுடுக்க அறிவுசற்றுமில்லாமல்
கோடைகுடித்துக் குலைவான்பதினாறான்
கள்ளிதனைத்தின்று காய்களிலையருந்தி
கொள்ளித்தளல்காய்வான் கொடியபதினேழான்
நல்லைத்திக்காயருந்தி நாமமணியும்பூண்டு
கொல்லத்திபோலேக் குலைந்துகுலைந்தேதிரிவான்
இவன்பதினெட்டான் என்றேயினமறிநீ
எவனுமறிவான் ஈரெட்டுமூன்றானையும்
மான்றோலின்மீதிருப்பான் மற்றிருபான்மீசையுளான்
தான்தெரியுமற்றிருபத் தொன்றானினங்கேளு
நாகத்தின்முள்ளை நல்லதலைமேலணிந்து
கூகத்தைச்சுற்றிக் கும்பிட்டுத்தான்திரிவான்
இருபத்திரண்டான் இனங்கேளுநன்றான
மதுவைத்துநித்தம் வணங்குவான்மந்திரத்தை
இருபத்திமூன்றான் இருப்பான்மயிர்வளர்த்து
சருவைத்துப்பால்பழத்தில் தந்திரத்தையோதிடுவான்
இருபத்திநாலான் எங்குமிகத்திரிந்து
உருவேத்திநித்தம் உடல்வாடலாயிருப்பான்
இருபத்தஞ்சான்றான் எருக்கலம்பாலருந்தி
பருவமாயோவியஞ்செய்து அதிலேபடுத்திருப்பான்
கள்ளுக்குடித்துக் கறியுப்புக்கூட்டாமல்
புள்ளித்தோலிலிருப்பான் பகலிருபத்தாறானும்
நீரைத்தியானமிட்டுத் நித்திரைக்குத்தானேதி
பாதைவழியேகான் பத்துரண்டேழானும்
கோணமுடிமுடித்துக் குறுந்தடியுங்கைப்பிடித்து
நாணமில்லாதேதிரிவான் நல்லிருபத்தெட்டானும்
சூலம்பிடித்துச் சுழியெழுத்தைமேலூன்றி
கோலமிட்டேதிரிவான் கூறிருபத்தொன்போனும்
முப்பதாஞ்சன்னாசி முச்சந்திதான்பார்த்து
அப்புச்சிரங்குபற்றி அவன்கிடப்பான்சந்தியிலே
ஓர்முப்பத்தொன்றான் ஊமையெனவேதிரிந்து
கூர்மையுள்ளகாது கொஞ்சமுங்கேளாதிரிவான்
முப்பத்திரண்டாம். உயர்ந்ததிடில்தான்பார்த்து
சர்பத்தினஞ்சு தானுண்டோமென்றிருப்பான்
நன்றாயறிந்திடுநீ நல்முப்பான்மூன்றானையும்
கண்டாலறிந்திட.லாங் கண்ணில்வெளுப்புமுண்டு
தொண்டையில்சடம்புகெட்டித் 'தொல்புவியிலேதிரிவான்
மண்டைவருப்புண்டு வாய்த்தமுப்பத்திநாலான்
முப்பத்தைந்தானும் முயலகன்போலுண்டாக்கி
யேய்ப்பிழைப்பார்போலே இவன்திரிவான்கண்டாயே
சோபமுள்ளமுப்பத் தாரான்செய்தியைக்கேள்

புஷ்பமீதில்படுத்து பூவையர்கள் தாலாட்ட
அர்ப்பமுடனுடை அணியாமல்தானிருப்பான்
அகத்தியிலையருந்தி ஆனைத்தோல்மீதிருந்து
மருத்துவமாய்ப்பேசி மாழ்வான்முப்பத்தேழான்
கொல்லமிளகு குறுணியொருநாளருந்தி
பல்லுமினுக்காதிருப்பான் பார்முப்பத்தெட்டானும்
சோறுகுளையவைத்து துப்பதலிப்பூவிலிட்டு
ஆறுமுன்பூவோடு அருந்துவான்முப்பத்தொன்போனும்
நாக்கிலோராணிதனை நல்லவித்தையாய்க்கொருத்து
மூக்கிலேகெட்டி முனங்குவானுர்ப்பதானும்
சிறுபயறைமாவாக்கித் தேங்காய்தனிலிட்டு
முருங்கக்காயதேயருந்தி முழுங்குவான்நாற்பத்தொன்றான்
அறக்கீரைவித்தை அருந்தித்தினந்தோறும்
சுரைக்கூடிட்டேதிரிவான் சுத்தநாற்பத்திரண்டான்
நாற்பத்திமூன்றான் நத்தசூரிவிதையை
தார்பத்தியமெனவே தானிருப்பான்கண்டாயே
விராலியிலையும் விழாங்காய்வெறுந்தோடும்
நிராதனமாய்வைத்து நித்தமருந்துவன்காண்
நாற்பத்திநாலான் என்றேயிவனையறி
நாற்பத்தஞ்சானுடைய நல்விபரம்நீகேளு
பூப்பறித்துத்தின்று பூனைமொழிபேசிடுவான்
பேய்க்கோமட்டிக்காயை பிசைந்துவிரைதானெடுத்து
நாய்குணம்போல்தின்பான் நாற்பத்தியாறானும்
எருமையுடமோரும் எள்ளெண்ணெய்யுங்குடித்து
நருநரெனப்பேசிடுவான் நாற்பத்துயேழானும்
மருளானபெண்ணை மனதில்வையோமெனவே
இருளானபோது இந்தநினைவாயிருப்பான்
காமத்தைத்தன்னுல்க் கழியவிட்டேவாடி
நாமத்தைப்பேசான் நாற்பத்துஎட்டானும்
புகையிலையைத்தீயில்வைத்துப் புகையுமிகக்குடித்து
நகம்வளர்த்தேயிருப்பான் நாற்பத்துவொன்போனும்
அன்பதாஞ்சன்னுசி அரசியிலைமேலிருப்பான்
மண்புரளத்தான்கிடந்து மாசலங்குடித்திருப்பான்
அன்பதொன்றானும் அலைவாய்க்கரைதோறும்
புண்ணியதீர்த்தமெனப் போயாடித்திரிவான்
நீலமவரி நித்தமச்சாறேகுடித்து
ஆலம்பலகையிலே அன்பத்திரண்டானிருப்பான்
சுக்குப்பொடியைத் தினந்தினமேயருந்தி
அக்குமறுகுடையான் அணிவானன்பத்திமூன்றானும்
அன்பத்திநலான் அசுரக்காவடிவைத்து
கெம்பித்திரிவான் கீரித்தோல்காலிலிட்டு
விழியிட்டேயாடி வெறிகொண்டேதான்திரிவான்
வழிவிட்டுவிலகி வழிநடப்பான்பத்தஞ்சான்
இப்படியேயன்பத் தஞ்சியிருள்சிகளும்

அப்படியேஅவரவர்கள் அற்புதங்கள்வேறுசெய்து
இருப்பாரவர்கள் இராச்சியத்துக்கொன்ருக
பருப்பாரவர்கள் பழுதுகைவாய்த்ததென்று
இருக்குமந்தநாளையிலே யான்வருவேன்தெட்சணத்தில்
ஒதுக்கிச்சன்ஞசிகளை ஒன்ரென்ருய்க்கொண்டுவந்து
வைக்கச்செய்வேன்வரத்தை மனுவறியச்சிலரை
செயிப்பேன்பலபேரைச் செகமேழுமறிய
வதைத்துவொவ்வொன்ருய் மனுவில்வரத்தாக்கி
நிதைத்துங்கள்தன்னேடு நிலைநெறுத்தியேதருவோம்
ஆனதால்நீங்கள் அவனியிலென்மகவாய்
இனமாயுங்கள் இனத்தில் பிறந்திருங்கோ
வாழுங்கோகலியன் மாய்கையால்சாவுவந்தால்
பாழுபோகாதேயுயிர் பதியுமுங்கள்தன்வழியில்
நான்வந்துங்களையும் நாட்டமுடனெடுத்து
மானைத்ததர்மம் வையகத்தில்வாழவைப்பேன்
என்றுபிரம இராச்சியத்தோர்களையும்
அன்றுபிறவி அமைத்துஅனுப்பினர்காண்
அந்தப்பிறவி அவர்செய்தனுப்பிவைத்து
சொந்தப்பிறவி சிவவைகுண்டத்தோரை
வாருங்கோவென்று வரவழைத்தெம்பெருமாள்
ஏதுங்கள்ஞாயம் இயம்புமென்ருர்தர்மிகளை
அப்போதுதர்மிகள் அரியோனடிவணங்கி
எப்போதுமெங்களைநீர் ரட்சித்துக்கொண்டவரே
ஆண்டவைகுண்டம் ஆண்டிருந்தோமித்தனைநாள்
தாண்டவரேயினியுன் தயவினருளாலே
என்னபடிநிச்சயித்து இருக்குதோஅவ்வழியாய்
வன்னத்திருமாலே வகுத்தாலதுமனதாம்
என்றுதர்மியெல்லாம் இசையஆதிநாராயணரும்
நன்றுபிள்ளாயுங்கள் நல்வளமைசொல்லுகிருேம்
இல்லாதெழியோர்க்கு எனைநினைந்துதர்மமிட்டு
பல்லுயிர்க்குன்னுயிராய்ப் பார்த்தீரொருப்போலே
நீதநிலையை நிறுத்தியெனைநினைந்து
சீதமாய்பூமி செலுத்தியரசாண்டிருந்து
வந்தீர்கள்கூட்டோடு வைகுண்டமானதிலே
சேர்ந்தீர்களாகிடினுஞ் செய்தநன்றிதான்பார்த்து
உங்களுக்கின்னள்வரையும் உதவிதரவில்லையல்லோ
தங்களுக்குநன்மை தரவேணுமானுக்கால்
இன்னமொருபிறவி என்மகவிலேபிறவும்
வன்னப்பிறவியென மகவழியில்த்தான்பிறந்தால்
ஏழுயுகக்கணக்கும் யான்கேட்டுவுங்களுக்கு
மாழுவதில்லாமல் மறுபிறப்புமறுத்து
நம்முடையசொத்தும் நாடியுங்களுக்கீந்து
மும்மடங்காய்த்தர்மம் ஓங்கிவளர்ந்தேயிருப்பீர்
என்றுதர்மிதங்களுக்கு எம்பெருமாளீதுரைக்க

அன்றுயர்ந்ததர்மிகளிலே பேருமேதுரைப்பார்
ஆயரேயெங்களுட ஆதிநாராயணரே
மாயரேயெங்களைநீர் மறந்தெங்கேபோனீர்காண்
காணுமலும்மையெங்கள் கண்கள்மிகத்தவித்து
வாணுளயர்ந்து மறுகிநொந்துவாடினேமே
என்றுதர்மபாண்டவர்கள் இப்படியேசொல்லிடவே
நன்றுநன்றென்று நாராயணர்மகிழ்ந்து
முன்னமேநீங்கள் யுகத்துக்குகங்கூட
என்னைவிட்டகலாது இருந்தீர்களென்னுயிர்போல்
ஆனதாலிப்பிறவி ஐயாநாராயணராய்
மானமாய்த்தர்மம் வளர்ந்தோங்கவென்னாளும்
நிச்சயித்துவொவ்வொன்ருய் நிலைநிறுத்திதானதற்மம்
மெச்சித்துநானினித்தான் மேல்ப்பிறக்கப்போவதினல்
என்மகவாய்நீங்கள் யேழிலொருவனுமாய்
கண்மணிபோல்நீங்கள் கலியுகத்தில்ப்போய்ப்பிறங்கோ
என்றேதான்தர்மிகளுக்கு எம்பெருமாளீதுரைக்க
அன்றேதான்தர்மி எல்லோருமேதுரைப்பார்
தானதவஞ்செய்தல்லவோ தர்மிகள்தானுகி
மானவைகுண்ட வாசலிலேவந்திருந்தோம்
மாணுவங்களில்லா மாழுங்கலியுகத்தில்
போய்நீசவய்யகத்தில் பிறக்கப்போவென்றீரே
நாங்கள்முன்செய்த ஞாயநடுப்போயிடுமே
ஏங்கக்கலியினுட இருளினுலேயாவே
நியாயம்நடுகேட்டு நடுக்கமிகப்பிடித்து
தேயமதில்நாங்கள் செய்தமுறைதப்பிடுமே
ஆனதால்நீரும் அன்றுநடுக்கேள்க்கையிலே
மானமில்லையானுல் வளக்கென்னசொல்லிடுவோம்
என்றுரைக்கத்தர்மி யேதுரைப்பாரெம்பெருமாள்
நன்றுநன்றுபிள்ளைகளே நானதுக்குச்சொல்வதுகேள்
என்மக்களேழும் இயல்கலியில்ப்பட்டுழன்று
வன்மக்கலியதனுல் மாறிமிகச்செய்ததெல்லாம்
நான்பொறுத்துங்களுக்காய் நானேதவசுபண்ணி
வானசிவனுக்கேர்க்க வாய்த்ததவமிருந்து
மக்களேழுபேர்கள் வம்மிசங்களுள்ளதெல்லாம்
ஒக்கவொன்றுபோலே உகந்தெடுத்துண்மையுடன்
நாடாளவைப்பேன் நல்லமக்களேள்பேரை
தாடாண்மையான சத்தியுமைதன்னுணே
நீங்களென்னகுற்றம் நிலையில்லாச்செய்தாலும்
தாங்கிப்பொறுப்போன் தருவேனுன்னன்னறிவு
உங்கள்கர்மமெல்லாம் ஒக்கத்துலைப்பதற்கு
மங்களமாய்ச்சிவனை வருந்தித்தவசுபண்ணி
நானுங்களாலே நல்லதவசிருந்து
மானுபங்கள்கெட்ட மகாகலியுகத்தில்
தாயுந்தகப்பனையுந் தான்பளித்தற்கலியன்

பேயுங்கலிநீசம் பிறப்பைச்சோதித்தறுத்து
தாட்டாண்மைதர்ம தலைக்கவைத்துங்களையும்
நாடாளவைப்பேன் நம்மாணைதப்பாது
என்றுரைக்கவய்யா எல்லோருஞ்சம்மதித்து
அன்றுபிறவி அமையுமென்றுரப்படியே
நன்மையுள்ளதர்மியெல்லாம் நல்லசான்றோர்குலத்தில்
மேன்மையோரெல்லாம் மேதினியிலேபிறந்தார்
அந்தயுகப்பிறப்பு ஆனபின்யெம்பெருமாள்
நந்தசிவனுகத்தோர் நாடும்வானோர்களையும்
வாருங்கோபிள்ளாய் வானோரேயென்றுசொல்லி
ஏதுங்கள்ஞாயம் இயம்புமென்றுரெம்பெருமாள்
அப்போதுவானோர் எல்லாருமேமகிழ்ந்து
செப்புகிறாரந்த சிவனாதிதன்னோடு
மாயவரேதூயவரே மற்றொப்பில்லாதவரே
ஆயரேயும்முடைய அறிவின்படியாலே
அமைத்தால் அதுமனதாமெங்களுக்கு
சமையம்வழுவாத சாதித்திருமாலே
என்றேதான்வானோர் ஈதுரைக்கவையாவும்
நன்றெனவேமனது நன்றாயகமகிழ்ந்து
காலக்கலிதான் கலிமூழ்கிவையகமும்
மேல்யுகம்வரையும் மூழ்கியதுகண்டீரே
ஆனதாலீரேழு அவனியிருள்மூடி
மானமழிந்து வரம்பழிந்துமானிடரும்
ஆதிமூலச்சாதி அடங்கல்வரைத்தேவரெல்லாம்
நீதிநிலைமாறி நின்றதுவுங்கண்டீரே
ஆனதாலிந்த அன்னீசவிருள்தனையும்
யேனமென்னபார்த்தே இதையறுக்கவேணுமென்று
பார்க்கும்போதிந்தப் படுநீசக்கலியை
ஆர்க்குஞ்செயிக்க அடங்காதுகண்டீரே
ஆனதால்நாமள் எல்லோருமின்னமொரு
மானமாய்ப்பிறந்தால் மாழுங்கலியல்லாது
கலிக்குளகப்பட்டசடங் கலியழிக்கக்கூடாது
பெலிக்குக்கலியையிடப் பிறந்தாலல்லாலேலாது
ஆனதால்நாங்கள் அம்புவில்வருவோம்
வானவரேயுங்களுட வளப்பமென்னசொல்லும்யென்றார்
அப்போதுவானோர் எல்லோருமேபயந்து
செப்புவதேதோ திருமாலேநாங்களினி
சிவன்முதலேதிருமால் திருவுக்கிதுவானால்
எவனையாபூமியிலே இனிப்பிறக்கோமென்பதுதான்
ஆனதாற்பின்னும் அடியார்க்கொருவிதனம்
ஈனமேகண்டு இரங்குதையாயெங்கள்மனம்
அவ்விதத்தைச்சொல்வோம் அடியாருக்கின்னபடி
எவ்விதத்திலேயும் இசைந்தனுப்புமெங்கோவே
என்றுவானோர்பணிந்து இயம்புவாரன்போரே

சிவனுக்கடிமை செய்திந்தப்பூமியிலே
எவனுக்கும்பதருது இருந்தோமேயிவ்வுலகில்
மாய்கையில்லையெங்களுக்கு மக்கள்பெண்டீர்தானுமில்லை
சாய்கைத்துயிலுமில்லை தகையுமில்லையெங்களுக்கு
இளப்பில்லைதாகம்இல்லை பசிதாகம்இல்லை
வளைப்பில்லைதேக மறுவில்லைநோவுமில்லை
அலந்தாசையில்லை ஆணில்லைப்பெண்ணுமில்லை
கலந்தாசையில்லைக் காமக்களிவுமில்லை
இத்தனையுமில்லாது ஈசனருள்செயலால்
நித்தியமென்பூவால் நிமலன்பதம்போற்றி
இன்பதுன்பமற்று இருவினைகள்தானுமற்று
வன்பத்துச்சம்பத்து வாக்குடளேபோக்குமத்து
மலசலமத்து மயமுஞ்சயமுமத்து
பிலன்பொறியத்துப் பேரத்துவூருமத்து
இத்தனையுமத்து இருந்தசிவத்தொண்டரிடம்
புத்திகெட்டமாகலியில்ப் போய்ப்பிறக்கச்சொன்னீரே
சொன்னமொழிமாருமல் சுவாமிவிண்ணப்பமென்றார்
என்னவிதமாகிடினும் ரட்சிக்கவேணுமையா
என்றந்தவானோர் இற்ஞ்சித்தொழுதிடவே
நன்றென்றுகேட்டாதி நாராயணருரைப்பார்
நல்லதுகாண்வானவரே நானினிமேல்செய்பிறவி
இல்லறத்தைவிட்டுதவம் இல்லைகாண்வேறுண்டு
ஆனதால்ப்பேடென்னும் அருளியிருளியெனும்
மானமில்லாரென்னும் வாராதுமேல்ப்பிறவி
ஆணுக்கொருபெண் அன்றாழிகாலமெல்லாம்
தோணுதலாய்வொன்ருய்த் தொல்லூழிகாலம்வரை
வாழ்ந்திருப்பாரென்றும் மக்கள்கிளையோடும்
தாழ்ந்திருப்பார்பேராய்த் தழைத்தோங்கவென்னாளும்
பேருதழைக்கப் பெருமையாய்வாழ்ந்திருப்பார்
ஊரொன்றுகமொன்று உரையொன்றுக்குள்ளாக்கி
இறவாமல்ப்பெண்ணோடு இருந்துமிகவாழ்வதல்லால்
பிறவியத்துவாழ்வார் பெண்ணுடனேயல்லாது
ஊர்மறந்துபேர்மறந்து உற்றகிளைமறந்து
பார்மறந்துதேசப் பவுசிமிகமறந்து
ஆடல்மிகமறந்து ஆயிளையைத்தான்மறந்து
பாடல்மறந்து பக்கத்துணைமறந்து
அன்னமறந்து அதிகமணமறந்து
சொர்னமறந்து சுகசோபனமறந்து
நலமறந்துதேக நளினமிகமறந்து
மலசலமறந்து வளருந்தவப்பேறுமில்லை
இத்தனைநன்மைகள் எல்லாமிகக்கொண்டாடி
சித்திரமாகத் திரும்பிப்பிறப்பத்தவராய்
என்பிள்ளையேழும் எடுத்தவழியோரினமாய்
அன்புள்ளபேராய் அரசாள்வோங்கண்டாயே

என்றுமகாமால் இப்படியேசொல்லிடவே
அன்றந்தவானோர் எல்லோருமேயிரங்கி
நன்மைபலதோடும் நன்னுதலார்தன்னோடும்
மேன்மைபலபெறவே மேற்பிறக்கச்செய்வோமென்று
சொன்னீரேஐயா சுகம்பெற்றோம்நாமென்று
பன்னீர்க்குணம்போல் பச்சம்வந்துவானோர்கள்
ஆதியேயெங்களையும் அதிலமைக்கவேணுமென்று
சோதியேயென்று தொழுதுநின்றார்வானோர்கள்
நல்லதுதானெனவே நாட்டமுற்றெம்பெருமாள்
வல்லமக்களான வாய்த்தசாணார்குலத்தில்
ஏழுமகவின் யேற்றவானோர்வழியில்
மாழுவந்தாலுமதிலே மாறாய்ப்பிறக்கவென்று
நாராயணர்புவியில் நல்லமக்களேழ்வரையும்
சீராகவந்தேற்றுச் செய்தவினையும்நீக்கி
ஊழூழிகாலம் உயிரழியாவண்ணமுந்தான்
ஆழிக்கரையான்மகவு அரசாள்வாரென்றுசொல்லி
சொல்லிப்பிறவி செய்தார்கள்சாணாராய்
நல்லதென்றுவானோர் நாடியகமகிழ்ந்து
சாணாராய்வந்து தானுதித்தார்வையகத்தில்
வாணாளறிந்து வானோர்மிகப்பிறந்தார்
அந்தயுகப்பிறப்பு ஆனபின்னெம்பெருமாள்
சொந்தப்பரலோகச் சுத்தமுனிவோர்களையும்
எல்லோரையுமழைத்து எம்பெருமாளேதுரைப்பார்
வல்லவரேயுங்கள் வளப்பமென்னசொல்லுமென்றார்
நீங்களெனைமறந்து நீனிலத்திலில்லையென்று
நாங்கள்மிகவறிய நன்றிகெட்டுச்சொன்னீரே
ஆனதாலுங்களுக்கு அதிகபிழையாச்சுதல்லோ
ஏனமென்னபார்த்து இயம்புமுனிவோரே
அப்போதுமாமுனிவர் எல்லோருந்தான்பயந்து
செப்புவதேதோ சிவனுலகோர்செய்திகண்டால்
கர்ப்பனைக்குள்ளல்லாக் கடருவமோநாங்களினி
அற்பரல்லோகற்பினைக் கல்லவென்றுசொல்வதுகாண்
என்றுமுனிசொல்லி இயம்புவார்பின்னுமுனி
எல்லாவுரையும் எடுத்துரைத்தீர்வானோர்க்கு
நல்லாயறிந்தோம் நாதனேயவ்வகைபோல்
படைத்தனுப்புமும்முடைய பாலருடவழியில்
நடத்தையதிகமுள்ள நாராயணப்பொருளே
என்றுமுனிவோர் இப்படியேசொல்லிடவே
அன்றுபெருமாள் அவர்க்கேதுசொல்லிடுவார்
எல்லோருமென்மகவாய் இனத்தில்பிறந்திடுங்கோ
வல்லோரேயுங்களைநான் வந்தெடுப்போமஞ்சாதே
என்மக்களேழும் ஈன்றவழிச்சான்றோரை
பொன்மக்களான பூமக்கள்தங்களுக்கு
என்சொத்துமீந்து என்பெயரையுங்கொடுத்து

தன்சொத்தோடேயிருந்து தற்சொரூபங்கொண்டிருப்பேன்
இறப்புப்பிறப்பும் இல்லாமலென்மகவை
பிறப்பிறப்பின்றி பேருலகாளவைப்பேன்
ஆனதால்தர்மயுக அரசுங்களுக்கருளி
மானமாய்த்தந்தோம் மாயாண்டிதன்னுணை
என்றுணையாதி நாராயணர்கூற
நன்ருகமாமுனிவர் நல்லதென்றுசம்மதித்து
அய்யாவுமது அருளின்படியாலே
மெய்யாயுமது விந்துவழிகுலத்தில்
படையுமையாசாணுராய்ப் பரமனேயென்றுநின்ருர்
சடையுமணிந்தமுனி தாமுரைக்கவையாவும்
நல்லதுகாண்பிள்ளாய் நாடுவதுதான்கருமம்
வல்லவரேசான்ருேர் வழியிலுங்கள்தன்னினத்தில்
பிறக்கப்போவென்று பெருமுனிவரையனுப்பி
சிறக்கச்சிவனேடு செப்புவாரெம்பெருமாள்
ஆதியேநாதி ஆனந்தமைத்துனரே
சோதியேசான்ருேராய்த் தொல்புவியேழிலுள்ள
சங்கமுதற்தெய்வ சத்திப்பரலோகம்வரை
அங்கவரைச்சாணுராய் அவதரித்தார்பூமியிலே
என்மக்களான இப்பூமியேழிலுள்ள
பொன்மக்களெல்லாம் பொறுமையுள்ளசாணுராய்
பிறந்தார்புவிதனிலே புகலுமையாநம்மள்செய்தி
கலிக்குளகப்பட்டோர் கடந்துகரையேறவென்ருல்
வலிக்குவலுவான வகையல்லோவேணுமையா
தீட்டுக்குள்ச்சென்ருல்த் திரும்பக்குழியாமல்
வீட்டுக்குள்போவாரோ மேதினியோர்நாமறிய
இனிமேல்ச்செய்தி இன்னதென்றீசுரரே
கனியானமைத்துனரே கட்டுரைக்கவேணுமென்ருர்
அப்போதுஈசர் அட்சுதரைத்தான்பார்த்து
செப்புவதுநாமறியோஞ் செய்கருமமங்கேயல்லால்
நம்மோடுசொல்ல நாரணரேஞாயமில்லை
தம்மோடுசொன்ன சத்தியத்தின்படியே
நடத்தும்நீரென்று நவின்ருரங்கீசுரரும்
திடத்திருமாலானேர் செப்புவார்பின்னலே
இவ்வுலகமுநீசன் இனக்குலமுநாமழித்து
செவ்வுகற்றநம்மனுவோர் சிறந்ததர்மத்தாரணியும்
புதுயுகமீபுதுவிருச்சம் புதுமனுபுதுநினைவு
நெதிவுசற்றில்லாது நின்றிலங்கும்பதியும்
புதுவாயுபுதுவருணன் புதுமுகில்புதுமதியும்
புதுமிருகம்புதுப்பறவை புதுஊர்வனங்கள்முதல்
தர்மயுகத்துக்குத் தானேற்றவஸ்துவெல்லாம்
நன்மையினிதிட்டித்து வைத்திடவும்வேணுமல்லோ
இப்படியேஞாயம் இருப்பதுவுமல்லாது
முப்படித்தானுள்ள முறைகேளும்ஈசுரரே
துரியோதனனைச் செயித்துக்கலிவருமுன்

பகிரங்கமேவிப் பள்ளிகொண்டுநானிருந்தேன்
ஸ்ரீரங்கமீதில்ச் சிறந்திருக்குமப்பொழுது
நீதங்கள்கெட்டகலி நீனிலத்தில்வந்ததினல்
நீதநெறிமானுபமும் நிசமான தர்மமதும்
சாதமுள்ளவெள்ளாஊ தலையைந்துகொண்டதுவும்
வெள்ளன்னம்வெண்குயில்கள் வெண்புருவெள்ளைமயில்
கள்ளமிலாவெஞ்சாரை கடியபிலவெங்கருடன்
நல்லவனுமன் நாடுங்காண்டாமிருகம்
வல்லவெண்ணரிகள் வளரும்வெண்காக்கைகளும்
ஆளியோடுசிங்கம் ஆணெருஞ்சிப்புள்ளும்
வேளிசைவெண்கலைமான் வெண்புள்ளுவெண்ணணிகள்
வெண்கற்ருவெண்போற்று வெண்டோகைவெண்பறவை
பண்புற்றபச்சி பால்மிருகமூர்வனமும்
இத்தனையும்நீசனுக் கெற்றுக்கொடாதபடி
புத்தியறிவோடு புவனமதைவிட்டேகி
கானகமேநடந்து கதறியெனவருந்தி
மானுபமாய்நின்று வருந்தித்தவம்புரிந்தார்
ஆனதாலூர்வனத்தில் ஐந்துதலைவெண்சாரை
ஈனமிலாமிருகம் ஏற்றவெள்ளையானைகற்ரு
வெண்ணுடைவெண்ஞானி வெண்முத்திவெண்மிருகம்
வெண்பச்சியான மேல்ப்பச்சியானதிலே
பொன்பச்சிவெம்பச்சி பூணுநிறத்தானபச்சி
தென்பச்சியம்பச்சி செந்தாமரையின்பச்சி
இப்பச்சியோடே இம்மிருகமூவர்னமும்
அப்பச்சியோடே அணைவுமனுவோலமுமாய்
கூடிக்குளையுங் கொடிப்பிதிருமொன்றதுபோல்
தேடரியவந்தத் தெய்திதனில்த்தோற்றிவரும்
விருச்சம்படைக்க வேணுமதுவிபரம்
புரச்சமதுபார்த்துப் புகலுகுதுஆகமந்தான்
என்பிள்ளையேமு இயாபிக்கநாமீந்த
மின்விருச்சமான மிகவிருச்சம்நிலையாய்
வன்னமதுபூகம் வாசமதுவிருச்சம்
தென்னவிருச்சம் செறியும்புன்னைவிருச்சம்
ஆதிவிருச்சம் அடர்ந்தபெருவிருச்சம்
சோதிவிருச்சம் சுகசோபனவிருச்சம்
தேகவிருச்சம் செம்பொன்னிறவிருச்சம்
ஆகமதில்லுள்ள அநேகவிருச்சமதும்
வந்துமிகத்தோன்றும் வைத்திருக்குந்தெய்திதனில்
சிந்துபயில்வானஞ் சிறந்தவொருவெண்வானம்
வானமதிலுறையும் வளர்நிலவுநேராக
ஈனமில்லாததுதான் இலங்குமென்னேரம்வெளியாய்
சேத்திரங்ளொன்று தினமுமதுவிளக்காய்
சாத்திரவேதஞ் சமையமொன்ருய்நின்றிலங்கும்
வாயுவேபூப்போல் மலரெடுத்துவீசிநிற்கும்

ஆயுங்கலைத்தமிழும் அறிவொன்றுபோல்பரவும்
நம்மனுவோர்தர்மபதி நாளும்மிகத்தழைக்கும்
தம்மனுவோர்போலே தழைத்திருந்துவாழ்வார்காண்
வொக்கவொருவினம்போல் உவந்திருந்துவாழ்வார்காண்
மிக்கத்திருச்சாதி மேல்ச்சாதிசான்றோராய்
இருப்பார்வயது எண்ணலக்கில்லாதபடி
பருப்பார்பழமும் பாலுமிகஅருந்தி
புண்ணியமுள்ளோராய்ப் பூமிதனையாண்டிருப்பார்
மண்ணெல்லாந்தர்ம வயல்போல்விளைந்திருக்கும்
தர்மபுவியிலுள்ள தண்ணீர்கலக்கியானம்
நன்மைவெள்ளங்காட்ட நாடுங்கருணைவெள்ளம்
இப்படியேதர்மபதி இராச்சியமொன்றுண்டாக்கி
செப்பெரிய பொன்பதிகள் திட்டித்துவைக்கவென்றும்
முன்னமேயெந்தனக்கு உகந்ததுவரம்பதியில்
பொன்னம்பதியும் பெரியதங்கப்பதியும்
உண்டுகாணப்பதியும் உவரியதுக்குள்ளிருக்கும்
கண்டுகொள்ளார்கள் கலிமாசுகொண்டவர்கள்
ஆனதாலப்பதிதான் நாடுவதுமக்களுக்கு
தானமுடனமைக்க தர்மசாஸ்த்திரத்திலுற்றிருக்கு
தர்மபுவிகண்டு தானிருக்கும்மனுக்களுக்கு
வர்மமில்லைநோவுமில்லை மறலிவினைதானுமில்லை
தர்மபுவிவாழ்வாருக்குச் சத்திவிதிகணக்கு
நம்மிடத்திலல்லால் நாட்டில்கணக்குமில்லை
சாத்திரவேதஞ் சமயம்போதித்தருளி
சேத்திரவிபரிப்புரைக்கச் செல்லநம்மனுவோரும்
காலனென்னுஞ்சித்திரக்கணக்கனெனும்பேர்களுக்கு
ஏலமேதவசு இடருகநிற்கிறூர்காண்
ஆனதாலவர்கள் அழிவாகிப்போகுமையா
ஊனக்கிரகம் ஒன்பதுபேர்களையும்
அழித்துவேறொன்றுக்குள் அருள்கொண்டிருக்குதுகாண்
முன்னூலின்சாத்திரம் முறையெல்லாந்தப்பவைத்து
பின்னூல்ப்பிராணமொன்று போதிப்பொருவனுமாய்
இந்தப்படியான் நிச்சயித்திருப்பதினல்
அந்தப்படியுள்ளதெல்லாம் ஆகுமந்தத்தெய்திதனில்
அதற்குமுன்னேநாம் அமைப்பதெல்லாமமைத்து
கதுக்கெனவேபார்ப்போங் கலியையழிப்பதற்கு
என்றுவிசாரித்து இருக்கின்றநாளையிலே

## தெய்வக் கன்னியர் தவம் நிறைவேற்றல்

சான்றவரைப்பெற்ற தையல்தெய்வக்கன்னியர்கள்
தவத்திலவர்நின்று தலைவரையுங்கால்வரையும்
உபத்திர ஆல்விருச்சம் உடலெல்லாமேமூடி
கன்னியர்கள்ரோமங் கனத்தபுவியில்வேராய்
உன்னியேலோகமதில் ஓங்கிம்பரந்ததுவே

நின்றதவந்தான் நினைத்துநிறவேறி
நன்றினியகன்னிகள் நாடுந்தவத்தருமை
பார்த்தன்தவமதிலும் பத்துரெட்டிகூடவுண்டு
ஏத்தரியசீதை இருந்ததவசதிலும்
ஓட்டிரெட்டிகூடவுண்டே ஓவியத்தார்தன்தவங்கள்
பொறுத்துமுகியாத பெரியதவத்தருமை
மறுத்துரைக்கக்கூடாமல் வளர்ந்துதவமுத்தியதே
சக்தியுமையாள்க்குஞ் சதாசிவமானதுக்கும்
முத்திக்கும்மால்க்கும் முகுந்தன்பிரமனுக்கும்
மனதில்மிகவறிந்து மாதுசத்தியேதுரைப்பாள்
காட்டிலேழுபெண்கள் கனநாள்த்தவசுபண்ணி
தாட்டியமாய்ப்பெண்கள் சடைத்தார்காண்ஈசுரரே
பெண்கள்தவசியல்லோ பொறுக்கமிகக்கூடலையே
அங்கேபோய்நாமள் அவர்தவசுபார்ப்போமென்றார்
என்றுவுமையிரங்கி இப்படியேசொல்லிடவே
அன்றுஅறம்வளத்தாள் அவர்பங்கனேதுரைப்பார்
நல்லவுமையே நாடும்பெண்ணார்தவத்தில்
செல்லவென்றால்நாரணருந் தேனேவரவேணுமென்றார்
அப்போதுநாரணரை அடிவணங்கிமாதுமையாள்
ஒப்போடுறவணங்கி உரைக்கிறாளன்போரே
அண்ணரேகோவே ஆதிநாராயணரே
கண்ணரேகார்வண்ணரே காட்டிலேழுகன்னியர்கள்
தவசுதனிலிருந்து சடைத்தார்கனநாளாய்
சிவசிவயவர்கள்தவம் செப்பப்பொறுக்காது
நாமள்போய்ப்பார்த்து நல்லபெண்ணேழ்வரையும்
ஆமானபதவி அருளவேணுமையா
என்றுநாராயணரை எழுந்தருளச்செய்துஉமை
அன்றுசிவனாரும் ஆதிநாராயணரும்
அம்மைஉமையாளும் ரம்பைஸ்திரீமாரும்
செம்மையுடன்னடந்து சென்றார்வனமதிலே
வனத்திலவர்கள்வர மாதரேழுகன்னியரும்
இனத்திலுள்ளமாதுமையை எல்லோருங்கண்டாவி
தாயேயுனது தாள்கண்டெத்தனைநாள்
வாயேபுவிக்குடைய மாதாவென்றுயாரே
எனத்தோரேமெங்களைநீர் இகழ்ந்துகடத்தாமல்
தனதாகவெங்கள் தயவில்க்குடியிருந்து
கற்பகலாக்காத்த கண்ணெங்கள்மாதாவே
உர்ப்பனமாயெங்களைநீர் உலகில்தவறவிட்டு
இருந்தாயேதாயே எங்கள்விதிநாயகமே
அருந்தாமல் வாடினமேஅறமிலார்தங்களைப்போல்
காத்திருந்தாயென்றிருந்தோம் எங்களுடகட்டழிய
பார்த்திருந்தனாயமென்ன எங்களுடபார்வதியே
என்னேரமீசுரர்க்கும் என்னம்மையுந்தனுக்கும்
சொன்னபணிமறந்து சொற்தப்பிநின்றோமோ

ஈசருடசட்டம் யாங்கள்மிகமறந்து
தேசமதில்வரவே சிந்தையிச்சித்ததுண்டோ
கற்பினையைமறந்தோமோ காராவைக்கொன்ரேமோ
அற்புதவென்தாயே அடியார்தமக்கருளும்
என்றுகன்னியெல்லாம் இப்படியேதாமுரைக்க
அன்றுஅறம்வளர்த்த அம்மைமனதிரங்கி
நல்லதுதான்பெண்ணேயுங்கள் ஞாயமெல்லாமுரைப்போம்
வல்லசிவனரே வார்த்தையொன்றுநீர்கேளும்
தவத்தைநிறைவேற்றித் தார்குழலாள்யேழ்வரையும்
அகத்தேவரவழையும் ஆதியேயென்றுரைத்தாள்
அப்போதுசிவனர் ஆனகன்னியேழ்வரையும்
கொப்போடுசூழ்ந்துநின்ற குழையெல்லாமேயுதிர்த்தி
நிறைவேற்றித்தவத்தை நேரிளமாரேழ்வரையும்
சிறைவேற்றிப்பெண்களையுஞ் சிவனர்வரவழைத்து
வந்துமடவார் மறையொத்தமூவரையும்
சந்துஷ்டியாகத் தாழ்ந்துநமஸ்காரமிட்டு
கனகதிரவியக் கப்பல்க்கரைசேர்ந்தாற்போல்
மனமகிழ்ந்துமாதுமையை மாமடவார்முத்திமுத்தி
கொண்டாடிக்கொண்டாடிக் கூறுவார்கன்னியர்கள்
சென்ரேடிச்சென்ரேடிச் சிவனைமிகப்போற்றி

### விருத்தம்

வந்தனேவந்தாய்போற்றி மாதுமைக்கணவாபோற்றி
சந்தனமயிலேபோற்றி சண்முகத்தாயேபோற்றி
நந்தகோவேந்தேபோற்றி நாதனேநீதாபோற்றி
சிந்தரென்கணவாபோற்றி சிவசிவாபோற்றிபோற்றி

### விருத்தம்

மாதவாபோற்றிபோற்றி மறைமுடிகாணுவல்ல
நீதனேபோற்றிபோற்றி நிசரூபச்சித்தாபோற்றி
சீதாவாளுமையேபோற்றி தெய்வனன்மணியேபோற்றி
மாதவாவனத்தில்த்தொட்ட பாங்கனேகணவாபோற்றி

### விருத்தம்

மூவர்தேடியமுற்ரு முதலேயுனதுபதம்போற்றி
தேவர்க்கரியதிரவியமே தெய்வமணியேசிதம்பரமே
காவக்கானகவனமதிலே கற்பையழித்துக்கைவிட்டகன்ற
தாவத்துணையேயென்கணவா தவமேயுனதுபதம்போற்றி

### விருத்தம்

மாட்டிலேறும்மகாபரனே மாதுஉமையாள்பங்காளா
காட்டிலடியாரேழ்பேருங் கற்ருவிழந்தபசுவதுபோல்
ஊட்டிஉறக்கரில்லாமல் ஊமைகண்டகினுவதுபோல்
வாட்டமறிந்துமனதிரங்கி வந்தாய்கவலைதீர்ந்தோமே

### விருத்தம்

தீர்ந்தோமினியெங்களைத்தானும் திரும்பக்கைலைக்களையாமல்
ஈந்தோர்பிள்ளையேழ்வரையும் இனமுமேழுங்குறையாமல்
சாந்தோரெங்கள் கணவரையுந்தந்தேதரணியரசாண்டு
வாழ்ந்தேயிருக்கவரமருளும் மாயாதிருக்கும்மறைமுதலே

### நடை

அய்யாமுதற்பொருளே ஆனந்தமானவரே
மெய்யானமூல மேல்வீட்டிலிருப்போனே
தூணைகவண்டபிண்டத் தூரைக்கடந்தோனே
கோணவட்டத்துள்ளே குடியிருக்குங்கோவே
ஈசரேயெங்களுட இளைப்பெல்லாம்நீர்மாற்றி
தேசமதில்வாழச் செல்லவரந்தாரும்
பெற்றமக்களேழும் பிள்ளையதுவழியும்
கொத்துக்கொடியுங் குலவம்மிசமுழுதும்
சான்றோர்வழிமுழுதுங் தற்காத்துயெங்களையும்
பண்டுசல்செய்த பாரமுனிவன்பதத்தில்
சேர்ந்திருக்கவுமவரின் திருப்பாதமுந்தொழுது
தாள்ந்திருக்கவுஞ்சிவனே தாரும்வரமென்றுரைத்தார்
அப்போதுநல்ல ஆதிசிவமேதுரைக்கும்
இப்போதுநாரணரே இக்கன்னிகேட்டதற்கு
இன்னவிதமென்று இசைந்துவரங்கொடுவும்
சொன்னவிதங்கேட்டுச் சொல்லுவார்நாரணரும்
கேட்டவரமதுதான் கெட்டிதானீசுரரே
நாட்டமிந்தப்பெண்களுக்கு நான்சொல்லநீர்துணையாய்
மடமாதேபெண்ணரசே மடந்தைக்கிளிமொழியே
தடமானபொய்கையிலே தண்ணீர்தனைச்சுருட்டி
ஈசருடமுடியிலிட்டுக் கரங்குவித்து
அப்போதுமாயன் அவர்களோடேதுரைப்பார்
வாசமுடனுடோறும் வருகின்றவேளையிலே
இன்றேநீர்கொண்டு ஏகின்றநீரையெல்லாம்
இன்றென்றலையில் இயல்பாய்விடுவுமென்றேன்
இரந்துதிரியும் ஈசருக்கல்லாது
பரந்தபுவிமாயனுக்குப் படாதேயெனவுரைத்தீர்
அப்போதுங்களைநான் ஆகட்டெனவுறுக்கி
இப்போதுபாரென்று இத்தனையுஞ்செய்ததெல்லாம்
வன்னத்திருமால் வகையுரைக்கவேமாதரெல்லாம்
ஒப்போடுவொத்த ஓவியங்களேகேளும்
கன்னியர்கள்கண்பொற்றிக் கவிழ்ந்துமிகநாணிநின்றார்
அப்போதுயெம்பெருமாள் அவர்களுடனேதுரைப்பார்
நீர்பெற்றபிள்ளைகள்தான் நீனிலத்திலேபெருகி
வானத்தமுர்தமது பாலமுதருந்தி
வாழ்ந்தார்சிலநாள் மன்னரெனக்கோட்டையிட்டார்

ஆனதொருசோழன் அவன்பழிகள்ரண்டேத்தான்
பின்னுள்ளசான்றோர்க்குப் பிறகுவந்தமாநீசன்
அன்னீசன்சாபமிட்டு அவர்கள்துயரமுற்றார்
துயரமுற்றுசான்றோர் துர்க்கலிக்குள்ளாகி
அயர்ந்துமிகவாடி ஆள்ப்போலேநீசனுக்கு
தாள்ந்துபணிவிடைகள் சான்றோர்கள்செய்தாலும்
வாழ்ந்துமிகக்கெட்டகலி வைதுமிகவடித்து
ஆருமற்றோர்போலே அலைகிறார்சான்றோர்கள்
சேரிடமில்லாமலத் தியங்குகிறார்மக்களெல்லாம்
அப்பனுனிருக்க அவரம்மைநீயிருக்க
அப்பனம்மையில்லையென்று அடிக்கிறான்நீசனெல்லாம்
நீயுமித்தனைநாள் நின்றுவிட்டிரித்தலத்தில்
நானும்பரதேசம் நடந்துவந்தேனித்தனைநாள்
சான்றோர்துயரம் தான்கேட்பாராருமில்லை
மீண்டேநாம்கேள்க்கவென்று மேதினியில்போகவென்றால்
இச்சொருவங்கொண்டேகியிக்கலியில்
பொய்ச்சுரு1த்துள்ளே புக்கிடுவோமல்லாது
என்றையாநாதன் எடுத்துரைக்கக்கன்னியர்கள்
அன்றவர்த்தலையில் அடித்துக்கீழ்வீழ்ந்தழுதார்
அழுதாரேபெண்கள் அருவரைகள்தானிகழ
ஓழுகானபெண்கள் ஓலமிட்டேயழுதார்
அய்யோயெம்மக்கள் அய்ந்திரண்டானதிலே
பொய்யோமெய்யோசோழன் பொன்றிவிட்டஞாயமது
கற்பழியாக்கன்னியெங்கள் கற்பையெல்லாம்நீரழித்து
உர்ப்பனமாய்ப்பெற்றபிள்ளை ஒன்றுபோல்நீர்காத்து
வளர்க்காமல்மக்களையும் மாழக்கொடுத்தீரே
பழவினையோவெங்களுட பாவக்குறச்சலிதோ
கற்பிழந்தோமென்றுங் கவ்வையில்லாதேயிருக்க
இப்பிழையோவந்த தெமக்குத்தலைவிதிதான்
மக்கள்ரண்டுபேரை வதைத்தகெடுஞ்சோழனுட
அக்கபக்கமெல்லாம் அறுதோயென்சிவனே
மாபாவிசோழனுட வம்மிசங்களானதெல்லாம்
தீயாவிக்கொண்டு செத்திடாதோசிவனே
எம்மக்கள்தன்னை இடுக்கச்செய்தேயடித்த
வன்மக்கலிநீசனெல்லாம் வாழ்விழந்துசாகானோ
பழிசெய்தசோழனூர் பகல்நரியோடாதோ
வழிசோழவம்மிசங்கள் வன்னரகில்மாளாதோ
நீசக்குலங்கள் நெருநெரெனத்தாணுடிந்து
தேசப்புழுக்குழியில்த் தோயாதோவென்சிவனே
பெற்றளன்றுமுதல் பிள்ளைகளைக்காணமல்
நித்தம்பால்சுரந்து நெகிழுதேஎன்சிவனே
பெற்றபிள்ளையேழுடைய பேருடம்புதன்னிறத்தை
சற்றுமறிந்திலமே தலையிலெழுதுஞ்சிவனே
கொதிக்குதேயெங்கள் கும்பிமிகக்குமுறி

கொதிக்குதேயெங்களுடக் கண்மணியைக்காணுமல்
ஏழுகன்னிமாரில் யார்பெற்றகண்மணியோ
கோளுரைத்துப்பாவி கொன்ருனேயென்சிவனே
கொன்றவன்தானின்னங் கொடுநரகில்வீழாமல்
இன்னமிருப்பானே இறந்தானேயென்சிவனே
பாவியவன்செத்துப் பஸ்ப்பமாய்ப்போனாலும்
ஆவியைக்கண்டாலும் ஆக்கினைகள்செய்திடுவோம்
மக்கள்ரண்டுபேரும் மணஞ்செய்துவாழ்ந்தவரோ
பக்குவவயதிலோ பாளறுவான்செய்தவினை
கலியாணஞ்செய்த கண்மணிகளானுக்கால்
வலியானமங்கையர்கள் மனஞ்சடைத்துவாடுவரே
இட்டவுடமை இறக்காதிருப்பாரோ
கட்டினமங்கிலியங் கழட்டாதிருப்பாரோ
இத்தனையுங்கழட்டாது இருக்கச்சிவன்செயலால்
புத்திதனைக்கொடுத்துப் பெண்ணரசைக்காப்பாரோ
ஏதென்றறிந்திலமே யெங்களுடதாயாரே
கோதண்டமாதாவே கோவேயென்தாய்மாரே
வனத்தில்வந்தெங்களுட வாட்டமெல்லாந்தீர்த்தீரென்று
புனத்தில்கிளிகண்டதுபோல் பிரியமுற்ருேமாதாவே
கைபிடித்தபண்டாரங் கட்டுரைத்தசொல்கேட்டு
மெய்பிடித்தமெல்லாம் மிகவுளறுமாதாவே
கன்னிப்பருவமதில்க் கைமோசமானதினல்
உன்னிமனதினுள் உளறியுள்ளங்கலங்கி
பாராமல்மக்களையும் பார்மீதிலேகிடத்தி
சீராகவனத்தில் சென்ருேமிகனுணி
பாவிகெடுவான் பழிசெய்வானென்றுசொல்லி
தாவியேயெங்கள்மனஞ் சற்றுமறியாதோ
எங்களையும்ஈடளித்து எம்மக்களேழ்வரையும்
சங்கையழிக்கத் தலையெடுத்தாரிக்கூத்தர்
நச்சுக்களையாய் நாங்கள்வாழுமிடத்தில்
சச்சுருவமிட்டுவந்து சதித்தாரேபண்டாரம்
எங்களுக்கென்றிவரைப் படைத்தாரேபிரமன்
கெங்கையணிசிவனுர் கேட்டுமகிழ்ந்தாரோ
இத்தனைக்கூத்தும் இக்கூத்தெல்லாம்பார்க்க
கூத்தவன்போல்த்தோன்றிக் கோலங்கொண்டபண்டாரம்
இனியெங்களையேற்று ஈந்தபிள்ளையேழ்வரையும்
மனுவேழ்குறையாமல் மக்களேழுவழியும்
குறையாமல்தந்துக் குவலயத்தைமக்களுக்கு
திறைவானதங்கத் திருமுடியுஞ்செங்கோலும்
கொடுத்தெங்கள்மக்கள் குவலயத்தையாண்டிருக்க
அடுத்துச்சிலநாளில் ஆக்கிவைக்காதிருந்தால்
ஏழுபெண்பாவம் ஏற்பீர்காண்பண்டாரம்
நாளுகடத்தாமல் நடத்திமிகத்தாரும்

மங்களசோபனம் மறந்துமயிர்விரித்து
தூங்காமல்வாடி தின்முமிகவுணர்ந்து
ஆங்காரமேமறந்து அவனியாசையறுத்து
தலைவிரித்துக்கலையைச் சதமென்றுமெண்ணமல்
உலையின்மெழுகதுபோல் உறுவனத்திலேநிலையாய்
வெயில்பனியிலுமேகத் துளிர்விழிக்குள்ளாகி
குயில்கூவும்வனத்தில் கோதையேழுமாமயிலும்
நின்றேமேகாட்டில் நீர்செய்தமாயமதால்
இனியெங்கள்மக்கள் ஏழ்வரையுமேழ்வழியும்
அனியாயமுமடக்கி ஆனமக்கள்வம்மிசத்தை
கொத்தோடுசேர்த்தெடுத்துக் குறுங்கலியையடக்கி
அரசாளமக்களுக்கு ஆனபதிஈயும்வரைக்கும்
எங்களைப்போல்சுகமற்று இருப்பீர்காண்பண்டாரம்
மங்களமல்லால்க்கலி மாழும்வரைவாராது
என்றுசாபித்தாள் யேத்தகன்னியேழ்பேரும்
அன்றுநாராயணரும் அவர்கேட்டுத்துக்கமுற்று
என்னசொல்லப்போறேம் யாந்தானினியெனவே
வன்னத்திருமேனி மனதுநொந்தேதுசொல்வார்
பெண்ணேநீரேழ்பேர்க்கும் பிரமாவமைத்தபடி
எண்ணம்வந்தல்லால் யானென்னசெய்தேண்டி
ஆனால்கலியை அழித்துமக்கள்தன்வழியை
நானகச்சென்றெடுத்து நலங்கொடுக்கும்வரைக்கும்
துயரமெனக்குத் தொடுக்குமெனச்சாபமிட்டீர்
அசுரக்குடும்பம் அறுக்கும்வரைமுன்னளில்
ஈசரிட்டசாபம் ஈதோடேவாய்த்துதெடி
மாசங்கடந்து வரும்வரைக்கும்நீங்களுந்தான்
எங்கேபோயிருக்க ஏழுபேர்க்குஞ்சம்மதங்காண்
கொங்கையினியழகக் கோதையரேசொல்லுமென்றார்
அப்போதுகன்னி அவரெல்லாமாராய்ந்து
செப்புகிறாரந்தச் சிவபர்த்தர்தன்னுடனே
மக்கள்ரண்டுபேர்கள் மாண்டாரவருயிரை
அக்கமதில்செய்தீரோ அசலோவதுஞாயமென்ன
தாதாமனமகிழ்ந்து சதுர்முகனைத்தானழைத்து
வேதாவேமக்கள்ரண்டை வெற்றியுள்ளவைகையிலே
கொன்றனேசோழன் குருநன்றிமறந்து
சென்றரேமக்கள் சென்றவுயிரெவ்விடங்காண்
அப்போதுவேதா அவர்தான்மிகதெளிந்து
செப்புகிறேமென்று செப்பினரன்போரே
இறந்தபிள்ளைரண்டின் யேற்றஉயிரானதையும்
அறந்தழைக்குமாகைலே அரைக்குள்ளடைத்திருக்கு
மால்மக்களென்று மனமகிழ்ந்துநான்பதறி
வாலைமுனியுயிரும் வானவர்கள்தன்னுயிரும்
ஆனதினற்பிறவி அமைக்கப்படாதெனவே
நானிதற்கஞ்சி நற்பதியில்வைத்திருக்கு

என்றுவேதாவுரைக்க எம்பெருமாளேதுரைப்பார்
அன்றுபடைத்திலேயே அனேகமனுவாகுமல்லோ
அஞ்சுமக்கள்பிள்ளை அவனியன்பத்தாறதிலும்
மிஞ்சிப்பரந்து மேல்ச்சான்றோரேபெருக்காய்
இப்பிள்ளைரண்டு யேலமெநீர்படைத்தால்
கொப்புநூறுயிரம்போல்க் கூடிக்குவியுமல்லோ
பாவிகெடுத்தான் படையாமல்நீர்கெடுத்தீர்
தாவிக்கெடுத்தான் சளக்கலியன்மாபாவி
இனியென்மக்களுயிர் இன்பமுடநீர்காத்து
மனுஷராய்ப்பூமியிலே வைகைக்கூடவ்வோடு
எழுப்பவேணுமென்று யாம்நித்திச்சிருப்பதினல்
வெளுப்பாகவவ்வழியில் மேலுகத்தோர்தான்பிறந்து
இன்பமுள்ளவானவரும் இவ்வழியில்வாழ்வதினல்
அவ்வழியிலவ்வழிகள் அனேகம்பெருகிடவும்
செவ்வாகநீருமிப்போ திடீர்திடீரெனப்படையும்
என்றுசொல்லமூலம் இசைந்துசொல்லவேதாவும்
நன்றுநன்றென்று நருள்ப்பிறவிசெய்தனராம்
இப்படியேபிறவி இவர்செய்வோமென்றுசொல்லி
அப்பிறவிவேதா அமைத்தார்மனுப்பெருக
உடனேநாராயணரும் உள்ளங்களிகூர்ந்து
திடமானகன்னியர்கள் செயமுகம்பார்த்தேதுரைப்பார்
நீர்கேட்டதற்கு நிர்னயங்கள்கண்டீரோ
இனிநான்கேள்ப்பதற்கு இன்னதென்றுசொல்லிடுவீர்
உங்களைப்பூலோகமதில் உடையவழிக்குலத்தில்
நீங்களும்போய்ப்பிறக்க நிச்சித்திருப்பதினல்
ஏதுபெண்காளுங்கள்மனம் ஏதென்றுடனேசொல்லும்
மாதுகளெல்லாம் மனமகிழ்ந்துகொண்டாடி
எங்களுடநாதா யெமையாளுமரத்தினமே
செங்கருடவாகனவா தேவிமணவாளா
நீர்நிச்சித்த நினைவெள்ளுப்போலழவும்
சீர்பரன்முதலாய்த் தெரியார்தகூட்சியரே
எங்களைப்பூலோகமதில் எங்கள்வழிக்குலத்தில்
மங்களமாய்ப்பிறவி வகுப்போமெனவுரைத்தீர்
பிறவியதுநாங்கள் பெண்மனுப்போல்ப்பிறந்தால்
இறவியாகாமல் இருக்கவருள்வீரே
அல்லாமல்பின்னும் அடியார்மிகப்பிறந்தால்
வல்லாதநாயகமே வந்துநீரேக்குமட்டும்
மாதவிடைமாமணங்கள் மலர்ந்துறக்கமில்லாமல்
சீதமாயம்மனுவோர்க்கு வுறவாடிச்சேராமல்
மூடாமல்க்கலைகள் முடியினிக்குசேராமல்
பாடாமலந்திசந்தி படுத்துத்துயிலாமல்
நன்மையறியாமல் நளிப்பேச்சுக்கேளாமல்
தின்மையறியாமல் தீன்ரசத்தைத்தேடாமல்
கொய்துபுடவைக் குக்குழித்துச்சூடாமல்
மயிருவளர்க்காமல் மனதுவேறெண்ணமல்

கொங்கைதிரளாமல்க் கூறுடம்புவீசாமல்
செங்கனிவாய்த்தேமல் தேகமதில்வீளாமல்
பக்குவஞயப் பருவம்வந்துவாய்க்காமல்
மிக்குவமான மிகுவாழ்வுசேராமல்
சுற்றுக்கிளைகள் தொடுத்தன்புகொள்ளாமல்
ஒற்றுப்பிதற்ருமல் ஒருவர்முகம்பாராமல்
அல்லல்நோய்பிணிகள் அனுப்போலும்வாராமல்
தொல்லைவராமல் சுகமுமிகவராமல்
இந்தவிதப்படியே யெங்களையும்நீர்படைத்து
சொந்தமுடன்வந்துநீர் தொட்டெடுத்துநன்மைதந்து
ரச்சிப்போமென்று எமக்குவுறுதிபண்ணி
நிச்சித்துத்தர்மகுலம் நீர்பார்த்துத்தான்படையும்
என்றுகன்னியேழும் இப்படியேசொல்லிடவே
அன்ருதிநாதன் அகமகிழ்ந்துகொண்டாடி
நல்லதுதான்பெண்ணேநீ நம்மோடுகேட்டபடி
வல்லவிதமாஞலும் மாருதெனவுரைத்தார்
வாக்குரைக்கக்கன்னியர்கள் மனமகிழ்ந்துகொண்டாடி
நாக்குரைப்பார்பின்னும் நாராயணரோடு
நாங்கள்போய்ப்பிறந்தால் நம்முடையநாயகமே
தாங்கள்வருவோமென்றதற்கு தருணமேதென்றுரைத்தார்
அப்பொழுதையா நாராயணருரைப்பார்
செப்புகிருர்கன்னிகளுக்குச் சிறந்ததருணமது
ஆயிரத்தெட்டம்பலமும் ஆனதிருப்பதியில்
வாயிதமோரம்பலமும் வளர்பதியிலொன்றதுவும்
கெங்கையுடகண்ணுங் கேள்விமன்னர்தன்சாவும்
சங்கையழிந்து தலையழிந்ததவ்வாண்டு
வருவேன்தென்சுவர்க்க வடமேற்குமூலையிலே
லிங்கமொன்றிலேமூன்று இணையாகத்தோன்றினபின்
யெங்கும்பிரகாசம் இட்டவ்வாண்டேவருவோம்
கண்டிருநீநான்வருகக் காரணமனேகமுண்டு
விண்டுரைக்கக்கூடாது மெல்லியரேயித்தருணம்
சொன்னதருணஞ் செவிகேட்டுநீங்களெல்லாம்
என்னைநினைந்து இருங்கோவொருநினைவாய்
இத்தருணங்கேட்ட இப்பொழுதேமுதலாய்
வடமேற்குமேற்கும் வடக்குங்கால்நீட்டாதுங்கோ
என்றுதருணம் இதுவுரைத்தார்கன்னிகளுக்கு
அன்றுமடவார் அகமகிழ்ந்துகொண்டாடி
நல்லதுகாணெங்களையும் நாயகமேநீர்படையும்
வல்லபெருமாளே மறைமுதலேயென்றுரைத்தார்
உடனேயநாதன் ஓவியத்தாரேழ்வரையும்
திடமானபூமியிலே செய்ததர்மவவ்வழியில்
பிறவிசெய்தார்மூவர் பிறந்தார்கள்கன்னியர்கள்
திறவியொளிமாதர் தேசமதில்ப்பிறக்க
நாராயணரும் நல்லசிவனுமையும்

சீராரும்நல்லத் தெய்வத்திருமாதும்
கைலேதனிலேகிக் கட்டானமண்டபத்தில்
ஒயிலாகக்கூடி உவந்திருக்குமப்போது
மாகாளியென்ற வடபத்திரகாளி
ஓகாளியென்ற உயர்ந்தபலக்காரி
சென்ருள்கைலே சிவஜயநாதனிடம்
நன்ருனகன்னி நாராயணரிடத்தில்
வந்துவிழுந்து மண்ணிலவள்புரண்டு
சந்துபயில்மாயவரே தான்பிழைத்தேனுமக்கு
உன்மக்கள்சான்ரோர் உற்றமக்களேழதிலே
நன்மையற்றசோழன் நாடும்பழிரண்டேத்தான்
கண்டுஅடியாள் கரிக்காலச்சோழனுக்கு
மன்றுதனில்பன்னிரண்டு ஆண்டுமழைபெய்யாமல்
சாபித்தேன்சோழனூர் தட்டழியப்பட்டுழற
பாவியவனூரைப் பகல்நரிஓடவைத்தேன்
அல்லாமல்ச்சோழன் அக்கமறச்சாபமிட்டேன்
பொல்லாதசோழன்வழிப் பொடிபடவேசாபமிட்டேன்
இத்தனையுஞ்சொல்லி ஈடழியச்செய்துவிட்டு
புத்திரரின்செய்திசொல்லப் புண்ணியரேவந்தேனென்ருள்
அப்போதனுதி அய்யாநாராயணரும்
செப்போடுவொத்த சிவனேடுசொல்லலுற்ருர்
கேள்க்கலேயோயெந்தன் கிருபைச்சிவனரே
ஏக்கலேயோயிந்த யேந்திளையாள்சொன்னதுதான்
பிள்ளைக்கோர்தீங்குப் பிளையாமலெப்போதும்
வள்ளல்களைநன்ருய் வளர்ப்போநாமென்றுசொல்லி
மருட்டிவிழித்து வாங்கினுள்மக்களையும்
திருட்டுமொழிபேசுஞ் செய்தியைநீர்கண்டீரோ
நான்றனியல்லவே நால்பேருமுண்டல்லவோ
தான்தனிமையாகிடினுந் தப்பிதமென்றேபுகல்வார்
வானவருந்தானவரும் மறையவருஞ்சாச்சியதாய்
நானவளோடேவாக்கு நவின்றல்லோதான்கொடுத்தேன்
மக்களுக்கோர்தீங்கு வந்ததேயுண்டானல்
மிக்கச்சிறையுனக்கு மேவுமெனவுரைத்து
ஈந்தேன்மதலே இவள்கையிலேஈசுரரே
மாய்ந்தவுடனுகிடினும் வந்துரைத்தாளோசிவனே
சற்றும்பதருமல்த் தானிருந்தித்தனைநாள்
புத்திமேல்நெஞ்சரிப்பாய்ப் போவோமென்றேகிவந்தாள்
தன்மதலேயென்ருல்த் தலைவைத்திருப்பாளோ
என்மதலேக்கிவள்தான் இடறிவிழுவாளோ
ஒருதர்பிள்ளைக்கொருதர் உடமையிடுவாரோ
கருதல்விருப்பங் காணுமோமற்ருேர்க்கு
பெற்றகும்பியல்லோ பெருங்கனல்போல்மீறுவது
மற்ருேர்கள்கும்பி வருந்திக்குமிறிடுமோ
பாவியவன்கொன்று பன்னிரண்டாண்டுவரை

ஆவியறிந்திலேயே ஆரும்வந்துசொல்வலேயே
தாய்தகப்பனில்லார்போல் தயங்சினதுகண்டோமே
சேயவரனுக்கேராத செய்தபழவினேயோ
என்ருதிஞதன் யேந்திளேயைத்தான்பார்த்து
சென்ருதிவேந்தர் செடத்தோடுயிர்திருப்பி
எழுந்திருக்குமட்டும் இருநீசிறைதனிலே
குளிர்ததிருமேனி கூறிஞரந்தரிக்குக்
கேட்டுமாகளி கிலேசமிகவடைந்து
தீட்டுவடவாமுகத்தில் செய்யவன்னிமண்டபத்தில்
இருந்தாள்சிறை ஈசன்செயலெனவே
வருந்தாதகூளிகணம் வாதைவிடுபேய்களெல்லாம்
நாச்சியார்க்கிச்சிறையால் நமக்கென்னகேடோகாண்
கேச்சியாய்த்தேசமதுக் கென்னகேடோவறியோம்
என்றுசிலபேய்கள் யெண்ணியெண்ணியேதிரியும்
முந்தமுறுக்குள்ளே மூளிப்பேயேதுசொல்லும்
கைவாய்த்துமாகாளி கவிழ்ந்திருந்தவேதுவிஞல்
மெய்வாய்த்துதென்று விழியிட்டுக்கொண்டாடும்
இப்படியேபேய்கள் எண்ணஞ்சிலதிண்ணமுமாய்
அப்படியேகாளி அவள்சிறையிலேயிருக்க
நல்லநாராயணரும் நாடுஞ்சிவஞரை
வல்லபொருளே மறைகாணுதோவியமே
காளிசிறைதான் கவிழ்ந்திருக்கஞாயம்வந்தால்
ஆழிவலேவையகத்தில் ஆர்க்குச்சுகம்வாய்க்கும்
முதற்றான்கலியை முடிக்கப்பரகாளி
விதத்தமுள்ளவக்கினியில் மிகவேசிறையிருக்க
பார்த்துநாமிங்கிருக்கப் படுமோகாணீசுரரே
சாற்றுநீரின்னதென்று சத்திகொண்டஈசுரரே
உடனேதான்ஈசர் உரைக்கிருரன்போரே
கடனேகாணென்னேடு கலங்குமொழிபேசுவது
நானேதடுத்தேன் நாட்டுக்கலிதீட்டறுக்க
ஏனேகாண்மைத்துனரே யென்னேடுபேசுவது
எப்போகலியழித்து எங்களுக்குநற்பேறு
நீரெப்போதருவீரென்று எண்ணிமிகவாடுருமே
தீட்டைமிகக்கழித்துச் சிவஞானமுத்திதந்து
கையிலேவீட்டையெப்போநன்ருய் விளக்குவீரென்றுமிக
தவித்துமுகம்வாடித் தானிருக்கும்ஞாயமதும்
குவித்துமுகமலர்ந்து கொள்ளுவதுங்காணலேயே
என்றேயேகாபரமும் எடுத்துரைக்கவெம்பெருமாள்
நன்றென்ருகட்டெனவே நாரணருங்கொண்டாடி
இலட்சுமியைத்தானழைத்து நவிலுவாராதிமுதல்
சச்சுடராய்நின்ற தருணத்திரவியமே
இதுமுன்பிறப்பும் இருந்தாயுருப்பிணியாய்
மதுவினியப்பெண்ணே மாயக்கலியறுக்க
நானிச்சித்திருப்பதிஞல் நாயகியேநீயுமொரு

பூனிரசப்பொன்மகரப் பெண்மயில்போல்நீவளர
அலையிலறுமுகவன் அவன்பதியிஞளிதனில்
நிலையிலேநின்று நீவளருகண்மணியே
நீவளரச்சூழ நிறைந்ததங்கமாமணியாய்
தேனினியமண்டபமுந் தேரும்சிங்காசனமும்
சூழவரங்குவைத்துத் தெய்வரம்பைசூழவைத்து
காளமொடுபேரிகையுங் கண்ணுளர்சூழ்ந்துநிற்க
அகரத்தெருவும் அரம்பையர்கள்தன்தெருவும்
சிகரத்தெருவுஞ் சேர்த்துவைப்பேனுன்சூழ
நித்தம்வலம்புரிகள் நின்றுவுணச்சூழ்ந்து
தித்தியெனவேமுழங்க சேவிக்கவைத்திடுவேன்
கோட்டைகள்சூழக் கோடிமண்டபமுகித்து
வீட்டலங்காரம்போல் வேலைசெய்துந்தருவேன்
உந்தனுடமேனி உரைக்கெளிதாதங்கமென
செந்தழல்போல்மகரச் சிலைபோல்வளர்ந்திருநீ
கலியுகத்தைமுடிக்க கண்ணனைவோருயிரை
வலியுடனேயுன்னுடைய வயிற்றில்பிறவிசெய்து
நாட்டுநருளின் நகர்சோதனைபார்த்து
தீட்டுக்கலியறுத்து செவ்வுமனுதானெடுத்து
நாடுன்மகன்றனக்கு நல்லமுடியுங்கொடுத்து
தேடுந்தர்மச்சீமை செலுத்தச்செங்கோல்கொடுத்து
அரசாளவைக்கவோர் ஆண்பிள்ளைநீபெறவே
துரைசானிபோவெனவே சொன்னர்காணம்மையுடன்
கேட்டுமிகலட்சுமியும் கிளிமொழிவாய்தான்திறந்து
நாட்டுக்குடையவரே நாராயணப்பொருளே
மகரச்சிலையாய் வாரிதனில்நான்வளர்ந்தால்
சிகரநற்கோபுரமே திருவிளமேநீர்தானும்
வருகுவதென்னவித மாகவுருவெடுத்து
அருகில்நீர்வருக அடையாளமென்னவென்ருள்
அப்போதுவையா ஆனந்தமேபெருகி
செப்புகிறேமென்று திருவோடிதுவுரைக்க
மூன்றுசடையில் முறுக்குச்சடையொன்றெனவும்
பண்டுள்ளசூரியர்கள் பதிந்திருக்குமென்விழியில்
நெத்திதனில்ப்பிறையும் நெடியவடவக்கினியும்
சுத்திக்கனல்மேனியது மாத்துஎண்ணுயிரமாய்
பளிரெனவேலோகம் பதினுலுக்கோருருவாய்
துளிரெனவேவாரி சுழலவெகுகனலாய்
காதம்பனிரண்டில் கண்டகலியன்றெரிய
தீதக்கனலாய்ச் செயகுண்டமும்பதித்து
காலில்தர்மமணியைக் கலீரெனவேதண்டையிட்டு
மேலில்பலவேதமதை மின்னுடம்பாகவிரித்து
பெண்ணரசேநான்வருகும் பெருமைக்கடையாளம்
கண்ணரசேநீயுமென்மேல்க் கருத்திருந்தால்பிழைப்பாய்
அப்படித்தானென்பிறவி அருகேவருகையிலே
இப்படிவந்தேயிருபேரும் ஒருசேய்தானீன்று

நாட்டுச்சோதனைக்கு நாமனுப்பித்தான்பார்த்து
கோட்டிசெய்தபாவி குறுங்கலியைத்தானெரித்து
அதுமேலுனக்கும் எனக்குமிகுவானந்தம்
மதுவாகவீன்ற மதலைநாடாழுமெடி
என்றுபிறவிக்கு ஏற்றஅடையாளமுரைத்து
நன்றினியமாதே நடப்பதற்குச்சங்கடமேன்
உட்னே தான்லட்சுமியும் உரைக்கிறாளந்தவுடன்
திடமானகோவை செய்யமணிவிளக்கே
என்னைமகரச் சிலைபோல்பிறவிசெய்ய
என்னவிதமாய் இசைவீர்காணென்கோவே
என்றுரைக்கவம்மை யெடுத்துரைப்பாரெம்பெருமாள்
நன்றுநன்றுபெண்ணே நமக்குத்தொழிலோகடிது
அலையிலுனையும் ஆமதியபொன்மகர
சிலைபோல்வளருவெனச் சிந்தித்தாரெம்பெருமாள்
வடகைலைவாசலிலே வந்தலைந்தவாரிதிரை
மடமடெனவந்து வாரியெடுத்தாயிளையை
செந்தூரலைவாரித் திரைமேலெடுத்திருத்தி
அந்தனநதூர்வாரி அம்மைதனையெடுத்து
சந்தனவாரி சமுத்திரத்துள்ளிருத்தி
பந்தியாய்வைத்தப் பரமமணிக்கோட்டையதுள்
தெய்வரம்பைசூழத் தேவரெல்லாவோலமீட
மெய்பரமக்கன்னியர்கள் மிகுவாய்குரவையிட
மடம்மானமெக்காளம் இடகுடகுடாவென்றிடவே
மடம்மானவாத்தியங்கள் மடமடெனவேயதிர
வலம்புரிகளெல்லாம் மாதுவந்தாளென்றாத
சிலம்புனைந்தரத்தினங்கள் சிலவிளக்கேந்திநிற்க
முத்துக்கள்சிப்பி முன்வந்தொளிவீச
கொத்துக்கொத்தாக கோமேதகஞ்சூழ
கன்னிமாரெல்லாங் கவரிவீசிநிற்க
தன்னிகரில்லாமறையோர் சாத்திரங்களோதிநிற்க
மகரச்சிலையாள் மாதுதிருலட்சுமியாள்
சிகரகோபுரத்தாள் திருவுருவந்தாள்வளர்ந்தாள்
பார்பதியும்மாதுமையும் பரமேசொரித்தாயும்
சீர்பதியுமங்கே தினமூன்றுநேரம்வரை
ஈஸ்பரனும்வேதா இவர்கள்நிதம்வரவே
வாசவனும்வானவரும் வந்துநிதம்போற்றிசெய்ய
செய்யவமரரெல்லாஞ் சிவசிவாவென்றுநிற்க
வெய்யவனுஞ்சந்திரனும் மெல்லிபதம்போற்றிநிற்க்
புஷ்பமலர்தூவிப் பொன்னுலகத்தோர்சூழ
செப்பமுள்ளமகரச் சிலைபோல்திருவளந்தாள்
மாதுதிருலட்சுமியாள் மகரச்சிலைபோலே
ஓதுமணியலைக்குள் ஓவியம்போலேவளர
மாதைமகரச் சிலையாய்வளரவிட்டு
தாதணியுநாதன் சங்கரனோடேதுரைப்பார்

கூட்டுக்கிளிபோலிருந்த கொடியிடையைப்போகவிட்டு
நாட்டிலிருப்பேனே நம்முடையமைத்துனரே
சீதைமகரச் சிலைபோலங்கேவளர
பாதையதுதேடாமல் பதிந்திருக்கஞாயமுண்டோ
அப்போதுசிவனார் அவரேதுசொல்லலுற்றார்
செப்போடுவொத்த திருமாலேநீர்கேளும்
நடத்தும்படியுள்ள ஞாயமெல்லாமிப்போது
சடைத்திருக்காமல்த் தானடத்துமென்றுரைத்தார்
அந்தப்பொழுதில் ஆதிநாராயணரும்
சிந்தைமகிழ்ந்து செப்புவாராதியோடு
நல்லதுகாணீசுரரே நாடுந்தேவாதிகளில்
வல்லசம்பூரணனும் வாய்த்தயெமலோகமதில்
பரதேவதையான பைங்கிளியுந்தேவனுமாய்
மருவணையமாதும் மன்னவனுமாய்ப்பிறக்க
உருவேற்றினம்மை உயர்ந்ததவஞ்செய்திடவே
ஆனதாலவரை அவனிதனிலேபிறக்க
ஈனமுடனமைக்க இதுநாளாகுவதால்
நின்றந்ததேவனுட நிஷ்டைநிற்றவேறினதோ
என்றெனவேபார்க்க எழுந்தருளுமீசுரரே
அப்படித்தானீசுரரும் ஆதிநாராயணரும்
இப்படியேதேவனிடம் ஏகின்றவேளையிலே
தேவரெதிரே தெய்வேந்திரன்றானும்
மூவர்நடுவன் முத்தநாராயணரின்
சங்குசரம்போற் தங்கநவரத்தினத்தால்
எங்குமொழிவீசும் இரத்தினத்திருமுடியை
சூடித்தெய்வேந்திரனுஞ் சிவனெதிரேபோவோமென்று
நாடியகமகிழ்ந்து நாராயணருடனே
சந்தோசமாகத் தான்வருகும்வேளையிலே
கண்டுசம்பூரணனுங் கைமறந்துநிஷ்டையது
பண்டுமய்யலாய்ப் பாவையரோடேவுரைப்பான்
மானேகேளிந்த வானவர்கோன்தன்சிரசில்
தானாகியமான சங்குசரத்தங்கமுடி
என்தலையிலேவைத் தேந்திளையேயுன்னோடு
தென்தலைவரத்தினச் சிங்காசனமீதில்
இருபேரும்வாழ்ந்து இராசதுரைத்தனமாய்
பெருகானதெய்வக்கன்னி பெற்றமனுவழியை
எல்லாமருகிருத்தி யேற்றவொருசொல்லதுக்குள்
வல்லானநீத வையகத்தையாண்டிருந்தால்
எத்தனையோநாமள் இலங்குமகிழ்ச்சியுடன்
வர்த்தனையாய்வாழ்வதற்கு வாய்த்தமுடியீதலவோ
என்றுசொல்லத்தேவன் இச்சைகொண்டுபெண்ணாளும்
நன்றுநன்றுநீர்சொன்னமொழி நல்லாயிருக்கிதுகாண்
அப்படித்தானம்மை ஆதிசிவன்படைத்தால்
இப்படியும்படைத்தோர் இறவாதிருப்பாரோ

என்றுபெண்ணுளுரைக்க யேத்தசம்பூரணனும்
அன்றுபெருமூச்சு அலேபோலெறியலுற்ருன்
அந்தப்பொழுதில் ஆதிசிவமுதலும்
வந்தங்குநின்ருர் மாகிஷ்ணமாலவரும்
கண்டந்தந்தத்தேவன் கைமறந்தநிஷ்டையோடு
தண்டமிழ்சேர்பதத்தைந் தையலும்வந்தேவணங்கிட
இத்தனைநாள்யாங்கள் நின்றதவங்கண்டிரங்கி
சித்தமிரங்கிச் சிவனேநீர்வந்தீரோ
எந்தன்பெருமானே இறையவரேவந்தீரோ
நந்தகோபால நாரணரேவந்தீரோ
குருவேஅரிநாதா கோபாலாவந்தீரோ
முருகக்குருவரனே முத்தாநீவந்தீரோ
செல்வக்கடலே சீமானேவந்தீரோ
கல்விக்கடலானக் கரைக்கண்டர்வந்தீரோ
அரவணிந்துவத்தியுரித் தணிந்தோரேவந்தீரே
பரமசிவமான பச்சமால்வந்தீரே
இப்படியேமாளுளும் யேற்றசம்பூரணனும்
அப்படியேவந்தோர் அடிபணிந்துபோற்றிடவே
மாயப்பரனும் மனமகிழ்ந்துகொண்டாடி
ஆயனைப்பார்த்தே அருளுவார்ஆதியுமே
மாயவரேகேட்டீரோ வாய்த்தயித்தேவனுந்தான்
தூயவரேநின்றதவந் துலேத்தறுத்தானில்லேயிவன்
முற்றுந்தவமும் முழுதும்நிறைவேற்றுகையில்
சிற்றின்பமாகித் திருமுடிமேலிச்சைகொண்டு
வாடியயர்ந்தான் மங்கையருந்தேவனுமே
நாடியவன்தனக்கு நல்வழமையேதுசொல்வீர்
அப்போதுநாராயணர் மகிழ்ந்துகொண்டாடி
செப்புகிருரந்த சிவனேடெம்பெருமாள்
ஏதுவிதமாயிருந்த தவமேகுறைய
தீதுவந்தனுாயம் செப்பிடீரென்றுரைத்தார்
அப்போசிவனுரைகமகிழ்ந்து தேவனேடு
இப்போதுன்சிந்தை எண்ணமெல்லாம்நீசொல்லுமென்ருர்
தேவனதைக்கேட்டு சிந்தைமிகக்கலங்கி
ஆவிமறுகி அவரேதுசொல்லலுற்ருர்
காரணரேநாங்கள் கருத்தில்நினைத்ததெல்லாம்
பூரணமாயங்கே புகுந்துதோயென்சிவனே
அய்யாநானுரைத்தேன் யென்னுயிரீளயோடல்லாது
கையோகண்ணுலே காணேனேமற்ருெருவர்
ஊமைமொழிபோல் ஒதுக்கிலுரைத்தார்போல்
நாமறியப்பெண்ணறிவாள் நாடறியாதென்றிருந்தோம்
இவர்களறிவதற்கு யார்சொல்லிப்போட்டாரோ
எவர்களும்நாம்பேசுகையில் இங்குவரக்காணுமே
ஆர்சொல்லிப்போட்டாரோ அறியோமேயென்சிவனே
தார்சிறந்தயென்சிவனே சருவதயாபரனே
பூரணனேவாசவனே பொறுத்தினிக்கொள்ளுமையா
நாரணரேயென்சிவனே நாடிப்பொறுவுமையா

என்றுசொல்லித்தேவன் யேற்றவிருத்தமதாய்
நன்றினியமுப்பொருள்மேல் நற்போற்றலேபடிக்க
பரதேவதையான பைங்கிளியுமப்போது
திரமானதாயார் சிவசத்திபேரதிலும்
சிவநாமப்பேரதிலும் ஸ்ரீகிருஷ்ணர்பேரதிலும்
விவரமானவாசீர் விருத்தம்போல்போற்றலுற்ருர்

விருத்தம்

காரணஅரிநாரண கவிபூரணவெகுதோரண
கவிஞோர்தொழும்வாரண கருணகரதருணவெகு
தருணகவிவருண கவிமால்சிவாபோற்றி
காயாம்பூவின்மேனி நிறவாயாசிவசிவாயா
கருவாயுருவுருவாயுனைத் தினமேயருள்மாயா
குறிமத்தகா கருணகராபோற்றி
குணசீராவெகுதீரா நவிவீராபுவிநாதா
திருவோடுறுமார்பா சிறியார்மிகதறியாச்செய்த
வெறியானதைச் சிறிதாக்கியேசேர்ப்பாய்
முகம்பார்ப்பாய் முடிவானதையறியாமலே
மோகமாய்வெகுதாகமாய் உளறித்தவங்குளறியே
உன்சொல்பதமஞ்சொல்லென ஒஞ்சிப்பதமஞ்சி
ஞேமுன்செயல் தந்தருள்வாயே

நடை

இப்படியேகன்னி யேற்றபரதேவதையும்
முப்படியேயாசீர் விருத்தமொன்றுபாடிடவே
கேட்டரிநாரணருங் கிளிமொழியைத்தான்பார்த்து
மெட்டுக்கொடியிடையே மின்னிடையேநீகேளு
உன்புருசனங்கே உற்றயெமலோகமதில்
இன்புருகிவாடி யேங்கித்தவிப்பதினல்
அவனைநீமறந்து ஆனதெய்வபூரணனை
இவனைமிகத்தாவி இருந்ததவமதிலும்
நிறைவேறமாட்டாமல் நினைத்தகேடித்தனையால்
பிறபோநீபூமிதனில் பெரியசான்ருேர்வழியில்
யெமவழிலோர்பிறவி யென்மகவாயங்கிருக்க
அமைப்பானதற்கு அவ்வழிதானயிளையே
இந்ததவக்குறைக்கு இன்னமங்கேபிறந்து
முந்தப்புருசனுக்கு முன்வேலையுங்கழித்து
அழுந்ததுயரப்பட்டு அவனூழியங்கள்செய்து
குளிர்ந்தமொழியற்றுக் கூடுஞ்சரசமற்று
என்னேர்முந்தனக்கு யேக்கமுடனழுந்தி
மின்னேகேழிந்த மிக்கதேவநுன்வழியில்
கொண்டபச்சத்தாலே கோதையரேயுனையும்
கண்டிச்சைகூர்ந்து கர்மக்கருவினையால்
கருவாலுருவைக் கைக்குள்வசமாக்கி
பருவாபருவமதில் பாவையரேநீயிவனேடு
இருவரொருவரென இச்சைமிகக்கூர்ந்து
குருவைமறந்து கொண்டவனைத்தான்மறந்து

தாய்தகப்பன்மாமன் தமையன்தனைமறந்து
வாயிற்படிமறந்து வாழ்வைமிகமறந்து
சொந்தமனைமறந்து சுகசோபனம்மறந்து
சந்தோசமற்று சகலோர்க்குநாணமுற்று
முற்புருசன்றனக்கு மூலக்கருக்கேடணைத்து
இப்புருசன்ருனெனவே யெவ்வுலகந்தானறிய
கட்டினமங்கிலியங் காசினியோர்தானறிய
கெட்டுனைப்போலே கீர்த்திமிகப்பிறந்து
மேலும்பலதொந்தரவு மிகுநாள்வழிதோறும்
கேலிமிகவாகிக் கிலேசமிகவடைந்து
உதிரவெளியாகி உள்ச்செருமல்விக்கலுமாய்
தீனரும்மலந்தச் செடியேப்பச்செய்கையினல்
வீட்டைவிரித்து மேலேதெய்வவழியாய்
நாட்டையரசாண்டு நாச்சியார்போலிருப்பாய்
என்றுசிவனும் எம்பெருமாளுமுரைத்து
அன்றேமச்சண்டன் அவ்வழியிலேயமைத்தார்
அமைக்கவணங்கும் அவனிதனிலேபிறக்க
எமக்குலத்தில்வந்து இயல்வாய்ப்பிறந்தனளாம்
மாதுபுவியில் வளரப்பிறந்தபின்பு
தாதுகரமணிந்த சங்குசரத்தாமன்
தேவன்றனைப்பார்த்துச் செப்புவாரெம்பெருமாள்
பூவுலகிலுந்தனுட பெண்பிறக்கப்போனதல்லோ
ஏதுநீதேவா இனியுனதுசெய்தியென்ன
சீரொத்ததேவன் திருப்பாட்டோதலுற்ருன்

விருத்தம்

ஆறுசெஞ்சடைசூடியவையனே அலையிலேதுயிலாதிவராகவா
நீறுமேனிநிரந்தரம்பூசிவா நீசிவாசிவமைத்துனராகவா
வீறுசத்திமணவாளரானவா வீரலச்சுமிமன்னரிராகவா
ஏறுமீதினிலேறிடுமீஸ்பரா எம்மையாள்க்கொள்ளும்நாரணா
போற்றியே

விருத்தம்

சீதமாங்குணசெல்வனேபோற்றி சிவசிவாசிவசிவனே
போற்றி
நீதவாநடப்பேயதுவாபோற்றி நீசிவாசிவாராகவாபோற்றி
மாதவாஅரிகேசவாபோற்றி வல்லனேயரிசெல்லனே
போற்றி
ஆதவாஅரிநாரணாபோற்றி அனதியேயுந்தன்போற்றியே
போற்றியே

விருத்தம்

அய்யனேதவம்யாணிற்கும்போதிலே இந்திராணிமங்கநிந்
திரநானவன்
பொய்யின்மாய்கைநினைவதிலானவன் பொர்ப்பற்கரீடமீ
துர்ப்பனத்தாசையால்

மெய்யின்ஞானத்தவம்விட்டுவாடினேன் வித்தகாவுன்
சித்தமிரங்கியே
செய்யும்பாவவினைதவிர்த்தாண்டருள் சிவசிவாசிவசிவ
சிவாபோற்றியே

விருத்தம்

போத்தியென்றேத்தித்தேவன் பொற்பதம்வணங்கிநின்று
ஆத்தியேசூடும்வேதன் ஆகமேவிச்சைகூர்ந்து
தீத்தியவாயனோடு செய்தியேதெனவேகேள்க்க
நால்த்திசைபுகழுந்தெய்வ நாரணருரைக்கின்றாரே

நடை

தேவன்வணங்கித் திருப்பாதம்போற்றிடவே
ஆயனோடந்த ஆதிசிவமேதுரைக்கும்
அச்சுதரேதேவனுக்கு ஆனவளமையது
நிச்சயமாய்ச்சொல்லி நீரனுப்புமென்றுரைத்தார்
அப்போதுநாராயணரும் அகமகிழ்ந்து
செப்புகிறோமென்று தேவனுக்கங்கேதுரைப்பார்
கேளாநீதேவா கீழானமங்கையரை
தாழாதமேல்வகையில்ச் சரியாக்கவேணுமென்று
நின்றாய்த்தவத்தில் நினைவொன்றைதானாட்டி
சண்டாளாநீநினைத்த நினைவுதவத்தொத்திடுமோ
சூழவினையறுத்து சுருதிநேருள்ளாக்கி
நீளநூலிட்டு நீதவசுநிற்கையிலே
ஆசைநினைவாமோ அறிவுகெட்டமாதேவா
பாசமறுத்தல்லோ பரகதியைக்காணுவது
ஏதுகாணுந்தனுக்கு இன்னினவுவந்ததினால்
மாதுபிறந்ததுபோல் வையகத்தில்நீபிறந்து
இந்தநினைவதற்கு இனிப்பிறந்துநீசிலநாள்
தொந்துயரமெல்லாம் தொல்புவியிலேதுலைத்து
கண்டந்தமங்கையரைக் கருவால்வசமாக்கி
கொண்டுதிரிந்து கோதையரின்றன்னாலே
நஞ்சுதின்றாலும் நாண்டுகொண்டாலும்
உன்சீவன்மாய்க்ச் உனக்குமனதாகி
இன்னுஞ்சிலநாள்க்கழித்துப் பெண்ணோடுறவாடி
தன்னேவியம்போல்த் தானிருக்கும்நாளையிலே
உன்துயரந்தீர்த்து உன்னையெடுத்தென்மகவாய்
என்றுயரமெல்லாம் யானேநீமாற்றல்செய்து
என்வரிசைதானம் எல்லாமுனக்களித்து
பொன்னரசுதந்து புவியாள்வைத்திடுவேன்
என்றுமாகிஷ்ணர் இப்படியேசொல்லிடவே
அன்றந்தத்தேவன் அவரடியைத்தான்போற்றி
அய்யாவேபூமிதனில் அவதரிபோவென்றீரே
பொய்யானகலியன் பூமிதனிலேபிறந்தால்
பிறந்தவழியும் பிதிருமந்தக்குலமும்

அறந்தனைக்குமாலே அதுவுமென்றல்கெதிதான்
பெற்றுக்கொள்ளும்படிப் புத்திகொடுத்தருளி
பற்றுதலாகப் பலன்கொடுப்போமென்றுசொல்லும்
அல்லாமலென்னைவந்து ஆள்க்கொள்ளும்நாளதுதான்
எல்லாவிபரமதாய் இயம்பியனுப்புமையா
அப்பொழுதந்த ஆதிநாராயணரும்
செப்புகிறாரந்த தேவன்தனக்குத்திடம்
தெட்சணபூமிதனில் தேசபரசோதனைக்கு
நிச்சயமாய்நான்வருகும் நிசத்துக்கடையாளம்
பூமியிலோர்திக்கு பொருந்திமிகவாழும்
சுவாமிவேதமறந்து சுளல்வேதமுண்டாகும்
சாதிவரம்பு தப்பிநிலைமாறும்
பாதிகட்குமுப்பு பார்மீதிலுண்டாகும்
நீசக்குலங்கள் நெழுநெழெனப்பூமிதனில்
தூசியிடத்தெண்டந் தொடர்ந்துபிடிப்பார்கள்
வானத்திடிகள் வருடவருடந்தோறும்
நீனிலத்தில்வீழும் நின்றுமலைமுளங்கும்
பூமிமுளங்கும் பொழுதுமிகச்சாய்ந்துவரும்
சீமைதென்சோழன் சீர்பயிருமேவிவரும்
இலைகள்கருகும் இருவேதம்பொய்யாகும்
தலைகள்படலந் தட்டழியவோடிநிற்கும்
நட்சத்திரமுதிரும் நடக்கும்வழிகுறுகும்
பொய்ச்சேத்திரக்குருக்கள் பூமிதனில்மேவிவரும்
நவ்வாதுலுக்கு நாடிக்கலசல்வரும்
சிவ்வாலயங்கள் தேய்ந்துசுவரிடியும்
கிணறுபாழாகும் கீழூற்றுப்பொய்யாகும்
இணறுபெருத்து யேங்குவாரேமனுக்கள்
மனுக்கள்தங்களுக்கு மாகலசலுண்டாகும்
முனக்கத்துரோகி உலகில்மிகவுண்டாகும்
மாமோகவாசையினால் மாசண்டையாகிவரும்
காமோகவெறியால் கனபழிகளுண்டாகும்
மாதாவைப்பிள்ளை வைப்புநினைத்துநிற்கும்
தாதாவைவேலை சந்ததிகள்கொண்டிடுவார்
மாட்டின்வயிற்றில் மனிதர்போற்றான்பிறக்கும்
கோடானதுபெருத்துக் கொல்வார்சிலபேரை
காணிக்கைவேண்டல் ஃகைக்கூலிதான்மீறும்
மாணிக்கந்தங்கம் வைரமிகமறையும்
நீணிலத்தில்பேய்கள் நிரந்துமிகக்கோட்டிசெய்யும்
மாநிலத்தில்வேளாண்மை மழையில்மிகக்கேடுவரும்
பேதையர்கள்பிள்ளை பிறக்குமதிசயம்போல்
கோதையர்கள்கொங்கை கூடாமலேவாழ்வார்
கூடப்பிறப்பைக் கொடும்பகைபோலெண்ணிடுவார்
வானமுறுமும் மழைகீழ்ச்சொரியாது
தானமழியுஞ் சாத்திரங்கள்பொய்யாகும்
ஏனருக்குக்காலம் ரெம்பரெம்பவுண்டாகும்

வீணர்பெருப்பார் வீடதனைக்கெடுப்பார்
தாண்டருடவேதந் தலையழியவிட்டிடுவார்
மெய்வேதந்தன்னை விரும்பாதுகட்சிசெய்வார்
பொய்வேதம்பூமிதனில் பெருத்துமிகவுண்டாகும்
கள்ளர்பெருப்பார் கறியுப்புமேமலியும்
கொள்ளையாச்சம்பை கோடாமுக்கோடியுமாய்
நாணியிறப்பார் நஞ்சுதின்றேயிறப்பார்
கேணிக்குள்ளேயிறப்பார் கீறிக்கொண்டேசாவார்
வைரமுழுங்கி மாழ்வார்சிலபேர்கள்
துயரம்பொறுக்காமல் தோயமதிலேவீழ்வார்
ஈக்கள்பெருக்கும் எறும்புமிகப்பெருக்கும்
காய்கள்பெருக்குங் கஞ்சாஅபின்பெருக்கும்
சன்னுசிநிஷ்டை தவறியலேவார்கள்
ஒன்னுமதுசாதி உலைமெழுகுபோலலேவார்
கட்டழிந்துபெண்கள் கற்புமிகத்தவறும்
சட்டமழியுஞ் சந்தியம்பலமிடியும்
கூட்டங்குலையுங் குடும்பப்பகையாகும்
நாட்டையரசாங்கம் நாலுரண்டுமூன்ருகும்
கோட்டையழியுங் குச்சுக்கட்டைமதிலாம்
சீவசெந்தெல்லாந் தீனில்லாத்தட்டழியும்
சூவைபெருக்குஞ் சூருவளிமீறும்
அக்கினியால்தண்ணீர் அநேகசீமையழியும்
முக்கியமாய்லோகமதில் வாந்திமிகமீறும்
இப்படித்தானல்லாமல் இன்னமனேகவளம்
செப்பத்துலையாது செப்புவேன்பின்னுனக்கு
நீகேட்டதற்கு நிலையாகவித்தனையும்
நான்றேட்டமாக நாடியுன்னேடுரைத்தேன்
உன்பேரால்நானும் உள்ளாசைகொண்டிருந்துன்
தன்பேராலெந்தனக்குத் தலைச்சிறைதான்மாறுமென்று
சொன்னேனுனக்குச் சொல்லுவேனின்னமுமே
என்னவினிப்பிறக்க யேதுனக்குச்சங்கடங்காண்
என்றுரைக்கநாதன் இசைந்ததேவனுரைப்பான்
அய்யாவேயென்னுடைய ஆதித்திருவிளமே
பொய்யானகலியில்ப் பிறக்கப்போகச்சொன்னீரே
சாதிபதிணெண்ணுய்த் தான்பிரித்தானேநீசன்
ஆதிசாதிதனிலே அமையுமையாவென்கோவே
அல்லாமலுந்தனக்கு ஆதிவரையென்னுளும்
நல்லாகத்தொண்டுபண்ணி நவ்வியிருக்குமனுவில்
படையுமையாயெந்தன் பிதாவேயெனப்பணிந்தான்
குடையொன்ருற்பெரிய குருவுமகிழ்ந்துரைப்பார்
நல்லதுகாண்தேவாநீ நம்மக்கள்யேழ்பேரில்
வெல்லமர்கோன்வாழும் வெற்றித்தெய்வலோகவித்தாய்
அவ்வழிலம்மனுவில் ஆனசான்றேர்குலத்தில்
மெய்வழியிலங்கே மிகப்பிறக்கப்போநீயென்ருர்
நல்லதுதானென்று நவிலுவார்தேவருமே

வல்லவரேமூவருக்கும் மைத்துனராய்நிற்போரே
என்னைப்பிறவி இப்போதுசெய்யுமென்று
வன்னத்தேவாதி வணங்கிநின்ருன்மாயவரை
அப்பொழுதையா நாராயணர்மகிழ்ந்து
முப்பொழுதுள்ள முறைமையதுகூறலுற்ருர்
ஆறுதரம்நம்மை அகம்வைத்துக்கொண்டசடம்
பேறுபெற்றதில்லையே பேறுநாமீந்திலையே
அச்சடலம்அம்மலையில் அருந்தவசுபண்ணினதே
இச்சடலமீடேற இந்தநாள்வந்ததென்று
நற்சடலமானதை நருக்கென்றளித்துவிட்டு
மூவர்நடுவருட முற்சடலக்கூடதையும்
வரவழைத்துவாருமென்று மறையோரைத்தானேவி
விரைவாகவாருமென்று விடைகொடுத்தாரெல்லோரும்
நடந்துமறையோர் நல்லமலைபார்த்து
சடம்வீத்திருந்த தங்கமலைமீதில்வந்தார்
மலைமீதில்வந்து மலைப்புதுமைதான்பார்த்து
அலைமீதில்வாழ்துவரம் ஆனபதிதன்னுடைய
வடவாசல்நேரே வாழும்மலையிதுதான்
தங்கக்கிணர்வங்கக்கிணர் தாம்பிறக்கிணறுடனே
சங்கமகிழ்யிம்மலையின் தடாகமிதுநன்றெனவே
கரைகாணுத்தேவர் காச்சியிடுமிம்மலைதான்
விரைவானமாமுனிவர் வீத்திருக்குமிம்மலைதான்
மரித்தோரைத்தானெழுப்பும் வாய்த்தசஞ்சீவிவளரும்
பதித்தானேமிம்மலையின் பகுத்துரைக்கக்கூடாது
என்றுசொல்லித்தேவன் ஏற்றமலைக்குள்ளாக்கி
நன்றுநன்றென்று நாடியவர்பார்க்குகையில்
கண்டாரேகாயாம்பு கண்ணர்முக்கூடதையும்
கொண்டாடிக்கூடதையும் குளிர்ந்தரதமீதேற்றி
நடந்தார்கைலை நாதர்திருக்கூட்டமதில்
வடந்தாரமார்பன் வாய்த்தவரிநாரணரும்
பார்த்துச்சடலமதைப் பதிந்தமுகத்தோடணைத்து
தேற்றியுயிர்கொடுத்துச் செப்புவார்கூடுடனே
எடுத்தபிறப்புக்கு எல்லாமெனைச்சுமந்து
அடுத்துமூவுலகும் அங்கங்கேகொண்டேகி
பூமிகடலும் பொருப்புப்பூலோகமெல்லாம்
நேமித்தெனைச்சுமந்து நேட்டமுடன்றிரிந்தாய்
நீசெய்தநன்றி நினக்குரைக்கக்கூடாது
நானுனக்குச்செய்யும் நன்றிமிகக்கேளும்
இத்தனைநாளும் எனைச்சுமந்துபாடுபட்டாய்
புத்திரனாய்நீயெனக்குப் பெரியதெய்வவுயிரில்
பிறந்துபுவிமீதில் பின்னுஞ்சிலநாள்க்கழித்து
சிறந்தமுகிர்த்தமதில்ச் சேர்த்தேயுனையெடுத்து
உந்தனுக்குப்புத்தி உபதேசங்களுநரைத்து
எந்தன்துயரமாற்ற யுகசோதனைக்கனுப்பி
உந்தன்துயரமாற்றி யுகத்துயரமுமாற்றி

எந்தன்துயரமாற்றி ஈசர்துயர்மாற்றி
கலியையறுத்துக் கஊப்பயங்கள்தானறுத்து
சலிவில்லாத்தர்மத் தங்கநவரத்தினபதி
முத்துநவரத்தின முடியுனக்குநானருளி
எத்திசையுமெய்க்க யேற்றமனுஅன்போர்கள்
கட்டியங்கூறிக் காச்சியிட்டுந்தனக்கு
எட்டுத்திசைபோற்ற யேற்றகுடையொன்றுதந்து
அரசாண்டுநீயும் அழியாத்திருவுளம்போல்
வீரசான்ருேர்சூழ வீரக்கொடிநிறுத்தி
செங்கோர்க்குத்தர்மச் சிவசெங்கோலுமருளி
எங்கோலரசும் என்னுமச்சக்கரத்தால்
சீமையன்பத்தாறுன் சொல்லொன்றுக்குள்ளாகி
பூமுகச்சிங்காசனமும் பொன்முகசிங்காசனமும்
கோமுகசிங்காசனமுங் குணமுகசிங்காசனமும்
மாமுகசிங்காசனமும் மயில்முகசிங்காசனமும்
அன்னமுகசிங்கா சனமீதோடாகவேதான்
பொன்னம்பலம்போல்ப் பெரியசிங்காசனந்தான்
முப்பத்திரண்டு முழுதுமுனக்கருளி
செப்பொத்தமாணுக்கர் சேவிக்கவுந்தனக்கு
தருவேஞனுன்னுடைய தாயார்பேராணையதாய்
என்றையாநாதன் எடுத்தவர்க்கேயுரைக்க
நன்றெனவேவானேர் நற்பூரணஊக்கொண்டாடி
பேறுபெத்தசென்மம் பிராணனிதுநன்றெனவே
பூர்வத்திலுள்ள பூசாந்திரமிவ்வளமை
என்னதவஞ்செய்தாரோ இத்தேவன்தாய்தகப்பன்
பொன்னப்பநாரணர்க்குப் பிள்ளையெனவந்துதிக்க
நாரணரைப்பெற்றவே நல்லதசரதரும்
பூரணமாய்நின்றதவம் புகன்றிடவேகூடாது
பன்னீராயிரம்வருசம் பாரத்தவசுபண்ணி
முன்னூறுவாரமதாய் உலகளந்தோர்வேசமதில்
எண்ணுபிரத்தில் எடுத்தாரொருராமருரு
கண்ணுளர்தன்தனக்கு கர்பகம்போலித்தேவன்
மதலையாகப்பிறந்து வையகத்தையாள்வானென்று
கதலிவாய்நாதன் கற்பித்தாரிப்படியே
ஆர்பெற்றபேறும் அல்லப்பேறிப்பலந்தான்
பேற்பெற்றவரிவர்தான் பிறந்தயினமதிலே
நாம்பிறந்தாலும்பெரிய நலங்கிட்டுமென்றுசொல்லி
தாம்பிறப்போமென்று சான்ருேராய்த்தான்பிறந்தார்
அவர்கள்பிறக்க ஆனதெய்வபூரணஊ
திவதமதுபார்த்துச் செய்தார்பிறவியது
செய்யச்சிவமுஞ் சிவவேதனுமகிழ்ந்து
வையமழந்த மாலும்பிறவிசெய்தார்
கர்மக்கடன்கழிக்க கலியுகத்திலேபிறக்க
தர்மச்சம்பூரணஊ தரணிப்பிறவிசெய்தார்
செய்தச்சடமதையுஞ் சுமக்கச்சடம்பார்த்து

மெய்யிசையுநாதன் மேதினியில்ச்செய்தனராம்
சடம்பிறக்கலோகந் தட்டுமிகமாறி
உடன்பிறக்கச்செய்தார் உலகளந்தோர்கற்பினையால்
அன்றுபிறக்கசெய்தார் அவனிசோதனைக்கெனவே
எண்ணமில்லையென்று ஈசுரரும்மாயவரும்
கொண்டாடிஈசுரரைக் கூறுவாரச்சுதரும்
கெண்டையகண்ணீசுரரே கேட்டீரோயெந்தனெண்ணம்
பஞ்சவர்க்கஞ்சல்செய்து பார்மீதில்நானிருக்க
வஞ்சகநீசக்கலியன் வந்ததுகண்டேபதறி
நடுநடுங்கிநாடோடை நல்லகலைக்கோட்டுமுனி
பொடுபொடெனவந்தான் போறவழிதனிலே
ஏன்காணுமாயவரே ஏய்த்திளைத்தோடுவதேன்
கண்காணப்போறேனெனக் கலைக்கோடுடனுரைத்தேன்
என்னவிதத்தால் என்றேஅவனிசைய
சொன்னதுறுகலியன் சூழ்ச்சியினலென்றவுடன்
அப்போமுனியும் அவனேதுசொல்லலுற்றான்
இப்போநீரோடுகிறீர் இவனையழிப்பதற்கு
எப்போவருவீர் இசையுமென்றான்முனிவன்
அப்போமுனியோடு அருளினதுநீர்கேளும்
மாமுனியேநீகேளு வஞ்சகநீசக்கலியை
நான்முன்னின்றுகொல்ல ஞாயமில்லைகேட்டிடுநீ
கலியனுடகண் கண்டால்பவஞ்சூடும்
திலியவனுயிரைச் செயிக்கயெவரால் முடியும்
முன்னின்றுகொல்ல மூவராலுமரிது
பின்னின்றவனவனல்ப் பேசாதேமாளவைப்பேன்
வல்லமையுங்காட்டேன் மானீசன்கண்ணின்முன்னே
நில்லாமல்நின்று நீசன்தனையறுப்பேன்
அற்புதமுஞ்செய்யேன் அன்னீசன்கண்ணின்முன்னே
உர்பனமுக்கொடேன் ஒன்றறியாநின்றிடுவேன்
வந்ததெனச்சொல்வார் வரவில்லையென்றிடுவார்
எந்தன்பேரோகாணும் யாரோவெனச்சொல்லுவார்
இதோவந்தானென்பார் இவனில்லையென்றிடுவார்
அதோவந்தானென்பார் அவனில்லையென்றிடுவார்
இப்படியேசூட்சமொன்று எடுப்போநாமுனியே
எப்படியுமுள்ளறிவோர் எனையறிவார்மாமுனியே
அறிந்தோரறிவர் அறியாதார்நீருவர்
செறிந்தோர்கள்வாழ்வார் சேராதோர்போய்மாழ்வார்
சாத்திரத்திலுந்தோன்றேன் சதுர்மறையைத்தாண்டிநிற்பேன்
சேத்திரத்திலுமடங்கேன் செய்தவத்திலுமடங்கேன்
அன்பிலுமடங்கேன் அறத்திலுமேயடங்கேன்
வன்பிலுமடங்கேன் வணங்கிடிலுமடங்கேன்
கும்பிடிலுமடங்கேன் குவித்திடிலுமடங்கேன்
நம்பிடிலுமடங்கேன் ஞானத்திலுமடங்கேன்
யோகக்கிரியை உறுசரிதையிலடங்கேன்

விர்ப்பனத்திலுமடங்கேன் விநோதமதிலடங்கேன்
சொர்ப்பனத்திலடங்கேன் தெரிசனத்திலடங்கேன்
கனவிலடங்கேன் கைகாட்டலிலடங்கேன்
அனுவிலடங்கேன் அச்சரத்திலுமடங்கேன்
இத்தனையிலடங்காது இருந்துபகைமுடிப்பேன்
என்றுநான்சொல்ல யேற்றகலைக்கேட்டுமுனி
மன்றுததில்விழுந்து மறுகியழுதேபுலம்பி

விருத்தம்

மண்ணிலுமடங்கா மனத்திலுமடங்காமறையிலுமடங்கா
பலவசத்திலுமடங்கா கண்ணிலுமடங்காகருத்திலுமடங்கா
கவியிலுமடங்கா பலவிதச்செபிப்பிலுமடங்கா
எண்ணிலுமடங்கா இகத்திலுமடங்கா இறையினிலடங்கா
இரங்கிலுமடங்கா ஒண்ணிலுமடங்காஉனைவந்தடங்கிட
உரைத்திடதிடமருள் யெனப்பதத்தடிமிசைவிழுந்தான்

விருத்தம்

மறையினிலடங்கா இறையினிலடங்காவணங்கிலுமடங்காய்
பலவகையிலுமடங்காய் நுறையினிலடங்காய்தொல்புவி
யிலடங்காய்
சுருதியிலடங்காய் சுகயினிலடங்காய்உறவிலுமடங்காய்
யொழியிலுமடங்கா யுகத்திலுமடங்காய்ஒருவிதத்திலு
மடங்காய்
புறத்திலுமடங்காய் அகத்திலுமடங்காய் புகழ்ந்துனை
வகுத்துரையென்பதத் தடிமிசைவிழுந்தான் [யடக்கிட

விருத்தம்

சரிகையிலடங்கா கிரிகையிலடங்காசயோகத்திலடங்கா
ஞானத்திலடங்காய் கலக்கியானத்திலடங்காய் கனவிலு
மடங்காய்
கருவிலுமடங்காய் உருகினிலடங்காய் உருவிலுமடங்காய்
யுகத்திலுமடங்காய் யோதிலுமடங்காய் உணர்விலு
மடங்காய்
உர்பனத்திலுமடங்காய் தவத்திலுமடங்காய் தழுவிலு
மடங்காய்
தனத்திலுமடங்காய் தயவிலுமடங்காய் அகத்திலுமடங்காய்
புறத்திலுமடங்காய் மனத்தகத்தடக்கியுன் பதத்தடி
பணிந்திட
வகுத்துரையெனப் பதத்தடிமிசைவிழுந்தான்

### விருத்தம்

தனத்திலுமடங்காய் தயவிலுமடங்காய் அகத்திலுமடங்காய்
புறத்திலுமடங்காய் அசத்திலுமடங்காய்
புசத்திலுமடங்காய் அகத்தினிலடக்கியுன் பதத்தடி
பணிந்திட வகுத்துரையென பதத்தடிமிசைவிழுந்தான்

### நடை

ஓரெழுத்துமீரெழுத்தும் உற்றபரமூன்றெழுத்தும்
ஆறெழுத்துமஞ்செழுத்தும் ஆறுஅரியெழுத்தும்
ஏதெழுத்திலுமடங்கா திருந்துபகைமுடிப்பேனென்று
ஓதினீரையா உலகளந்தபெம்மானே
எட்டாப்பொருளே எங்கும்நிறைந்தோனே
கட்டாக்கலியைக் கருவறுக்கவந்தீரால்
நாங்களும்மைக்கண்டு நலம்பெறுவதெப்படித்தான்
தாங்கள்மனதிரங்கித் தான்சொல்லவேணுமென்றான்
அப்போமுனிக்கு அருளினதுநீர்கேளும்
இப்போதுமாமுனியே இன்றுநீகேட்டதற்கு
ஒருவரறியா துபதேசங்கண்டாயே
கருகிவருந்தினதாய்க் கட்டுரைப்பேன்கேட்டிடுநீ
எனக்காகும்பேர்கள் இனங்கேளுமாமுனியே
புனக்காரமில்லை பூசைமுறையுமில்லை
கோவில்கள்வைத்துக் குருபூசைசெய்யார்கள்
பூவதுகள்போட்டுப் போற்றியேநில்லார்கள்
ஆடுகடாய்கோழி அறுத்துவெலியிடார்கள்
மாடுமண்ணுருவை வணங்கித்திரியார்கள்
என்பெயருசொல்லி யாதொருவர்வந்தாலும்
அன்போடவரை ஆதரிக்கும்பேராகும்
இரப்போர்முகம்பார்த்து ஈவதுவேநன்றாகும்
பரப்போரைகைசேர்த்து பணிவதுமேநன்றாகும்
என்பேரால்முத்திரிகள் இட்டோரேநன்றாகும்
அன்போராய்வாழ்ந்தாலும் அறிவுநினைவொன்றானால்
நாம்வந்தோமென்ற நாமமதுகேட்டவுடன்
தாம்வந்துவேடமிட்டோர் சாதியதுநன்றாகும்
அல்லாமல்கேளு வதியமுனியேநீ
எல்லாவமைப்பும் யேலமேவிட்டகுறை
எச்சாதிக்காச்சோ அச்சாதிநன்றாகும்
எவர்க்குமிகவீந்து இருப்போரேநன்றாகும்
அவர்க்குதவிசெய்தோர் அவ்வினமும்நன்றாகும்
தாழ்மையாய்வாழ்ந்த சாதியதுநன்றாகும்
ஏழ்மையாய்வருவோம் இரப்பன்பரப்பனென
இரப்பனைக்கைக்கொண்டோர் எனையேத்தார்மாமுனியே

பரப்பனைக்கைக்கொண்டார் பரமேத்தார்மாமுனியே
சினமுமறந்து செடமுழிக்கும்பேர்மனுக்கள்
நினைவுக்குள்ளேநாம் நிர்ப்போங்காண்மாமுனியே
இனத்தோடேவொத்து இருந்துமிகவாழ்ந்தாலும்
சொன்னநினைவதுக்குள் துயிலாமல்வாழ்வோங்காண்
மாசுகலியை மனதூட்டாதேயறுத்து
வாசுநினைவில் வந்துநிற்போமாமுனியே
பின்னுமொன்றுகேளு பூரணமாமுனியே
முன்னுகத்தில்கேள் ஒருவர்க்கோர்வாரமுமாய்
நின்றேன்முனியேயினி நீசக்கலியறுக்க
சென்றேமேயானல்ச் செய்யுந்தொழில்கேளு
காலுக்குள்ளேதிரியாங் கையதுக்குள்ளேதிரியாம்
மேலுக்குள்ளேதிரியாம் விழியதுக்குள்ளேதிரியாம்
கண்டெடுத்தோர்வாழ்வார் காணுதார்வீணுவார்
பண்டைப்பழமொழிபோல் பார்மீதிலோட்டிவைத்தேன்
கண்டெடுத்துக்கொண்டோர் கரையேறுவாரெனவும்
தொண்டனெனக்கண்டு சொன்னேனுன்னோடு
தாய்தமர்களென்றுந் தனதுகிளைகளென்றும்
வாயுரமாய்ச்சொல்லும் வம்பரென்றும்பார்ப்பதில்லை
அன்பாகிவந்தவரை அலைச்சல்செய்தேப்பதுண்டு
வம்பானமாத்தானை வளர்த்தேயறுப்பதுண்டு
எட்டியுமெட்டாது ஏழைக்குணம்போலும்
கட்டியுங்கட்டாத கடியசொருபமதும்
வேளைக்குவேளை விதக்கோலமுமணிந்து
நாளைக்குநாளாய் நடக்குமதிசயமாய்
இரப்பவடிவாய் இருந்துகலிதனையும்
பரப்பரமாய்நின்று பத்திசோதித்தேநாம்
எங்குமிருந்து எரிப்போங்கலிதனையும்
சங்கிலிரந்து தான்வளர்ப்பேஅன்போரை
என்றுரைக்கநாதன் எடுத்துமுனியேதுரைப்பான்
மன்றுதனையழந்த மாயத்திருமாலும்
இந்தவிதமாய் எழுந்தருளிவந்திருப்ப
தெந்தச்சொருபம் எடுத்தணிவீரெம்பெருமாள்
கேட்டான்காண்மாமுனியுங் கீர்த்தியுள்ளஈசுரரே
நாட்டானமாமுனிக்கு நானுரைத்ததுகேளும்
இகாபரத்தைநானினைந்து ஏழுபிள்ளையீன்றெடுத்து
மகாபரனார்செயலால் மக்களுக்குசொத்தீய
நானுபதேசித்து நாட்டில்மிகயிருத்தி
மானுபஞ்சோதிக்க மகர்க்குவருள்கொடுத்து
மாசுகலியறுத்து மக்களொருமித்தவுடன்
பாசுபதங்கொடுத்து பாலன்கையால்விளக்கி
கூப்பிடுதலொன்றில் குவலயத்தைத்தான்கிறக்கி
சாப்பிடுவேன்நஞ்சைத் தன்பாலையாளவைப்பேன்
என்றுகலைமுனிக்கு இயம்பிவந்தேனீசுரரே

அன்றுமொழிந்ததுக்கு அமைத்ததுகாணிம்மகவு
சந்தோசமாச்சுதுகாண் சங்கரரேநீருமிப்போ
வெந்தோசந்தீர்ந்துதென்று வெள்ளிக்கைலையிலே
ஒருவிடத்திலெக்கியத்தை ஊட்டிக்கனலெழுப்பி
திருநடனமாடுமென்று செப்பினரொப்புடனே
அப்படியேநல்லதென்று அரனுமுமையாளும்
முப்படியேமாலினுக்கு கொன்பதாம்பிறப்பெனவும்
வேதனுக்கோராயிரம் பிறவியாச்சுதென்றும்
மாதுவுமைக்கு வளர்பிறவியேழெனவும்
திருவுக்கோர்பத்தாஞ் செய்யபிறவியெனும்
சதுர்மறைக்கேளெனவுஞ் சாஸ்த்திரத்துக்கோர்நான்கும்
வானவர்கோன்றனக்கு வளர்பிறவிமூன்றெனவும்
தானவருக்கேழெனவுஞ் சரஸ்பதிக்காயிரமாம்
தொண்டர்தனக்குச் சூல்பிறவியொன்றெனவும்
அண்டர்கள்மெய்க்க அவர்நடனமாடலுற்றார்

### திருநடனவுலா வெண்பா

1

நாதன்முறையார்க்கு நற்பிறவியொன்றுபத்தாம்
வேதன்றனக்குப்பிறவி ஆயிரமாம்வெண்டரள
மாதுக்குமாயிரமாம் மாதுமைக்—கோரேழாம்
சீதுக்குபத்தெனவே செப்பு

2

இந்திரர்க்குமூன்றெனவு மிறையவருக்கேழெனவும்
சந்திரர்க்கோரேழாஞ் சாற்று—நன்றியுள்ள
மறையதுக்குமோரேழாம் மானமுள்ளதொண்டர்களுக்கு
இறப்பிறப்பில்லாப் பேறென்றியம்பு

3

என்றிவைகளெல்லா மிப்படியேவந்துதென்று
ஒன்றியுள்ளசித்தாதி யோதினள்—பண்டையுள்ள
தாவடத்தைமேவிடத்திக் கோவிடத்திலோமிடத்தி
னவிடத்தி பூண்டாடினர்

4

தன்னால்முளைத்த சர்க்கணையின்றான்வாங்கி
பின்னாலேயோர்கணைப் பீறி—பின்னாலே
பூறுங்கணையதினால் பெரும்புவியெல்லாந்தோன்றி
சீறுங்கலவயதால்ச் சென்றதோ

5

வானத்தழவில்வளர்ந்த—கம்பத்தன்னருளால்
சேனைச்சிகம்படைத்த செல்வமோ—மானத்த
மாகலியனேதுவினால் வாழ்விழந்திவ்வுகமும்
போகத்தருணவந்து பூட்டினதிப்போது

6

நல்லாறுசாஸ்திரமும் நாலுமறைவேதமதும்
பொல்லாக்கலியனால் பொய்சூடி—பொல்லா
பொடியக்கலியோடும் பொன்றியடிவேரறவே
இடியத்தான் வந்தொத்ததின்று

7

பக்கம்பதினைந்தும் பார்மேடம்பன்னிரண்டும்
வக்கணைகோளொன்பதுவு மங்கி—யக்கிகொண்
டளிந்தகலியோ டலமாந்தளிந்திடவே
சுழிந்துகன லாறுவந்துசுற்றி

8

மாந்திரதந்திரத்தை வைத்தியவாகடத்தை
சூழ்ந்திருந்த வச்சரத்தைச்சோதித்து வேரறுத்துஏந்திருந்த
இழகுகலியோ டிம்முறையெல்லாமொடுக்கி
களவறுக்கச்சோதி யொன்றுகாணுதோ

9

ஐய்யமிட்டுண்ணு தரும்பாவியாவரையும்
பொய்யரையும் வெட்டிப்பெலியாக்கி—மெய்யிழந்து
நையுங்கலியோ டனலாவிகொண்டெரிக்க
வெய்யவன்போல்ச் சோதியொன்ருகுமே

10

பக்த்திசோதித்தேப் பலநாழுங்காத்திருந்த
வித்தகனைவந்து வேண்டார்மேல்—வீடிழந்து
செத்திறந்தீநரகச் சீள்க்கூட்டிலேயடைக்க
கொத்தியருந்த புழுக்கள்கொஞ்சுதோ

11

பாங்கலியனேதுவினல் பண்டுண்டுசெய்ததெல்லாம்
மூங்கிக்கலியினுள்மூடி மூச்சுவிட்டு
ஓங்குவதோங்கி யுறங்குவதுதானுறங்கி
முங்கிக்குழிப்பு நாள்முற்றுதோ

12

லச்சைகெட்டபாவி யென்றுவந்தானன்றுமுதல்
நர்ச்சடலங்காள் நல்வகைகள்னடிஎளந்து—நாணமுற்று
பச்சிமுதல்மாமிருகம் பால்நரிகள்கற்ருவும்
அச்சமற்றுவாழ் புவியொன்ருகுதோ

13

பொல்லாதுயரங்கள்கொண்ட பேய்ச்செடிகடானெழிந்து
கல்லாதபுல்லர் கருவொழிந்து—நல்லோராய்ச்
சாகாமல்நாளும் நகரொன்றதுக்குள்
சொல்லொன்ருளச்சோதி யொன்றுதோன்றுதோ

14

தாணுமால்வேதன்றர்ப் பொருளாய்முப்பொருளும்
ஆனுவமாய்யொன் றிலடங்குதோ—அஞ்செழுத்தும்
ஆனுஅரியெழுத்து ஆங்காரமூன்றெழுத்தும்
ஓநமோவென் றதுக்குளொடுங்குதோ

15

ஆகாதவஸ்துவெல்லா மழித்துநரகிலிட்டு
வாகாய்க்குழிமூட வந்ததோ—சாகாத
சனங்கள் பலவஸ்துவையுந் தர்மபதிராச்சியத்தில்
இனங்களொன்ருயாள ராஜாவொன்ருகுதோ

16

பொன்னூற்றுதன்னூற்று புரவுதன்னூல்விழைவூற்று
மூன்னூற்றுயோசனை யில்லாவுசுழி—பன்னூற்று
பாலூற்றுமேலூற்றுச் சேலூற்றுவாலூற்று
மாலூற்று மாபதியின்வாழ்விதாகுதோ

17

செப்பொற்றபொன்னுஞ் சிவமேடைசிங்காசனமும்
முப்பத்திரண்டறமு மோங்குதோ—ஒப்பற்ற
ஊர்தெருவுமொன்றதுக்குள் ஓர்யோசனைத்தெருக்குள்
சீர்பதினயிரத் தெண்சேருதோ

18

தெருக்கள்பதினயிரத்தெண் செந்திருமால்வாழ்பதிக்கு
குருக்கள்விஞ்சைதானென்று கூறுதலோ—மருக்கள்
மாருமல்வாழ்பதிக்கு மனங்கொடுத்துநிற்பதல்லால்
வேரூர்களும் பரிக்கவேண்டுமோ

19

பொர்மைபதியில்ப் பொன்வாசலொன்றதிலே
தர்மமணியொன்று தாங்குதோ—தர்மமனு
மணியினதுகூறறிய மணிகணீரென்றதல்லால்
இனியிருளில்லா தேகுதோ

20

அலைந்தலைந்தசூரியனு மவனலையச்சாயாமல்
நிலங்தெரியவெப்போதும் நேரேகுலைந்தலைந்த
கார்மேகத்தட்டெல்லாங் கண்டுடைந்துவானமதில்
ஊர்மேகமெல்லா மொருமேகமாகிடவே

21

தோணிக்கச்சிந்தை துலங்கிவெழிகாட்டுமல்லால்
காணிக்கையென்ற யிறைகாணுதே—மாணிக்க
கல்லால்வளந்தபதி காணுமொழியல்லாது
பொல்லாரெனப் பேர்கள்போச்சுதோ

22

ஈசர்நடன மிருபத்துவொன்றதுக்குள்
தேசமதுதீது நலஞ்செப்பினர்—வாசமுடன்
வன்னியமர்த்தி மாதுமையைத்தானேக்கி
உன்னிச்சிவமு முரைப்பார்

நடை

ஈசர்மகிந்து யேந்திழையைத்தானேக்கி
வாசமுடனீசர் வகுப்பாரம்மாதோடு
முன்னேமொழிந்த முர்த்தாண்டவமதுக்கு
பொன்னேயிந்நேரம் புரிந்ததுநீகண்டாயே
அப்பொழுதீசொரியும் அரனைமிகப்போற்றி
செப்போடுவொத்த சிவனேசிவபரனே
ஆடினீரேதாண்டவந்தான் அனேகவளங்கள்சொல்லி
பாடினீரே அய்யா பாட்டுவழுகாதே
தாண்டவமாடிப்புரிந்தால் சத்திசிவம்வரையும்
மாண்டாரைப்போல்க்கிடந்து மறுத்தெழும்பவேணுமல்லோ
அல்லாமலென்னுடைய அண்ணர்நினைப்பதிலே
நல்லவரைகொஞ்சம் நானறிந்ததுகேளும்
காரணமாயண்ணர் கலியுகத்தைமுடிக்க
நாராயணர்பூமியிலே நடப்பதுநிசமானல்
நம்மையுமிங்கிருக்க வொட்டார்காண்நாராயணரும்
எம்மழையிலானலும் எவ்வெயிலிலானலும்
கொந்தலிலானலுங் கூர்பனியிலானலும்
கந்தத்துணிகள்தந்து கையில்த்திருவோடுதந்து
எந்தனுக்குநல்ல இழங்குறத்திவட்டிதந்து
மைந்தன்சரவணர்க்கு மறிப்புமிகக்கொடுத்து
பிரமனுக்குக்கோலமிட்டு பிசாசுதனைவெருட்டி
வரமுள்ளதேவதைக்கு மாற்றிவுருக்கொடுத்து
லோகமதில்நம்மையும் முகக்கோலங்களிட்டு
வேகத்துடனேமேதினி யெல்லாந்திரிந்து
கலிகள்அகலக் காண்டங்களிக்கவென்று
பலிகாணவைப்பார் பரசோதனைக்கனுப்பி
இப்படியேதோணுதுகாண் என்னுடைசிந்தையிலே
எப்படியும்வந்து இதுசமயமீசுரரே
என்றுவுமையாள் ஈசர்தனைவணங்கி
அன்றுமொழிந்து அவள்நிர்க்கும்வேளையிலே
நாராயணரும் நல்லசிவனிடத்தில்
சீராகவந்து தெண்டனிட்டுத்தானிருந்து
இருந்துமாலோனும் இருதயத்திலுள்மகிழ்ந்தார்
பொங்குதுவிழிதங்கையோடு புகலுவாரம்மானே
என்னுடையதங்கையரே எனைமேனியாக்குவ்ளே
உன்னுடையதன்பொருட்டால் உலகளந்தோநானகி
நாட்டிலென்பேரும் நடத்திவைத்தநண்ணுதலே

கோட்டுவரையாளே கோவேயென் தங்கையரே
நீயுநம்மீசுரரும் நீனிலத்தில்போகவென்று
நானும்நினைத்திருந்தேன் என்றுநவின்ருயே
ஈசுரர்க்குமீசொரிக்கும் இந்தநினைவானுல்
தேசமதில்போக வேண்டாம்என்றுசொல்வாரோ
நானுங்களைவலிய நாட்டில்போமென்றிலனே
தானுங்கள்தன்னினவில்த் தரித்ததுபோலேபோவும்
நீங்கள்நடப்பதென்ருல் எனக்குவெகுசந்தோஷம்
தாங்கள்மனதிரங்கிச் சாற்றிமிகப்போவுமென்ருர்
அப்போதுஈசுரனுர் அச்சுதரைத்தாஞேக்கி
மைப்போடுங்கண்ணினிய மைத்துனரேயென்ருவி
சொல்லுச்சொல்லாதபடி சொல்வதற்கும்மையல்லால்
அல்லும்பகலும் அலேந்தாலுங்கிட்டாது
போமென்றுசொல்லாமல்ப் புத்திச்சொன்னுப்பேர்லேநீர்
தாங்கியுரைத்தீரோ சத்தியுள்ளமைத்துனரே
புத்தியிதுநன்று புண்ணியநாராயணரே
தத்தியுடநடக்கத் தருணமெப்போதென்றுரைத்தார்
நடக்கக்கருமமிது நல்லதுதானென்றுசொல்லி
அடக்கமுடனே அய்யாநாராயணரும்
ஒத்திருந்துதங்கள் உர்பனமாயாராய்ந்து
புத்திபோல்வாசகங்கள் பூத்தானமாயெழுதி
நாட்டுநருளறிய நடைசீவசெந்தறிய
காட்டுமரமறியக் கல்லப்புத்தானறிய
புற்பூடறிய பூமிதெய்வாரறிய
நர்ப்பறிந்துபேய்கள் நடுங்கிமிகவ்றிய
சேடனறிய சிறுவாயுதானறிய
மேகறிய மேலோர்கடானறிய
பூகமறிய பொழுதுசந்திரனறிய
நச்சேத்திரமறிய நமனறியக்கோழறிய
பொய்ச்சரியைகிரியைப் பெயர்நாலுந்தானறிய
வேதமறிய விழங்குமறையறிய
வாதையறிய மன்றுபதிஞலறிய
சங்கறியமுத்தறிய சகலமச்சமுமறிய
அங்கறியநாம்படைத்த வல்லோருந்தானறிய
எழுதிவிடுவோங்காண் ஏத்தறியபுத்திவைத்து
பழுதுவைத்தாரென்று பார்முழுதுஞ்சொல்லாமல்
நம்பேரில்குற்றம் நகத்தளவில்லாமல்
பம்முதலாய்நாமும் பரிந்தெழுதித்தான்விடுவோம்
என்றுதிருமாலும் இறவாதவீசுரரும்
மன்றுபடைத்த மறையோனும்பார்வதியும்
சரசுபதியும் சத்தியுள்ளலச்சுமியும்
வீரசுமுனிமாரும் வேதமறையோரும்
சாத்திரருங்கின்னரரும் சங்கத்துறவோரும்
பார்த்தீவனுந்தெய்வப் பாவாணர்தான்முதலாய்

வானவருந்தேவர்களும் மற்றும்சித்தாதிகளும்
தானவரும்வேதத் தம்புருக்காரர்களும்
சங்கம்வரையுந் தானவர்கள்தான்முதலாய்
எங்கெங்குமுள்ள இருள்சிமுதல்த்தான்வருத்தி
வல்லோர்கள்வாழும் வைகுண்டமீதில்வந்து
எல்லோருங்கையிலே இடமிட்டெழுந்தருளி
கங்கைநதிகண்டு கரைக்கண்டர்தேவர்வரை
கெங்கைதீர்த்தமாடிக் கிஷ்ணர்பதிபுகுந்து
மேடைவிதானமிட்டு மிகுமேடைபொன்னமுத்தி
வாடைகமழவிட்டு வானவர்கள்பாட்விட்டு
எக்காளடம்மானம் எங்கும்முழங்கவிட்டு
மிக்கபுராணகலே மிகுமறையோர்போற்றவிட்டு
ஆகமங்கள்போற்றவிட்டு அரம்பையர்கள்கைகாட்டவிட்டு
போகமுனிசித்தரெல்லாம் புராணக்கவியோசைவிட்டு
மும்முதற்குத்தேவரெல்லாம் முறையிட்டுவாழ்த்தவிட்டு
சங்குத்தொனிகள்விட்டுச் சகலோரும்போற்றவிட்டு
இத்தனைநல்ச்சிறப்பும் இதமாயலங்கரித்து
வித்தையருள்தண்டரழ விழியாளைத்தான்வருத்தி
கெங்கைநதிமூழ்கிக் கிரணபச்சையாடைபெய்து
சங்கையுடனுபரணஞ் சரசுபதியணிந்து



குழல்முடித்துக்குழையிற் குவிந்ததங்கத்தோடணிந்து
வழையல்முறுக்குமிட்டு மார்பிற்பொற்றேடுமிட்டு
பச்சைநிறக்காப்பணிந்து பவள்மணித்தண்டையிட்டு
மச்சமதில்மையெழுதி மகிழ்ந்தமூக்குத்தியிட்டு
தண்டரளமீதில்த் தங்கத்தகடணிந்து
கொண்டைதனில்த்தேன்மலரைக் குவியமிகச்சூடி
பொற்சருகைச்சேலே பெரியயேத்தாப்புமிட்டு
அச்சரகைத்தோழி அரம்பையர்முன்னடிவர
அன்னநடைநடந்து அனற்கொழுந்திட்டார்போல்
வன்னவழகுடனே வந்தாள்திருமுன்பதிலே
மாதுவரவே மறையோனும்மாயோனும்
ஏதுகோலமெனவே எண்ணமதிலுன்னிறாராம்
உன்னித்திடமாய் உள்மகிழ்ந்துமாயவனும்
கன்னிதனைப்பார்த்துக் கரைக்கண்டார்தாமுரைப்பார்.
வன்னத்திருவடிவே மறையோனினேவியமே
அன்னமடமாதே அரசுக்குகந்தவளே
கருத்துடையசோதிக் கவியுடையீருந்தனையும்
வருத்தினகாரியந்தான் வகுக்கக்கேளொண்ணுதலே

நாட்டிலொருநீசன் நன்றியறியாப்பிறந்து
மேட்டிமையால்லோகமெல்லாம் மெய்யழித்தான்கண்டாயே
கோடிப்பாவம்பிறந்து குருநீதியைக்கெடுத்தான்
கேட்டிருக்கக்கூடாது கெடுநீசன்பொல்லாங்கு
நம்மைநினையாததுதான் நமக்குச்சற்றெண்ணமில்லே
செம்மையுள்ளசாணுரை செய்தபங்கமேக்கலேயே
தெய்வப்பிறவியல்லோ திசைவென்றசான்ரோர்கள்
மெய்வரம்மையெல்லாம் மிகக்கெடுத்தான்மாபாவி
கற்பகலாப்பெண்களுட கற்புக்கிரங்காதிருந்தால்
உற்பனமோநாமள் உடையபரனென்ருமோ
எளியவனேவம்பால் இடுக்கஞ்சேய்தேயடித்தால்
விழியிட்டழுதாலும் மேதினியில்கேள்ப்பதில்லே
கேளாதகாரணத்தால் கீர்த்திகொண்டபேரெழியோர்
நாளானநாள்வழியாய் நம்பிநம்பேரில்வைத்தால்
அல்லாமல்நம்முடைய அரிதன்மகாநாமமதை
இல்லாமலேமறைத்தான் இயல்புகெட்டமானீசன்
ஆனாலும்பாரமில்லே அன்னீதம்பொறுக்கரிது
மானபரஞாயமதை வரம்பழித்தான்மானீசன்
ஆகமத்தைக்கூறழித்தான் அன்னீதமாபாவி
தாகமடைந்தார்கள் தவசுமுனிமார்களெல்லாம்
நீசப்பசாசு நீனிலத்தைக்கொள்ளேகொண்டு
தோசப்பயலோடு துணேயாய்மிகக்கூடி
கொடுக்கவொன்றில்லா நருள்பார்த்துக்கொல்லுதுகாண்
அதுவேவொருகொடுமை அனேகம்பொறுக்கரிது
எதுவும்வரம்புதப்பி இருக்குதுகாண்வையகத்தில்
ஆனதால்நாங்கள் அவனிதனில்போயிருந்து
மானமுறைசோதித்து மனுவிடுக்கந்தான்தீர்த்து
நாட்டிலுள்ளகுற்றம் நாங்கள்கேட்டுத்தீர்த்து
ஓட்டுவதையோட்டி உறைப்பதையுறைப்பித்து
நாட்டையொருசொல்லதுக்குள் நலமாகவாழ்விக்கவே
பேடையென்னமாமயிலே பெண்ணரசேயிப்போது
நாங்கள்நடப்பதற்கு நாளானநாளிதுவே
ஆனதால்ப்பாவி அவனிழுக்குச்சொல்லாமல்
மானமுள்ளபுத்தியைப்போல் வாசகமொன்றேயெழுதி
வருவோமெனவயச்சால் மாபாவிதானறிந்து
கருவிகுழறிக் கற்பனேக்குள்ளாகுவதும்
என்னவோவென்று இடும்புசெய்வதுமறிய
அவனறியவிட்டதுபோல் அவனிபதிலைறிய
எவரும்புற்பூண்டுவரை எவ்வகையுந்தானறிய
எழுதியொருவாசகந்தான் இப்போவிடவேணுமெனது
முழுதுமுன்னிங்கே ஓடிவாவென்றதுதான்
அப்போசரசுபதி ஆனமாமயிலும்
இப்போதிவ்வகைக்கு யானென்னசெய்கருமம்
எல்லாங்கிருபை எம்பரனேவுன்செயலு

அல்லாமலெந்தனக்கு ஆகுமோயேதாலும்
ஆட்டுவதுநீயலவோ ஆடுவானும்நீயலவோ
ஓட்டுவதுநீயல்வோ ஓடுவானும்நீயலவோ
சொல்லுவதுநீயலவோ சொல்லவைப்பானும்நீயலவோ
அல்லும்பகலும்நீயல்லவோ அழியாதவரும்நீயலவோ
எல்லாமுமது கிருபையெனக்கல்லாது
சொல்லயிதுவந்ததென்ன சுவாமியெனப்பணிந்தாள்
மாதுதிருமால் மலர்ப்பாதம்போற்றிடவே
ஆதித்திருமால் அவரேதுசொல்லலுற்ருர்
நீயுரைக்கநானெழுதி நீனிலத்தில்விட்டதுண்டால்
வாயுரைக்கக்கூடாது மற்ருேர்களாராலும்
வம்புரைக்கக்கூடாது வம்புரைத்தால்வன்னரகம்
உம்பதுவேயல்லால் உறுகெதிகள்காணுர்கள்
ஆனதாலுன்வாக்கும் அரிஅச்சரமுங்காண்பித்தால்
மானமென்னவாகுமென்று வகுத்துரைப்பார்போமென்று
அப்போசரசுபதி அன்போடுளமகிழ்ந்து
செப்புகிருள்நல்ல திருவாசகந்தானம்மானே

திருவாசக விருத்தம்

கலையோடுகலையைத்தாக்கிக் கண்ணின்மேல்கருணேநாட்டி
மலையோடுமலையைத்தாண்டி வளர்ந்தவன்பதமேகண்டு
சிலையோடுசிலையிளுழுஞ் சிவபரக்கிருபையென்றே
அலேதலேமுளக்கம்போலே அவளுரைகூறலுற்ருள்

விருத்தம்

கூறியவாசகத்தையிந்தக் குவலயத்தோர்காண
மீறியமொழிகள்சொல்லி விளம்புவார்நாசமாகும்
தேறியபூதத்தோடு தேர்ந்துணர்ந்தவரேவாழ்வார் [பார்
கூறியவாசகத்தையுள்ளங் கொண்டவர்குருவைக்காண்

விருத்தம்

ஒருதிருவிபூதியுண்டை யொருயிருமிச்சமாகும்
ஒருதிடத்தேங்காய்போலும் ஒருமனத்திரணேபோட்டு
கருதிடவெற்றிலேபாக்குங் கனிந்திடுவோர்க்குமூவர்
வருகிடஞாயமெய்யின் வழியிதுவாகுந்தானே

விருத்தம்

மனுமொழியிதுவாமென்று மதத்துடன்பேசுவோர்க்கு
இனிதல்லவீண்தானென்று இயம்பியபகஞ்ஞர்தன்னே
குனிதவள்துர்கைசென்று கொன்றவள்நரகம்பூத்தி
கனிதுடன்துர்கைவாரி கடற்றீர்த்தமாடுவாளே

வேறு

எறும்புகடையானேமுதல் எண்பத்திநான்குயிர்கள்
எழுகடல்பதினுலுபுவிகளும் இரதிமதிசூரியர்கள்
பருதிபாலாழியும் மிசவாயுமுதலாய்

தெறும்புமாமலைமாமரச் சோலையுஞ்சேடனும்
தலைமூடனும்அறியவே தென்கீழத்தேவரும்
மிங்குள்ளமூவரும் தேசதெய்வேந்திரன்அறிய
வாசமுனிவோர்களும் வேதசன்னியாசியும்
மறையாறுசாஸ்திரம்அறிய வேமண்டலம்அளந்தகை
கொண்டெழுதுவாசகம் மண்டலர்எவருமேஅறியவே
வறும்பகல் தொள்ளாயிரத்தொண்ணூறெட்டாண்டினில்
வளர்சாம்பவமூர்த்தியும் மகாபரசுராமரும்ஸ்ரீராமசேயரும்
பதியேறும்மூர்த்தியும் வண்மைபார்த்திந்தகலியுகத்தில்
படுரநீசக்கலியினுல் வரும்வண்மையைபகர்ந்து
திருவாசகம்எழுதி பலநூல்அறிந்தவர்எவர்அவர்களும்
பக்தியுடனெக்காலமும் பணிந்துதிருவாசகத்தைமுத்தியணை
தோர்க்குமிகுபலனுண்டாம் பகரக்கேழுநத்தியுடன்
பூலோககலியுகாதேசத்தில் நடக்கும்முறைதானும்கேளீர்

வேறு

நல்லவீரபுரந்தர தற்மராசாவங்கிசத்திலே
நாடுமொருமதலைபிறந்து வந்தவுடன்நல்லஅருணசைலத்திலே
வாலிபப்பிள்ளையாயிருக்கிறுர் அந்தபூலோககலியுகத்திலே
ஆசாரமாய்இருக்கிறபேர்களும் அழுக்கானபுத்தியாய்
இருக்கிறபேர்களும் அவரவர்ஆங்கார்ரமாகியே
அழிந்துபோவார்கள் அதின்மேல்பதினெட்டு
துர்க்கையம்மாள்பிறந்து அந்தகலியுகபஞ்சமிர்த
ராஜ்ஜியத்திலேவருகிறுர்கள் வந்தஉடனேமூன்று
நாள்இருள்மூடியாணைத் துதிக்கைபோல்மழைபெய்யும்
மதிலேசிலதுர்ச்சனர்களெல்லாம் மாண்டுபோவார்கள்
அதின்மேல்பக்தியாய் இருக்கிறபேர்களுக்கும்
பிள்ளையில்லாம லிருக்கிறபேர்களுக்கும்
கண்ணில்லாம லிருக்கிறபேர்களுக்கும்
தனமில்லம லிருக்கிறபேர்களுக்கும்
பராபரமூர்த்தியும் சாம்பசிவமூர்த்தியும்ஸ்ரீராமசேயரும்
தீட்சையாகிதிருமனதிரங்கி பக்திகாரணங்களை
சோதித்துபகிர்ந்து அவரவர்கேட்டவரங்களைக்கொடுப்பார்கள்
இன்னும்சிறிதுநாளையிலே சிலபேர்கள்தெய்வீகமாய்ப்
முன்னுக்குமழைதட்டும் [போவார்கள்
உலகில்பலபலவஸ்து பலிக்குமெனப்பகுத்தார்
சிலநீசர்மிககறுப்பை நினைவில்லாததொட்டு
மிகப்பாசமடைந்து அலைந்துஅமிழ்ந்துபோவார்கள்
வாலிசுக்ரீபனும் பண்டாரமாகிப்போவார்கள்-வீமனும்
வாச்சி, கொழு, கலப்பை எல்லாம்நாசமாகிப்போய்விடும்
முன்னுலேதுலுக்கர்தன்னை நாசம்பண்ணுகிறதற்காகவே
துர்க்கையம்மாளை பிறவிசெய்து அனுப்பியிருக்கிறேம்
பிராமணர்நன்றுக சுகத்துடன்வாழ்வார்கள் [புகிறேம்
புவியில்முகத்துலிங்கம் இல்லாதபேர்க்குபிரமதேவரை அனுப்

பிரம்மதேவர்புவிமீதில்வந்து பத்திகாரணங்களைசோதித்து
பொல்லாதபேரைதெரிந்துபிடித்துபுதுக்ராமதேசத்தில்வாழும்
தேவதைக்குபூசைபண்ணிபோடுவார் எனப்புகட்டினர்
காவேரிஆற்றுக்குள்ளே மூன்றுபொதிமங்கிலியம்
கவிழ்ந்துஅடையவேணுமென்றும் காசினியில்ஒரு
ஏழுபெண்பிள்ளைகள் ஒருஆண்பிள்ளையை
அடர்ந்துபிடிப்பார்களென்றும் அறுத்தமங்கிலியத்தை
மிகுத்துகெட்டுவார்கள்என்றும் இன்னுஞ்சிறிது
நாளையிலேகேள்வி கேளாமலிருக்கிறபேர்களுக்கும்
துர்ச்சனராயிருக்கிற பேர்களுக்கும்
வர்த்தகனுயிருக்கிறபேர்களுக்கும் தம்மில்ஒருவருக்கொருவர்
சண்டைபோட்டு மாண்டுபோவார்களென்றும்
போனபேர்கள்போக இருக்கிறபேர்கள்
புண்ணியபுருசரை தெரிசனம்பண்ணிக்கொண்டு
சர்வபாக்கியத்திலே அடைவார்களென்றும்
மூன்றுலோகத்துக்கு ஒருவால்வெள்ளிஉண்டாக்கி
நெருப்புப்போட்டுக்கொண்டு வருகிறோம்
அதனுல்மானிடர்களெல்லாம் முறந்துஉட்கொள்ளை
பிறக்கொள்ளையடிப்பார்களென்றும் நமக்குநன்ருய்தெரியும்
நான் அதற்குமேல்பூலோககலியுகபஞ்சமுர்தரரச்சியத்திலே
பண்டாரவேசமாய்வருகிறோம்
நாம்வருகிறபோது மண்ணெல்லாம்கிடுகிடென்ருடும்
மலையும்வானமும் முழங்கித்திடுக்கிடும்
அப்போததிலே அநேகதுர்ச்சனர்களெல்லாம்
மாண்டுபோவார்கள் போனபேர்கள்போக
இருக்கிறபேர்கள் புண்ணியபுருஷராயிருப்பார்கள்
மந்திரதந்திரவைத்தியங்களெல்லாம் மறைந்துபோய்விடும்
வாதைபேய்களெல்லாம் வடகைலாசத்திலேபோய்
சட்டுத்தீர்ந்துபோவார்கள் ஏழுசமுத்திரத்திலே
மூன்றுசமுத்திரம் நீருள்வாங்கிப்போய்விடும்-
ஒருசேர்வைவிபூதி ஆறுசக்கரத்துக்குவிற்கவும்
ஒருலிங்கம் மூன்றுவராகனுக்குவிற்கவும்
ஒருகளஞ்சிஜலமெடுக்கவும் ரண்டுநாழிகைவழிக்கு
ஒருதண்ணீர்பந்தலும் மூன்றுநாழிகைவழிக்குஒரு
தர்மசாலைமடமுந் நன்ருய்முகியும்
தர்மம்கொடுக்கிற பேர்கள்உண்டு
தர்மம்வாங்குகிறபேர்கள் இல்லையென்று
சொல்லுகிறவெயிலாள் மடக்கொடியாள்
வயிற்றிலேநாடுமொரு மதலைபிறந்து
பத்துவருடமாச்சுது நாங்களும்மகாஅருணசலத்திலே
நாங்களும்வாலிபப் பிள்ளையாய் இருக்கிறோம்
அந்தவாலிபப்பிள்ளை என்னசொல்லுகிருர்என்ருல்
வீரபுரந்தரதர்மராஜாவழியிலே விகிநாராயணர்
இங்கேவந்து மூன்றுமாதத்திற்குதபசுபண்ணி

ரண்டுமாதத்திற்கு மேல்வருகிருர்
வந்தவுடனே அன்னியோன்னியகலகமாகும்
அந்தகலகத்திலே ஒருவர்க்கொருவர்
அசத்தியமாய்போவார்கள் போனவர்கள்போக
குருக்கிறபேர்கள் புண்ணியபுருஷராயிருப்பார்கள்
அவர்களுக்குவேண்டிய பாக்கியத்தைக்கொடுப்பேன்——998-ல்

விருத்தம்

பாக்கியம்கொடுப்போம்நாம் பலனுடன்வாழுவோருக்கு
நோக்கியகருணையுண்டாம் நோவில்லாதிருந்துவாழ்வார்
தாக்கியவாசகத்தின் தன்மையைநம்புவோருக்கு
வாக்கியவைகுண்டவீடு வந்தவர்வாழ்வார்தானே

விருத்தம்

தினமொருநேரமெந்தன் திருமொழியதனைக்கேட்டால்
பனிவெள்ளம்போலேபாவம் பறந்திடும்நிசமேசொன்னேம்
கனிமொழிசோதிவாக்கும் கையெழுத்தாதிநோக்கும்
துணிவுடன்கேட்டோர்ருற்ருர் துலைத்தனர்பிறவிதானே

விருத்தம்

வாசித்தோர்கேட்டோர்உற்ருர் மனதினில்உணர்ந்துகற்ருர்
ஆசித்தன்பதமேகண்டு அவ்வழிமுறையேநின்ருேர்
கோசித்தன்பதமேகண்டு கோமலைப்புவியின்வாழ்வும்
தேசத்தின்செல்லவத்தோடும் சிறப்புடனிருந்துவாழ்வார்

விருத்தம்

திருமொழிவாசகந்தன்னை தேசத்தில்வருமுன்னுக
வருவதுதிடனுமென்று வழுத்தினேம்தொளாய்ரத்
தொண்ணூற்றெட்டில்
ஒருதிருக்கூட்டமாக ஓராயிரத்தெட்டாமாண்டில்
வருகெனவந்துநாங்கள் அம்மானையில்வருத்தினேமே

விருத்தம்

வருத்தினேவம்மானைதன்னில் மானமாய்புதியதாக்கி
கருத்தினுள்ளகமேகொண்டு கவனித்தோர்அவர்க்கேதக்கும்
உருத்தில்லாக்கேள்போரெல்லாம் ஓருரைவெளியேகாணுர்
சிரித்துரைகேட்போரெல்லாம் சிவபொருள்வெளியேகாண்பார்

**விருத்தம்**

உலகில்மனுக்கள் தமிழாலே உவமையுரைத்துவிட்டார்போல்
கலக்கமுடனேஎன்மொழியைக் கண்டுபழித்துநகைத்தோரை
அலகைதுளைத்துநரகதிலே ஆணியறைந்துஅவனிதனில்
குலயக்குலைத்துதீநரகமதில் கொண்டேபோடச்சொல்வேனே

**விருத்தம்**

எந்தன்மொழியுமென்னெழுத்தும் ஏடாய்ச்சேர்த்துஇவ்வுலகில்
சிந்தைமகிழ்ந்தஅன்பருக்கு தெரியத்திறமாய்எழுதிவைத்தேன்
எந்தபேருமென்திருமொழியை எடுத்துவாசித்துரைத்தோரும்
சந்தமுடனேவாழ்ந்துமிக தர்மபதியும்காண்பாரே

**விருத்தம்**

காண்பார்தர்மக்கண்காட்சை கண்டேமரணமில்லாமல்
காண்பாரென்னுங்களிகூர்ந்து கண்ணேன்பதத்தைக்கண்ணடி
காண்பார்நீதக்கண்ணுலே கருணகரராய்கவ்வையற்று
காண்பாரென்றும்கைலாசம் கண்டேநன்ருய்வாழ்வாரே

**விருத்தம்**

இந்தமொழியைதூஷணித்த இடும்பர்படும்பாடதைக்கேளு
கந்தஉலகுகலிபிடித்து கண்ணுமுருகிகால்உழன்று
குந்தக்குடலும்பிரம்பூர கொப்பிள்சிலந்தியுண்டாகி
எந்தவிடமுமலைந்தழிவார் என்னணை இதுதப்பாதே

**விருத்தம்**

தப்பாதெனவேசாபமிட்டோம் சத்தியபேரிலுண்மையதாய்
எப்பாரெல்லாமறிந்திடவே இந்தமொழியைஎழுதிவைத்தேன்
ஒப்பாரொருவர்எழுதார்கள் உலகில்மனுக்கள்தன்னுலே
அப்பானுதன்எழுதிவைத்த ஆகிலத்திரட்டம்மானையிதே

**விருத்தம்**

என்றேயிந்ததிருவாசகம் இயம்பசரசுபதிமாது
கன்றைமேய்த்தோன்எழுதிமிக கலியுகமதிலேவிட்டிடவே
நன்ருேர்மறையோன்இடமேகி நாட்டிலறியச்செய்யெனவே
அன்றேஅவனிதானறியவனுப்பி மகிழ்ந்துஅங்கியிருந்தாரென்றே

**நடை**

நாடறியயெம்பெருமான் நல்லதிருவாசமிட்டு
லாடமதிலிருந்து லாவுவாரீசரொடு
வாரமில்லைநமக்கு வஞ்சகங்கள் இல்லாமல்
சாரமுடனேதரணிதனில் வோதிவைத்தோம்
அகப்பேரெனவேயவனி சொல்வதில்லையினி
உகப்பாரந்தீர்க்க உரைப்பீர்காணீசுரரே
லக்ஷ்மியைமுன்னம் யிருத்திரேஞ்செந்தூர்கடலில்
பச்சணியுங்காளிதன்னை பாரச்சிறையில்வைத்தோம்
என்மகவாய்ப்பெறவே யிராச்சியத்திலோர்சடலம்
தன்மகவாயங்கேதான் பிறந்துநல்வயசு
இருபத்திநாலுயென்ருச்சே மாநிலத்தில்

கருவுற்றதோசங்கழிவதும் நாளின்ருச்சே
விட்டதிருவாசம் மேதினியோர்கொள்ளாமல்
கட்டங்கொடிதாய் காணுதேதொல்புவியில்
புத்திவரும்யென்றிருந்தோம் பிழையாதநீசனுக்கு
சற்றும்மனதில் தங்குமோநல்வசனம்
பார்த்திருந்தால்போராது பார்மீதில்மக்களுந்தான்
காத்திருந்துவாடுகிருர் கவ்வையுற்றுநல்மனுக்கள்
மனுவிடுக்கம்தீர்த்து வாய்த்தசொல்லொன்றதுக்குள்
தோனியேவைகுண்டர் சுத்தயுகம்மாழுதற்கு
நாள்உண்டோபோவதற்கு நல்வேதச்சொல்லுமுண்டோ
கோளுண்டோவெற்றியுண்டோ கூறினீர்வேதவுரை
அப்போதுஈசரகமகிழ்ந்து கொண்டாடி
முப்போதுஉள்ள முறைகேள்க்கவேணுமென்ருல்
ஆதிவியாகரரை அழைப்பித்துக்கேளுமென்ருர்
சோதியுரைக்கத் திருமாலகமகிழ்ந்து
அழைத்தார்வியாகரரை அதுகேட்டுமாமுனியும்
பிளையுற்ருர்போலெ பொடுபொடென ஓடிவந்து
தெண்டனிட்டுமூவரையும் சுவாமிவிண்ணப்பமென்று
கண்டிருந்தையா கரியமுனியைப்பார்த்து
முன்பிறந்ததுமகில முடிந்ததுவும்சொல்மிக
பின்பிறக்கபோவதும் பிசகாமல்சொல்லுமென்ருர்
அப்போவியாகராதி யருளாலே
செப்புகிறேமென்று தெண்டனிட்டுசொல்லுகிருர்

---

### வெண்பா

குருேணிமுதலாய் கூறுகெட்ட.நீசன்வரை
தரணியுகமாறும் சாற்றியேசத்தியுடன்
தர்மபுவிதோன்றுவதும் சாணுரைவைந்தர்வந்து
நன்மையுடன் நாடுவதும்நாட்டினர்

### நடை

குருேணியோடுநீசன் கோள்பிறவியேழ்பிறந்து
தரணியுகமாருேடு தன்ஞல்லொழிந்ததுவும்
செல்விவிரித்து சுத்தவியாகரரும்
நல்லநாராயண ரோடேநவில்வார்
கொற்றவருமாண்டு குறும்புமிகப்பெருத்து
உற்றநசுருணியுடன் வந்துடனேடி
மற்ருெருபத்தாண்டு வருவோம்வைகுண்டராஜர்
உற்ருெருவர்வந்து உலகாளவேணுமென்றும்
முன்னேபரந்தான் மொழிந்ததின்படியே
தர்மபுவியில்சுவாமி நீராகவென்றும்
துர்மக்கடன்கழித்தோர் சுகமாகவாழ்வாரென்றும்
ஆகமத்மைப்பார்த்தாதி வியாகரரும்
நாகத்தணைகிடந்தோன் நாட்டமதாயுரைத்தார்

## விருத்தம்

உரைத்திடவியாகர்தானும் முண்மையாய்மொழிந்ததெல்லாம்
கரைத்திடாகைலைமீது கல்லிலேஎழுதிவையும்
நரைத்திடாமுனிவன்சொல்லும் நாள்வழிதோறும்முற்ற
உரைத்திடமுனிக்குமேலும் முதவிகள்செய்யவென்ருர்

## நடை

என்றுசொல்லிவேத வியாகர்இசைந்ததெல்லாம்
அன்றுகைலையங்கிரியில் கரைக்கண்டர்நாட்டிவைத்தார்
மாமுனியையுமனுப்பி மாயத்திருமாலும்
தாமுனிந்தீசுரரை தளிவ்யுறத்தானணைத்து
கேதாரமிட்டுக் கிரிகோவில்வந்திருந்து
கோதாரமாயன் கூறுவார்சங்கமதில்
செந்தூர்க்கடலில் சென்றுபள்ளிகொண்டிருந்து
விந்துவழிசெய்து வித்தகனைஈன்றெடுத்து
தேசபரசோதனைக்கு தெக்ஷணத்திலெயனுப்பி
வாசமுடனிங்கே வருவோமென்வுரைத்தார்
அப்போதுஈசர்முதலான சங்கத்தோர்களெல்லாம்
இப்போதுநாங்கள் ஏகுவோமும்மோடே
என்றுரைக்கசங்கம் மெடுத்துரைப்பார்எம்பெருமாள்
ஒன்றுமறியாதே உற்றஉபதேசமதை
தேவன்றிதுமுதலாய் தெய்வகன்னிமார்முதலாய்
மூவர்முதலாய் உள்ளறியக்கூடாது
நடந்தாலறிவார் நடக்குமுன்னேயொருத்தர்
அடக்கமறியா தருவிஞ்சையீதல்லவோ
அந்தவகையானதினல் எல்லோரும்மென்கூட
வந்தால்சரியல்லவே வரவேண்டாமென்ருல்நோவீர்களே
என்றுரைக்கநாத னெல்லோரும்மேதுரைப்பார்
ஒன்றுமறியாதிடினும் மும்முடனேவாருேமென்ருர்
உடனேதிருமால் உற்றலெக்ஷிமினிவால்
நடைமேல்நடையெனவே நல்லசெந்தூர்தானேக்கி
உன்னிசிவமும் உற்றசத்திநல்மாதும்
வன்னத்தேவர்முதலாய் மாமுனிக்கின்னரரும்
சங்கமுமெங்குள்ளோரும் சகலகலைவாணர்களும்
மங்களக்காரர்களும் மாதுசத்தியைசூழ்ந்து
மறைவீசுமாதர்களும் மாதுரம்பைமார்களும்
திரைதிரையாய்கன்னியர்கள் சேவித்துஏத்திவர
எழுவாய்ச்சியமும் மிமலோகற்றேற்றிவர
தொழுவார்சிலபேர் தொழுதோமெனவாடி
கடலில்லோர்பிள்ளைக் கரியமாலீன்றெடுத்து
நடமாடும்தெக்ஷணத்தில் நகர்சோதனைக்கனுப்பி
கலியையழித்துக் கனப்பயங்கள்தானறுத்து
சலிவிலாதர்மபதி சக்திமக்களையாள
வாருரய்யாநாதன் வைகுண்டமும்மூர்த்தி

போனர்காணண்பெறேன பெரியதர்மபுவியை
என்றுசிலவாத்தியங்கள் இசைந்துஇசைந்தூதிவர
கன்றுதிரமேய்த்தோறும் கைலேங்கிரிகடந்தார்
கடந்துதிரிச்செந்தூர் கடல்காணவேணுமென்று
நடந்தாதிநாதன் நல்லீசர்சத்தியோடு
கூடிக்குணமாய் கொலுயாரபாரமும்மாய்
தேடித்திருவைச்சிணமாய் வழிநடந்தார்
நடக்கமறையோர் நால்திசையும்போற்றிநிர்க்க
கடற்கரையைநோக்கி கண்ணேன்வழிநடந்தார்
வழிநடந்துமாயவரும் வல்லபரமேசுரரும்
களிகூர்ந்துமாதுமையும் கந்தன்செந்தூர்க்கடலில்
அருகேயொருகாதம் அவர்வரக்கண்டாறுமுகன்
கருவிகுழறி கடற்கரையோன்ருன்கலங்கி
ஆறுமுகனும் அங்குள்ளத்தேவர்களும்
வீறுமயில்வாகனம் வெற்றிரதமேருமல்
என்னவிதமாமோ வென்றுமனம்பதறி
மன்னன்ஆறுமுகனும் மனமயங்கிதான்பதறி
வந்துமாமன்றனையும் மாதாபிதாவையும்
சந்துஷ்டியாகி தாழ்ந்துநமஸ்காரமிட்டு
இம்மூவரையும் யானெப்போகாண்பேனென்று
எம்முதலேநானடியேன் னெத்தனைநாள்காத்திருந்தேன்
காத்திருந்தநாளும் கரையெண்ணக்கூடாது
பார்த்திருந்தகண்ணின் பாவம்துலேந்ததென்று
என்றுவேல்முருகன் ஈசுரரையும்தழுவி
கன்றுதிரைமேய்த்த கண்ணரையும்தழுவி
மாதாபிதாவையும்தழுவி மனமகிழ்ந்துகொண்டாடி
சீரானதேவரையும் சிறப்பித்துக்கொண்டாடி
வாருங்கோவய்யாவென் மண்டபசிங்காசனத்தின்
பாருங்கோவய்யாயென் பதியின்அலங்காரம்
நீங்களிருக்க நிறைந்ததங்கமேடையுண்டு
தங்கள்கிரிபோலே தங்கமலேயிங்குஉண்டு
பாடப்படிக்க பாவாணரிங்குமுண்டு
ஆடக்கைகாட்ட வரம்பையர்கள்தானுமுண்டு
பாலேக்கநல்ல பாலுபழங்களுண்டு
மாலேக்கநல்ல மாதுகன்னிமார்களுண்டு
கண்டுகளித்திருக்க கனகநிதிகளுண்டு
உண்டுசொகித்திருக்க உற்றவகைதானுமுண்டு
பல்லாக்குமுண்டு பதிபோகிமாருமுண்டு
குல்லாக்களுண்டு குளிக்கத்தாம்பிரவரணியுமுண்டு
சதுரங்கமேடையுண்டு ஷண்முகவிலாசமுண்டு
பதிரங்கமான பாலாழியுண்டுமையா
மாதமொன்றுதனில் வருங்கோடிபொன்னதிகம்
போதவரும்காண் பொன்சவடிஆபரணம்
வருஷமொன்ருனதிலே மாலேவடமாயிரந்தான்

கருவலங்களின்னெதென்று காணுர்துகையதுதான்
காவடிகோடி காணிக்கைமுக்கோடி
பார்கோடிகூடி பலஜாதிஎண்கோடி
இப்படியேஎந்தனுக்கு இருக்குதுகாண்பாக்கியங்கள்
எப்படியும்நீங்க ளிங்கிருக்கவாருமென்ருர்
கேட்டுநாராயணரும் கீழ்ச்சுண்டசையாமல்
நாட்டமுடனுள்ளத் தடக்கிமறுத்தேதுரைப்பார்
நல்லதுவேமருகன் நலமாயிருப்பதுதான்
பொல்லாதுசெய்யாமல் புரிந்தாழ்வதேபோதும
என்றுசொல்லி அய்யா ஈசுரரோடீதுரைக்க
பண்டுவிட்டவாசகச்சொல் பத்திச்சோபூமியிலே
வல்லாண்மைக்காரருக்கு மதமிப்படியிருக்கும்
இல்லாதெளிமைகளுக் கிருக்குமதுமேல்தயவு
என்று இருபேரும் இயம்பிமனதடக்கி
நன்றெனவேகந்தனேடு நல்வார்த்தையும்பேசி
அந்தமுடனே அல்லோரும்தானடந்து
செந்தூரலேக்கரையில் சேர்ந்தனர்காணம்மானே

விருத்தம்

கடற்கரைதனிலே வந்துகரியமாலீசரோடு
மடக்கொடியுமையாளோடு மறைமுனிதேவரோடும்
குடக்கலேபொருந்தும்வேத கூர்முனிரிஷிகளோடும்
கடற்கரைதனிலேவந்து கண்டனர்க்கடலேதானே

விருத்தம்

வந்தவரெல்லர்பேரும் வட்டமிட்டதிலேநிற்க
சந்தனவாரியோரந் தன்னிலெநின்றுரண்டு
சுந்தரமுனிவர்வந்து சுவாமிதன்பதமேபூண்டு
எந்தன்பிரானேஎன்று இருவரும்வணங்கிசொல்வார்

நடை

ஆதியேஎங்க ளய்யாநாராயணரே
சோதியேஎங்கள்தவம் சுருக்கிட்டருள்வளர்ந்து
கண்டுகொண்டோமைய்யா கமலப்பொருளேநீர்
பண்டுமொழிந்தபடி பார்த்துவரந்தாருமைய்யா
என்றுமுனி இருபே ரிறஞ்சிதொழுதிடவே
மன்றுதனேயளந்தோர் மறுத்துரைப்பாரன்போரை
ஏதுகாண்மாமுனியே இங்குநின்றவாரேது
தாதுகரமணிந்த சன்ஞசிசொல்லுமென்ருர்
அப்போதுமாமுனிவர் ரவரேதுசொல்லலுற்ருர்
முப்போதுநாங்கள் மும்முதற்சொல்மாருமல்
மேலோகம்விட்டு மேகவர்ணஉன்செயலால்
பூலோகமீதிறங்கி பொங்குகடல்கண்டணுகி
சோதியுரைத்த சொல்லுரைத்துவாரியிடம்

நீதியாய்நில்லுமென்று நினைவாகச்சட்டமிட்டு
கைலையதுக்கேக கண்ணேக்கும்வேளையிலே
அகிலமதிலக்கலிய நவனைமிகக்கண்டேதான்
மேலோகமேற மேல்வழிகள்காணமல்
பூலோகமானதிலே போயிருந்தோங்கண்கவிழ்ந்து
அப்போதுவாயனே நீரங்குவந்தெங்களுடன்
இப்போதுபோய் நீங்களென்னுடையசெந்தூரில்
வாரிக்கரைதனிலே வாய்த்தவமாயிருந்து
சூரியப்பிறகாசச் சுத்தவைகுண்டராஜர்
இக்கடலில்பிறந் தெங்கள்தனைக்கூட்டி
பக்கமதில்வைத்து பதவிதரவேணுமென்றும்
நில்லுங்கோவென்று தவசிநினைவாகவென்றுசொல்லி
பல்லுயிரும்வளர்த்த பாக்கியவானேநீரும்
உரைத்தமொழியையாவுன் னுள்ளமறியாதோ
கரைக்கண்டர்மைத்துனரே கண்ணவெனத்தொழுதார்
அப்போதுநாருயணர் மகிழ்ந்துகொண்டாடி
செப்போடொத்தாப்போல் சிரித்துமனமகிழ்ந்து
நல்லதுகாண்பிள்ளாய் நாடுந்தவம்புரிந்தீர்
வல்லவர்தானீங்கள் வாருங்கோவென்றழைத்து
அருகிலேநில்லுமென்று அகமகிழ்ந்தார்என்போரே
குருவானஈசரோடு கூறுவார்பின்னலே
நம்முடையஈசுரரே நாம்வந்தகாரியங்கள்
எம்முதலேஇன்னதென்று இயம்புவீரீசுரரே
கட்டானஈசுரரும் காரியத்தைப்பாருமென்று
மட்டானவாரி கரையிலெவந்திருந்து
எல்லோரும்செந்தூர் இடமெல்லாம்கண்பார்த்து
வல்லோர்களெல்லாம் வந்திருந்தார்செந்தூரில்
அங்குசிலநாள் அமர்ந்திருக்கும்வேளைதனில்
சங்குவண்ணர்நேமித்த சடலத்தின்பெருமை
உரைக்கின்றேனன்ப ருள்ளம்மகிழ்ந்தவர்க்கு
தறையீரேளழந்த சுவாமிஉரைக்கலுற்ருர்
சீரானநல்ல தக்ஷணபூமியிலே
பாரானநல்ல பதித்தாமரையூரில்
தவசிக்குகந்த தாமரையூர்நல்பதியில்
சிவசிவாவளரும் தெக்ஷணபுரிநாடு
பாண்டவரில்விசையன் பாசுபதம்வேண்டுதற்கு
ஆண்டபரமேசுரரை யகம்வைத்துபோர்விசையன்
நின்றுதவம்முடித்து நெடியோனைமாதுமையும்
கண்டுபதம்வாங்கி கைகண்டதிவ்வூர்
அதியரசன்முன்னல் அதிகதவசிருந்து
பதியரசன்பாறு வதியைஈன்றெதுதான்
இவ்வூருதெக்ஷணந்தான் ஏற்றதாமரைவூரு
செவ்வூருநல்லசிறந்த மணவைப்பதிதான்
வானலோகம்வாழும் வாய்த்ததெய்வேய்திரனும்

தானவரைக்காணத் தவசியிருந்ததிவ்வூரு
பஞ்சவர்க்குமுன்ன பகவன்உதவிசெய்ய
அஞ்சல்செய்து நாதனமர்ந்திருந்தஇவ்வூரு
சாம்புசிவசான்ரோர் தழைத்திருந்ததிவ்வூரு
தாம்பிரவரணியாவி தளைத்திருந்ததிவ்வூர்
பாராசமுனிவன் பாரத்தவசிபண்ணி
விரமானவியாகரரை மிகயீன்றதிவ்வூரு
தவம்புரியவென்று தானிணைத்தபேர்களெல்லாம்
பாவமற்றுதாமரையூர் பதியாகுமென்றுரைப்பார்
தவசிக்குகந்த சந்ததமுள்ளபேரூரு
பசுசுக்குகந்தபால தீயமாமறையூர்
அவ்வூருதன்னி லாதியருளாலே
செவ்வுமகாவிட்ணுவுரு செய்தசடமேபிறந்து
பிறந்துவளர்ந்து பெருமைபுகழ்காட்டி
மறந்திடாமுன்னமைத்த மாதையுறவாடி
பூலோகமனுக்கள் பிள்ளைபோலெவளர்ந்து
மாலேக்கபூசை மணையில்மறவாமல்
விஷ்ணுவைப்போற்றி விளங்கவோர்பீடமிட்டு
கட்டுத்தீர்க்காக கண்வளர்ந்தார்கலியில்
ஒருவருக்கோர்பொல்லாது உலகில்மிகசெய்யாமல்
குருவைகுருகண்டு கொக்கரித்தேவளர்ந்தார்
எதிர்த்தோர்பெலமடக்கி எல்லாருக்கும்நல்லவராய்
உருத்துக்கதியவராய் உலகில்மிகவளர்ந்தார்
எச்சாதியாருக்கும் நல்லவர்எனவே
அச்சாதிஎல்லா மகமகிழ்ந்துதான்வாழ்ந்தார்
முன்னுதித்துடன்பிறந்தோர் ஒருவர்மூப்பாடாமல்
பின்னுதித்துபெரியோராய் பெருமையுடன்வளர்ந்தார்
தாய்தகப்பன்மாமன் சந்தமிந்தத்தம்பியென்று
ஞாயவானென்றும் நாடிமிகவளர்ந்தார்
ஊருக்குந்தலைவன் உடையவனுக்குந்தலைவன்
ஆருக்கும்தலைவனென்று அன்னைபிதாவளர்த்தார்
ஞாயம்மிருப்பதினால் நாடாளுவானென்றுசொல்லி
தாய்தமர்களெல்லாம் தாங்கிமிகவளர்த்தார்
சொல்லுக்கும்வல்லவனாயி சூராதிசூரன்இவன்
மல்லுக்குமல்லவனாய் உபாயத்திலும்பெரியோன்
மங்கையருக்குஏற்றவனாய் மாமோககாமீகன்
எங்கும்பேர்கேள்க்கவைப்பான் இவன்கீர்த்திநல்வழமை
பல்லாக்கும்ஏறிடுவான் பார்முழுதும்ஆண்டிடுவான்
எல்லோருக்கும்வல்லவனாய் இவன்சமைவான்என்றுசெல்லி
எவ்வோரும்கொண்டாடி இன்பமுடனேவளர்ந்தார்
அவ்வோரும்கொண்டாடி யவர்வளரும்நாளையிலே
பத்துவயது பண்போடிருபதிலே
மற்றுநிகரொவ்வா மன்னவர்போலவர்வளர்ந்தார்
எல்லாத்தொழிலும் மிதமிதமாய்க்கற்றுமிக

பொல்லாதாரோடு பெரும்பகைபோலேசீறி
நல்லாரையுன்னில் நாளும்மறவாமல்
கல்லாரையெல்லாம் கண்டுகழித்தேயிருந்தார்
ஈவதற்கும்தர்மனென எளியோரைக்கண்பார்த்து
ஆய்வதற்கும்நல்லா னென்றேமிகவளர்ந்தார்
பதினேழுவயதில் பண்டமைத்தபெண்ணோடு
விதியானபடியால் மெல்லியர்மேல்இச்சைகொண்டு
கூடிக்குணமாய் கொண்டவனையுமகற்றி
தேடிஇவரோடு செய்யரசமாயிருந்தாள்
வானுபரமேசுரனார் மாயவனாராணையிட்டு
நானும்நீயுமாக நலமாகவாழவென்று
ஆணையிட்டுஇருபேரு மகமகிழ்ந்தன்றுமுதல்
நாணமில்லாமல் நாயகம்போல்வளர்ந்தார்
மங்கைகாணமல் மறுவூருதங்கறியார்
அங்கவனைக் காணதயலூருதங்கறியான்
இந்தப்படியா இவர்வளரும்நாளையிலே
எந்தநருள்கண்டிவர்க் கிவளையமைத்ததென்பார்
முன்னாளமைத்த ஊழிவிதிஎனவே
சொன்னாரவரும் சுவாமியருளாலே
அன்றைக்குஅமைத்தது போயவளையவர்க்கல்லாது
அன்லறத்தோச மகலமத்தோனப்போதுதான்
என்றுனருள்எல்லாம் மியம்பிமிகவுரைத்தார்
மன்றீரேழுமறிய மங்கையோடுவாழ்க்கையிலே
உற்றவயது ஓரிருபத்திரண்டதிலே
சத்திராதியோர் நீசன்றானேபிழையேக்க
ஏக்கவேநீசன் இடறுசெய்தஏதுவினால்
ஆக்கம்அடைக்கி அமர்ந்துபிணியெனவே
எல்லோரும்அறிய இவரிருந்தார்அம்மானை
எல்லோருமில்லா விசையடக்கிதானுமிருந்தார்
நொம்பலங்களென்று நொந்துமிகவுளன்று
தம்பிலங்களடககித் தருணம்புலம்பலுற்றார்
கருவுற்றதோஷம் கழிந்துசிவஞான
திருவுளவாச சிவமயமாய்பெறவே
மனதில்மிகஉற்று மாயவரைநெஞ்சில்வைத்து
தினமும்வருந்தி தீனமெனவே இருந்தார்
அப்படியேஓர்வருஷம் மங்கமதில்ஊறலெல்லாம்
முப்படியேஞாயமதால் உலகில்கழியவிட்டு
இகாபராதஞ்சமென் றிருக்குமந்தநாளையிலே
மகாபரனார்செயலால் மாதாவின்கண்ணதிலே
சொற்பனம்போல்சுவாமிவந்து சொன்னாரேஉத்தரவு
உற்பனம்போல் கண்டுற்றவர்மாதாவும்
மகனேஇன்றுராவில் மனஞ்சடைத்துநான்வாடி
அகம்வைத்தஎண்ணம் அறிந்துசிவநாராயணரும்
வந்துசொன்னஉத்தரவை மகனேநீகேளுமென்று
விந்துவழிக்கிளையோர் மிகுவாககேட்டிருக்க

சொல்லுகிருர்அந்த சொற்பனத்தையன்போரே
நல்லுறவாய்கேளுமென்று நவிலுவாரென்போரே
ஆயிரத்தெட்டாண்டிது நாளிவ்வருஷம்
மாசிஎன்ற மாதமிதுவாய்த்ததியதிபத்தொன்பது
இம்மாதம்இத்தெய்தி ஏற்றதிருச்செந்தூரில்
நம்மாணைக்கொடியேற்றி நல்லதிருநாள்நடக்கு
அங்குன்மகனை அழைத்வருவாயானல்
எங்குள்ளோருமறிய இப்பிணியும்தீர்த்து
நல்லபேறும்கொடுப்போம் நம்மாணைதப்பாதென
சொல்லவேகண்டேன் சுவாமிகருமேனிநிறம்
நான்கண்டசொற்பனந்தான் நழுவிமிகப்போகாது
தேன்கண்டாப்போல சிரித்துமனமகிழ்ந்து
இந்தக்கனவதர்க் கிங்கிருந்தங்கேபோய்
வந்நல்லாதேபிணியும் மாறவகையில்லையல்லோ
என்றுரைக்கஎல்லோரும் இன்பமுடனேமகிழ்ந்து
நன்றுநன்றுபோவதற்கு நடைக்கோப்புகூட்டுமென்ருர்
வேண்டும்பலகாரம் விதவிதமாய்சேகரித்து
ஆண்டகருப்புக்கட்டி யானதெல்லாம்சேகரித்து
தானதர்மம்செய்ய தனங்கள்மிகயெடுத்து
தீனமானவரை திடமாககூட்டிவந்து
ஆனைசேகரித்துவகல நல்லத்தொட்டில்வைத்து
நாளைக்கடத்தாமல் நடக்கவழிக்கொண்டனராம்
மாதாவும்மகனும் வாய்த்தனருளுடனே
நீதாவின்பாதாரம் நெஞ்சில்மிகநிறுத்தி
இருந்தபதியும்விட்டு ஏற்றஒருகாதம்விட்டு
வந்தனருளோடே வழிகொண்டார்அன்போடே
கூடம்குளமும்விட்டு குளிந்தசுக்குப்பாரும்விட்டு
தோட்டவழியாறுகண்டு சூருவழிக்காடுமிட்டு
நடந்தோர்வனத்தில் நல்லதண்ணீர்ராவிகண்டு
கொடர்ந்தபலகாரங்கொண்டு தண்ணீர்குடித்து
தகையாறிக்கொண்டு தானிருக்கும்வேளையிலே
வகையானநல்ல வாய்த்தமகர்விட்டிணுவும்
பிறவிக்குஏற்ற பிள்ளைவருகுதென்று
திறவிமுதலோன் றெழிந்துமிகக்கொண்டாடி
எதிரேயாள்விட்டிங் களைக்கவேணுமென்று
அருகேதானின்ற ஆதிமுனியான
நல்லமுனிவரையும் நாராயணர்அழைத்து
வாருங்கோபிள்ளாய் வாய்த்தமுனிமாரே
நேருங்களோடே நிகழ்த்துகிறேனேர்வசனம்
நானேமித்த நல்லஉயிரானதிங்கே
தானேவருகுதுகாண் எந்தன்தவத்தாலே
எதிரேபோய்நீங்க ளிங்கழைத்துவாருமென்ருர்
பதியேறும்பெருமாள் பகர்ந்துமுனியயச்சார்
அயச்சமுனிமார் ரவ்வாயுபோல்விரைவாய்

பயபச்சமுடனே பகர்ந்தயிருமாமுனியும்
எந்தவழியாய்இவர்கள் வருவார்எனவே
அந்தந்தவழிக்குயாலோட்டம் பார்த்துவந்தார்
வந்துஒருவழியில்வரவே கண்டமாமுனிவர்
சந்துட்டியாகிதாழ்ந்து நமஸ்காரமிட்டு
கண்டு குவித்து கனகமுனிமார்கள்
வண்டுசுத்துமார்பனுட வாய்த்தகரம்ரண்டதையும்
முன்னியிருபேர்தோழில் உயர்த்திமிகவேஏந்தி
துணிவுடனேமாமுனிவர் தோழின்மேலேயிருத்தி
பதியிலிருந்தார்போல் பார்மன்னனையிருத்தி
குதிரைநடைகொண்டவர்போல் கொண்டாடிமாமுனிவர்
கூடநடப்போர்கள் குதித்தோடிவர
வாடியிடைந்து மனுநருக்குள்தானேடை
நல்லபிறவியைத்தான் நம்முனிவர்கொண்டாடி
வல்லசெந்தூர்பதியில் வந்தனர்காணன்போரே
வந்தமுனிமார்கள் வாழ்த்தியந்தநல்லுயிரை
சந்தனவீதியிலே சடலம்தனைநிறுத்தி
மாமுனிவர்தானும் மாயோனைவந்துகண்டு
சுவாமிநீர்கொண்டுவர தானுரைத்தநற்சடலம்
அடியாரெதிரேபோய் அழைத்துவந்தோமய்யாவே
திடீரெனவேநாதன் சொன்னமுனியோடுரைப்பார்
கொண்டுவந்தோமென்றீரே கூர்மையுள்ளநற்சடலம்
பண்டுமுறையெல்லாம் பகருவீர்மாமுனியே
அப்போதுமாமுனிவ ராதியருளாலே
செப்புகிறோமென்று செப்பலுற்ருர்அன்போரே
நல்லசடலமிது நாடுமுற்காலமதில்
வெல்லமர்கோன்வாழும் மேலோகமிவ்வுயிர்க்கு
பேர்சம்பூரணந்தான் பெரியதிறவான்காண்
ஆறெவ்வாரெவர்க்காதி கிருபையுள்ளோன்
அப்படியேதெய்வ லோகமதிலேயிருக்க
இப்படியேயிவர்க் கிமலோகமானதிலே
இருக்கின்றபெண்ணதி லிசைந்தபரதேவதையென்
றொருகுழலிதன்மே லுள்ளாசையாயிவரும்
அவரும்இவள்பேரில் யாசையாய்தானிருந்து
இவளுமிவரு மிருந்துமிகவாழ்கையிலே
தேவருக்கும்தெய்வ லோகமேழிலுள்ளவர்க்கும்
யாவருக்குமோர்பிறவி யாகுகின்றநாளிதுவாம்
இவரையும்வருத்தி என்னஉன்செய்தியென்ருர்
அவளுடைய ஆசையின லல்லவென்றுதான்மறுத்து
இவளையும்மென்னேடியில் பாய்பிறவிசெய்தால்
குவளையணிமாயவரே குணமெனக்காகுமென்ருர்
அப்போதுநாதர் அந்தத்தேவன்றனக்கு
செம்மமுள்ளபுத்தி செப்பிமிகபார்த்தனரே
அப்போதுஇவர்கேளாம லதுதானதுதானென்ருர்

மாயனுக்குகோபம் மனதில்மிகவாகி
ஆயநிப்போதிவர்க் கதிகபலனுரைத்தார்
நல்லதுநீகேட்ட நியாயமிட்டேற்றமதாய்
வல்லவனைநினைந்து மாதுவும்நீதானும்
எங்களிருபேர்க்கின்னம் பிறவியிலே
மங்கையும்புருடனென மறவாமலாவதற்கு
வரந்தாருமென்று மனதில்நினைவேற்றி
பரந்தாண்டிகண்டுப் பலன்பெறுங்கோவென்றுசொல்லி
தவசிநிற்கவிட்டீர்காண் சங்கரரேநீர்கேளும்
சிவசிவாவென்றுதவம் செய்தவர்கள்நிற்கையிலே
தவம்பார்க்கஈசுரரும் சன்னியாசிநீதனுமாய்
அவடமெழுந்தருளி அங்கேகும்வேளையிலே
தெய்வேந்திரனும் திருமுடியும்சூட்டி
மயேந்திரனுடைய மலர்பாதம்காணவென்று
அவனும்மிகவந்தா னரனெதிரேயய்யாவே
தவத்துக்கிடறுதான் வாறதுதோற்றுமல்
தேவன்மதிமயங்கி திருமுடிமேல்இச்சைகொண்டு
பார்வையுடனுரைத்து பல்கடித்துதேவனுமே
அதையறிந்துஈசர் அன்றும்முடனுரைத்தார்
இதையறிந்துநீரும் மேற்றதேவனோடுரைத்தீர்
வாய்த்ததவம்குழறி வாய்க்காமனின்றதினல்
ஏற்றகீழுலகில் லென்மகவுசான்றோரில்
நல்லதர்மகுலத்தில் நன்றாகநீபிறந்து
தொல்லையெல்லாம்தீர்த்து சூலினமுக்கறுத்து
வளரும்பருவமதில் வந்துன்னைநானெடுத்து
இளவரசாயுன்னை ஈன்றெடுத்தேவளர்த்து
ஆளுமரசு வழகாகவுந்தனுக்கு
நானும்மிகத்தருவேன் நம்மாணைதப்பாதென
உறுதிசொல்லிதேவனையும் முற்றசான்றோர்குலத்தில்
பொறுதியுள்ளதர்ம பிதிரில்பிறவிசெய்தீர்
மாதைபிறவிசெய்தீர் மக்கள்சான்றோர்குலத்தில்
சூதையமக்குலத்தில் தோகையரைத்தோன்றவைத்தீர்
அப்படியேமின்ன மைய்யாவேஇவ்வகைக்கு
இப்புடியேபிறந்த திச்சடலம்என்றுரைத்தார்

விருத்தம்

என்றிந்தவிவரமெல்லாம் மியல்முனிவோர்கள்சொல்ல
நன்றிந்தவிபரமென்றே நாராயணர்தயவுகூர்ந்து
சென்றிந்தச்சடலம் தன்னைதிருச்செந்தூர்பதியிலங்கும்
கொண்டந்ததெருவும் காட்டிகுளிர்ப்பாட்டிவாருமென்றார்

விருத்தம்

மேலுள்ளசடலம் தன்னைமிகுமுனிமாரேநீங்கள்
நாலுள்ளதெருக்கடோறும் நடத்தியேதறையிலூட்டி
பாலுள்ளபதத்தில்கொண்டு பழவினைத்தீரக்காட்டி
மாலுள்ளம்புகுதகாட்டி வாருங்கோசிணமேயென்றார்

### விருத்தம்

அப்படிமுனிமாரேகி அங்கங்கேகொண்டுகாட்டி
முப்படிதோஷம்போக முனைபதமதிலேமூழ்கி
இப்படிஇவரைக்கொண்டு இவர்வருமுன்னேயாக
செப்படிவித்தைநாதன் செகலினுள்ளகமேசென்றார்

### விருத்தம்

வானவர்தேவர்போற்ற மறைமுனிமார்கள்பாட
தானவர்ரிஷிகளோடு தமிழ்மறைவாணர்போற்ற
ஞானமாம்வீணைதம்பூர் நால்திசையதிரஓசை
ஓநமோவென்று தேவர்ரோலமிட்டாடினரே

### விருத்தம்

மத்தளத்தொனிகள்வீணை மடமடன்றேத்தவானோர்
தித்திதெய்தித்தியெனத் தேவியர்பாடியாட
தத்தியாய்சங்கமெல்லாம் சதுர்மறைகூறிநிற்க
முத்திசேர்மாயன்றானும் மூழ்கினர்கடலினுள்ளே

### விருத்தம்

கடலினுள்ளகமேகண்டு கனபதிமேடைக்கண்டு
மடவிபொன்மகரந்தன்னை வாகுடன்பூசிதேய்த்து
நிடபதிமாயன்றானும் நிறைந்தபொன்னிறம்போல்வன்னி
வடவனல்போலவீசி வந்தனர்மகரமுன்னே

### விருத்தம்

வந்தனர்மகரமுன்னே மாதுபொன்மகரங்கண்டு
செந்தெழலெரியோவென்று சொல்லிடபதறிநொந்து
எந்தனின்மானவானோ யெரிவடவாசமேர்போ
கந்தனின்மாயமாமோ என்றவள்கலங்கினாளே

### விருத்தம்

கலங்கியேமகரந்தானும் கருத்தளிந்தேதோசொல்லும்
இலங்கியேவருவோமென்று வென்மன்னர்தானேயாரோ
சலங்கியேயதிரப்பூமி சதிரெனக்கதிருபாய
துலங்கியசுடரைப்பார்த்து செல்லுவாமகரந்தானே

### நடை

சுடரேசுடரே துலங்குமதிசுடரே
கடலேகடலே கடலுள்கனலாரே
அக்கினிக்கேயபயம் மனலேயுனக்கபயம்
முக்கியமாய்காந்தல் முனையேயுனக்கபயம்
தீயேயுனக்கபயம் திரிபுரமேயபயம்
நீசுட்டஸ்தலங்கள் எனக்குரைக்ககூடாது

மர்சற்றஈசன் சங்கரனேடுள்ளியிருந்து
காண்டாவனமெரித்தாய் கடுயவில்லிகையிருந்து
ஆண்டவிலங்கையெரித்தாய் யனுமன்கைலேயிருந்து
முப்புரத்தைசுட்டெரித்தாய் முதன்மைகையிலேயிருந்து
ஒப்புரவாய்நீயெரித்த உவமைசொல்லக்கூடாது
அனலேஉனக்கபயம் மாதிஉனக்கபயம்
கனலேயமருமையா காந்தல்தன்னைமாற்றுமையா
மன்னரரிநாரணர்க்காய் மாற்றுவீரக்கினியே
இன்னியல்வையெல்லாமென் மன்னரிங்குவந்தால்
சொல்லியுனக்குசொர்க்கம் வேண்டித்தருவேன்
வில்லிக்கும்வல்லவனே விலகியமருமைய்யா
என்னையென்மன்னவர்தா நிந்தக்கடலதிலே
பொன்னெனயநல் மகரமாகவேபோகவிட்டார்
வருவோமென்றநாள் வந்ததுகாண்அக்கினியே
தருவேனுனக்குவரம் தாட்டீகன்வந்தவுடன்
அமர்ந்துநீபோனல் அதிகபலனுண்டாகும்
சுமந்தபற்பதத்தின் சுகம்பெற்றுநீவாழ்வாய்
என்றுமகரமாது யெரியைமிகக்கண்டுளறி
நின்றுமயங்குவதை நெடியதிருமாலறிந்து
அனலேமிகயுள்ளடக்கிய ஆதியுருக்காட்டி
மனைவியைநீவாவெனவே மாயன்அருகழைத்தார்
உடனேபொன்மாது உள்ளம்மிகநாணி
தடதடனவந்து சுவாமியடியில்வீழ்ந்து
எந்தனபெருமானே யிப்படித்தானின்றதுவோ
சிந்தைமயக்குதற்கோ தீப்போலேவந்ததுதான்
என்றுமிகப்பொன்மகர யிளமாதுதோஸ்தரித்து
மன்றுதனையழந்தோர்வா நீயெனவழைத்து
அருகில்மிகநிறுத்திய்ங் குள்ளதேர்பதியும்
கருதியிருபேரும் கண்கொண்டுருபார்த்து
வச்சிரமேடை மரகதபொன்மேடை
எச்சரிக்கைமேடை யெல்லாமிகப்பார்த்து
மாதேயுனக்கு வளர்பிறவிபத்தெனவும்
சீதேயுனக்கு சிறந்தபேர்பத்திலே
பலன்பேறு பேருயிப்பார்மகிழவோர்பாலன்
சிலம்பேறுடையவனைய் சிவனுக்குகந்தவனைய்
ஏகாபரனு மகிழயானும்நீயுமாக
தர்மச்சிறப்பதிக தலைவன்றனைப்பெறவே
உண்மையாய்நானுனக்கு உபதேசமாயுரைத்தேன்
என்றுசொல்லநாரணரு மிழமகரமேதுசொல்லும்
பண்டுவமைத்திருந்தால் பக்கம்சொல்வதோயடியாள்
சித்தத்துக்கேற்ற செய்லனவேபொன்மகரக்
கற்றைக்குழலி கருதிமிகவுரைத்தாள்
உடனேமகரமாதுள்ள மிகமயக்கமிட்டு
திடமயங்கிசிங்கா சனத்தில்மிகயிருத்தி

மயங்கியேபொன்மகர மாதுமிகவிருக்க
தியங்குதேலோகம் திரைவாயுகேடன்முதல்
ஈசர்முதல்ஆதிமுதல் லேற்றதெய்வார்கள்முதல்
சீதைமுதல்மயங்க சீமையிரேழுமயங்க
மாமோகச்சக்கரத்தை மாயவனுர்தான்வீசி
சீமைஎழுகடலும் சிணமேமயக்கினரே
மயக்கியந்தமால் மகரமாமோகமாயிருக்க
தியக்கியந்தநாரணரும் சென்ருர்மகரமதுள்
மகரமுள்சென்று மகனேமிகநினைக்க
உகரமுனிக்கூட்டி வந்தஉற்றசடலமது
சிணமேகடலுள் சென்றதுகாண்அன்போரே
குணமேகுணமெனவே கூண்டெரியோன்தான்பார்த்து
மகனேமிகயெடுத்து மகரமதில்உள்ளேகொண்
டகரதெருவறயில் லலங்காரத்தட்டில்வைத்து
காலொன்ருய்நிற்கும் கனப்பொன்மேடையதில்
நாலொன்ருய்கூடும் நல்லசிங்காசனத்தில்
தங்கவைடூரியத்தால் தான்னிறைந்தமண்டபத்துள்
எங்கும்பிறகாச மிலங்குகின்றமண்டபத்துள்
முத்துக்கள்சங்கு முளங்குகின்றமண்டபத்துள்
பத்தும்பெரியோர்கள் பாவித்தமண்டபத்துள்
தங்கநீராவிதான் வளரும்மண்டபத்துள்
சங்குமுளங்கிநிற்கும் சதுரமணிமண்டபத்துள்
மூவாதிகர்த்தன் உகந்திருக்கும்மண்டபத்தில்
தேவாதிதேவர் சிறந்திருக்கும்மண்டபத்தில்
ஆயிரத்தெட்டண்டநிறைமண்டபத்தில்
தால்பிரியமான தாம்பிரவர்ணிமண்டபத்தில்
எண்ணக்கூடாவியல்பு நிறைமண்டபத்தில்
மண்ணளந்தோர்மகரமதுள் மகனேதானிருத்தி
கண்ணுனமகர்க்கு கனத்ததங்கசட்டையிட்டு
எண்ணவொண்ணுப்பணிக ளெல்லாமெடுத்தணிந்து
தங்கக்குல்லாவும் தலேமேலேதூக்கிவைத்து
பங்கமில்லாத்தைல பதத்தில்மிகமூழ்கி
வைகுண்டவெள்ளே மான்பட்டொன்றெடுத்து
கைகொண்டுபாலனுக்கு கண்ணருமிகசூடி
மேலுகளுக்கு மினுமினுக்கப்பச்சையிட்டு
காலுகளுக்குத்தங்கக் களராப்பணிகளிட்டு
மகனேயெடுத்து மடிமீதிலேயிருத்தி
உகமாளவந்தவனே உடையவனேயென்றுசொல்லி
கண்ணத்தடவிக் கரியமுகம்தடவி
எண்ணும்வளர் வாயென்றிசைந்தமுகத்தோடணேந்து
பாலனேப்போல்காட்டி பதினுறுடன்காட்டி
நாலுரண்டுகாட்டி நல்லமகவதுக்கு
நடக்கக்கருமம் நவின்றிடவேநாரணரும்
அடக்கமுடனே அருளுவாரென்போரே

நல்லஉபதேசம் நல்மகவுக்கேயருள
வல்லத்திருநாதன் வகுக்குகிருர்என்போரே

விருத்தம்

தேடியமறைநூல் வேதம்தேவியர்க்கமலமாது
நாடியவிறயோன்ஞானி நாச்சுமார்தேவரோடும்
கூடியரிஷியோர்வானோர்க் குவலயமறியாவிஞ்சை
தேடியமகனுர்க்கென்று செப்பினுர்ரொப்பில்லாதோ

விருத்தம்

மகனேஉனதுமனமறிய மறையோர்யறியாவிஞ்சைசெய்து
அகமேயருளித்தருவதெல்லாம் மனுப்போலசலில்லகலாதே
யுகமேமுடிந்ததினபிறகு உதிக்கும்தர்மயுகத்தில்வந்தால்
செகமேயறியச்சொல்லிமிகச் சிறந்தேவாழ்ந்துவாழ்வோமே

விருத்தம்

ஆண்டாயிரத்துஎட்டதிலே யதனேமாதமாசியிலே
நாந்தான்கடலின்கரையாண்டி நாராயணனேப்பண்டாரம்
கூண்டாந்தெக்ஷணுபுரியில் கொண்டோம்பள்ளிதர்மமுற்று
ஒன்ரும்விஞ்சையதுமகனே உரைப்பேன்ரண்டாவிஞ்சையதே

விருத்தம்

வேண்டாம்வேண்டாங்காணிக்கையும் மிகவேவேண்டாம்
கைக்கூலி
ஆண்டார்நாராயணர்தனக்கு வனுப்போல்வேண்டாம்காவடியும்
வாண்டாமெனவேநிறுத்தல்செய்து வாய்த்தசிறையாய்க்
கவிழ்ந்திருக்க
இரண்டாம்விஞ்சையிதுமகனே நவில்வேன்மூன்ரும்விஞ்சையிதே

விருத்தம்

கொற்றவர்தானுமாண்டு குறும்புகள்மிகவேதோன்றி
உற்றதோர்துலுக்கன்வந்து உடனவன்விழுந்தோடி
மற்றதோராண்டுதன்னில் வருவோமென்ருகமம்போல்
முத்தளத்தோரும்காண உரைத்தனன்மூன்ரும்விஞ்சை

நடை

நல்லமகனே நாலாம்விஞ்சைகேளு
வல்லநடுஞான வாய்த்தவைகுண்டமது
பிறந்துகொண்டிருக்கெனவும் புதியநச்சேத்திரத்தில்
அறந்தழைக்கநன்ருய் யதுகுதிக்குமென்றுசொல்லு
மாழுவதுமாண்டு மனதுகந்தேமுளிக்கும்
மூழுவதைநீக்கி முளிப்பதுவேக்கண்டுகொள்ளும்
ஒருநெல்எடுத்துடைக்க நாடுகேட்டுக்கொள்ளும்
இருநெல்லெடுத்துடைக்க நாடுதாங்காது
மலேகளுதிர்ந்துவிடும் வானமிடிந்துவிடும்
நலேநக்ஷத்திரம் தானுதிரும்ஆல்காய்போல்

என்றுநாலம்விஞ்சை யிதுதான்யென்மகனே
சத்தமொன்றுனதிலே தானிதெல்லாம்மாகுமென்று
சித்தமுடனே செப்பியிருளன்மகனே
ஆயிரத்தெட்டதில் வாழும் தேவருக்கு
வாயிதமாய்விஞ்சை வகுப்பேன் கேள்என்மகனே
நாட்டுக்குடய நாராயணர்தானும்
ஆட்டுக்குடைபூசை அனுப்போலும்வேண்டாமென்று
சொல்லியேதர்மம்முற்று சிறையாகத்தானிருந்து
தொல்லுலகில்யார்ஏக்கார் பார்போமென்றுசொல்லிடுநீ
தூருனபேய்களுக்கு சொல்லுமுறைகேளு
வாருனநாரணர்தான் வாய்த்ததர்மமேநினைத்து
கவிழ்ந்துசிறையிருக்க காரணத்தால்லோகமதில்
ஊர்ந்துதிரியும்உயிர்ப்பிருணி யாதொன்றையும்
ரத்தவெறிதீபதூப நிலைப்பட்டைமுதல்
சற்றும்வெலிபாவம் தான்காணஒட்டாதென
தற்மம்நினைத்து தவசிருக்கநாரணனும்
உற்பனமாயறிந்தோர் ரொதிங்கியிருங்கோயெனவே
வீணப்பசாசறிய விளம்பிருளன்மகனே
நாணமறியாமல் நன்றிகெட்டநீசகுலம்
மட்டையெடுத்தடிப்பார் மண்கட்டிகல்லெறிவார்
சட்டமசயாதே சுரிச்சுகொடுளன்மகனே
நாட்டைக்கெடுத்த நவின்றகலிச்சக்கரத்தில்
தோட்டைக்கலத்தினும் துயின்றமிரும்பதிலும்
முழியாதேயென்மகனே முக்முதர்க்குநாயகனே
பொய்யரோடன்பு பொருந்தியிருக்காதே
மெய்யரோடன்பு மேவியிருளன்மகனே
வர்மமதைவதைக்கவந்தே னெனசொல்லிமிக
தர்மம்பெரிதெனவே சாற்றியிருஎன்மகனே
மும்முதற்குள்ளாறு யிருப்பேன்தவசுபண்ணி
இம்முதலேயாறு யிருப்பேதவசுசெய்து
மும்முதலோனுகி முறைநடத்துயென்மகனே
மூக்குசுளியு முச்சுளியுமுத்திமுத்தி
நோக்குச்சுளியாய் நேர்நில்லுயென்மகனே
பரமானபட்டணத்தில் பார்வைகொண்டேநாட்டி
சிரமானதுவிரித்து சிறைபோலிருமகனே
ஏற்பதுபால்பச்சரிசி யிருப்பதுபார்மேலாகும்
காப்பதுமாதர் மங்கண்ணே திருமகனே
சந்தனவாடை சாந்துசவ்வாதுபுஷ்பம்
எந்தன்திருமகனே எள்ளளவும்பாராதே
வாடைபூதீபம் மகிழாக்கலியுகத்தில்
நாடையழித்து நல்லயுகமேபிறந்தால்
சொல்வொண்ணுத சுகந்தருவேனென்மகனே
கண்டாயோமகனே கரியபவுசியெல்லாம்
கொண்டாயோவிஞ்சை கூடுபிறகாசமதாய்

அப்போதுதான்பிறந்த வைகுண்டருரைப்பார்
இப்போதென்பிதாவே யென்னையீன்றெடுத்து
பருவமதாய்வளர்த்து பகர்ந்தீரேஞாயமெல்லாம்
உருவுபிறகாசமதாய் உபதேசம்செய்தீரே
தங்கமுடிவேந்தே தகப்பனேநீர்கேளும்
பொங்குகடல்துகின்ற புண்ணியரேநீர்கேளும்
என்னுடையமுத்துயர மெல்லாம்மிகக்கழித்து
நன்னமுதமாக நலமாகச்செய்தீரே
இன்னங்கலியுகத்தி லிருக்கப்போய்ச்சொல்லீரே
உன்னையறியாமல் ஊன்கலியிலுள்ளோர்கள்
என்னைமிகப்பழித்து மேசுவானேநீசனெல்லாம்
அல்லாமல்முன்பெற்றவர் களுடையபேரைச்சொல்லி
பொல்லாதநீசரெல்லாம் பேசியடிப்பானே
சூத்திரவிஞ்சை தொழிலையறியாமல்
யூத்திரநீசனெல்லாம் மொழுங்குதப்பிமாழ்வானே
நம்முடையஜாதி நம்மைமிகக்காணவந்தால்
செம்மைகெட்டநீசன் சிதறவடிப்பானே
ஆனதால்நம்ஜாதி யகலநின்றுவாடிடுமே
ஏனமென்னசொல்லுகிறீர் என்னுடையநாயகமே
முன்னென்னைப்பெற்ற மொய்குழலாவம்மிசங்கள்
என்னேதுவாலே யியல்புபெறவேணுமல்லோ
அல்லாமல்முன்னமைத்த அணங்குஒருபெண்ணிணங்க
நல்லோர்மனசு நல்லணங்குக்கேகொடுத்து
மேலும்பதவிமிகக் கொடுக்கவேணுமல்லோ
இப்படியேநல்ல யியல்புபெறவருளி
யெப்படியுமென்னை வந்தேக்கவரும்நாளும்
எல்லாவிபரமதாய் யியம்பியனுப்புமென்றார்
பொல்லாதபேர்மாள போறதும்சொல்லுமென்றார்
அந்தவுடனேயாதி நாராயணரும்
சிந்தைமகிழ்ந்து திருமகனையாவிமிக
கட்டியெடுத்து கமலமுகத்தோடணைத்து
திட்டித்தநாதன் சொல்வார்மகனுடனே

### விருத்தம்

எந்தனின்தவத்தாலே காபரன்உனக்குள்ளாகி
தந்திடும்மகனேநானும் தனதுள்ளமமர்ந்தேநானும்
உந்தனைக்கண்டால்மூவர் ரொஞ்சியேமகிழ்வர்கண்டாய்
சித்தர்கள்எவரும்போற்ற செயல்பெற்றமகனும்நீயே

### நடை

மகனேநீகேட்டதற்கு வகைசொல்லவேணுமென்றால்
தவமுமூணுண்டே நீதரணியில்போயிருந்தால்
அல்லாமல்பின்னும் மதின்மேல்நடப்புவளம்
எல்லாமுனக்கு யியம்பிதருவேன்கேள்
முதத்தான்தவசு யுகத்தவசுயென்மகனே

தத்தமுள்ளரண்டாம் தபசுசாதிக்காமே
மூன்றும்தவசு முன்னுரைத்தபெண்ணுள்க்கு
நன்றானமுற்பிதிரு நல்லவழிகளுக்கும்
இப்படியே மூவிரண்டாறுவருஷமதாய்
எப்படியும்நீ தவசிருக்கவருமென்மகனே
ஓராருண்டொற்ற தவமேயிருந்து
பாராறும்காணப்பார் கண்டுகண்டிருநீ
வஸ்துவகைசொத்து மனைவிவீடுவாசல்முதல்
சற்றுமனதெண்ணுமல் தானிருந்தென்மகனே
நன்மையோடுதின்மை நற்பேச்சுதிற்பேச்சு
உண்மையோடுதன்மை யொன்றுமிகபாராமல்
கந்தைத்துணியுடுத்து கைநிமிர்த்துக்காட்டாமல்
எந்தப்பேரொடு மினிப்புமொழிப்பேசாமல்
பாலல்லால்வேறு பண்டமிகவேருமல்
காலெல்லாச்சுத்தம் களுவநினையாமல்
மூக்குநடுவே மும்முகமும்முத்திமுத்தி
நாக்குச்சுளிதாங்கி நாரணுநானெனவே
ஏகாபரத்தைக்கண்டீரிரண்டிரண்டாண்டோரிருப்பாய்
மகாபரனைநெஞ்சில் மறவாமல்லெப்போதும்
கண்டிருயென்மகனே கருத்தொன்றுதாணட்டி
கொண்டையமுதுண்டு குவித்திருயென்மகனே
இப்படியேயாருண் டிருநீயுகத்தவசாய்
அப்படியேயிருந்தா ருண்டேகழித்தால்
நினைத்ததெல்லாமுனக்கு நிசமாய்முடியுமப்பா
உனைத்தள்ளிவேறேயொரு மூப்புயுகத்திலில்லை
வன்னத்திருமகனே வகையதுதான்யென்மகனே
நீசெய்ததெல்லாம் நிரப்புத்தான்யென்மகனே
நானீயேயல்லால் நடப்பதுவும்வேறிலேயே
தானீதனுனசர் வபராயென்மகனே
உனக்கேக்க உள்ளம்நினைத்தபடி
மிக்கநடத்தி விரும்பியிருயென்மகனே
எண்ணிறந்தகோடி யல்பாவம்செய்தோர்க்கு
நண்ணியமோக்ஷம் நவிலவென்றால்உன்மனந்தான்
முக்கோடிதருமம் முவந்தளித்தயன்போரை
தக்கோடிநரகமதில் தள்ளவென்றாலுன்மனந்தான்
உனக்கேக்கநின்றவர்க்கு உதவிகொடுஎன்மகனே
எனக்கேக்கநிற்பவரை ரக்ஷிப்பதுன்மனந்தான்
சிவனும்நீநாதனும்நீ திருமாலும்நீமகனே
தவமும்நீவேதனும்நீ சங்கமுதலெங்கும்நீயே
அப்படியேஅய்யாவரி நாதனுரைக்க
முப்பொருளோர்மெய்க்கும் முதலோன்மகிழ்ந்துரைப்பார்
ஆறுவருஷ மதிகத்தவம்புரிந்தால்
வாறுமேலென்னவகுப்பீர் காணய்யாவே
அப்போதுநாராணரன்பாய் அகமகிழ்ந்து

செப்புகிறார்நல்ல திருமகக்கன்போரே
அதிகத்தவசு ஆண்டாறுதான்கழித்தால்
இதின்மேல்நடப்பு வியம்பக்கேள்என்மகனே
இம்மூணுதவமும் மேல்வாய்நிறைவேறி
மும்மூவருக்கு முதல்வனாய்வந்தாக்கால்
தானாய்நீயும் தலைவனும்நீயென்மகனே
சாணாரின்நாயகமே சாதித்தலைவன்நீயே
எந்தப்படிநீ எண்ணிநினைத்ததெல்லாம்
அந்தப்படிசெய்து தவனிதனிலேசிலநாள்
சொந்தவிளையாட்டு தொல்புவியில்கொண்டாடி
சிந்தாதநன்மையோடு செகத்திலிருயென்மகனே
அதின்முன்னாக வன்னீதமாபாவி
ஏதுவினைசெய்தாலும் எண்ணம்வய்யாதென்மகனே
தாள்ந்திருஎன்மகனே சட்டைக்குள்ளேபதுங்கி
சார்ந்திருஎன்மகனே தனதில்மிகநினைத்து
கோபமாய்விள்ழாதே குவியசிரியாதே
பாவத்தைக்காணாதே பராக்கிரமம்காட்டாதே
ஆக்கிரம்மெல்லாம் மடக்கியிருயென்மகனே
தாக்கிரவனாகிடினும் சற்றும்பகையாதே
எல்லாம்உன்னருகே யிருந்துகேட்டுக்கொள்வேன்நான்
பொல்லாதராகிடினும் போதப்பகையாதே
வாரஞ்சொல்லாதே வளக்கோரம்பேசாதே
சாரமறிந்துதானுரை நீசொல்லுரைகேள்
ஆய்ந்துதெளிந்து யருளுநீயென்மகனே
ஏந்துநீதற்மம் மிடாதுநினையாதே
ஈனமில்லாததோடு எமக்காகும்சாதியின்மேல்
மானமாய்வருந்தி மகிழ்ந்திருயென்மகனே
அன்பானவவ்வினர்க்காய் அறிவில்வருந்தியிரு
தன்பாலேவந்தவுடன் சரியாச்சுதென்மகனே
மகனேநானுனது மனதுள்க்குடியிருந்து
சிவனேபொருந்தி செப்புவதுமுத்தரவே
துல்லிபம்காட்டேன் சூக்ஷமதுகாட்டேன்
நில்லுநினைவில்நீ சரித்துக்கொடுமகனே
பேயன்பயித்தியக் காரனெனப்பேசிஉன்னை
நீசக்குலங்கள் நின்னையடிக்கவருவார்
சரித்துக்கொடுமகனே் சற்றுமலங்காதே
ஒருவரோடும்பிணங்கி யுறையாதேயென்மகனே
எல்லாம்நான்கேட்டாள்க் கொள்ளுவேயென்மகனே
வல்லாமைப்பேசாதே மாதிரிபோடாதே
ஏழையாயிருநீ யென்னுடையகண்மணியே
ஆழமனதுடைய அதிகமகனேயுனது
விதங்களறியாமல் வீணாவார்வம்பரெல்லாம்
மதங்களடக்க வாக்கெனக்கென்மகனே
தந்தைநான்உனக்கு தரளமணிமுத்திரியும்

கந்தைத்துணியதிலே காட்டாதேவைத்துக்கொள்ளு
மகனேயுனது மனமறியக்காட்டினதை
அகத்திலேவைத் தகமகிளென்மகனே
பொறுதிதானென்மகனே பெரியோராகுவது
உறுதிமிகயுண்டாகும் முகநாதாயென்மகனே
தர்மச்சிறப்புதான் கண்டாயோமகனே
பொறுமைபெரிது புவியாள்வார்என்மகனே
கண்டாயோயென்மகனே கரியமண்டபச்சிறப்பு
பண்டையுள்ளதேரும் பதியும்மிகக்கண்டாயோ
தேட்டமுடன்உனக்கு செப்பும்விஞ்சையானதிலே
நாட்டமறவாதே நாரணயென்மகனே
அப்போதுஆதியுடன் நம்மகவுயேதுரைக்கும்
இப்போதெந்தனக்குக் கித்தனையும்சொன்னீரே
கலியுகத்தைமுடித்து கட்டானதற்மபதி
வலியுகத்தைக்கண்காண்ப தெப்போமாதாபிதாவேயென்றார்
அப்போமகனேயாவி முகத்தோடணைத்து
இப்போதுசொல்லுகிறே னென்மகனேகேட்டிருநீ
நீபோய்தவசு நீணிலத்தில்செய்திருக்க
நான்போய்நடத்தும் நல்வளமைக்கேட்டிருநீ
ஆயிரத்தெட்டான திருமண்டபத்தில்
வாயிதமாயாண்டொன்றில் வய்த்தமண்டபங்களிலே
நூற்றிபன்னிரண்டில் நொடிப்பேனோராண்டதிலே
தோற்றுவிப்பேனர்க்கும் தூதுமிகநடந்து
பத்தாண்டுக்குள்ளே பலசோதனைப்பார்த்து
வித்தாரமேலே விசாரிப்பேன்கண்டாயே
அங்கங்கேநாட்டி வைத்தாணிவேரத்தனையும்
எங்கெங்கும்மொடுக்கி யானுன்னிடமிருந்து
ஒக்கஒருகுடைக்குள் ளுன்கையிலேவேருதந்து
துக்கக்களையறுத்து சுத்தமாயாளாக்கி
உன்மூப்புயர்மூப்பா யுல்லாசமேதருவேன்
பின்னூரப்பில்லாமல் பெரியோனின்நாமமதாய்
அடக்குடக்கெல்லாம் மன்றுனக்குநான்தருவேன்
வடக்குவெளிவாசல் மலைமீதில்ஒருபுதுமை
உண்டாகும்மகனே உனக்குநல்காலமிதே
தண்டாயுதத்தோட சத்தமொன்றேபிறக்கும்
மேல்க்கால்மண்டபமும் மேல்மூடிதான்கழன்று
காலத்தால்காணும் கண்ணுமணியுன்காலம்
தெக்ஷணமூலைத் தென்பால்கடலருகே
மெச்சுபதிமூலம் விளக்கெரியகண்டுனது
காலமிதுமகனே சன்னிதிருதென்திசையில்
கோபுரமண்டபமும் கொடிமரமும்வீதிகளும்
தாபுரமாய்த்தன்னால் தலங்கள்மிகத்துலங்கும்
கண்டதுவேகாலம் கனத்துவலுசூரியனும்
பண்டுமுறைதப்பி பரிதிரெத்தக்கண்வெறியாய்

மகனேயுனக்காகா மானீசபாவியெல்லாம்
அகமேகனல்தாவி அன்றுடன்தானழிவான்
உகமீதேதர்ம உனக்கெனக்கென்றேக்குதிக்கும்
மகனேயுனது மாதபத்தோர்காலமேநன்று
காலமிதுமகனே கண்மணியேகேட்டிருநீ
தூலமுறையாதே துலங்குநாள்ஆகுமட்டும்
எழியோரைக் கண்டிரங்கியிருயென்மகனே
வலியாரைக்கண்டு மகிழாதேயென்மகனே
தாழக்கிடப்பாரை தர்க்காப்பதேதர்மம்
மாழக்கிடப்பார் மதத்தோர்கள்என்மகனே
இவ்வகைகளெல்லாம் மென்மகனேயுன்காலம்
அவ்வகைகளெல்லாம் ஆராய்ந்துபார்த்திருநீ
இனத்துக்குஇனங்கள் யிருப்பேனுன்சுவாமியென்று
மனதில்வேருரெனவே வையாதேயென்மகனே
நால்வேதமதிலும் நான்வருவேன்கண்டாயே
தூலவேஷமிட்டு சுற்றுவேன்கண்டிரு
தியங்காதேயென்மகனே சீருள்ளகண்மணியே
மயங்காதேமகனே மாதவங்கள்பெற்றவனே
அவரவர்கள்மனதில் லானபடியிலிருந்து
எவரெவரையும் பார்த்திருப்பேன்நானுன்னிடம்
லிங்கமொன்றேஉதிக்கு யிணையாகஓர்சுவடாய்
தங்கநவரெத்தினங்கள் சமுத்திரத்திலேகாணும்
ஆனையொருகன்றீனும் மதிஞல்லுலகமெல்லாம்
தாஞகவாழும் தலைவனும்நீயல்லாது
மலையடிவாரம் வளரும்ஓர்விருக்ஷம்
அலையமதிலும்பெரிதாயது தளயும்கண்டீரே
சிலையுள்ளேத்தோன்றி சிவத்தோத்திரமாக
நிலையொன்ருகி நீயாள்வாய்யுங்காலம்
வாரிக்கரையில் மண்டபம்மொன்றேவளர்ந்து
நாரியர்கள்கூட நாடெங்கும்வாசமிட்டு
ஒருகுடைக்குள் ஆழ்வார்உன்காலமென்மகனே
தர்மமதாய்தாரணியில் தன்னந்தன்ஞல்வாழ்ந்து
பொறுமைபெரியோராய் பூதலமெல்லாம்வாழ்வார்
அப்போதுநீ யரசாள்வாய்யென்மகனே
வாரிமூன்றுகோதி வளைந்திருக்கும்மோர்தீர்வை
சாதியொருநிரப்பாய்த் தாஞழ்வாய்யொன்காலம்
கோடுபலவாதும் கோள்நீசப்பாவிகளும்
கேடுவரும்காலம் கிருஷ்ணஉன்நற்காலம்
வானமதுவெள்ளிமாறி வெறுவானமதாய்
மேன்முகிலத்து வெறுவானமாய்த்தோன்றும்
நல்லமகனேயுனக்கு வரும்நற்காலம்
சொல்லத்துலையாது குலமகனேயென்கணக்கு
ஒக்கவடக்கி வுரைத்திருக்குதுன்னிடத்தில்
நிக்கநிலைக்க நினைத்ததெல்லாம்மங்காகும்

பொறுமைபெரிது பெரியதிருமகனே
தர்மம்பெரிது தாங்கியிருயென்மகனே
எல்லாமுனதுயிச்சையதுபோல் நடக்கும்
நல்லார்க்கும் மோர்நினைவேநலமாகுமென்றுசொல்லி
எல்லாருக்கும் விளம்பியிருநீயிருமகனே
பொல்லாதாரோடும் பொறுமையுரைமகனே
தன்னாலேயாகுமட்டுஞ்சாத்தியிருமகனே
வந்தாலறிவார் வராதார்நீருவார்
இன்னமுங்காலமியம்புவேன் கேள்மகனே
தன்னந்தன்னாலேச் சாதிக்குச்சாதிமாமும்
நல்லநினைவோர்க்கு நாளெத்தனையானாலும்
பொல்லாதுவராமல்ப் புவிமீதில்வாழ்ந்திருப்பார்
நாட்டில்ஒருவனுமன் நல்லவன்நான்அயச்சு
கோட்டிசெய்யென்றுரைப்பேன் கோமகனேயுன்காலம்
முறைதப்பியாண்ட முகடன்வெறுநீசன்
குறைநோவுகொண்டு கூடிளப்பானுன்காலம்
அதிலெசிலபேர் அரசுஉனக்கெனக்கெனவே
விதியையறியாமல் வெட்டிக்கொண்டெமாழ்வார்
அத்தருணம்உன்காலம் மதிகமகனேகேளு
இத்தருணமல்லாயின்னு மெடுத்துரைப்பேன்
எல்லாரும்கைவிட்டுயிருப்பார் உன்னைத்தேடாமல்
நல்லோர்மனதில் நாரணுயென்றுரைப்பார்
கோலவிளையாட்டு கொஞ்சமெடுப்பேநான்
தூலமறியாமல் தொல்புவியெல்லாமயங்கும்
அன்போர்களெல்லாம் ஆவியைதான்மறுகி
இன்பமுடனே யேங்கியேங்கியழுவார்
இத்தனைநாளும் இவரைநம்பிநாமிருந்தும்
புத்தியதுகெட்டோமென்று மிகப்பேதலிப்பார்
அப்போதுவாகாயன்னீசமாபாவி
இப்போது கண்டுதென்பான்யேலமேசொன்னதெல்லாம்
ஏய்த்தான்னென்பான் அன்போரையிடுக்கஞ்செய்தேயடிப்பான்
சூக்ஷமுடனே சொருபமொன்றுநானெடுப்பேன்
அதுதான்ஒரு காலமதிகமகனேகேளு
இதுபெரிய சூக்ஷமெனமகனேகெட்டிருநீ
அதின்மேலெஅன்போர் அதிகபெரியோராம்
இதின்மேலெதாண்டு மெவ்வோடும்வல்லோரே
பின்னுமொரு சூக்ஷம்பிறமாணமாயெடுப்பேன்
பன்னுமணியே பராபரமேகேட்டுருநீ
குழந்தைத்தடதடெனக் கொந்துகொந்தாயுடைத்து
சுழற்றக்கனலக்கினியும் துர்க்கமகாதுர்க்கையையும்
விட்டயச்சுமானிலத்தில் விளையாடியேதிரியும்
கட்டடங்களாகக் கனமாய்குழுகுழென
ஓடுவார்பதறி விழுவார்அறமெலிந்து
நாடும்பெரியோர் நலமாகவாழ்ந்திருப்பார்

என்மகனேயுன்காலமின்னம் வகுப்பேன்காண்
பொன்மகனேபூமியிலே பின்னுமொருகாரணங்கேள்
கெட்டனசுராணிக் கெம்பிக்கடைக்காலம்
மொட்டைத்தலேவருவான் முழையனவனேடிடுவான்
ஆடிக்கொண்டாடி அங்குமிங்கும்தானலேந்து
ஓடிக்கொண்டோடி ஒன்றுபோலேமாழ்வான்
மகனேஉன்கால மகிழ்ந்திருயென்மகனே
உவமையொன்று சொல்லுகிறேன்னுர்பனமாய்கேள்மகனே
புத்திரனுக்கேகுருவும் புதன்றதெல்லாம்புகன்ருலும்
சுற்றமொருசூக்ஷத் தொழிலுண்டுவாயானுள்
அத்தனேயும்மென்னுள்ளடக்கமில்லேயென்மகனே
முத்தியெனேயீன்ற மூதல்நாளோர்விஞ்சைவைத்தார்
அவ்விஞ்சைமாத்திரமே யானுனக்கீயவில்லே
இவ்விஞ்சை ஈவதுதானெப்போவெனக்கேழு
சீமையரசு செலுத்தவரும்நாளேயிலே
மேன்மைமுடிதரிக்கும் வேளேயிலென்மகனே
சொல்லுகிறவிஞ்சை சுத்தவனேகேட்டிருநீ
பல்லுயிர்களுக்கும் படியளக்கும்விஞ்சையது
எல்லாமுனங்களித்தேனென்னுடைய நாரணனே
அல்லாமல்நானுனக்கருளுகிற விஞ்சையைகேள்
பெரியோர்க்குவாழ்வு பெருகச்சிறந்தாலும்
மரியாதியேயிருக்குமகனேநீ கேட்டிடுநீ
சற்ருேலேவாழ்வுசகடருக்கே வருகில்
கற்ருேரையாகிடினுங்கண்டறிவேன் போனீயென்பான்
முள்முருக்கம்பூவுமினுக்கு மூன்றுநாளே
கள்ளருக்குவாழ்வு காணுமதுபோல்மினுக்கு
நல்லோர்க்குவாழ்வு நாளுங்குறையாமல்
வல்லோர்க்கும்நல்லோராய் வாழ்ந்திருப்பார்கண்டிருப்பாய்
விள்ளாதஞாயம்மேல் ஞாயமென்மகனே
துள்ளாதயானே துடியானேயென்மகனே
அடக்கம்பெரிது அறிவுள்ளயென்மகனே
கடக்கக்கருதாதே கற்ருேரைக்கைவிடாதே
நன்றிமறவாதே நாம்பெரிதென்றெண்ணுதே
அண்டினபேரையகற்ற நினேயாதே
ஆபத்தைக்காத்துயகல நீதள்ளாதே
சாபத்தைக்கூருதே தன்னழவுவந்தாலும்
கோபத்தைக்காட்டாதே கோழோடிணங்காதே
பாபத்தைக்காணுதே பகட்டுமொழிபேசாதே
பசுவையடைத்து பட்டினிகள்போடாதே
விசுவாசமதிலே விரோதம்நினேயாதே
எழியோரைக்கண்டு ஈந்துயிரங்கிடுநீ
அழிவென்ற பேச்சனுப்போல்நினேயாதே
தொட்டுபிடியாதே தோர்வைவைத்துகாணுதே
விட்டுப்பிடியாதே வெள்க்கமதைக்காணுதே

வரம்புதப்பாதே வழிதவறிநில்லாதே
பரம்பூமிக்கண்டு பாவித்திருமகனே
இத்தனைபுத்தியெடுத்துரைத் தேனென்மகனே
புத்திவிபரீதமாய் பின்னுமாராயாதே
சட்டம்மறவாதே தன்னழவுவந்தாலும்
நட்டங்காணுதே நாடாள்வாயென்மகனே
என்மகனேனுனுமுனக்கின்னமொரு விஞ்சைசொல்வேன்
பொன்மகனேயுன்னுடைய புத்தியிலேவைத்திருநீ
இச்சட்டந்தன்னிலெள்ளளவு தப்பினதால்
தீச்சட்டங்காய்க்கத் தெய்திவருமென்மகனே
அனுப்போலமறவாதே யான்வைத்தசட்டமதில்
மனுப்போலென்றிராதே மனதெண்ணமாயிருநீ
பஞ்சமுர்த்தெயென்னுடைய பாதைத்தப்பிநீநடந்தால்
கொஞ்சும்கிழியே கொன்னெழுப்புவேனுனையும்
பதறியிருயென்மகனே பம்மியிருக்கண்மணியே
பொறுதிமகனே பெரியோராகுவது
உறுதிமகனே உலகமதையாழுவது
மகனேநானெத்தனையோ மகாபிலங்கள்கற்றவன்நான்
உகமீதேச்சொல்லத்துலையுமோ உத்தமனே
எவ்வுகங்களுக்குயிப்படியே தற்மமில்லை
செவ்வுமகாவிட்டிணுதானென்று சொல்லார்தேசமதில்
இப்போதுஎன்மகனே. இக்கலியன்மாய்மாலம்
செப்பவெளிதலவே ஜெயிக்கயேலாதாராலும்
இப்போதுஉன்னேடுரைத்தயியல் விஞ்சைக்ககப்படுங்காண்
அப்பனேபம்மலிலேயகப்படுங் காணிக்கலியும்
கலியென்ருலெலியல்லவே கணையாளிவேண்டாமே.
வலிமாயநினைவு மாய்மாலமென் மகனே
ஆளதாலாயுதங்களம்புதடி வேண்டாமே
மானமாகவிருந்தால் மாழுங்கலிதன்னலே
இன்னமொருவிஞ்சையியம்புவேன் கேள்மகனே
முன்னவகைக்காறனேடு மோதிப்பகையாதே
பகைத்தாலிருக்கவொட்டான் காணவ்விடத்தில்
உகத்தடக்குமுன்னே ஒருவரையும்சீறரிது
தாழ்ந்திருக்கவென்ருல் சர்வதுக்கும்தாளனுமே
ஓர்ந்திருக்கவென்ருவொருவர்ப் பகையாகாதே
ஆனதால்நீயும்மவனைப் பகையாதே
நானவனைக்கேள்ப்பேன் ஞாயக்கேடாகிடினும்
வலியோர்கொருவளக்குவைத்து நீபேசாதே
மெலியோர்க்கொருவளக்கு வீணுப்பறையாதே
சொத்தாத்திவஸ்த்து சுகமென்றுமெண்ணுதே
வஸ்துவகைப்பெண்வகையென்றுயெண்ணுதே
நீயெண்ணுதேயிருந்தால் நீணிலங்களுமயங்கும்
தானிதின்மேலெண்ணந்தங்கு தங்காதேயிரு

சத்துருவோடுஞ் சாந்தமுடனேயிரு
புத்திரரோடும் பேசியிருயென்மகனே
அன்போர்க்குமீந்திருநீ ஆகாப்பேர்க்குமீயு
வன்போர்க்குமீயு வழிபோவோர்க்குமீயு
சகலேர்க்குயீந்துதானிரு நீயென்மகனே
வலியோர்க்குமீயு வளிபோவோர்க்குமீயு
மெலியோர்க்குமீயு மேன்மையாய்என்மகனே
ஆர்க்குமிகவீந்தால் அந்தத்தர்மமேக்கொதிக்கும்
போர்ச்குநினைத்தாரைபெலி கொடுக்கும்தர்மமது
தர்மந்தான்வாழு சக்கரங்களல்லாது
தின்மையதுகேடு செப்பக்கேளென்மகனே
சாதிபதினெட்டுந்தன்னால் கேடாகும்வரை
நீதியழியாதேநீ சாபங்கூறாதே.

### விருத்தம்

மகனேயுனக்குவைத்தவிஞ்சை மனதிலறிந்துகொண்டாயோ
அகமேவைத்தசட்டமெல்லா மதுபோல்நடத்துமல்லாமல்
யுகமேயழியுமுன்னை வொருசொல்லிதிலெகுறைவானால்
தகமோரறியத்தீ மூள்கிசதியாய்மறுத்துமுளிப்பாயே.

### விருத்தம்

நல்லோர்மகனேசொல்வதுகேள் நானேவைத்தவிஞ்சையெல்லாம்
வல்லோனனதிருமகனே மனதிலறிந்துவறிந்துநட
எல்லாநமதுள்ளாச்சுதென்றுயெண்ணி நடப்பேனுன்னாலே
சொல்லால்த்தாண்டி நடப்பீரால்தீயேகுளித்துவருவாயே

### விருத்தம்

கொடுக்கும்வரங்கள் உனக்கீந்தேன்கொடுத்தவரத்தைப்பறிப்பதற்கு
உடக்குவரமும்தந்தேனன் உந்தன்ஆணைத்திருவாணை
அடக்குமுடக்குந்தந்தேன ஆதிசிவனரவராணை
நடக்கும்படியேசட்டமெல்லாம் நாராயணனேதந்தேனே.

### விருத்தம்

தந்தவரங்கள்தவறாது தருணஞ்சடையுந்தறைமீது
எந்தன்மீதுமறவாதே யென்னாட்டருளுமிறையோனே
அந்தன்மீதுமறவாதே யாயானெனவேயறிவில்வைத்து
சிந்தைமகிழ்ந்துமுறை நடந்தால்சிவனுமுனக்குள்வசமாமே

### விருத்தம்

தாயாரோடுசிவமாது சரசுபதியேபொன்மாது
நேயமாதர்மடமாது நீணிலமறியவந்துனது
பூசாபலன்கள் சொல்லிமிகப்புலம்பித்திரிவார்துயர்தீர
மாயாதிருக்கு மகனேவுன்மனமேமகிழ்ந்துமகிழ்ந்திருவே.

### விருத்தம்

சொல்லயெழிதோயென் மகனேசொல்லாதனேகந்தோன்றுமினி
வெல்லயெழிதோயென்மகனே மேலோராராலாலும்
கொல்லவெழிதோவுனமகனே கோரவேங்கிரிகோனலும்
வெல்லயெழிதோவுனமகனே மேலாங்கண்ணேமிகவளராய்

### விருத்தம்

இந்தப்படியேநாரணரும் மியம்பமகவுயேதுரைக்கும்
கந்தனுறுவேலானெந்தகப்பாகடிதாயுனதுபடிநடக்க
எந்தப்படியோநான்றமியேன்யேதோவறியப்போறேனென
சிந்தைமகிழ்ந்துதகப்பனுடதிருத்தாள்பிடித்துசெப்பலுற்றூர்

### நடை

தன்னழ்பெரியத் தாட்டீகவைகுண்டரும்
என்னசொல்வீர் எந்தனக்கென்தகப்பாநீரெனவே
வணங்கிப்பதம்பூண்டு மாதாவையுந்தொழுது
இணங்கியிவர்கேள்க்க யேதுசொல்வார்நாரணரும்
நாரணவைகுண்டா நன்மகனே என்னையினி
வாரணமேநீவணங்கி மகனேகைசேராதே
நீகைகுவித்தால் யெனக்குமிகத்தாங்கரிது
தானீதனை சறுவபராயென்மகனே
ஒருவருந்தாங்கரிதுன் கைகுவித்தாக்கால்
குருதெய்வமநீயே கோவேகுலக்கொழுந்தே
இன்னமுனக் கியம்புகின்றவிஞ்சையதும்
பொன்மகனே பூராயமாய்க்கேழு
சாதிபதினெட்டுந் தலையாட்டிப்பேய்களையும்
வாரிமலையதிலும் வன்னியிலுந்தள்ளிவிடு
வரத்தைமிகவேண்டி வைத்துக்கொள்ளென்மகனே
ஊனக்கோள்கிரக முறவுகெட்டபேர்முதலாய்
கள்க்கோள்கருவைக் காணுதேசாபமிடு
செல்வம்பொருந்தி சிறந்திருயென்மகனே
கொல்லென்றபேச்சு கூறுதேயென்மகனே
ஒவ்வொன்றைப்பார்த்தூணு வொவ்வொருசாபம்
செவ்வென்றபேச்சு செப்பியிருயென்மகனே
உரைத்தவிஞ்சையெல்லா முனக்குபோதுமோமகனே
விரைத்தமுள்ளவைகுண்டா விர்பனவாநீகேழு
நீபோயிருக்கு மிடங்களிலென்மகனே
அன்பானபஞ்சவர்களங்கேயுண்டென்மகனே
முன்னேபிறந்தவுகத்துக்குகங்களெல்லாம்
என்னைவிட்டகலாதிருந்தார்கள்பஞ்சவர்கள்
மானமுள்ளபஞ்சவரை மகனேமுன்விட்டுக்கொள்ள
ஆனதாலிப்பிறவி யானும்நீயாகையினல்
அல்லாமல்க்கேளரிநா ராயணயென்மகனே
நல்லோராய்ப்பெண்கள் நாடியெண்ணக்கூடாது
வல்லோராய்னந்தன் வம்மிசத்தில்வந்திருந்தார்

அப்பெண்ணுக்கெல்லா மதிகபலன் தாறேமென்ரேன்
இப்பெண்ணுர்கள்சிலர்க ளின்னமங்கேதோன்றிவந்தால்
ஆனதால்பெண்ணுர்க் கழகுகொடுயென்மகனே
நின்றதவசு நிறைவேறிஞல்மகனே
வுண்டோடியார் சிலரையுன்பாரிதாஞக்கி
நன்மைகொடென்மகனே நாரணுநாடாள்வாய்
உண்மைநினைத்தோர்க்கு உதவிகொடுயென்மகனே
கட்டைவிடாதே கருத்துள்ளயென்மகனே
சட்டமறவாதே சாத்திரத்துக்குற்றவனே
பெண்பாவம்பாராதே பேணியிருயென்மகனே
கண்பாருகண்மணியே கன்னிகணவ்ருக்கு
இன்னமொருசூத்திர மியம்புகிறேன்கேள்மகனே
துன்னமறியத் தோற்றுவிப்பேன்சாதிதோறும்
அன்புவன்புபார்க்க வாருரிடத்திலும்போய்
உன்புதுமைசொல்லி யுடலேமிகவாட்டி
சாதிசாதிசோறுஞ் சக்கிலிபுலச்சிவரை
ஆதிச்சாதிமுதலாயாராதனேக்காட்டிவிப்பேன்
காட்டிவிக்குஞ்சொருபங்கண் டிருவென்மகனே
ஆட்டிவிப்பேனுல் வேதமதிலுநான்மாயமிட்டு
துலக்கன்வீடானதிலுஞ் சூதாட்டுப்பார்த்திடுவேன்
கிலுக்கமொன்றுசெய்யவே கீழுமேலும்நடுவும்
பதறித்தெளியும் பார்த்திருயென்மகனே
நீபெரிதுநான்பெரிது நிச்சயங்கள்பார்ப்போமென்று
வான்பெருதறியாமல்மாள்வார் வீண்வேதமுள்ளோர்
ஒருவேதம்தொப்பி யுலகமெல்லாம்போடுவென்பான்
மற்றெருவேதம்சிலுவை வையம்யெல்லாம்போடுவென்பான்
அத்தறுதிவேதமவன் சவுக்கம்போடுவென்பான்
சூற்றமுறைப்பான் கொடுவேதக்காரனவன்
ஒருவருக்கொருவர் உனக்கெனக்கென்றேதான்
உறுதியழிந்து வொன்றிலுங்கைகாணுமல்
குறுகிவழிமுட்டிக்குறைநோவுகொண்டுடைந்து
மறுகித்தவித்துமாள்வார்கள் வீண்வேதமுள்ளோர்
ஓடுவாரேசிலபேர்ரொழிவார் சிலபேர்கள்
கேடுவருமேகேள்விகேழாப் பேர்க்குயெல்லாம்
அதின்மேல்மகனே யானுனக்குசொல்வதுகேள்
இதின்மேலுனக்கு யேகவியாழம்வருது
சந்தோஷமாகுதுகாணுனேச் சார்ந்தன்போர்க்கு
எந்துயரெல்லாமேகுது காண்என்மகனே
அதுவரையும்னீதானன் பாயிருமகனே
எதுவந்தாகிடினும் மெண்ணம்வையாதேமகனே
சுறுக்கிட்டியானும் ஒவ்வொன்ருய்த்தோன்றவைப்பேன்
இறுக்குமீறைகன் மில்லையென்றுசொல்விடுநீ
வேண்டாமிறைகள் வேண்டாமென்றுசொல்லிவிடு
ஆண்டார்மகனே அதிகதிருமகனே

நல்லமகனே நான்வைத்தவிஞ்சையெல்லாம்
செல்லமகனேவுன் சிந்தையிலேப்பத்தினதோ
போதுமோவிஞ்சை புகலணுமோயென்மகனே
சாருமொருவிஞ்சைதான் சொல்வேன்கேள்மகனே
முவ்விஞ்சைவைத்தே னுலகமறியாத்தவிஞ்சை
இவ்விஞ்சைமாத்திரமே யினம்பிரித்துசொல்லாதே
பெற்றோர்கள்கண்டுகொள்வார் பேசறியயென்மகனே
கற்றோர்கள்கண்டுகொள்வார் கண்ணேதிருமகனே

விருத்தம்

கண்ணேமகனே திருமகனேகமலப்பூமாசுரிமகனே
எண்ணெயெழுத்தேயென்மகனே யிறையோர்தொழுவேவரு
ஒண்ணேமகனேவுயர்மகனேவுடையமகனேகண்மணியே [மகனே]
தண்ணேமகனேதவமகனே சாகாதிருக்குஞ்சலமகனே

விருத்தம்

மகனேதவமேமரகதமே மாதவம்பெரியமலரோனே
தவமேயுனதுள்வைத்த விஞ்சைதானேபோதுமோமகனே
எகமேமகிழவந்தவனே யெந்தன்மகனேவளர்வையென
உகமேயளந்தோருரைத்திடவேயுயர்ந்தமறையோர்வாழ்த்தினரே

நடை

அய்யாநாராயணரு மாதிவைகுண்டமென
மெய்யாயுரைத்து விளங்கவேவாழ்தலுற்றார்
மகனேயுன்தேகமதில் வைத்தநிறங்களெல்லாம்
யுகமழியுமுன்னே யொருவர்கண்காணுதென
அகமேவைத்து அகமகிழுயென்மகனே
வைகுண்டமென்றுமிக வாழ்த்தக்குருநாதன்
மெய்குண்டத்தோர்கள் மேலோர்கள்வாழ்த்தலுற்றார்
மகரவுந்திவிட்டு வைகுண்டந்தான்பிறந்து
சிகரமுனிதேவருட சிறப்பதிலேவந்தவுடன்
தேவர்திருவானோர் சென்றெடுத்துவைகுண்டரை
மூவர்தேவர்மகிழ்ந்து முதலோனைக்கைகுவித்து
ஏந்தியெடுத்து யிளந்தொட்டில்மீதில்வைத்து
சாந்திக்கழித்துத் தவலோகச்சட்டையிட்டு
சீதைமயக்கமெல்லாந் தீர்ந்திடவேசாபமிட்டு
வீரரையும்வந்து வீரலெக்ஷிமியெடுத்து
மடிமீதில்வைத்து மாதுசரசோதியுடன்
குடியானபேருங் கொண்டங்கமகிழ்ந்து
பொன்றெட்டிலிட்டுப் பொன்சீதைத்தாராட்ட
பைங்கொடியாள் சரசுபதிமாதுதாலாட்ட
தேவரிசிவானோர் தெய்வரம்பைமாதரெல்லாம்
சீவசெந்தெல்லாந் திருப்பாட்டுப்பின்பாட
ஈசர்முதல்ச்சங்க மெண்ணிமனமகிழ
சார்சரசுபதியாள் தாலாட்டவேதுணிந்தாள்

விருத்தம்

பொன்மணிப்பதியினுள்ளே புலனரிகிஷ்ணர்பெற்ற
தண்மணிப்பாலென்றன்னைத் தங்கமாந்தொட்டிலிட்டு
மின்மணிகொடிசேர் கன்னிவிழுங்கியேசோதிமாது
கண்மணிவைந்ததராசர் காணத்தாராட்டினளே

தாலாட்டு

தார தர தர தாரரரோ தார ரா ரா ரா ரோ
நாராயணர்தானே தாராரோ நல்லநாரயணவைகுண்டமோ
காரணர்தானேவைகுண்டமோ கைலாசநாதக்கண்மணியோ
செல்வமுதலானசீமானே சிவசிவாசிவசிவமுதலோ
அல்லவகற்றியேயரசாளும் மரியோன்மிகப்பெற்றவரிதானே
தெய்வப்பெருமாள்தான் பெற்றகன்றேசீதைமாதுதான்
பெற்றகன்றே
மெய்யநரிநாதன்பெற்றகண்ணே விஷ்ணுமகாபரன்பெற்றகன்றே
ஈசர்மைத்துனர்பெற்ற கன்றேயிரவாதிருமாதுபெற்றகன்றே
மாயத்திருவுளம்பெற்றகன்றே மானவைகுண்டராசகன்றே
வேதக்குருநாதன்பெற்றகன்றே வீரலக்ஷமிஈன்றகன்றே
சீதக்குருதாயாரீன்றகன்றே தெய்வவைகுண்டராசகன்றே
கிஷ்ணமகாநாதன்பெற்றகன்றே கிருபைக்குருநாதகண்மணியோ
விஷ்ணுமகாநாதன்பெற்றகன்றே வீரலெக்ஷமிஈன்றகன்றே
நாட்டுக்குடையதோர்நாரணரின் நல்லபாலனேவைகுண்டனே
ஏடுமுதலான தாராரோ ராஜவைகுண்டராஜர்தானே
மூலச்சிவநாதன்பெற்றகன்றே வுலகைவொருக்குடைக்காள்
வானே
நாலுவேதமுந்தாண்டிமுறை நடத்திவொருகுடைக்காள்வானே
தர்மத்திறவானேதாராரோ தங்கவைகுண்டத்தாட்டிகனே
மகரச்சீதையாள்வயிற்றிலுற்றுவளர்ந்தவைகுண்டமாமணியோ
அகரசிவகோபுர மழகுபதியதிகபதிகண்டுவந்தவரோ
தங்ககோபுரந்தளிர் மரமுஞ்சதுரமேடைகள்கண்டவரோ
சங்கமகிழவேவந்தவரோ சகலகலைதமிழராய்ந்தவரோ
உலகம்பதினலுமொருகுடைக்குள்ளொரு சொல்மொழிக்காள
வந்தவரோ
இலகுப்பிறகாசச்சுவடுகொண்டுயிலங்கும் பதியாளபிறந்த
வம்புக்கலியுகக்குலமறுக்க வைந்தபதியாளவந்தவரோ [வரோ
அம்புகணையொன்றுமில்லாமலேயறுக்கவந்தாரோகலிதனையும்
கூடப்படைகள்துணையில்லாமல்குறும்பையடக்கவேவந்தவரோ
சாடத்தலையாரியொன்றில்லாமல் சதைக்கவந்தாரோ
கலியுகத்தை
வாழுமாயுதமெடுக்காமலே வதைக்கவந்தாரோக்கலியுகத்தை
கோழுபேய்களைகிரகங்களை கொல்லவரம்பெற்றவைகுண்டரோ
சாணுக்குருநாதவைகுண்டரோ சாதித்தர்க்காக்குந்தலையாரியோ

காணுக்கருவானகுருமூலமோ கர்த்தன்கர்த்தாதிக்கடவுள்தானே
நீசக்குலங்களைக்கருவறுக்க நெடியநாராயணர்பெற்றகன்றே
தோசப்புழுச்சாதிக்குலமறுக்க திருமால்நாராயணர்பெற்ற
கன்றே
சீமையன்பத்தாறுதேசமெல்லாம் சொல்லொன்றுக்குள்ளாளப்
பிறந்தவரோ
நாமம்பெரியதோர்வைகுண்டவரின் நாமம்பெறவோங்க
வந்தவரோ
தெய்வப்பாலர்கள்சிறந்துபோற்ற சீமையரசாளவந்தவரோ
மெய்வரம்பதின்முறைநடத்தி மேன்மைசெங்கோல்முடிதரித்து
பொர்மைபெரியோனே வைகுண்டனேபெரியப்பூமேடைக்
கொலுவீரனே
தர்மவரம்புகள்தவருமல் தரணியரசாளும்வைகுண்டரோ
திராசிஙிறையிலுந்துல்லிபமாய்ச் செங்கோல்செலுத்தவே
வந்தவரோ
மிராசுமூவர்க்குமுதன்மைதானே மூலச்சிவமணிக்குருநாதனே
சான்றோர்கைகட்டிசரணங்கூறத் தரணியொருக்குடைக்காள்
வானே
வையமழந்ததோர்நாரணர்க் குமதலையெனவந்தவைகுண்டமோ
தர்மபதியாழும்வைகுண்டரே சாணார்க்கனுகூலமானவரோ
அலைந்துமலைந்ததோர்சான்றோர்க்கு அதிகவிதிகொண்டு
பிறந்தவரோ
சாணுக்குடிக்கலநாயகமோ தர்மந்தழைக்கவேபிறந்தவரோ
தோணுதுறைகொண்டுவந்தவரோ துவாரப்பதியாளப்
பிறந்தவரே
ஏழுயுகபரக்கணக்கு யெல்லாமெடுத்துநடுதீர்க்கபிறந்தவரோ
ஆழும்வைகுண்டப் பதியாளவேயதியவைகுண்டம்பிறந்தவரோ
வீரவீராதிவீரன்ருனேவீர சூரனுரீன்றகண்ணே
சூராசூராதிசூரன்ருனே சூரனுர்பெற்றக்கண்மணியோ
நாதநாரணர்பெற்றகண்ணே நாகமணிநாதன்பெற்றகண்ணே
சீதைகுணநாதன்பெற்றகண்ணேசீதைமணவாழன்பெற்றகன்றே
ஏகச்சிவனுதன்பெற்றக்கண்ணேயிறவாச் திருமூர்த்திபெற்ற
கண்ணே

வேறு

சந்திரசுந்தரதந்திரமந்திர சாமிசீர்பாலகனே
தாயகமாயகநாயகமாகிய தாண்டசங்கரனே
சுந்திரசந்திரயந்திரகுஞ்சிதசூரிய பிறபாலகனே
சூரனேவீரனேமாதானே நீதனின்சூலகலாதிபனே
தந்திரமந்திரயிந்திரசுந்தரி சந்ததிசந்ததியோ
சகடவேலிசண்டரை யகடவெலிசெய்திடுஞ்சக்கிரவிக்கிரனே
கொந்தரிசந்ததிதந்திரசுந்தர கோசலானுயகனே
கொடுகலியறவொருகடுமுனை கொண்டருள்குலவேங்கிட
குண்டமோ
சுத்தனேகற்றநித்தனேவத்தனே துலங்கும்தங்கானே

சூரனேவீரனேதீரனேநீதனே சூரியப்பிறகாசவீதனே
வீரனேகாரனேதாரனேசாரனே வெங்கிடரங்கிடனே
விகட, கட, கடக, டகுட, டட, டகமருள் வேத விக்கிரசுக்கிரனே
தீரனேகாரனேசீரனேவீரனே செந்திலம்பதிவளர்சந்திரனே
திக, தக, தரிகிட செகமுமருள்புரிதிக்கிரவிக்கிரனே
நீதனேகீதனேவீதனேமாதனே நீதவெங்கோகுலனே
நிகடுகலிதகடதவிகடுகுடல் கருவறநெக்கிறவிக்கிறனே

### விருத்தம்

இப்படியவ்வைமாது யியல்புதாலாட்டக்கண்டு
செப்படிமுனிமாரெல்லாம் சிவவைந்தர்பதத்தில்சென்று
முப்படிமுறைபோல்தேவர் முக்கந்தன்பள்ளிகொள
அப்படிதேவரெல்லாம் அவரிசைகூறலுற்ருர்

### பள்ளியுணர்த்தல்

பள்ளியுணராய்சிவமருகாநீ பள்ளியுணராய்சிவமருகா
பள்ளியுணராய்நீ தெள்ளிமையாகவேபால்க்கடல்மீதினில்
தாக்குடனுதித்தவா
வெள்ளியுதித்திடபள்ளியுணர்த்தவும் வேதநாராயணர்
சீதகோபாலர்க்குகொள்ளியெனவந்த வைகுண்டகோவனே
கோவேங்கிரிவளரீசர்மருகோனே வள்ளிமணவாளா
வளர்செந்தூர்வாரியில்வந்துபிறந்து நல்தெட்சணம்புகுந்தவா
பள்ளியுணராய் சிவன்மருகாநீ [கள்
வேகமுடனெருசத்தத்துள்ளாடியே மேதினியோருக்குபகாரங்
செய்யவேஆகாத்தபேர்களே யக்கியில்தள்ளவுமாகின்ற
பேர்க்குபகாரங்கள்செய்யவும் தாகத்துக்கானதோர்
தண்ணீர்கொடுத்துநீர்சஞ்சலநோய்பிணியஞ்சர்க்குத்தீர்க்கவும்
யேகத்துடன்நாளும்நாராயண வேந்தர்க்குயெம்பியெனவரும்
தம்பிரானெனவா பள்ளியுணராய்சிவமருகாநீ
மூர்க்கன்கலியுராசனே தட்டியே முடுமுடுக்கம்செய்தமூர்க்கரை
வெட்டியேஆர்க்கமுடன் புவியன்பத்தாறுசீமையும்
அடக்கியொருசொல்லு குடைக்குள்ளேயாளவும் காக்கம்கா
தர்ம
கர்ப்பையும்காக்கவே கர்த்தனரிகிஷ்ணர்புத்திரராய்வரும்
தார்க்கதிறம்வளர் வைகுண்டராசரே [மருகாநீ
தர்மமதிலுறையும் பொறுமைகுலதீராபள்ளியுணராய்சிவன்
தம்பிலமானகுரோணி குண்டோமனைத்தத்தியாத்திலலை
மல்லாலனை
சூரனைவம்புயிரணிய ராவணசூரனைமகோதரனை துரியோதனப்
பாவியைகொம்பினும் கெம்பிலும்யம்பினல்க்கொன்னதோர்
கோபாலகிருஷ்ணகுளந்தை வைகுண்டரேநம்பினஅன்பர்க்
குபகார
சாலியேநாரணேசீமைகரிவிரியானவா பள்ளியுணராய்சிவன்
மருகாநீ

## விருத்தம்

பள்ளிதானுணர்த்த தேவர்பரிவுடன்கேட்டுவைந்தர்
தெள்ளிமைகுண்டராசர் சிந்தையில்அன்புகூர்ந்து
நள்ளியதேவரார்க்கும் நயமுடன்தயவுமீர்ந்து
துள்ளியேதகப்பன்பாதம் தொழுதவர்வணங்கிச்சொல்வார்

## நடை

தேவர்துயரமெல்லாந் தீர்ப்போங்காணென்றுசொல்லி
மேவலர்கள்போற்றும் விசையவைகுண்டராசர்
தகப்பனுடபதத்தில் சரணமிகப்பணிந்து
உகப்பரனூர்நோக்கி யுரைக்கின்றான்போரே
என்னையீடேற்றி யிரச்சிக்கும்பெம்மானே
மன்னேபிதாவே மாதாவேயென்தாயே
எல்லவிபரமதும் எடுத்துரைத்தீர்என்தனக்கு
நல்லோரேநானினிதான் நடக்கவிடைதாரும்
பண்டுள்ளவாகமம்போல் பால்வண்ணர்பெற்றிடும்
குண்டர்தெச்சணமே கொள்வார்தான்பள்ளியென
ஆதியாகமப்படியே யனுப்பிவையும்புவியில்
சோதிமணியே சுவாமியெனத்தொழுதார்
உடனேமகன்தனையும் உவந்துமுகத்தோடணைத்து
கடலில்ச்சிறப்பை கண்டாயோவென்றுசொல்லி
மகனேயுனைவிட்டு மறுவூருவாழ்வேனோ
நகமுஞ்சதைபோல் நான்வருவேனுன்கூட
எத்தனைகோடி யியல்தர்மஞ்செய்துவுன்னை
பெற்றெடுத்தேனுன்கூடே பிறகேவருவேனப்பா
நீயொருவனெனக்கு நிலையென்றுகாணுமுன்னெ
தாயில்லாப்பிள்ளையைப்போல்த் தட்டளிந்தேனென்மகளே
மகனேயுனைக்கண்டு மனச்சடவெல்லாந்தீர்த்தேன்
சுகமேபோய்வா வெனசொல்லியனுப்புவனோ
உன்கூடானு மோடிவருவேனப்பா
என்கூடஉன்தாயும் ஏகிவருவாள்காண்
என்றுதாய்தகப்பன் இவர்கள்வழிகொளவே
கண்டுவைகுண்டர் கனமாய்மனமகிழ்ந்து
நீங்கள்வருவதுதா னெனக்குவெகுசந்தோசம்
தாங்கிவருவேன் றமியேனுங்கள்பாதமதை
அப்போதுநாராயணர் மகனையாவிமிக
இப்போதென்மகனே யியம்புகிறபுத்தியைக்கேள்
சீமையதுகாணச் செல்வோங்காணுன்கூட
வாய்மைமகனே வருவோமுன்கண்காண
மகனேநீநடக்க வைகுண்டம்வைகுண்டமென
உகமீரேழுங்காண வுரைத்துவிடுயாமமது
முன்னடந்துயாமம் மொழிந்துநடயென்மகனே
பின்நடந்துனு மியாமம்பிசகாமல்
நடத்திவைப்பேன்மகனே நல்லமணிமரகதமே

அடத்திவிட்டயாமமது அணுப்போல்ப்பிசகாமல்
காட்டுவிப்பேன்மகனே கண்ணேநீமுன்னடநீ
தாட்டிமையாலுன்வாக்கால் தானுரைத்தயாமமெல்லாம்
நடத்திவைக்கவாறேன் என்மகனேயுன்பிறகே
கடல்திரைவாய்பதிகள் கண்டுசென்றுதானிருநீ
தண்ணிமண்ணீந்து தானிருபோஎன்மகனே
கண்ணிலுருகாணுங் கைக்குளொருகிள்ளைவரும்
பகைவன்மடிவான் பைங்கிள்ளையங்காகும்
உகவன்வருவானொருவனறிவான்காண்
பகவான்சுழற்றும் பாருலகமும்பழுக்கும்
அகங்காணும் பாந்தளஞ்சாச்சரங்காணும்
மூசியசீர்சிரசு முகாசிரசுமுன்காணும்
பார்சிரசுகண்டு வாறேனென்பாலகனே
தகையாதெமுன்னடநீ சந்தமுனிதன்கூட
பகையாதேஎன்மகனே பஞ்சவரைக்காத்துக்கொள்ளு
அஞ்சுபூக்கொண்டு வாசாரஞ்செய்தோர்க்கு
வஞ்சகமிலாதவாழ்வு கொடுஎன்மகனே
மகனேநீவாறவழியில் பவுசுகண்டு
தவமுடித்துநீயுந் தாண்டியிருயென்மகனே
என்றுவைகுண்டருட னிசைந்தமுனிரண்டுவிட்டு
கொண்டயச்சுக்காத்திருங்கோ குண்டருடபக்கமதில்
சாச்சியாய்பார்த்திருங்கோ தரணிவளப்பமெல்லாம்
காச்சிகொடுத்திருங்கோ கண்ணரியோன்முன்னிருந்து
கோபங்காட்டாதேயுங்கோ குணமுனிவரேகேளும்
சாபங்கொடாதேயுங்கோ சாத்திரமுனிவர்களே
நாராயணர்பிலன்கள் நன்ருயறிவீர்களே
சீரானபொறுமை செய்வதுநீகண்டிருங்கோ
வைகுண்டமாமுனிதான் வாழுந்தலத்தருகே
மெய்குண்டமாய்மேக்கு மேல்மூலையோர்தனக்கு
வடகீழ்மூலை மாமுனியோர்தனக்கு
இந்தப்படிகாத்திருங்கோ தருணம்வரை
சொந்தமுனிவர்களே செல்லுமிவர்கூட
என்றுமுனிகளுக்கு இயம்பச்சிவநாதன்
நன்றுநன்றென்று நன்முனிகள்சம்மதித்தார்
உடனேதான்வைகுண்ட ருள்ளம்மிகமகிழ்ந்து
கடலைமிகத்தாண்டிக் கரையிலேசெல்லுமுன்னே
தேவாதிதேவரெல்லாந் திருமுறைமிட்டனரே
ஆவலாதியாக வபயமிட்டதேவரெல்லாம்
வைகுண்டர்க்கேயபயமுறையமிட்டார்மாதேவர்
கைகண்டராசருக்குக் காதிலுறையபயமிட்டார்
நாரணருக்கேயபயம் நாதனுக்கேயபயம்
தோரணருக்கேயபயஞ் சுவாமியுமக்கபயம்

## வேறு

நாராயணுதீராநல்ல நாகந்தனில்த்துயில்வாய்
நாடுங்கலிகேடுவரும் நாதாயுமக்கபயம்

சீராய்ப்புவியாள வருவாயுனக்கபயம்சிவசிவனேசரணம்
சரணம்மகா
சிவனேயுனக் கபையம்பாராயேளேமுகமேபராபரமேயுமக்கபை
யம்பாலர்தெய்வச் சான்றோர்படுந்துயரந்தனைமாற்றும் நாரா
யணுதீரா நல்லநாகந்தனில்த்துயில்வாய் நலமோதுனக்கிது
நாள்வரைநாங்கள்படும் பாடுகடல்மேல்துயில் கண்ணுகனி
கண்டேகன்றையெறிந்தாய் களமேபெலி கொளவே கூளி
களிக்க யிலங்கையழித்தாய் குடைபோல் குன்றையெடுத்தாய்
முப்புரைக்கோட்டைதனையெரித்தாய் கோனிடை மாதரினை
கோனுகவே வளர்ந்தாய் காடேகாலிமேய்த்தாய் புனல்காழி
யன்றனை வதைத்தாய் கஞ்சனறனை வதைத்தாய் பிலகாறர்
பிலம் வதைத்தாய் மாடே மேய்த்து திரிந்தாய் மாவெலியைச்
சிறைவைத்தாய் கோசலாபுரியாண்டாய் வலுகுகனை மிகக்கண்
டாய் குரோணிதனை வதைத்தாய்வலு குண்டோமாசலியைக்
கொன்றாய் கொல்லத்தில்லை மல்லாலன்கொடுஞ்சூரன்றனை
வதைத்தாய் ஈடாய்வலி யிரணியன் குடலாருயோடக்கொன்றாய்
இரக்கமற்றத்துரியோதன னரக்கர்குலமறுத்தாய் இன்னங்கலி
நீசன்குலங் கொல்ல வரம் பெற்றாய்
ஏழைக்குடிசாதிகள்க்கு மீளவிடைகொடுத்தாய்
எழுந்துதெச்சணு புவியிலிரங்கிவரவேணும்
மாளகலிதாளநரகம் வீழவரம்பெத்தாய்
வாய்த்தகுலச் சான்றோரவர்க்கேற்றவரம்பெத்தாய்
வரவேணும் தெச்சணுபுரி மலைபோலுயர்ந்துபோகு
தேசக்கலிதீதுவனியாயம் பொறுக்கரிதோ
சிவனே வைகுந்தராசே தெச்சணுபூமியில் போவோம்
கேட்பாரில்லையெனவே பேய்கள் கீழுமேலுஞ்சாடுது
கிஷ்ணு மகாவிஷ்ணுவுன்கிருபை யிரங்கவேணும்
தாண்மைகுலச்சான்றோருன்னைத்தவத்தால்த்தேடி வருந்தும்
தாயுமவர் தகப்பன் சாமிதானேயல்லாலுண்டோ
சறுவ பராசாமி சிவசாமியுமக்கபயம்
சாணூர்படுந்துயரங்கண்டு சாமியெழுந்தருள்வாய்
ஆற்றிலலை கோரையைப்போலலைவதுந்தெரியாதோ
அரியேசிவகெதியேயென அபயமிடுகுதய்யா
அணைப்பாருந்துணையேயல்லாலவர்க்கேதேதுமுண்டோ
பலநாளவர்படும்பாடெல்லாம் பார்த்தேயிருந்தாயோ
பயமோவவரிடம் போகிலுஞ் செயமோசொல்லுமையா
பாலாவருமக்கேயல்லாபாராதிருப்பாயோ
ஆரும்மற்றூர்போலே யவரலைவதுந்தெரியாதோ
அரனேசிவமருகாவுன்க்கபயம்முனக்கபயம்
அவரால்நாங்கள்படும் பாடெல்லாம்மறியலையோசுவாமி
ஆதிமுறையாகமமதையழித்துச்சொல்லுறோமோ
அதுதான்பொய்யோ மெய்யோவென்றுகமந்தணைப்பாரும்
அண்டரண்டம்தொளவேவருமாதியுனக்கபயம்
அரகராசிவ அரனே சிவ அரசேயுனக்கபயம்
ஆதிசிவனுதிதவமோதியுனக்கபயம்

அய்யுங்கிலி சவ்வுங்கிண அரனேயுனக்கபயம்
அம்மாவாதி அய்யா சிவ மெய்யாவுனக்கபயம்
அரசே தெச்சணுபுவியில் வரவேணுமுனக்கபயம்
அந்தக்கலிதிந்தெய்யென்றறவேவரவேணும்
அத்திடக்கலி செத்திடக்கலியறவேவரவேணும்
அய்யக்கலியாவியேயறவேவரவேணும்
அவகடக்கலிசவகேடாகயழிக்கவரவேணும்
அன்பபத்தாறுசீமையொரு குடைக்குஆசாள்வாயுனக்கபயம்
அத்தாவுமக்கபயம் சுவமுத்தாவுனக்கபயம்
ஆதிநாராயணருக்குப் பாலனை குணதீரா
ஆதியுனக்கபயம் சிவசோதியுனக்கபயம்
அரனேசிவனர்க்கு மருகனைகுணபாலா
அலைவாய்க்கரைமடமாம்பதியாள் வாயுனக்கபயம்
ஐயாவைகுண்டா அலைகண்டர்யுனக்கபயம்
தாணுமாலையனைப்பேருதவைக்கச் சிவமுழைக்க
தானுயொருகுடைக்குள்தர்மதாரணியாளவந்தாய்
சாணுக்குருவே தகுரு தானுயுனக்கபயம்
தாண்டும்பதிக் கூண்டப்பதி தானுயுனக்கபயம்
தவமேதெச்சணுபூமியில்தானேவருவாயே

விருத்தம்

தெச்சணமீதேவந்து தெய்வமாய்யிருந்துகொண்டு
மிச்சமாய் புதுமைகாட்டி மேதினியெவருங்காண
உச்சமேசான்ருேர்க்கீந்துவுதவியுஞ்செய்வாயென்று
பச்சமாய்த்தேவரெல்லாம் வைகுந்தரின் பதத்தில்வீழ்ந்தார்

விருத்தம்

வீழ்ந்திட கண்டுவைகுந்தர்விடைவுள்ளதேவர் தன்னை
சோர்ந்திடமொழிகள்சொல்லித் தேவரேபதறவேண்டாம்
ஓர்ந்திடயெனக்குமுன்னே வுள்ளதுதானேயென்று
கூர்த்திடவுரைத்தீர்ரெல்லாம் குணமுடன்மகிழ்ந்துசொல்வார்

விருத்தம்

தெய்வமாதர்கள் தான்பெற்ற தேவரே சான்ருேர்க்கெல்லாம்
மெய்வரம்பதுபோல்ஞாயம் விழம்பிடப்பேறுபெற்றேன்
பொய்வரம்பசாசுயெல்லாம் பொன்றுறவரங்கள்பெற்றேன்
அய்வரைகாத்துத்தர்ம வரசுக்கும்பேறுபெற்றேன்

விருத்தம்

ஒருகுடையதற்குள்ளாள வொருவிஞ்சையதிகம்பெற்றேன்
கருவுடையோர்க்குங்காண கனவரம்பெற்றேனுனும்
மருகிநீர்தவிக்கவேண்டாம் வருவேனுன்சான்ருேரண்டை
குறுகலியதனைதாண்டிக்கொள்வேனுன் குலத்தைத்தானே

### விருத்தம்

என்னையேகெணியாவண்ண மேளையாயிருந்தசான்ரோர்
தன்னையேபழித்தோரெல்லாஞ் சளமதுதுயரங்கொண்டு
அன்னீசநரகந்தன்னிலகப்படத் தள்ளித்தள்ளி
கொன்றுநான்சான்ரோர்க் கெல்லாங்கொடுப்பேன்மேல்பவுசு
தானே

### விருத்தம்

எல்லாஞ்சான்ரோர்கையாலே யெள்ளுநீருங்கலிக்கிறைத்து
பொல்லாக்கலியையநரகமதில் புக்கவடித்துப்பேயோடு
கொல்லவிடைகள்கொடுப்பேநான் கூண்டசான்ரோர்கையதிலே
வல்லோர்புகழுந்தேவர்களே மனமேசடைக்கவேண்டாமே

### விருத்தம்

வேண்டாமெனவேதேவருக்கு விடைகள்கொடுத்துவைகுண்
டரும்
கூண்டாங்கடலின் கரைத்தாண்டிகுதித்தேகரையில்ஓடிவந்து
தாண்டாய்முன்னேபெற்றதொரு தாயிக்கோர்சடலவுருக்காட்டி
ஆண்டாராணையொருவருக்கு மகலாதெனவேயாணைகொண்டார்

### விருத்தம்

நானேபிறந்தசமுத்திரத்தின் னடுமேலக்கடலினன்னுபார்
ஏனேபதியும்மேடைகளுமெண்ணிப் பாருதேர்நிறமும்
மானேபொன்னேமண்டகமோ வறடேயுனக்குச்சாக்ஷியிது
யானேகாட்டுஞ்சொருபமெல்லாம் யாதாயிருநீமறவாதே

### விருத்தம்

பதமோபதமோபால்க்கடலின் பாலையகமேகொள்ளுயென
இதமாய்யிதமாய்ச்சொல்லிடவே யிசையாவண்ணம்வீழ்ந்திடவே
உதையமுதையம்வெழிதிறந்த வுருவையார்க்குமுரையாமல்
இதையேயிதையேமறந்துயென்னை யிழப்பம்பேசிநெகிழா
தென்ரூர்

### விருத்தம்

ஆண்டாயிரத்துயெட்டுமுன்னே யன்னையெனவேநீயிருந்தாய்
கூண்டாமெட்டமாசியிலே குணமாய்நாராயணர்மகவாய்
சான்ரோர்கெதிகள்பெற்றிடவே தர்மகுண்டம்பிறந்துவொரு
குன்ருக்குடைக்குளரசாளக் கொண்டேபெற்றேன்கண்டிருநீ

### நடை

வைகுண்டம்பிறந்து வார்த்தையொன்ரேகுடைக்குள்
பொய்கொண்டபேரைப் பெலிசெய்தரசாள
கொன்றுநான்போறேன் குலக்கிளடேபாரெனவே
அன்றுவைகுண்டரவர் நடந்தார்தெச்சணத்தில்
கெங்கைக்குலதாயைக் கிஷ்ணர்வரவழைத்து
நங்கையெயென்னுடைய நாமமதுகேட்டதுண்டால்

பால்போலப்பதம்போல பாவந்தீரன்பருக்கு
சூல்புத்திவன்பருக்குச் சூதுசெய்மங்கையரே
என்றுவைகுண்டரி யாமம்கூறிகூறி
இன்றுதெச்சணம் போகயெழுந்தருளியேவருக
சகலவுலகோருஞ் சந்தோஷங்கொண்டாட
புகலயெழிதில்லாத பெரியநாராயணர்க்கு
வைகுண்டம்பிறந்து வார்த்தையொன்றோர்குடைக்குள்
மெய்கொண்டமுப்பொருளோர் மேனியொன்றுய்த்திரண்டு
எல்லாவரமுமிவர்க்கு மிகக்கொடுத்து
நல்லோர்க்குக்காலம் நலமாகுமென்றுசொல்லி
வானலோகம்வாழும் வானவருந்தானவரும்
தானேமுன்ஞகமங்கள் தப்பாதிடைமுனிவர்
வகுத்திருந்தவாகமங்கள் நிறைவேறிவந்ததென்று
மாமுனிவரெல்லோருமாச்ந் தோசங்கொண்டாடி
நாமுமெதிரேபோய் நல்லவைகுண்டர்பதம்
கண்டுகொள்வோமென்று கனமுனிவரெல்லோரும்
கொண்டுமலர்பூக்கள் கோமான்கால்மீசொரிந்து
கொற்றவருமாண்டு குறும்புமிகப்பெருத்து
உற்றதுலுக்கனுடன் வந்துட்டோடி
மற்றொருபத்தாண்டில் வருவோமென்றுகமத்தின்
வர்த்தமானம்போலே வந்தவைகுண்டரென
எல்லோரும்போற்றி எதிர்நின்றுவாழ்த்திடவே
நல்லோர்எங்களையும் நாருயணர்மகனே
உன்கிருபைதந்து உதவிதருவாய்மேலும்
முன்கிருபையெல்லாம் முனக்குவசமாச்சுதல்லோ
முப்பொருளுநீதாரு யுருவெடுத்தாய் ஆனதினல்
எப்பொருளைக்கண்டு யியல்புபெறபோரோங்காண்
வைகுண்டமாமுனியே மனதிரங்கிக்காக்கவேணும்
மெய்குண்டர்பதத்தில் வீழ்ந்துநமஸ்கரித்தார்
அப்போதுவானோர்க்காதி வைகுண்டருரைப்பார்
இப்போதுவானோரே யெனையறிந்ததெந்தவிதம்
என்றுவைகுண்ட ரியல்பறியச்சொல்லிடவே
அன்றுவானோர்க ளெல்லாருமேதுரைப்பார்
கைலயங்கிரியிலுள்ள கணக்குமுதலுள்ளதெல்லாம்
ஒயிலாகப்பிறப்புயிர் கணக்கானதுவும்
தத்துக்கணக்குஞ்சஞ்சல முதல்க்கணக்கும்
பத்துங்கணக்கும் பலன்பெற்றோர்தன்கணக்கும்
மோச்சக்கணக்கும் முன்னுள்ளயுகக்கணக்கும்
வாச்சக்கணக்கும் வைகுண்டநல்க்கணக்கும்
நரகக்கணக்கும் நடுத்தீர்வைக்கணக்கும்
தர்மக்கணக்கும் சகலக்கணக்குமுதலாய்
பொற்மைபிரமா பூசாந்திரக்கணக்கும்
எல்லாக்கணக்கு மெடுத்துமிகதேரெல்லாம்
வல்லாகைலைவிட்டு வருவதுகண்டேயடியார்

தியங்கிமனங்கலங்கித் தேவரோடேக்கேட்டோம்
மயங்கிமிகக்கேட்டிடவே மாதேவரேதுரைப்பார்
நாராணர்க்கு நல்லவைகுண்டம்பிறந்து
சீராயுலகமெல்லாஞ் சிறந்தேயொருகுடைக்குள்
ஆளவருவதினல் அவர்கைக்குளிக்கணக்கு
நீளவரன்சிவனும் நெடியமருகோனும்
இன்னுள்முதலாயேள்ப்பிக்கவேணுமென்று
சொன்னர்காணெங்களேயுஞ் சுருதிக்கணக்கையெல்லாம்
பொன்னுலோகம்புகுந்து பெட்டகத்தோடேயெடுத்து
வாருமெனவயச்சார் மாபரனுமாலோனும்
சேரும்வைகுண்டஞ் சீணம்பிறந்தாரென்றுசொல்லி
ஆனதினலிப்போ யாங்கள்க்கொடுபோருமென்ருர்
நானதுநாள்கேட்டு நன்ருயறிந்தோமென்ருர்
அப்போதுவைகுண்ட ராசர்மிகவுரைப்பார்
இப்போதுவானவரே யெல்லோருமென்கூட
வாருங்கோவென்று வைகுண்டர்சொல்லலுற்ருர்
சீருங்கோபாலச் சிவனேசியலெனவே
வானவர்கள்தேவர்முதல் மறைமுனிகள்சாஸ்திரிகள்
தானவர்களுங்கூடச் சங்கீதம்பாடிவர
சந்திரசூரியர்கள் தம்மானக்குடைபிடிக்க
சுந்தாஞ்சேர்வைகுண்டஞ் தோன்றிவந்தாரெனவே
வேதமறையோரும் விசயம்முனிவர்களும்
நாதாந்தவேதமதை நன்ருய்தெளிந்தெடுத்து
கோமான்வளருங் கோவேங்கிரிதனிலே
நாமாதுவாழும்நல்ல திருமண்டபத்தில்
தங்கநிறத்தூணில் சதுர்மறையோர்கள்தான்கூடி
எங்குமகிழ யெழுதினரம்மானை

## வாசகம்

ஏகமொருபரமானதும் இம்மொன்ருெரு வாயுவில் சத்தி வளேந்ததும் சத்தியிலெ சிவன் தோன்றியுஞ் சிவத்தில் சத்திதோன்றியும் சத்தியில் நாதந் தோன்றியும் நாதத்தில் விஷ்ணு தோன்றியும் ருத்திரர்மயேசுரர் தோன்றியும் உலகில் அண்ட பிண்டந்தோன்றியும் பிண்டத்திலக்குருேணியசுரன் தோன்றியும் குருேணிவான லோகமுழுங்கவும் கோபத்தால் விஷ்ணு சென்று குருேணியைத் துண்டாருய் வெட்டியுலகில் தள்ளவும் துண்டமொன்றிலே குண்டோமசாலி பிறக்கவும் சுகசோபனமண்டபமலேயவிழித்ததும் திருமருகாது கேள்க்கவும் தேவாதிகளே நாங்கிலாக்கி வரையானதைத் தூண்டலாக்கி மறையைக் கயிருக்கி வாயுவைத் தோணியாக்கி வருணனே மிதப்பாக்கி கடலேயோடையாக்கி காயாம்புவண்ணர் வோடமேறியே கரக்கண்டர் வோணித்தள்ளவே கன்னியிலே தூண்டலுமிட்டு அக்குண்டோமசாலியையும் வதைத்து மறுயுகந்தோன்றியே தில்லேமல்லாலன்மல்லோசிவர்களென்ற யிருபேருடையவனியாயம் பொறுக்காமலே அவனிருவரையுஞ் சங்காரமுஞ்செய்து அடுத்த

யுகந்தோன்றியே சூரன்சிங்கமுகாசூரன் செய்தவனியாம் பொறுக்காமலே ஆதித்திருமால் ஆறுமுகக் கடவுளென நாமமுங் கூறியே அவனைச் சங்காரமுஞ் செய்து அவ்வுலகத்திலே பிறந்த சூரனிரணியனையும் வதைத்துயந்த யுகமுமழித்து யடுத்தயுகந் தோன்றியே அரக்கன் ராவணசங்காரமுஞ் செய்து சீதா பிராட்டியினுடைய சிறையை மீட்டித் தென்னிலங்காபுரியரக் கரையுங்கொன்று அக்கிழையொழிய வக்குலமுமறுத்து யடுத்த யுகந்தோன்றியே பஞ்சவர்க்குபகாரியாகியே பகைத்து துரியோ தனனையும் வதைத்துபஞ்சவர்களுக்குக்கு நாடுபட்டமுஞ்சூட்டியே யரசாள வைத்துக் கலிவருவானெனக் காற்று வீசினதைக் காதிலே கேட்டுக் கானகவழிநடந்து கங்கையுங்கண்டு கங்கை யிலேக்குளித்த கன்னிமார்ப் பெண்களுடைய கற்பையுஞ் சோதித்து கைலேயங்கிரி சென்று யேழுலோகம் புகுந்து யேழு வித்துமெடுத்து ஏழு தெய்வக் கன்னிமார் பெண்களுக்கீந்து யெரியுங்கட்டையெனக் கிடந்து யேந்திழைமாரைச் சூழவனிழயும் படியாக்கொந்தலுமெழுப்பி ஏழு பெண்களுக்கு ஏழுமதலேயுங் கொடுத்து தவசுக்குக் கன்னிமாரையும்மனுப்பிப் பத்திரகாளிக் கிட்டேப் பாலரையுங்கொடுத்து பச்சமாலேச் சுமந்திருந்த பாயமாயக்கூட்டையும் பறுவதாவுச்சிமலேயுலேக்கிடத்தி பஞ்ச வர்களுடைப்பாரபிலன்களேயும் வாங்கிச் சிறீரங்கம் போய் ஜெகமறியும்படிப்பள்ளிகொண்டிருந்ததும் தேவாதிகளுடைய வாக்கினுலே ஈசுரர்தானே கலியனேயும் பிறவி செய்து இருநூற்றி முப்பத்து நூருயிரம்வருஷமாகக் கட்டங்கொடுமை செய்து அவனி யரசாண்டு கன்னி மக்களாகிய சான்ருேர்படுகிற மறுக்கம் பொறுக்காமாலே வியாகரிடமுனிவர் வகுத்த ஆகமத்தின்படியே மகாபரர் நாராயணர்தானே வைகுண்டமாய் பிறந்து ஒரு குடைக் குள் 1008–ளு மாசியிலே அஞ்சிமூவஞ்சித் தெய்தியிலே அவனி மனுவிலே ஆதிச்சாதியிலே மனுநிறமாக வந்திருந்து ஜாதி பதி னெண்ணேயுமோர் தலத்திலே வருத்தியேத்தர்ம மாகத்தரணியா பேர்க்கு நோய்பிணித்தண்ணீரால்த் தீர்க்கவும் சந்ததியில்லாத பேர்க்குச் சந்ததி கொடுக்கவும் தனமில்லாத பேர்க்குத் தனங் கொடுக்கவும் சாதவாத பேய்களேச் சரிவிலே யெரித்துக்கரியச் செய்யவும் தரணியேழுக்கணக்கையும் கேட்டு மிகச்சத்தியா யன்பு மனிதருக்காகவே தரணியில் நாலுதரஞ்சளங்கள் படவும் சாஸ்திரவேத நூலுக்குச்சரியொத்தபேர்களுக்குபகாரங்கள் செய்யவும் சண்டையாய்க் கலியனேத் தன்ருலே போக்கவும் தர்மமாகத்தரணியொரு குடைக்குள்ளாளவும் தங்கநவரத்தினத் திருமுடியே சகலமாபதி மேடைகள் பாவிக்கவும் தவசுக் கிருபைபெறவும் தங்கமணிச்சக்கிராயுதக் கொடியேத்தக் கொடி கெட்டவும் சகலரும் புகழ ஒரு தர்மராஜாவாகவும் சங்க விருதுக் கொடியொத்தக்கொடி கெட்டவும் அட்டதிக்கு பதினுலு லோகமு மறிய அசையாமணியொன்று கெட்டியே யரசுபாவிக்கவும் ஆதிச் சர்வேசுவரனுகியே யவனியன்பத்தாறு சீமையுமடக்கியரசாளவும் ஆதிச்சர்வகாலமுமழியாத திருவுளமாயிருந்தரசாள்வாரென்று

ஆதிராமச்சந்திர சூரியநாராயணர்க்கு யாகமத்தின்படியாகவே யாதிவைகுண்டம் பிறந்தாரென்று யண்டர்களும் முனிவர்களும் தேவர்களுமதிக சகலமாமுனிவர்களும்– அல்லோருங் கூடியிருந் தாராய்ந்துத் தொண்டர்த்தனக்கென்று வளர்கொன்றைய ணிகக்கயிலையில் மண்டபம் புகழவே சிவனுருடைய கிருபையி னுலே ஈன்றவர் கைலையங்கிரியில் எழுதினர்.

நடை

அன்றந்ததேவர்முனி யெல்லோருந்தான்கூடி
சென்றந்தக்கைலைச் செகத்தூணிலேதரித்தார்
வைகுண்டர்பாதமதை வாழ்த்திக்குவித்துவர
மெய்கொண்டநாதன் வேலவன்செந்தூரனுகி
நடக்கூவறுமுகனும் நடுங்கிமிகப்பதறி
வடக்குமுகமாய்விழுந்து வைகுண்டரைப்போற்றி
அப்போதுவேலவனை ஆதிவைகுண்டர்பார்த்து
செப்புகிருர்குண்டச் சிவநாதக்கண்மணியும்
நாடுகேள்க்கப்போறே நாரணன்நான்தானும்
கேடுவருமுனக்கு கேள்விகேளாதிருந்தால்
இத்தனைநாளும் என்னைக்கெணியாமல்
புத்தியறியாதவர்போலப் புலம்பிநீரித்தனைநாள்
இனிவைகுண்டம் பிறந்தேகமொருகுடைக்குள்
மனுவொருசொல்லாக மகாதர்மமேநினைத்து
மாய்கையறுத்து மாற்ருன்கருவறுத்து
தோயக்குளிமூடி தொல்புவியைத்தாளுள
நல்லோர்களெடுக்க நான்போறேன்கண்டாயோ
கல்லார்த்தனக்கு கசப்பினிமேல்கண்டாயோ
தர்மவைகுண்டம் தான்பிறந்தேன்னிப்போது
நன்மையினிக்காணும் நாரணன்காணல்லாது
தின்மையென்றசொல் லாகாதுகண்டாயே
தர்மசிறப்பு தானினிமேல்க்கண்டாயே
ஆனதாலுந்தனக் கியானினிமேல்சொல்லும்புத்தி
வானஞ்சூழ்ந்தவையகங்கள் வாழுகின்றமண்டபங்கள்
எத்தனையோ வத்தனையிலிருக்கின்றதேவரெல்லாம்
அத்தனையுபேருமறியும்படி சொல்லுவேன்
காணிக்கைவேண்டாதுங்கோ கைக்கூலிகேளாதுங்கோ
மாணிக்கவைகுண்டம் வல்லாத்தான்கண்டிருங்கோ
பூசையேராதிருங்கோ பெலிதீபமேராதுங்கோ
ஆசைவையாதிருங்கோ வவகடஞ்செய்யாதுங்கோ
ஞாயமுறைதப்பி நன்றிமறவாதுங்கோ
மாயநினைவுமனதில் நினையாதுங்கோ
வைகுண்டாவென்று மனதில்நினைத்திருங்கோ
பொய்கொண்டதேரோட்டம் புளக்காரமேராதுங்கோ

தாதிகைகாட் டல்சப்பிறங்களேருதுங்கோ
மோதிப்பேசாதிருங்கோ மோகம்பாராட்டதுங்கோ
ஆலத்திகைவிழக்கு வாராட்டுப்பாராதுங்கோ
சாலத்திப்பாராதுங்கோ சகலப்பூவேருதுங்கோ
கொளுந்துமஞ்சணைமாலைக்குப் பையுடன்சந்தனமும்
விழுந்துநமஸ்காரமுதல் வேண்டாமென்றுசொல்லிடுங்கோ
கூவென்றுரையாதுங்கோ கொக்கரித்துப்பேசாதுங்கோ
ஓவென்றுரையாதுங்கோ ஓமமுறையேராதுங்கோ
தீவரணைக்காணுதுங்கோ திருநாளைப்பாராதுங்கோ
எல்லாம்வெறுத்திருங்கோ வித்தனைபோலுள்ளதுதான்
அல்லாமல்மீறி யாதொருவர்செய்ததுண்டால்
வல்லாத்தக்கோபம்வரும் வைகுண்டருக்கே
நல்லாரேயாகவென்ருல் ஞாயமதிலெநில்லும்
என்றுவைகுண்டமியம்பக் கந்தனுரைப்பான்
மன்றுதனையழந்த வைகுண்டநாரணரே
நீருரைத்தசட்டமதில்: நிலைதவருேம்நாங்கடியார்
காரும்நீரென்று கந்தனடிதொழுதான்
அப்போதுவைகுண்ட ராஜர்மிகவுரைப்பார்
இப்போதுசொன்னதெல்லா மெனக்குநிசமாகவென்ருல்
உன்கோபுரத்தின் உயர்ந்தவடமூலையில்
பின்கோபுரங்காண பிழந்துபோடென்றுரைத்தார்
அல்லாமலுன்னையென்ற வனியுண்டாக்கிவைத்து
செல்லாச்சிலையைத் திருப்பிவிடுதெற்குமுகம்
உலகோரறிய வொருவாயிலுமடைத்து
கலகமாய்க்கண்மூடிக் கவிழ்ந்திருப்பாயோவென்ருர்
அல்லாதெனைமறந் தளிச்சாட்டமாய்நடந்தால்
வல்லாத்தகோபம்வரும் வைகுண்டருக்கே
பொல்லாதவனேயுனக்கு பெருவிலங்குசிக்குமென்ருர்
அப்போதுகந்தனுவி மிகக்கலங்கி
இப்போதுசொன்ன தெல்லாமியானினிச்செய்வேனென்று
ஆதிவுரைத்தது போலடியார்நடப்போமென்ருர்
சோதிவைகுண்டஞ் சொல்வாரவரோடு
நிலையழியாதிருங்கோ நீதியாய்நின்றிடுங்கோ
உலகறியநானுமொரு நெல்லடுக்குமுன்னே
பலசோதனையும்பார்த்து நடுத்தீர்ப்புசெய்வேன்
விடியும்பொழுது வேஷம்பலதணிவேன்
பிடியுமனமுடனே பெரியயுகமாளவைப்பேன்
வருவோமொருநெல் மாறியெடுக்குமுன்னே
கருதியிருங்கோ கருத்தயர்ந்துபோகாதுங்கோ
என்றுவைகுண்ட மித்தனையுங்கந்தனுக்கு
மன்றுக்குமென்று மறவாதுங்கோவெனவே
அதைவிட்டவர்நடக்க வாகாயங்கொண்டனரே
இதைவிட்டவர்நடந்தேகாயமாகிவர

### விருத்தம்

அண்டரொடுதெண்டனிட்டென்றிசைநின்றுவருமாதவனை
சூழ்கணம்போல்
அரியரியரகராசிவசிவாவென்றுசிலராடியேபாடிவரவே
தொண்டவர்கண்டுவைகுண்டரடிகொண்டுதொழச்சூழவளேந்
தேளியல்படர்தே
சூரர்பதிநாராயணர்வீரர்பதம் ஓதிவரசூராதிசூரரெனவே

### விருத்தம்

செண்டையொடுதண்டைமணிடண்டடம்டண்டமெனதேவர்
சேவித்துவரவே
சிவனமசிவாயாமெனுமோ நமசிவாயாமெனும்சேவித்திருபுற
முவரவே
அண்டீமுரசெண்டுமணிடுண்டுடும்டுண்டுமென ஆகாயமீதில்
வரவே
அனவர தகோலாகலாதிநாரணமென்றுயமரரிசைகூறிவரவே

### விருத்தம்

மத்தளமுடுக்குபலவாத்தியம்மடமடெனவானமதில்நீன்றதிரவே
மலர்மாரிசலமாரிதினமாரிதூவியேவானவர்கள் இசைகூறவே
தத்தளங்கிடகிடத்தோமெனத் தோமெனசங்கீதகாரர்வரவே
சகலகலேக்கியானவேதசாதி முறையோதிமிகுசாத்திரக்
காரர்வரவே

### விருத்தம்

தித்தங்கிணதித்தங்கிணதித்தங்கிண தித்தெய்யெனச்சில
தேவர்கூறிவரவே
சிவசிவசிவாசிவாசிவவென்று சிலதேவர்சேவித்தியல்கூறிவரவே
தித்தங்கிண தித்தங்கிணதித்தங்கிண தித்தெய்யெனநேரியர்
சீரியல்கூறவே
நீலங்கிரிவாலங்குருநீயென்குரு தாயென்குருநீதென்குரு
வெனபோற்றினர்

### விருத்தம்

பண்டைமுறையின்றுவெனகுண்டமெனகண்டுவரும்பலவாங்கிரி
குண்டமே
பசுவாமனேசிசுபாலனேபலமானனே தலமானனேபசுவாகிய
நிசமே
தொண்டர்தனக்கென்றுவரு குண்டவைகுண்டனுய்த்தெச்
சனபதிபூபனே
துளபமணிகளபமேனியழகொழுகு கிருபைமிகுத்துவராபதிக்
கரசேயெனதொழுது

சண்டன்வலிதுண்டப்படகொண்ட கணைவிண்டத்தோடு
துச்சாவில்லுவீரா
சாமியுன்றுளோயெங்கடலையின்மீதலையின்வழிதானேநடவாயே
துண்டப்படவண்டச்சரங்கண்டப்படப்பொண்டத்தொடுத்துச்
சாவில்லுதீரா
சுத்தவுனக்கேத்தார்தலைவித்தானதில் வித்தாயதுவராபதிக்
கரசேயெனதொழுதார்

நடை

தேவர்தொழுது திக்கெங்கும்போற்றிவர
தாவமுள்ளவானோர் சங்கீதம்பாடிவர
வேதமறையோர்கள் வேதகலையோதிவர
நாதமொடுசங்கு நகராமுளங்கிவர
மத்தளமேலோர்மடமடென்றேற்றிவர
தித்தியெனதேவரெல்லாம் பாடிவர
சாத்திரவேத சாதிமுறைவோதிவர
நால்திசையும்போற்றி நால்சாதியும்வரவே
அரம்பையர்களாடி யாலத்தியேந்திவர
வரம்பஸராமாமுனிவர் வரிசைமிகக்கூறிவர
நாதாந்தவேதம் நவில்வோர்நெருங்கிவர
மாதவர்களெல்லாம் மலர்மாரிதூவிவர
கண்டங்ககமகிழ்ந்து கண்ணனநாரணரும்
கொண்டாடிதேவரோடு கூறுவாரன்போரே
மனுக்கண்காண வரவேண்டுமென்பிறகே
தனுக்கானயேகமதில் சகலத்தோருமறிய
வாருங்கோயென்னுடனே வானவரேதேவர்களே
வானமதினின்று வாத்தியங்களேத்திவர
தானவர்கண்முதலாய் சங்கமுதல்வரவே
ஆகாயமீதில் யாபேரும்போற்றிவர
வாகானசூரியனும் வந்துகுடைநிழற்ற
நன்றானவைகுண்டர் நல்லசெந்தூர்தானுமிட்டு
வண்டாடும்சோலை வாய்த்தவனங்கள்விட்டு
சோலைத்தெருக்கள்விட்டு செந்தூர்தலங்கள்விட்டு
ஆலைத்தெருக்கள்விட்டு யந்தூர்பதிகள்விட்டு
மண்டபமேடைவிட்டு மடங்கள்மிகக்கடந்து
தண்டமிழ்செந்தூர்தலத்தை விட்டுப்போவதற்கு
நிற்கின்றபோது நிலையுள்ளமாமுனிவர்
நக்கன்மருகனுட நல்லடியில்வீழ்ந்து
செந்தூர்தலத்தைவிட்டு தெச்சணபூமியிலே
இந்தவேளைதனிலே யெழுந்தருளவேண்டியதேன்
இங்கோர்பகைத்ததென்ன யென்னுடையநாயகமே
சங்கமகிழ்வேந்தே தானுரைக்கவேணுமென்றார்
அப்போதுநாராயணர் மகிழ்ந்தேதுரைப்பார்
இப்போதுகேட்டதற்கு இயல்புரைக்ககேளுமினி
கேள்விகேளாநீசன் கெடுவதறியாமல்
நாள்வழியாய்ச்சான்றோரை நியாயமில்லாதடித்தான்

சொன்னேன்புத்தி நீசனுக்குதிருவனந்தமேயிருந்து
என்னையும்பாராமலிளப்பமிட்டான் சான்றோரை
ஆனதினால்நீசனுக்கு யர்னதிககோபமுடன்
நானவ்வூர்விட்டு நாடிவந்தேன்செந்தூரு
இங்கேயிருந்தேன்யான் சிறிதுகாலங்களெல்லாம்
வெங்கைப்பயல்சிலர்கள் வேசையுடனுசையினால்
என்னைக்கெணியாமல் யென்கோவிலுள்ளேதான்
சன்னைச்சொல்லிப் பெண்களுடன்சரசுமிட்டெச்சிட்டான்
இருவரும்ஒத்திருந்தாலும்பழுதல்லவே
ஒருவன்பெண்ணை வொருநம்பூரிப்பிடித்து
எனக்கேவல்பண்ணி யேந்திளையாள்போகுகையில்
மனக்குழலிதன்னுடைய மார்பிற்கலைப்பிடித்து
இளுத்துவலித்து யிழுக்கேடுசெய்யவென்று
பழுத்துச்சழிந்த பருத்தஒருநம்பூரி
மேல்த்லையில்விட்ட முத்திரிகழற்றுமல்
மால்மயக்கத்தாலே மனம்கலங்கிநம்பூரி
மங்கைமனங்கலங்க வாரிப்பிடித்திழுத்து
கொங்கைதனைபங்கமதாய் கூறளியவேகிழித்து
வேதனைகள்செய்ய மெல்லியவள்கோபமுற்று
மோதியென்பேரிலொரு சாபம்கூறினளே
நாரணுகந்தா நானுனக்கேவல்பண்ணி
காரணங்களாச்சு கடசுநாள்தானுச்சு
உனக்குமிந்தப்பதிதானுறவு கேடாச்சுதைய்யா
எனக்குமொருபிறவி யின்றுவந்துவாச்சுதென்று
செந்தூர்தலங்கள் சிலநாள்கள்செல்லுமுன்னே
மண்டூர்ந்துபோகுமென்று மாதுமிகச்சாபமிட்டாள்
சாபமிட்டுமங்கை தக்மகன்றுகீழ்விழுந்து
சீவனதுவிட்டிடவே சிவனைக்கண்நோக்கினளே
நம்பூரிபங்கத்தாலே யந்தநாயகியும்
உம்பர்கோனூரில் உயிர்விட்டாள்மாமுனியே
தவறுதமங்கை தானுரைத்தசாபமதால்
இதறுயெனக்குயிங்கிருக்கமனம்கூடாமல்
எங்கேயோபோவோமென்றிதைவிட்டுஎழுந்திருந்து
மங்கைசொன்னநாள்முதல் தெக்குவாரியிலேபோயிருந்தேன்
அல்லாமலிங்கே யழிமதிகள்ரெம்பரெம்ப
வல்லாண்மையாக வலுஞாயம்காணுதுகாண்
முன்னடப்புமங்கையர்கள் முங்கிகுளித்துமிக
என்னடையில் வந்தேந்திளைமாராடுவது
ஆடவரும்போத சுத்தத்தோடும்வாராள்
பாடவரும்போது பண்ணுருள்சுத்தமது
கோவிலிலேபூசை செய்யுங்குறும்பர்மிகத்துணிந்து
தேவியர்க்கீயத் திருடுகிறுரென்முதலை
கணக்கன்முதல்நம்பூரிகள்ளப்பெண்ணுர்களுக்கு
இணக்கமதாயிருந்தென் முதலைகொள்ளைகொண்டு

எடுக்கிறார்பெண்களெச்சியாட்டும்மாடி
ஒருக்கிறார்பெண்கள் ஒன்னுக்கொண்ணைத்திருந்து
பம்பைப்பரத்தை பகட்டுக்கைக்காட்டலெல்லாம்
எம்பரனுக்கேற்ற யியல்பல்லாமாமுனியே
ஆனதால்இவ்வகைகள் யான்வேண்டாமெனவே
மானமழியுமுன்னே மாமுனியேதெச்சணத்தில்
பள்ளிகொண்டுநானிருந்து பார்த்துச்சிலநாள்கழித்து
கள்ளியாட்டுக்காவடி கைக்கூலிதான்முதலாய்
நிறுத்தல்செய்யவேண்டிய தெல்லாமிகநிறுத்தி
பொறுத்தரசுதர்மம் புவியாளப்போறேனினி
மாமுனிக்குச்சொல்லி வளிகொண்டார்தெச்சணமே
தான்முனிந்தய்யா தவருதமாமுனியும்
தெச்சணத்துக்கேகவென்று திருச்சம்பதியிருந்து
உச்சமதுகொண்டு கச்சாபமுங்கூறி
நடந்துவரவே நல்லசெந்தூர்தானுமிட்டு
கடந்துதருவைக் கரைவழியேதேவரெல்லாம்
சங்கீதங்கூறி தானேயவர்வரவே
மங்களநாதன் மனுச்சொருபமேயெடுத்து
நருக்கள்மிகக்காண நால்திசைக்குமேவிவந்தார்
மருக்கள்மிகவந்து வாசமிட்டுக்கூடிவர
கீழ்நடைவிடாமல் கிருபையுள்ளவைகுண்டரை
தாழ்நடைவிடாமல் சார்பூதமேந்திவர
அப்போதுபூதமதை யல்லக்காணென்றுசொல்லி
மைப்போடுங்கண்ணர் மாபூதமதைவிலக்கி
நீங்களெனைச்சுமந்தால் நீணிலத்துசோதனையில்
தாங்கள்மீறிநடந்தால் தகுமோநான்கேட்பதற்கு
வேண்டாங்காண்நாரணர்க்கு வேதாளாவுன்வேலை
பாண்டவர்களான பஞ்சவர்களுண்டெனக்கு
என்றுவைகுண்ட ரிசயதிசைநடந்தார்
தொண்டுசெய்யாமல் சூல்பூதமாடிவர
பூக்கொண்டுவந்து போட்டுத்தொழுவாரும்
தீக்கொண்டுவந்து தீபரணைகாட்டுவாரும்
மலர்வீசிக்காற்று மறைவீசிநிற்பதுவும்
சிலம்பொன்றுழிபோல் சிறப்புடனேதூவிவர
மதியுங்குடைபிடிக்க வாயுமறைவீச
துதியும்வழிதீயக்கத் தேவர்கள்மிகவோலமிட
இத்தனைநல்சிறப்பு மியல்வாய்முளக்கிவர
புத்தியுள்ளநாரணரும் புறப்பட்டார்தெச்சணமே
நதியில்ப்பிறந்த நாராயணமூர்த்தி
பதியினலங்காரம் பார்த்துவழிநடந்தார்
கெங்கைதனில்ப்பிறந்த கிருஷ்ணமகாநாதர்
கங்கைவழிநோக்கிக் கண்ணோன்வழிநடந்தார்
நடந்துவரும்நல்ல வைகுண்டர்முன்னே
கடந்துமுன்போன காண்டாமிருகமோடு

சிங்கமியாளி செங்கருடனங்கனுமன்
பங்கமிலாருஞ்சி பால்நிறுப்பச்சிகளும்
ஐந்தலைநாகமஞ்சு பஞ்சாச்சாரை
செந்தலைக்கருடன் செய்யகாண்டாமிருகம்
கலியன்கண்காணுதே காடோடிவாழ்ந்திருந்த
சலிவில்லாமாமிருகம் சந்தப்பச்சிமுதலாய்
தர்மவைகுண்டர்தான் வந்தாரென்றுசொல்லி
பொறுமைகுலங்களெல்லாம் புறப்பட்டகமகிழ்ந்து
வந்துவைகுண்டர் மலரடியைப்பூண்டுகொண்டு
சிந்தைகுலமன்னு தெய்வப்பெருமாளே
வைகுண்டரெப்போ வருவீர்வருவீரென்று
கைகண்டநிதியும் காணுதார்போலிருந்தோம்
கப்பல்கரைகண்டார்போல் கண்டோமேயும்மையும்நாம்
செப்பத்துலையாத திருவடியைப்போற்றிசெய்ய
வாருேங்காணும்முடனே வைகுண்டப்பெருமானே
தாருேம்காண எம்முதுகு சாமியுன்பாதமதுன்
என்றிவைகளெல்லாம் இரங்கிதொழுதிடவே
நன்றென்றுயர்ந்த நாராயணருரைப்பார்
ஒருவிழிபொறுங்கோ உண்மையிதுதப்பாது
இருவிழிக்குள்ளே என்னிடத்தில்வந்திருங்கோ
இதுமுன்னயச்ச யிடத்திலேபோயிருங்கோ
கருதியிருங்கோ கருத்தயர்ந்து போகாதிருங்கோ
அலையவிடாதிருங்கோ வஞ்சுபஞ்சமதையும்
குலையவிடாதிருங்கோ குருநினைவையுள்ளேற்றும்
என்றவ்வகைகள்க் கெம்பெருமாள்சட்டமிட்டு
அன்றவர்களையும் யனுப்பிமிகநடந்தார்
நடந்துபலதிக்குமிட்டு நல்லவனவாசமிட்டு
கடந்துசிலவூருமிட்டு கடல்வழியேதானடந்தார்
ரசகனிகளேத்து ராவுபகல்நடந்தார்
விசைகொண்டராசர் வீசாவீதிநடந்தார்
வாரிக்கரைவழியே வரவேணுமென்றுசொல்லி
வீரியநாதன் விரைவாய்வழிநடந்தார்
சூரியபுஷ்ப துற்பக்குறிப்பார்த்து
கடலுள்ப்பதிகள் கண்டுகண்டேநடந்தார்
மடமடெனயட்டவணை வாரிதீர்த்தமாடி
கடல்பெம்மான்வாருர் காணுவோம்என்றுசொல்லி
திடமுடனேவாரிசென்று கண்டுதான்தொளவெ
முத்துகள்சங்குமுன் வந்துதெண்டனிட
வத்தும்பெரிய வைகுண்டமன்னவரே
இத்தனைநாளும் இயல்கலியனேதுவினுல்
சற்றும்வெழிகாணுதே சமுத்திரத்தினுள்ளிருந்தோம்
தர்மப்பெருமானே சாமிநீர்வந்ததினுல்
நன்மையுடன்நாங்கள் நாட்டிலேவாருேங்காண்
ஒருசொல்வரைக்கு முவரியிலேவாழ்ந்திருங்கோ
இருசொல்லாகுமட்டும் இங்கிருங்கோஎன்றுரைத்து

நடந்துவைகுண்டர் நாடிமிகவரவே
கிடந்தநிதியுங்கீழ் கிடந்தகாசுகளும்
ஒக்கவுயரவந்துள மகிழ்ந்துதானிருக்க
திக்கென்றுநாதன் சேடன்தனையழைத்து
கைலாசந்தன்னைக்கட்டாய் வரவழைத்து
ஒயிலாகயித்தனையுமுள்ளே நீகொண்டுசென்று
காவல்செய்துகொள்ளுங்கோ கயிலாசமென்றுரைத்தார்
தேவன்சட்டமிட்டு தெச்சணம்போகவென்று
நடந்தார்துரிதமுடன் நாரணனார்தெச்சணத்தில்
நல்லநாராயணரும் நாடுவழிநடக்க
வல்லபிலமான மாமுனிவருங்கூட
எல்லோருங்மகூடி இயல்வாரிகரையே
நல்லோர்களாக நடந்தார்காணம்மானே
வாதைபேய்யானதெல்லாம் வைகுண்டர்பாதமதை
சீதமுடன்போற்றி தீபறணைகாட்டிவர
காட்டுகின்றதீபமெல்லாம் காணாதவர்போலே
நாட்டுக்குடையநாராயணர் நடந்தார்
நல்லகுலதெய்வம் நாட்டமதையறிந்து
எல்லைக்குடைய ஈசர்வந்தாரெனவே
இன்றுமுதல்வம்பருக்கு இயல்பகைதான்சூழ்ந்ததென்று
நன்றுமனத்தோர்க்கு நல்லநாள்வந்ததென்றும்
மூர்க்கலியன்சட்டமுதன் மையின்றுமுதலாய்
துர்க்கலிபோலாகிச்சுத்து குலைந்துதென்றும்
கொண்டாடிநல்ல குக்கூணிக்கிணங்கள்சொல்லி
கண்டாருடனேயும் கைதொழுதபூதமொடு
இன்றுமுதலெங்களுக்கேக்கும் வகையில்லையேகாண்
கண்டுகொள்ளுங்கோவெனவே கண்காட்டிபோய்மறய

விருத்தம்

நானிலமரசுவாழ நாரணர்பெற்றுவாருர்
தானிதமானவன்பாய்ச் சகலோரும்கேட்டுக்கொள்ளும்
மானிலத்தோரேஎன்னை வருந்தியேதேடவேண்டாம்
நானினிசெய்யவாகா நவின்றவர் தெய்வம்போனர்

விருத்தம்

தெய்வங்களுலகிலெல்லாம் தெரிசனம்காட்டிக்காட்டி
மெய்வரம்புள்ளோரெல்லாம் மேதினிவிட்டுபோர்ந்தார்
பொய்வரம்பசாசதெல்லாம் பொன்றியவகைபாராமல்
மெய்மறந்துரைகள்சொல்லி மேதினியொழித்தாரன்றே

விருத்தம்

கண்ணனநாதன்கமலக்குருநாதன்
வண்ணமுள்ளநாதன்வழி நடந்தாரம்மானை
நடந்துபகவதியாள் நல்லகடலும்பார்த்து
கடந்துபகவதியைக் கைக்கண்காட்டித்தானழைத்து

நன்மையுடைய நாயகியேசுந்தரியே
பொன்மோகினியே பிள்ளாய்நான்சொல்வதைகேள்
வைகுண்டப்பிறந்து வார்த்தையொன்றுக்குள்ளான
உய்கொண்டோர் குலத்தைவுருவேற்றவந்தேனென
எந்தன்திருச்சம் பதியுமிதுமுதலாய்
எந்தெந்தநாள்க்குமினி காணிக்கைநிறுத்தல்
ஆனதினால்நீயும் ஆதியிலென்னோடு
தேனினியதங்கயராய் திட்டித்தயேதுவினால்
உன்னோடுயித்தனையுமுபதேசமாயுரைத்தேன்
பொன்னாடுதெச்சணத்தில் போறேன்தவசிருக்க
என்றுபகவதிக்கியம்பி வழிநடந்தார்
அன்றுபகவதியாள் அறைக்குளடைத்திருந்தாள்
நாராயணரும் நல்லசங்கத்தாருடனே
சீருய்மணவைப் பதினோக்கித்தான்நடந்தார்
தென்கர்சியென்ற தெச்சிணபூமியிலே
கண்காச்சிசூழக்கண்ணர்மிகநடந்தார்
கண்டார்துவரயம்பதியின் கண்ணோட்டமெல்லாம்
பண்டையப்பதியின் பவுசெல்லாமேபார்த்து
நடந்தெம்பெருமாள் நல்லகடல்வழியே
திடந்தெரிந்த தேவர்களும் செயசெயனநடக்க
ஆனபதியின் அகலநீளமபார்த்து
மானபதியின்வாசலெல்லாம் பார்த்தவரும்
நாடுகுற்றம்கேள்க்க நல்லதவஞ்செய்வதற்கும்
தேடும்வட்வாசல் சீவிவளர்மலையின்
நேரும்வாசல்தனக்கு நிகரில்லையாமெனவே
தவசுக்குகந்த தலங்களிதுநன்றெனவே
உபசீவனம்வளருமுகந்த புவியீதெனவே
என்றுமனதிலெண்ணி எந்தன்பெருமானும்
அன்றுவேதமுனியை யழைத்துமொழிகேள்கவென்று
வாநீமுனியே வல்லகலைக்கியானமொழி
தானீகரமாய்ச் சத்தியாய்கற்றவனே
மானமுனியே மறைநாலும்கற்றவனே
ஓனமோவேத மோயாமல்ஓதுவோனே
பின்முன்பார்த்து பேணியுரைப்போனே
என்முன்நின்றியம்புரை கேட்டேயுரைநீ
நான்தவசிருக்க நாடுரைநீமாமுனியே
மான்றவசுக்குகந்த மாமுனியேயென்றுரைத்தார்

வெண்பா

வெள்ளாசனத்தில் விரைவாசியையநிறுத்தி
கள்ளமானதை யகலக்காடகற்றி
வெள்ளமாங்கருணைபெறும் வேதமுகமாமுனியே
உள்ளதைஎனக்கின்னதென்றுரை

### வெண்பா

பூரணத்தினடிபுகழ்ந்து முனிகொண்டாடி
வாரணத்தின் கோடுவரைதேர்ந்துகாரணத்தின்
கட்டுரைத்து நாடுவளமிட்டுரைப்பேனென்றுமுனி
தொட்டுப்பதங்குவித்து சொல்லுவான்

### நடை

அய்யாவே வேதஆதிநாராயணமே
மெய்யாய்யுருவாய் விளங்குவோனே கேளும்
பரராசமாமுனிவன் பாலனெனமுனிவன்
விரைவாகவேபிறந்து வெள்ளிமலைநாதனிடம்
தாதாவுடனே தான்வரக்கண்டீசரும்
வாருய்முனியே மதலையுனக்கிங்கேது
அப்போமுனியு மரனரடியைத் தான்பூண்டு
இப்போதிவ்வாண்டிம் மாதமின்னளில்
பஞ்சகருணுதி பன்னிரண்டொன்பதுவும்
வஞ்சகமில்லாமல் வந்தாரொருவீட்டில்
பூரணநாளும் பிதிர்ந்துறையு நேரமதும்
நாரணர்பிறந்து நல்லநக்ஷத்திரமும்
யோகபலன்களொத் திருக்குநேரமதில்
ஆகமக்கூட்ட மடங்கியிருக்கு நேரமதும்
மதிசுளிபோலாகி வந்துரதமேறுகையில்
துதிமுகவன் சரஸோதி பிறந்ததன்றும்
இவ்வாறு கூட்டமெல்லா மெழுந்தொருநாள்
அவ்வாறுத் தான்கண்டன்னளிகைதனிலெ
துற்கந்தமுலாவும் தோகையொருபெண்ணுடனே
நற்கந்தமுலாவி நான்சேர்ந்தேனப்பொழுது
சேர்ந்தபொழுது திரண்டுநாதம்வளர்ந்து
காந்தற்றனுப்பாய்க் கன்னியுடலாகி
பெற்றுளிவனை பேருவியாகரனை
கர்த்தாவறிய கண்டேனிவந்தனையும்
ஆசுமதுரம் சித்திரம்விஸ்தாரமுதல்
வாசுநெறி தேசுவழியறிந்த மன்னவன்காண்
ஏகச்சுழிமுனையு யிகமுகிவரம்வரையும்
ஆகமுடம்பறிவு மண்டபிண்டத்தறிவும்
முன்பின்னுராய்ந்து மூதுணர்வாகமங்கள்
தன்னன்பிறப்புச் சாற்றத்திறவான்காண்
கல்லாதகல்வி கலையக்கியானக்காண்டம்
எல்லாமறிந்த வியல்முனிவனென்றுரைத்தார்
நல்லதுதானென்று நல்லமுனிவனைஈசர்
வல்லமையாமென்று மாமுனியைக்கொண்டாடி
என்பிறப்பெண்மாதிது முன்பிறப்புமுதல்
பின்பிறப்புமுதலாய் பேசென்றாரீசுரரும்
அப்போதுவேத வியாகரகமகிழ்ந்து

செப்புகிருேமென்று சிவனேமிகத்தொழுது
மூலமுதலேமுத்திமுகந்துகொண்டு
காலமேநின்ற கடவுளேதஞ்சமென்று
ஆதிமுதலந்தமடங்கல் மிகவுணர்ந்து
சோதிபதம்போற்றி சொல்லுவான்மாமுனியும்
மும்மூர்த்தியானமுதல் மூர்த்திதோன்றியதும்
அம்மூர்த்திதன்னிலாயிழையாழ்த்தோன்றியதும்
சத்தியிலேநாதம் தான்தோன்றிவந்ததும்
வித்திலேநாதமதில் விந்துமிகத்தோன்றியதும்
விந்திலேவிட்டுணுவும் விரைவாகத்தோன்றியதும்
அந்தமுறைமுதலாய் அன்டபிண்டம்வரையும்
சொல்லியுகமதுதான் தோன்றுவகைகூறலுற்ருர்
சல்லிக்கொடியைச் சண்டக்குருேணிமுதல்
நீசன்பிறப்புவரை நிகழ்த்திஞன்மாமுனியும்
பாசநீசன்வரைக்கும் பாருலகஆறதையும்
சொல்லிவிரித்து சுத்தயேழுயுகந்தான்
நல்லயுகமதுதான் நாடுவதும்சொல்லிமிக
வல்லயுகத்தில் வளருமனுவழமும்
அன்னட்டைச்சொல்லொன்றுக்குள்ளரசாள
பொன்னனநாராயணரை மகேந்திரனும்
நல்லவைகுண்டம் நல்ப்பிறவியால்வளர்ந்து
வல்லக்கலியுகத்தில் வாய்த்ததெக்ஷணுபுரியில்
புதுமைமிகச்செய்து பொல்லாதவம்பர்கைய்யால்
அடிகல்லெறிகள் அவர்பட்டம்புவியில்
குடிதாழ்ந்தபேர்க்காய் கோபமதையடக்கி
நல்லோர்க்காய்பாடுபட்டு நல்லஉபதேசமதாய்
பஞ்சகருணுதிகளேப் பம்மலாய்த்தான்நடத்தி
கொஞ்சநாளுங்கழித்து குதித்துதித்தேவளர்ந்து
ஆடவராய்ச்சமைந் தாண்பெண்போலேயிருந்து
தேடவறியாருக்குத் திரவியம்போலேயிருந்து
பச்சக்குழந்தைப் பருவமுன்னுகியவர்
மெச்சக்கொடியாள்க்கு மேவும்பருவம்போலும்
சுத்தக்கிழவரைப்போல் சூரபிராயமுமாய்
மெத்தப்புலம்பி விளலும்பிராயம்போலும்
நாலுபிராயம் நாளதுக்குள்ளேயெடுத்து
கோலுகையேந்திக் குன்றும்பிராயம்போலும்
பார்க்கப்பிராயமுமாய் படுக்கக்கிழவனுமாய்
தார்க்கத்திறவனுமாய் சந்திக்கிசைந்தவனுமாய்
காக்கக்கருத்தனுமாய் கர்த்தனின்கர்த்தனுமாய்
யேக்கத்திருத்தனுமாய் யிவர்சமைந்திவ்வுகத்தில்
தர்மத்தால்க்கலியைத் தன்னந்தன்னல்க்கரைத்து
கர்மத்தையீடழித்துக் காந்தக்கோலமெடுத்து
நேருேரைக்காத்து நிசமாகவேயெழுப்பி
ஏருரைக்கொன்று யேழ்நரகத்தும்பூத்தி

உகத்துக்குகம்வளக் கெல்லாமொருதலத்தில்
தொகுத்துநடுத்தீர்ப்புச் செய்துமிகத்தெழிந்து
ஆகாத்தபேரை யெல்லாம்நரகமதில்
வாகாகத்தள்ளி வாசல்தனைப்பூட்டி
சித்தத்துக்கேத்த செடத்தோரைத்தானெழுப்பி
பத்தரைமாத்துற்ற பைம்பொன்னிறப்பொன்பதியில்
சாகாவரங்கள் ஜனங்களுக்கேகொடுத்து
வாகாகநல்ல வரிசைமிகக்கொடுத்து
ஆண்பெண்ணுடனே வதிகவாழ்வுங்கொடுத்து
காணக்காணக்காட்சி கனமாமிகக்கொடுத்து
செல்லவைகுண்டர் சீமையன்பத்தாறதையும்
அல்லலகற்றி யாசாள்வாரீசுரரே
மும்மூர்த்தியெல்லாம் மொருமூர்த்தியாயிருக்கும்
எம்மூர்த்தியெல்லா மியல்மூர்த்திபோலிருக்கும்
வைகுண்டப்பெம்மான் வாய்த்தச்செந்தூர்கடலில்
மைகுண்டநாதன் வந்துபிறப்பதுதான்
வளர்ந்துதவஞ்செய்வதுவும் வாய்த்தபுவித்தெக்ஷணமே
குழந்தைவைகுண்டர் குமாரப்பிராயமட்டும்
கோலாகலனைக் குருவாய்சமையுமட்டும்
நாலாஞ்சொரூபம் நடத்தும்வரைத்தெக்ஷணமே
பொல்லாதெல்லாமழிந்து பூவர்கொலுவாகுமட்டும்
யெல்லாவழக்கும் யிருப்புத்தெக்ஷணபதியே

விருத்தம்

ஆதியிலுதித்தாவாறும் அரன்சிவப்பிறவிவாறும்
ஓதியயுகங்கள்வாறும் ஒவ்வொருவசுரன்வாறும்
நீதியமனுக்கள்வாறும் நீதமாங்குண்டர்வாறும்
தீதில்லாத்தர்மனுாயச் சிறப்புடவாறுஞ்சொன்னன்

நடை

இவ்வாறெல்லாமெடுத்து மிகமாமுனிவன்
அவ்வாறெல்லாமுரைத் தகன்றனன்காண்மாமுனிவன்
துதிகொடுதன்னல் சிவகோவேங்கிரியில்
பதியச்சிவமும் பதியென்றுரப்போது
நந்தீசுரரும் நாட்டினைரவ்வுரையை
இந்தப்பழமொழிபோலிசைந்த புவிமகிமை
தெக்ஷணுபூமி சிவபூமிநல்லதுதான்
மிச்சம்வியாகர்முன் மொழிந்ததுவுமிது
ஆனதாலிப்பூமி யாகுந்தவசிருக்க
கோனுங்குமரி குடியிருக்குமின்னகரு
சங்குத்திறைமுகத்துச்சதா கோடியர்புதங்கள்
எங்கும்மகிழ வியல்புபெற்றதின்னகரு
மங்கைப்பதிநகரு மணவைப்பதிநகரு
கங்கைக்குலநகரு கண்ணளர்தன்னகரும்
பஞ்சவர்சளஞ்ச பார்மன்னர்தன்னகரும்

சஞ்சீவிதன்னகரு தவத்தோர்க்குருநகரு
தெய்வகுலமன்னர் சிறந்தகுருநகரு
சைவமுனிமார் தவத்துக்கிதுநகரு
மேலோகக்காட்சி விளங்கியிருக்குமின்னகரு
சாலோகசாமி சார்ந்திருக்குமின்னகரு
அரம்பஸ்திரிமாராராடுஞ்சுனைநகரு
பரம்பெரியசேடன் பவிசுக்குருநகரு
வாவியுறைநகரும் வைகைக்குருநகரும்
தாவிக்குலாவுஞ் சந்தப்பக்ஷிதன்னகரும்
சொல்லவெளிதல்லக்காண் தெக்ஷிணபூமிவளம்
நல்லதந்தநாடு நமக்குகந்தநன்னாடு
பசுவும்புலியும் பாவித்திருந்தநகர்
கசவுமென்னேரங்கரைபுரளும்நன்னாடு
அன்னாடுநாடுவர நாடுக்கொப்பிடலாம்
பொன்னாடுபுரந்தர நாட்டுக்கீடாம்
தவம்பெற்றோர்வாழ்ந்தத் தன்மைக்குருநாடு
பாவமற்றோராகிய பாவித்ததின்னாடு
நல்லமலைவளரும் நாஞ்சிவளநாடு
சொல்லுருசியான சிறந்தசுருநாடு
ஒருநாடுமின்னாடுக் கொவ்வாதுவுத்தமரே
திருநாடுயீசர் தினமுறையுநன்னாடு
தீராவினையைத் தீர்த்தறுக்குமின்னாடு
நீராளமானநிராதன மின்னாடு
சம்பத்துக்கேத்த சகலகுருநாடு
இன்பம்வளரும் மிசைந்தகுருநாடு
ஆதியொருமுனிவன் நடவில்த்தவசியிருக்க
நீதியறியவென்று நிமலனுந்தேவியுமாய்
காராவும்கன்றதுபோல்க் கரைக்கண்டர்வேசமிட்டு
பற்றுமைபார்க்கப் பாரில்மிகமேய்ந்து
அந்தமுனியடுக்கலன்றி ராப்போயடைந்தார்
சிந்தனருளாலே சீறியொருகடுவாய்
பசுவதையும்கன்றதையும் பார்த்துமனமகிழ்ந்து
இசுவாகவேவந்திரையாம் நமக்கெனவே
என்றுகடுவாயியல்பசுவின் கன்றதையும்
தின்றுவிடவென்று சென்றுபிடித்திடவே
அப்போபசுவும்மந்த முனியடுக்கல்
இப்போதென்கன்றை மிந்தக்கடுவாய்பிடிக்கு
மாமுனியெநீயும் வந்தொருசத்தமிட்டால்
தான்பயந்துகடுவா தன்னலொதிங்கிடுமே
வந்துசொல்லாதாலும் மாமுனியேயிங்கிருந்து
உந்திதொனியால் ஒருசத்தங்கூறினையால்
யென்பிள்ளையெந்தனக் கிப்போதுதவுமென்றார்
உன்னுள்ளமுமேத துடையோன்பதம்பெறுவாய்
என்றுபசுமீதுரைக்க மாமுனிவன்

ஒன்றுமுறையாடா துள்ளங்கவிழ்ந்திருந்தான்
கடுவாயுங்கன்றைக் கைலேயங்கிரிதனிலே
வெகுவாககொண்டு விட்டதுகாணம்மானை
பசுவும்வனமறைந்து பார்முனிவன்காணுமல்
விசுவாசமாகமேலோகஞ் சேர்ந்ததுவே
பின்னுஞ்சிலநாள்க்கழித்துப் போர்முனிவன்சிந்தையிலே
முன்னுபசுமுறையால் முகுந்தன்பதங்காணுமல்
இத்தோஷங்கழிக்க யின்னஞ்சிலநாள்வரைக்கும்
சித்தத்தோடொத்தத் தெக்ஷணபூமியிலே
இரந்துகுடித்து யித்தவமேபுரிந்தால்
பரந்தணியும்வேதன் பதமடையலாமெனவே
உத்தரித்துமாமுனிவன் வொருநொடியிலேயிறங்கி
திர்ப்தியுடனேகித் தெக்ஷணபூமிவந்தான்
வந்துஇரந்து வருஷமொன்ருனதின்பின்
முந்துநின்றகாவில் வுவந்துதவசிநின்று
பரமன்பாதாரப்பவிசு மிகவடைந்து
வரமருளப்பேறுபெற்று வாழ்ந்திருந்தாரம்மானை
அப்படித்தோசமகன்று அறம்வளரும்
உற்பனம்போலொத்து உகந்ததெக்ஷணபதியே

### விருத்தம்

தெக்ஷணபுரியிநீதஞ் செப்பிடதுலேயாதய்யா
மிச்சமாம்புவியிதாகு மேவலர்க்குகந்தநாடு
பச்சமால்மகனேநீரும் பண்ணுறதவசியேறும்
அச்சமும்வராதை யாவென்றடிமிசைபணிந்துநின்ருன்

### விருத்தம்

நல்லதுதானேயென்று நாராயணர்தயவுகூர்ந்து
வெல்லமர்மணவைவாரிமேன் முகமதிலேநின்று
அல்லல்நோய்பிணிகள்கெல்லாம்மறமதால்தண்ணீர்த்தன்ஞல்
தொல்லேநோய்தீர்ப்போமென்று தெக்ஷணபதியில்வந்தார்

### விருத்தம்

வந்தவர்தலமும்பார்த்து வழியினல்க்குலமும்பார்த்து
கந்தமாமகிழ்சைகூர்ந்து சுவாமியுமுனியைப்பார்த்து
இந்தமாநகரில்வாழும் ராஜனுமறியவென்றே
விந்தையாயறிவுவொன்று விதித்தெழுதியனுப்புமென்ருர்

### வாசகம்

வாலேராமச்சந்திரசூரியனுராயணர்தானே வைகுண்டமாய் தோன்றிதர்மம்நித்திச்சு காணிக்கை கைக்கூலி காவடியென்றே திருச்சம்பதிமுதல் வேண்டாம். ஆவசியமில்லேயென்று நிறுத்த லாக்கீயே யுகஞ்சோதித்து ஒரு குடைக்குள்ளரசாள ஆயிரத் தெட்டாமாண்டுமாசியில் கடற்கரையாண்டி நாராயணம்பண்டார

மென நாமமும் கூறி எழியக்கோலமெனப் பாவிச்சுதெக்ஷணம் பள்ளிக்கொண்டிருந்து தர்மமாகத்தாரணியோர்க்கு தண்ணீரிஞெலெசஞ்சலநோய் கர்மம் வர்மம் வாதை கோதை பயங்களேயும் பிறிவி நாசமும் பொய்விஜே சஞ்சாரமும் பீடை கோடை வாடை தீர்க்கவும் பிள்ளேயில்லாதபேர்க்கு பிள்ளே கொடுக்கவும் கண்ணில்லாதபேர்க்கு கண்கொடுக்கவும் தனமில்லாதபேர்க்கு தனங்கொடுக்கவும் சாம்பசதாசிவசுவாமி மூவரும் சற்குணமாகியே தன்ஞலொருவேஷமாகிச் சமைந்து சாதியுயர் கொண்ட சத்தி மாதர் வழியிலெ சகலகுண நாராயண தீரச்சம்பங்நற் சாதி வைகுண்டம்பிறந்திருக்கிருர் இனி நன்ருய் தெரியுமே, ஆனதிஞல் பூமியிலடிபிடிவனியாயம் மிறைதெண்டம்கைக்கூலி அபகடம் பொய்பிரட்டு யவர்செவியிற் கேட்கவொண்ணுதெனும்மகாகோடி தர்மபாக்கியசாலியாய்ப் பூமியில்லதிக பாசமாய் விரித்து யவரருகில் சூளயலக்காரத் தற்மமணியாய் நெறுத்தியங் தரவீடு லலாட்மீதிறந்து அதின் வழியா நடனம் திரு நடனம் மாடல் பாடல் அங்ஙனேக்கண்ணுைக்கிச் சகலரும் பார்த்தாராய்ந்திருப்பதால் அவரவர் நிஜேவிலிருக்கிறதெல்லாம்மவர்க்கு தெரியாமலிருக்கிற தல்லவே யதுகண்டு பதறி யாராஞலும் அவரிட்டிருக்கிற சட்டம் போல் நடந்து கொள்வாராகவும். அங்ஙனெ நடக்கில்லென்னு வருகில் அவர் நிச்சயித்திருக்கிற தெய்தியில் நடக்கும்படியே வரும். மன்பராகிய மனுக்களுக் கனுகூலம் ஆயிரத்தெட்டா மாண்டு மாசியில் தெக்ஷணம் பள்ளிகொண்ட அய்யா நாராயண அய்யாவை குண்டமாய் தர்மம் நித்திச்சு எழுதினயறிவென்று மாமுனியெழுதியவனியறியும்படி யயச்சான். ஆயிதுவெல்லாமல் அய்யா நாராயண அய்யா தர்மநித்திச்சு தபசிருக்கிற படியிஞலே யின்று முதலவர் நிச்சித்திருக்கிற நாள்வரையும் பூசைப்புனக்காரம் சேவித்தல்லர்ச்சிஜேயாராடு நீராடுதல் தீபரணேசாந்தி காழாஞ்சி கைவிழக்குகாவடி காணிக்கை தெருமுகூர்த்தம் கூபுர முகூர்த்தம் திருநாள் முகூர்த்தம் குரவை குழாங்கூட்டம் கொலுவாரபார மாயுதம் அச்சுநடை ஆஜேநடையலங்காரம் மஞ்சணேக்குழி நீர்ராட்டலிது முதலுள்ள நன்மை சுபசோபனம் வரையும் அவர் நிச்சயித்த நாள்வரையும் மவர்க்கானதல்லவே யானதிஞல் நீங்களிதுவெல்லாமிது நாளுக்ககம் வீணில்செலவிடாமலும் விறு தாவில் நரகில் வீழாமலுமிருக்கக் கடவுளிது நாராயண வைகுண்டசுவாமி திருவாக்குபதேசக் கருணேயிஞல் மாமுனி யெழுதி வயச்ச வாசகம்.

### விருத்தம்

என்றிந்த விவரமெல்லாமெழுதி யெயுலகில்விட்டு
நன்றிந்தவாச்சை வெள்ளிநர்கதிருதிக்கும்வேளே
பண்டிந்த மூலந்தன்னில் பஞ்சமி நேரந்தன்னே
குண்டத்தின் அரசிகோமான் குவலயமதிலேவந்தார்.

### நடை

நாதக்குருநாதன் நாருயணநாதர்
மாதவனுந்தெக்ஷணத்தில் மாவருத்துமாவடியில்

மணவைப்பதிமுகத்தில் மாதுகன்னி பார்வையிலும்
இணையானபஞ்சவரின் யேற்றவரிச்சுனனும்
மணமானநாதன் மகாபரனைத்தானட்டி
வணங்குந்தவத்தால் வந்தார்தாமரைப்பதியில்
தெக்ஷணமூலை தென்வாரியத்தமதில்
மிச்சமுள்ளதேவர் முழங்கிக்குரவையிட
தேவர்திசையெட்டும் ஜெயஜெயவென நெருங்க
மூவரதிசயமாய் மோடுவழி தாழ்த்திறந்து
ஆரபாரத்துடனே யாவர்கள்வந்து பார்த்துநிற்க
வீரநாரயணரும் வித்தாரதெக்ஷணத்தில்
பள்ளிக்கொண்டாரென்று நாமம்பரந்திடவே
துள்ளியசொரூபம் சுற்றினாரம்மானை
வைகுண்டமென்று மனுவேரறிந்திடவே
மெய்கொண்டநாதன் மேவிநின்றார் தெக்ஷணத்தில்
யாமமிகக்கூறி யதிகதிசையெட்டிலுள்ள
ஓமப்பசாசுகளை யொதுங்க யுபதேசித்தார்
மேல்நடப்பையெல்லாம் வித்தாரநாரணரும்
தூரநடப்பாகத் துறந்துறந்தே படித்தார்
கண்டவர்களெல்லாம் கருத்தோடறியாமல்
வண்டப்புலப்பமென வாக்குரைத்தேபோனார்
பத்துமாதம்வரையும் பார்நடப்புள்ளதையும்
முத்துமொருகுடைக்குளுலகாளுவதும்படித்தார்
யெல்லாநடப்புமிவர் படித்ததின்பிறகு
வல்லாண்மையான வைகுண்ட பெம்மானை
உகஞ்சோதிக்க உற்றார்காணம்மானை
தவமேல்தவமெனவே தானிருந்து வையகத்தில்
பொறுதிசதமாய் புண்ணியநார் தானிருந்து
உறுதியுடனய்யா யுகஞ்சோதிக்கலுற்றார்
நாரணரும் நல்லவைகுண்டமென
பேருளதும்நிறைந்து புண்ணியனார்தெக்ஷணத்தில்
மனுநிறமாய்வந்து மனுவைசோதித்தெடுக்க
தனுவையடக்கித் தவமிருந்தாரம்மானை

## விருத்தம்

உலகினில் மனுவாய்த்தோன்றி யொருயிருபது நாள்க்கப்பால்
தலைமுறைவினைகள்போக்கி சடலத்துள்ளூறலோட்டி
மலைசெந்தூரலையினுள்ளே மகரத்துள்ளிருந்துபெற்று
அலைகடற்கரையா நாராயணரென புவியில்வந்தார்.

## விருத்தம்

வந்தந்தநாட்டிலுள்ள வன்குற்றமதனைகேட்க
நந்திகோன் விபூதிசாத்தி நாடியதவங்களேற்றி
முந்தநாள்மூவர்க்கெல்லா முதன்மையாய் சாதித்தேறி
சந்ததஞ்சாகாவிஞ்சைத் தலைவனுய்ச் சமையவென்றே.

**விருத்தம்**

நீதியரோமம்வீசி நினைவொன்றைக் கருணைவாசி
சாதிகளுரைகளாறிச் சடத்துறவாசையற்று
வாதியாங்காரமத்து மலசலம்மதங்களத்து
ஆதியைக்கருணைகாட்டி யவர்தவம்புரிந்தாரைய்யா

**விருத்தம்**

ஆசையால் பாசமத்து வனுதர்குளாங்களத்து
மாசதாம்வினைகளத்து வாக்கலங்காரமத்து
நீசமாங்கலியையத்து நீணிலத்தாசையத்று
ஓசையாய் வெளியைத்தாண்டி ஒருவனைக்கண்டு கந்தாரைய்யா

**விருத்தம்**

கண்டவர்பாலேத்துக் கண்சுழிமுனையில்நாட்டி
பண்டவர்செகலில்பெத்து படிமுறைத்தவருநாட்டி
கொண்டவர்லோகந்தன்னைக் குமியவோர்த் தலத்திலாக்கி
ரண்டதுமறியவென்றே யிவர்தவஞ் செய்யலுற்றார்

**விருத்தம்**

மனுதவதாரங்கொண்டு வந்தவர்பிறக்கலுற்றார்
தனுமனுவோர்களெல்லாம் தழைத்துநீடுளிவாழ்ந்து
வனுதர்மப்புவியைக்கண்டு மாள்வருவாழ்வுவாழ்ந்து
துணிவிடன்மனதி லேத்திச்சூரியத்தவஞ்செய்தாரே

**விருத்தம்**

முற்பிதிர்வளிகளெல்லாம் முதன்மைபோலாகவென்றும்
கற்பினைபடியேத்தோன்றி கலியுகமீதில்வந்தார்
அற்புதமடவாரோடு ஐவர்தன்குலங்களோடும்
செப்பியஜாதியெல்லாம் செயல் பெறத்தவசியானார்

**விருத்தம்**

இத்தவமதியீதெல்லாம் மியல்புடன்வசமேயாக
சுத்தமேசெய்வோநீச கொடுகலிவளிகள்சாக
கர்த்தனார் கர்த்தனுகை கலியுகத்தீர்வையாக
உற்றவைகுண்டர்சுவாமி யொருகுடைக்கரசுபெற்றார்.

**நடை**

நாராயணரே நல்லவைகுண்டமென
சீராகதெக்ஷணத்தில் சிறந்ததவம் செய்யலுற்றார்
ஆறுவருஷத்துள்ளே யவர்நினைத்த
வாறுவகையெல்லாம் வந்துவழிப்பட்டிடவே
நின்றார்தவசு நெடியநாராயணரும்
குன்றாக்கடலில் கொண்டவழிப்படியே
கடலில்மிகவேகண்டதெல்லாம்விள்ளாமல்
உடலுள்சூச்சமொருவருக்கும் காணாமல்
அகமதுவே பூசித்ததிகத்தவசியிருந்தார்

தவப்புதுவை சொல்லத்தானுரைக்கக்கூடாது
ஈசர்முன்னாழில் யிருந்தாரொருதவசு
வாசக்குழலுமையை மதலையுருவாக்கவென்று
வேட்டுவனுக்கீந்த விஞ்சைதனைநெஞ்சில்வைத்து
கூட்டுக்கிளியை குழந்தையுருவாக்கவென்று
அத்தவந்தான் போதாதையாயிவர்தவத்தே
கற்றைக்குழலுமையாள்க்கரியமுக்காலமதில்
சூதனெனவந்த தோஷப்பொல்லாதவனை
வீரத்தனமாய் வெட்டிச்சரமறுத்து
ஆறுமுகமானதொரு வாண்பிள்ளைத்தான்
பேருடனேநமக்கு பிறக்கவேணுமெனவே
சரவணபொய்கையிலெ சாம்புவனைநினைந்து
அரகரா அவள்தானன்றுநின்றதவமும்
இவர்தவத்துக்கொவ்வா தீசுரநிலும்பெரிதாய்
அவர்தவம்மொவ்வா தய்யாயிவர்தவத்தை
சீதைதவசியதுஞ் செப்பவொண்ணாதித்தவத்தை
நாதவரிச்சுனனும் நாட்டத்தவத்திலுறும்
எத்தனையோகோடி யிவர்தாணிருக்கும்தவம்
விதரிக்கவென்றால் வெகுமணிகள்சென்றிடுங்காண்
சொல்லவெளிதல்ல சொன்னாலுலகிலுள்ள
பொல்லாதவரும் பொருந்தியிதைக்கேட்டால்
பாவந்துலைந்திடுமே பாவிகள்க்குமோர்நினைப்பாப்
நாமிருப்பதுவோ நாலுதிரையதனுள்
ஆமவரைக்கண்ட றிந்தாலதுவீதம்
இச்சொருபத்துள்ளேயிது விதிக்கவொண்ணாது
வச்சுகந்துபார்ப்பீராய் வழிதெரியுமிந்தயேட்டில்
என்னவோவென்றெண்ணம் வைத்துகேட்பீரார்
அன்னமுதலத்து ஆக்கினைக்குள்ளாவார்
நல்லவர்நல்லாவார் நானுரைக்ககேளம்மானை
செல்லத்திருகேட்க சொல்லுவார்நாரணரும்
சீமையன்பத்தாறுத் தேசனருள்களையும்
நேர்மையொழுங்காய் நிமிப்பொழுதில்வந்திடவே
செல்லவைகுண்டச் சீமானுமப்பொழுது
வல்லதவமு மனதுளருதேமுடித்து
உலகனருள்க ளொக்கவொருமிக்கவொரு
தலமழந்தநாதன்தான் நினைத்தாரம்மானை
வடகிழக்கு வடமேற்குநேர்மேற்கு
நடக்கும்படியே நல்லதிக்குநால்திசையும்
அடங்கல்குடியிருக்கும்மாழ்களெல்லாம்வரவே
சாணான்முதலாய் சாதிபதினெட்டையுமோர்
நாணமைலோடிவர நாராயணர்நினைத்தார்
நினைத்தவுடனே நிமிஷம்பொறுக்காமல்
தினந்தோறும்வந்து சேரும்நருள்களது
எண்ணக்கூடாது வெவராலுமன்போரே

திண்ணமுள்ளசாதிச் செப்பவொண்ணுதன்போரே
சாணுனிடயன் சாதிவணிகனுடன்
நாணுதகாவேரி நல்லதுலுக்கபட்டர்முதல்
சூத்திரப்பிரமான்தோல் வாணியன்பறயன்
கம்மாளன்ஈளன் கருமறவன்பரவன்
வெம்மானசுராணி வேகாண்டநிடையர்
சக்கிலியனேடு சாதிபதினெட்டுகளும்
முக்கியமாவோடி வந்தாரம்மானே
ஆகாயங்காணு தறைக்குள்ளடைத்திருந்த
வாகாஸ்திரிமாரும் வந்தார்காண் அன்போரே
கிழவன்முடவன் கெற்பஸ்திரிமாரும்
இளவயதுகொண்ட யேந்துபசலேமுதலாய்
ஓக்கவேவந்தார்கா ணுடையவனர் தன்னிடத்தில்
வந்தனருள்களெல்லாம் வாய்த்தவலுவியாதிமுதல்
சிந்தையுடன்தன்னுல்த் தீர்த்தாரேதர்மமதால்
அன்பதுவயதாய் அறைதழர்ந்தபெண்ணுள்க்கும்
சம்பத்துக்கேள்க்க சந்ததிகள்தான்கொடுத்தார்
உடல்தனமில்லாருது வளிந்தபெண்ணுள்க்கும்
சடலமுருக்கொடுத்து சந்ததியுங்கொடுத்தார்
பிறவிக்குருடுமை பேச்சருநாக்குளறல்
திறவியொழிபோல்திறமும் மொழிகொடுத்தார்
கர்மவியாதிகளால் கால்மொட்டிகைகள்மொட்டி
தர்மமில்லாப்பாவிகள்க்குத் தாழ்மைமிகக்கொடுத்தார்
அந்தமொட்டியெல்லா மறத்தாலதைத்தீர்த்து
சந்தமுடன்கைகால் தானுக்தித்தான்கொடுத்தார்
உடலையுருக்கு முற்றசயமிருமல்
குடலைப்புரட்டும் குறுமவாய்வுமுதலாய்
தீர்த்துக்கொடுத்த தேசத்தோர்கண்டுமிக
பார்த்துப்பார்த்துமகிழ்ந்து பச்சமுற்றுவந்தனர்காண்
கர்த்தாதிகர்த்தன் கடவுளாரென்றுசொல்லி
எத்தேசத்தோரும் மிங்குவந்தாரன்போரே
பதினெண்சாதிகளும் பண்பாயொருதலத்தில்
விதிவந்ததென்று மேவிக்குலாவிருந்தார்
மேவிக்குளாவி மிகவேவொருதலத்தில்
ஆவினீருண்டு அகமகிழ்ந்தாரன்போரே
நொன்பலங்களெல்லா நிசமாகத்தீருவதும்
அன்பாயுலகி லானதேசத்தோறும்
ஒருதலமாய்வந்து ஒன்ருகக்குமிகிறதும்
கருதினமாய்ப்பார்த்து அவர்கள்மிகவுரைப்பார்
முன்னேமொழிந்த முறையாகமம்போலே
இன்னுள்சமைந்திருக்கு யிசைந்துமகிழ்ந்துரைப்பார்
வைகுண்டராஜர் வருவார்தான்பூமியிலே
மெய்கொண்டராஜர் மேதினியில்வந்தவுடன்
சாதிபதினெண்ணும் தலமொன்றிலேக்குவிந்து
கோதிக்குளிக்குமொரு கிணற்றிலல்லாது

கர்மவியாதிசெவிடு கண்குருடுமையெல்லாம்
தர்மத்தால்தீர்த்தார் சகலவுயிரானதுக்கும்
செல்வமுண்டாகும் சீமானுர்வந்தவுடன்
அல்லல்மிகத்தீரு மவரையறிந்தவர்க்கு
எழியோர்வலியோர் எல்லாமொருப்போலே
பழியானப்பேச்சு பாரினில்கேட்கவிடார்
தேசமெல்லாம்பரக்கும் சீமானுர்வந்தசெய்தி
தோஷமெல்லாமகலுஞ் சுத்தமாய்க்கண்டவர்க்கு
சார்ந்தோற்குசந்தனமாய்த் தர்மங்கொடுத்தருள்வார்
சேர்ந்தவர்க்குநல்ல செல்வமுண்டாகுமென
சொல்லியிருந்தாகமத்தின்றுல்வச்சுருதிப்படி
நல்லவைகுண்டர் நாட்டில்வந்தாரென்றுசொல்லி
சாதிபதினெண்ணும் சடலவரவும்மற்று
ஆதிவைகுண்டரடி வீழ்ந்தேற்றியவர்
எல்லாமொருதலத்தில் ரண்டுமனுப்போலே
அல்லோரும்வந்தோராவினீருண்டிருந்தார்
அல்லாமல்முன்னுள் ஆகமத்தின்படியே
எல்லாமுன்வியாகரெழுத்தின் சொல்படியே
தெய்வச்சான்ருேர்களுக்கு சேர்ந்தவியாழமது
மெய்வகையாய்வந்து மிகத்தோன்றியேயிருக்க
இன்னமிவர்வழியிலியல்பாய்மணமுகித்து
மன்னர்வைகுண்டர் மகராஜராகியவர்
சீமையன்பத்தாறும் சொல்லொன்றுக்குள்ளாகி
மேன்மைசான்ருேர்க்கு முத்திரிசெங்கோல்கொடுத்து
தாழ்வில்லாச்சான்ருேரை தர்மபதிமீதில்வைத்து
ஆழ்வதும்நிசமே யாதியாகமப்படியே
நாராயணர்க்கு நாள்ப்பகையாய்வந்தவர்க்கு
பொராதெனக்காலம் புராணம்உரைக்கிதுகாண்
சொல்லியுலகோர் தொல்புவியில்கொண்டாடி
பல்லுயிருமறிந்து பண்பாய்மகிழ்ந்திருந்து
மகிழ்ந்துசிலநாள் வைகுண்டர்பாதமதில்
மிகுந்துபலஜாதிமுதல் மிகவந்துரைகேட்டார்
வந்தனருளறிய வைகுண்டர்வாய்திறந்து
சொந்தமுடன்வசனம் சொல்லிமிகக்கூறலுற்ருர்

வாசகம்

ஆயிரத்தி எட்டாமாண்டு மாசியில் கடற்கரையாண்டி நாராயணம் பண்டாரந் தெக்ஷணம் பள்ளிகொண்டு காணிக்கை கைக்கூலி காவடி முதலெந்தனக்கு வேண்டாம் ஆவசியமில்லை யென்று தர்மநித்திச்சுக் கொற்றவருமாண்டு குறும்புமிகத் தோன்றி உற்ற துலுக்கன் வந்துடனேடி மற்ரெரு பத்தாமாண்டில் வரும் வைகுண்டம் வருவோமென்றேயாகமத்தின்படி வந்து வைகுண்டம் பிறந்துகொண்டிருக்கும் நச்செத்திரத்தில் குதிச்சு

கொள்ளுந்தன்னே மாளுவதுமாண்டு கொள்ளுந்தன்னே முழிக் கப்பட்டது முளிச்சிகொள்ளுந்தன்னே முழிக்கப்பட்டது கண்டு கொள்ளுந்தன்னே ஒரு நெல்லெடுத்துடைக்காநாடுகெட்டுகொள் ளுந்தன்னே இருநெல்லெடுத்துடைக்க நாடு தாங்காதுதன்னே வானமும் பூமியும் கிடுகிடென்ருடிடும்தன்னே வானத்திலிருக் கிறவெள்ளிகளெல்லாம் ஆலங்காய்போல் உதிர்ந்திடுந்தன்னே மலைகளிளகிடுந்தன்னே பதியெழுப்பிடுந்தன்னே முளிக்கப்பட் டதுகண்டுகொள்ளுந்தன்னே என்று நருள்களறியும்படி உபதே சித்துக்கொண்டிருந்தார். அதையுலகோரறிந்தும்கேட்டும் கண் டும் முன்னுள்ளவாகமங்களுஞ்சரி என்று ஒத்துக்கொண்டு இவர் தான் வைகுண்ட சுவாமியென்று கேட்டறிந்து யிவர் தலத்திலே போவோமென்று வந்தார்கள் பின்னும் நாராயண வைகுண்ட சுவாமிதானே பேய்பலஜீவஜெந்து ஊர்வனம் புற்பூடு கல்க்கா வேரி யறியவுபதேசித்தார் யெப்படியென்ருல் வல்லாத்தான் வைகுண்டம்பிறந்து காணிக்கை கைக்கூலி காவடி ஆடு கிடாய் கோழி பன்றி இரத்தவெறிதீபதூபம் மிலைப்பட்டையிது முதலான தெந்தனக்கு வேண்டாம். ஆவசியமில்லையென்று தர்மநித்திச்சு நாடு குற்றங்கேள்க்க நாராயணர் சிறையிருக்கும் போது இனியாரேக்காரென்று பார்க்க அதை அறிந்து நீஙகளும் ஒதுங்கியிருங்கோவென்று உபதேசித்தார் உடனதுகளெல்லாம் மையாவாணை நாங்களொன்று மேக்கமாட்டோமென்று சொல்லிப் போருடனே. நாராயண வைகுண்டசுவாமிதானே. ஓராண் டொன்னரை யாண்டு கழித்து உகஞ்சோதித்து வரும்போது பேய் செய்கிறவன்னீதம் பொறுக்காமல் மானிடர் வைகுண்ட சுவாமியிட வந்து ஆவலாதி வைத்தாருடனே வைகுண்டராஜரும் திட்டிச்சுப் பார்க்கும்போது பேய் செய்கிறது அன்னீதந்தானென் றறிந்து பேய்களுக்குள்ள முன்னுகமக்கணக்கை சோதித்து பேயை எரிக்கவேணுமென்று நாராயண வைகுண்ட சுவாமிதானே மனதிலுத்தரித்தார்.

விருத்தம்

பேய்கள்தான்பிறந்தவாறும் பெருவரம்பெற்றநாளும்
மாய்கையாவுலகில்பேய்கள் வந்ததோர்நாளும்பார்த்து
ஞாயமாய்நடுவுங்கேட்டு நாமதைஎரிக்கவென்றே
ஆயர்முன்னெழுத்துங்கொண்டு அருள்முனிவரவேயென்ருர்

விருத்தம்

வாவெனவுரைத்தபோது மறைமுதல்வேதன்வானோர்
துரதமீதோடாவிச்சீக்கிரம் வந்தாரங்கே
பரமருள்வைந்தராசர் பார்த்தவர்தன்னைநோக்கி
விரைவுடன்பேய்க்கு முன்னுள்விதிதன்னைப்பாருமென்ருர்

விருத்தம்

விதிதனைப்பார்த்து வேதன்விளம்புவான்வைந்தரோடு
துதிகொடுவெழுத்து மெந்தன்சுருதியும்கேளுமோவையா
ஆதிநாராயணர்தானிந்த வலிகலியுகத்திலேதான்
பதிவைகுண்டமென்று வந்ததன்றேபிசாசுவொளிந்துபோனுர்

விருத்தம்

பொய்யொடுபசாசுகூலிபொருமையுங்கலியுநீசம்
மாயோடுகபடுகள்ளமனக்கறுப்புகங்கள் தீர்ப்பு
பொய்யொடுமிரட்டு வஞ்சப்பிளைபொல்லாப்பென்றதெல்லாம்
வாயோடுவாயால் கெட்டுமறுபிறப்பில்லாபோனர்

விருத்தம்

நாரணர்வைகுண்டமாகி நாட்டினில்வந்தவன்றே
காரணமெல்லாமாச்சுக் கலியுகமழிந்துபோச்சு
பூரணவேதநூலும் புராணமுன்னுகமங்கள்
சாரமுங்கெட்டுப்போச்சு சதாசிவவைகுண்டமாச்சே

விருத்தம்

அழிவதையழித்துப்போட்டுயவரொரு சொல்லுக்குள்ளாய்
சுழிவரையெழுத்தை ஊனிதெய்வமாதவருமாகி
வழிதனில்வன்னியாகி வகுத்திடும்மகவோராகி
அழிவில்லாப்பதிதானுழ்வார் ஆகமத்துரைதானென்றுர்

விருத்தம்

ஆனதால்ஆகாதென்றவ் வகைக்கிதுநாள்சாக
யேனமுமிதுதானென்றி யம்பிடவேதன்றுனும்
மானமாய்கேட்டு வைந்தவானவர்சாக்ஷியென்று
தானவர்க்கணகிக்லூணிச்சத்தியாய்பதித்தாரென்றே

விருத்தம்

கணக்கிலேயெழுதிக்கொண்டு கருத்தினிலடக்கிவைத்து
இணக்கியேயவரையெல்லாம் லக்குலக்கதிலேல்கொல்வோம்
பிணக்கியக்கோலந்தானும் பிசைகிலாவழியேசெய்வோம்
குணக்கிலாசெய்வோம் பாருகோகிரித்தேவரெல்லாம்

விருத்தம்

உகசிவவானோர்வேதனொருதரும் போகவேண்டாம்
வகையுடன்நான்தான்செய்யும் வளிதன்ணப்பார்த்துக்கொள்ளும்
இகபரன்முதலாயிங்கே இருங்கெனசொல்லிவைத்து
பகைசெய்தக்களிவையெல்லாம்மெரிக்கவேபரனங்குற்றுர்

நடை

ஈசர்முதல்வானோரெல்லோரும்போகரிது
வாசமலரோனும்மற்றோரும்போகரிது
என்றுயிவர்களையுமிவர்சூழருகிருத்தி
அன்றுபேய்கொண்டுவர அவர்நிண்த்தாரம்மானே
உடனேயுலகமதீலூர்ந்துதிரியும்பேய்கள்

திடமேகுளறி சிந்தையுமிகக்கலங்கி
பேய்களொருதலத்தில் பிரம்மாணமாய்க்கூடி
மாய்கைத்தொழில்குளறி மனதுமிகவுழறி
சீலமுடனுரைத்தார் சிவவைந்தர்ராஜர்மொழி
யேலமேநாங்கேட்டிருந்திலமேயெல்லோரும்
என்னவோவென்று வெண்ணிநினைத்ததெல்லாம்
சன்னைபோலாகாமல் சாகவிதியாச்சே
அய்யோக்கெடுத்தோமவர்பேரில்குற்றமில்லை
பொய்யென்றிருந்தோமே பெரியோருரைத்ததெல்லாம்
நம்பேரில்குற்றமல்லால் நாரணர்மேல்குற்றமில்லை
தம்பேரில்குற்றமல்லால் சாமிமேல்குற்றமில்லை
நமக்குமுன்னாளில் நாரதமாமுனிவன்
எமக்கியாமியம்கொடுத்ததிகவரம்வேண்டித்தந்தான்
அவனிடத்தினமெளெல்லோரும் போயுரைத்தால்
சிவனிடத்தில்வந்து செய்திகேட்டேவுரைப்பான்
போவோம்வாருங்கோ பேய்கள்ஒருப்போலே
கோவேங்கிரிதனிலே குடியிருக்குமாமுனிவன்
அண்டையவரணுகியபையமுறையெனவே
கண்டந்தமாமுனிவன் களிவையெல்லாமமர்த்தி
அபயமிட்டதேதுதலகைகளே சொல்லுமென்றார்
கவைதுயரமுற்று கழிவெல்லாம்சொல்லலுற்று
மனுவொருப்போல்வைத்து வைகுண்டமென்றுரைத்து
இனியுங்களெல்லாம் மெரிப்போ இப்போதெனவே
வரங்களையும்வைத்து மாண்டுபோங்கெனவே
துரைத்தனமாய்யெங்களையும் துடர்ந்துபிடிக்கிறார்காண்
பதறிஇங்கோடிவந்து பாட்டையும்மோடுரைத்தோம்
இதறுதனைத்தீர்த்து ரக்ஷிப்பீரெங்குருவே
என்றுபேயெல்லாம் மிப்படியேசொன்னவுடன்
அன்றுதலையோடந்தமுனிதானடித்து
வைகுண்டம்பூமியிலே வந்துபிறந்தாரென்றால்
மெய்கொள்ளசிவன்முதலாய் மேல்பிறக்கவேணுமல்லோ
சத்திசிவன்வரையும் சத்துப்பிறக்கணுமே
பொல்லாப்பிசாசுகளே புத்திகெட்டுப்போனீர்களே
வல்லாத்தானல்லோ வைகுண்டமாபொருளும்
அவர்நாமம்கேட்டால் வல்லவென்றுசொல்வதுகாண்
சிவபரமுதலாய் சிந்தைப்பதறணுமே
உங்களுடமூப்பு யுகக்திலினிவாராது
எங்களுடமூப்புவரையில்லை யென்றுபோகுதுகாண்
எல்லாமவர்மூப்புள்ளேயடங்குதுகாண்
பொல்லாப்பசாசுகளே பொன்றவிதியுங்களுக்கு
ஆனாலுமீசரமைப்புக்கணக்கெடுத்து
நானேயிதுமேவிதாறேனென்றப்போது
இந்தக்கணக்குமேழுயுகக்கணக்கும்
எந்தக்கணக்குமிருப்புமவரிடத்தில்
ஆனால்கணக்கையவரிடத்தில்நாமள்போய்

நாலுகச்சொல்லி நற்கணக்கும்பார்த்து
அறிந்துகொள்ளலாமெனவே எல்லோரும்போவோமென்று
நாரதமுனியும் நாட்டில்பேயத்தனையும்
காரணவைகுண்டர்காலில் விழுந்துதெண்டனிட்டார்
தெண்டனிட்டபோது சொல்லுவார்முனியுடனே
பண்டாகமப்படியே பசாசையெல்லாமெரிக்க
என்மனதிலுற்றேனிங்கு வந்துவாய்த்ததென்று
நன்முனியேபேயை நகன்றிடாக்காருமென்றார்
முன்னேநீபேய்க்கு முதல்யாமியம்கொடுத்து
இன்னேரங்கூடி யென்னிடத்தில்கொண்டுவந்தாய்
வந்ததுநல்லதுதான் வாய்த்தமுனியேயிப்போ
இந்தாபேய்கணக்கை யெடுத்துரைக்கேன்கேட்டிருநீ
பொல்லாக்கலியன் பிறந்தநாளன்றுமுதல்
எல்லாம்பேய்களுக் கீந்தவரமானதினல்
நீசன்கொடுமை நீணிலமெல்லாம்பரந்து
தேசச்சிறப்பு சிதறிக்குலைந்ததெல்லாம்
அய்யாநாராயணரும் வைகுண்டமாய்ப்பிறந்து
ஞாயநடுக்கேட்டு நாட்டுக்குற்றந்தீர்த்து
ஆகாத்ததெல்லாம் மழித்துநரகத்திலிட்டு
வாகாய்நரக வாயல்தனைப்பூட்டி
நல்லோர்க்குநாலு வரங்கொடுத்தேயெழுப்பி
வல்லோரேசொல்லொன்று வைகுண்டமரசாள
பொல்லாரைநரகில் போட்டுக்கதவடைத்து
பிறந்துபூமிதனிலே பேருகவந்தவுடன்
இறந்ததுகாண்பேய்களிவர்க்காகாதபேர்களெல்லாம்
என்றுபேய்களுக்குயீந்து வரங்கொடுத்தன்று
அன்றுபேய்கணக்கு வாசித்தாராதியுமே
இம்மணியிலித்த வமதிலீந்தவரமல்லாது
எம்மணியிலிப்பேய்க் கெள்ளழவுமில்லையென்றார்
உண்டோகாண்பேய்க் கொருமனிதனுலும்
கண்டோமுனியே கணக்குண்டோசொல்லுமினி
கேட்டுமுனியும் கெஞ்சி வாய்யுதைத்து
நாட்டுக்குடைய நாராயணருரைத்தார்
எவர்தானெதிர்த்தில்லையென்று சொல்லுவது
மூவருமங்கே யொடுங்கிருக்கயிலே
அல்லாமல் நீசனளிவாகுமுன்னதியாய்
எல்லாமவனேடுள்ளது ஏலமெசாகணுமெ
நீசன்வலுவெல்லாம் நேர்முன்னேயறுத்து
ஓசையொன்றுக்குள்ளே யுகம்கேட்கநிச்சயித்தீர்
நன்றிகெட்டநீசன் வேர்நாள்வழியே நீரறுத்து
ஒன்றுவிளிக்குளுகமழித்து தீர்ப்புசெய்து
நல்லோரையெழுப்பி நாடொருசொல்லுளாள
வல்லோராய் நீயும் வரம்பெற்றமாதவமே
ஆனதால்பேய்களன்னீசகுலமதினல்
வானக்கனலில் வாழுமிக்காலமிதாம்
என்றுமுனியுரைக்க யேற்றவைகுண்டமுதல்

நன்றுமுனியே நம்பேரில்குற்றமில்லை
முன்னுள்ளவாகமமுறைநூல்ப்படியாலே
என்னூல்வொளுங்கி லெரிக்கிறேனிப்பேயை
மாமுனியேசாக்ஷிமாயாண்டிநீசாக்ஷி
நாமுனியேசாக்ஷி நல்லவரேசாக்ஷி
எல்லோருஞ்சாக்ஷி என்பேரில்குற்றமில்லை
வல்லாத்தான்வைகுண்ட மாலவருஞ்சாக்ஷி
என்றுநாராயணரு மெரிக்கலுற்றார்பேய்களையும்
பண்டந்தப்பேயைப் பார்மீதில்கொண்டாடும்
நருக்கள்மிகப்பார்த்து நாலஞ்சுதான்ருக்கி
கருக்கிவிடவென்று களிவைத்தலையாட்டி
மனுக்களறியமனுநருளைத்தானட்டி
தனுக்கள்மிகவாங்கத் தானினைத்தாரம்மானை
அப்போநருள்பேரிலாடும்பேய்யேதுசொல்லும்
இப்போதுசுவாமி எங்களொக்கத்தானெரித்து
தனியேயரசாள சாதியொன்றுதானெடுத்து
சொல்லொன்றுக்குள்ளாளச் சுவாமிவரங்கள்பெற்று
கொல்லென்றெங்களையும் கொல்லத்துணிந்தீரே
என்றுபேயெல்லா மெண்ணியெண்ணித்தானழுது
அன்றுவழுதுவவர் வரங்கள்வைக்கலுற்றார்
காந்தலிடியுங்கனத்தவலுச்சக்கரமும்
சூழ்ந்துகுத்தல்கண்டு சுறுண்டுமிகப்பேய்கைகள்
அய்யோசுவாமியடியார்க்குத்தந்தவரம்
வையோரறிய வைக்கிறோமென்றுரைத்தார்
உடனேவைகுண்ட ருற்றநாராயணரும்
திடமுடனேபேயோடுரைக்கிறார்சீமானும்
அணியில்லாப்பேயே யன்றுதந்தவரத்திலொரு
மணியிருக்குதானல் மாறியென்றோடுரையும்
அப்போதுபேய்களெல்லோருந்தானழுது
இப்போதுநாழிகையுமில்லை மணிநேரமதும்
உம்முடையதர்மமுண்டதினலெங்களையும்
தம்முடையகருணையுண்டால் பிழைப்போங்காண்
என்றுபேயுரைக்க எம்பெருமான்யேதுரைப்பார்
அன்றுநானுரைத்ததை மூன்றுமாதம்வரை
பார்த்திருந்தேனே பசாசுகளேயுங்களுக்காய்
காத்திருந்தேனேயாண்டொன்றோர்காலம்வரையும்
என்பேரில்குற்றமில்லை யென்றுசாக்ஷிவைத்து
உன்பேரில்குற்றமதா லொடுக்கிறேனுங்களையும்
என்றுபேயோடுயிப்போவரம்மையுமென்றார்
அன்றுபேயெல்லா மறமெலிந்துதான்வாடி
என்னமுறைச்சொல்லி யிப்போவரம்வைக்கவென்று
வன்னப்பொருளேவகையாகச்சொல்லுமென்றார்
அந்தப்பொழுதிலையா நாராயணரும்
இந்தப்பொழுதிலிம்மணி இன்னேரமதில்
அய்யாவுமங்கேயாகமத்தைத்தான்பார்த்து
கைவாய்த்துதென்றுகழிவோடுரைபகர்வார்

திட்டிச்சயாணைச் சேர்ந்தவரங்கள்வைத்து
விட்டிருந்தசாவுபிளை சங்கிலிகள்தானும்வைத்து
மலையேறியொக்கமாண்டு போவோமெனவே
விலையாய்ப்பலகையிலே விரித்தடியுஞ்சத்தியமாய்
அய்யாவுரைத்தவாணை தவருமல்
மெய்யாகப்பேய்கள்வரம் விளம்பிவைத்ததம்மானை
அய்யாணையையாணைத்திட்டிச்சவையாணை
மெய்யாணையெங்கள் மிக்கவரங்கள்வைத்தோம்
தந்தபிளைசாவு சங்கிலிகளானதுவும்
எந்தங்குலமுழுது மிப்போவ்ரமும்வைத்து
அய்யாணைநாங்களருமலைகடானேறி
மெய்யாகவக்கினியில் விழுந்துசெத்துப்போவோமென
சொல்லிப்பேயெல்லாஞ் சுத்தவரமத்தனையும்
பல்லுயிருமறியப்படித்து வரம்வைத்ததுவே
வைத்தவுடனே வைகுண்டர்முறைப்படியே
மெய்த்தபுகழ்சான்ருேர் மெய்வாயுங்கையாலும்
ஆகாத்ததெல்லா மழித்திடுவாரெனவே
வாகாகமுன்னூல் ஞாயவழிப்படியே
வாணுமல்மறுகிவாதைவரம் வைத்தவுடன்
சாணுெருவிரலால் சற்றேத்தொடவைத்தனரே
தொட்டிடவேபேயுஞ் சுற்றும்மனுநருளும்
பட்டுவிழுந்தார்போல் பாரறியதான்விழுந்தான்
உடனேமனுவழியிலுடையகுலஜனங்கள்
படபடனதூக்கியே பதங்கோரிவிட்டிடவே
அயதிதீர்ந்தாப்போலந்தனருள்முளிக்கும்
செய்திதனையெல்லாஞ் சீமைநருளறியும்
கண்டுகொண்டாடி காரணத்திஞாயமென்று
மன்றுபதினலுங் கண்டுமகிழ்ந்திருந்தார்
இப்படியேபேய்களெல்லாம் வரங்கள்வைத்து
அப்படியேபேய்க ளருமலைப்போய்மாண்டனரே
மலையில்பேய்வந்து மாண்டசெய்திதானறிய
இலையிலாடிட்ட இடையர்மிகக்கண்டுளறி
அய்யோபேய்யிம்மலையி லலறிக்கரிவதுதான்
மெய்யாகக்கண்டு மிகப்பதறுதெங்கள்மனம்
அழுதுமுறையிட்டுப் பேயக்கினியில்சாடுவது
முழுதுமலைகள் முளங்கிக்கிடுகிடென
ஆடுமிகப்பதறி யம்மலையில்மேயாமல்
சாடுதுகாண்டறையில் சாகுங்காண்சீமானே
என்றுயிடையரியம்பக்கேட்டு யெம்பெருமான்
அன்றுநருளறியவர்போதித்தார்சாக்ஷி
கேட்டுமனுநருக்கள் கெட்டிகெட்டியிந்தமுறை
நாட்டுக்குடைய நாராயணரிவர்தான்
என்றுபலருமியல்பாயறிந்திருந்தார்

விருத்தம்

ஆகமப்படியேபேய்கள்ளதினுடவரங்கள்வைத்து
லோகங்களறியக்காட்டியுகபரச்சாக்ஷிநாட்டி

வேகத்தில்மந்திரத்தந்திரவிசையெல்லாமடக்கவென்று
நாகத்தையுண்டுவாழுமலையரசனை வருத்தவென்றார்

விருத்தம்

வருத்தவேவேணுமென்று மகாபரன்மனதிலுன்ன
விருத்தமாய்மலையில்வாழு மிருகங்கள்கோபமுற்று
துறத்தலைக்கண்டுமெத்தத்துயரமுற்றயர்ந்துமந்திர
வருத்தலைச்செய்துபார்த்து மலைந்தனன்னரசந்தானே

நடை

மந்திரதந்திரமாமுனிவன்சாத்திரங்கள்
விந்தைசெய்யுமாய்மால விசையடக்கவேணுமென்று
நினைத்தவுடனே நெடுமலையுந்தான்வாழும்
அனர்த்தமிடுமிருக மானைப்புலிகடுவாய்
கடுகிக்கரடிக் கனத்தமந்திக்குரங்கும்
முடுகியெழுந்து மூச்சுவிட்டேவிரைவாய்
சீறியெழுந்துசென்று மலையில்வாழும்
கூறித்தொழில்கடிய குன்றரசர்தங்களையும்
விரட்டத்தொடுத்துகாண் மிருகமிகக்கூடி
அதட்டுப்பொறுக்காமல் லந்தமலையரசர்
ஓமம்தனைவளர்த் தொருகோடிபூச்சொரிந்து
ஆமாவரிவெனவேயச்சரங்கள்தானெழுதி
புவனவலிச்சக்கரங்கள் பீடமதில்நிறுத்தி
நமனையளக்கும் நல்லவலிச்சக்கரமும்
சத்திநிறுத்தி சதாகோடிபீடமிட்டு
சுத்திவரஓமஞ் சுழலக்கனலெழுப்பி
வேண்டும்படைப்புவிதவிதமாய்த்தான்படைத்து
கூண்டும்மலையரசன் குறளிகளைத்தான்வருத்த
செவித்தான்மூன்று நாளாகமந்திரங்கள்
கோவித்துப்பார்த்தான் குறளிகள்தன்பேரில்
சற்றம்பலியாமல்சடைத்து மந்திரத்தோனும்
கற்றத்தொழிலும் கருவும்கலைகலைந்து
என்னவிதமோவென்று மிகக்குழறி
மன்னன்மலையரசன் மார்கள்மிகநடுங்கி
எங்கேயினிப்போவோ வென்றுமனம்பதறி
சங்கையழிந்து சரிவில்மிகவிறங்கி
தட்டளித்துவாடி தவித்துநின்றேதுரைப்பார்
பட்டபாடேதெனவே பண்பாகக்கேட்பதற்கு
குறத்தியொன்றுகாணிலமே குறிகேட்டுப்பார்ப்பதற்கு
உரைத்துயவருரைக்க உடையவனாரருளால்
குறத்தியொருத்திக்குறப்பெட்டியுமிடுக்கி
விறைத்துறைத்துவந்தாள் விசாரமிடுவோர்கள்முன்னே
கண்டார்குறத்தியையும் களிதீர்ந்தோமென்றுசொல்லி
வண்டாடுஞ்சோலை வனத்தில்வாவென்றழைத்து
அருகில்லிருத்தியவளைமிகவாதரித்து
சரிவிலுள்ளமாங்கனிதேன்றகையாறவேகொடுத்து
பசிதீர்ந்துகுறத்தி பகர்வாள்ளொருவசனம்

விசியாயென துடயபசிவிசாரந்தீர்த்தீர்
உங்களுடையதுயரமோடவழிகேளீர்
தங்களுக்குமெங்களுக்குஞ் சகலவுயிரானதுக்கும்
நாயகமாய்வந்து நாட்டின்மிகவிருக்கார்
வாசமணக்குதுகாண் வையகங்களீரேழும்
அவரைநீங்கள்கண்டுயானதுயரமுரைத்தால்
தவறுந்துயரமெல்லாஞ் சாமியவர்தன்னருளால்
என்றுக்குறத்தியீ துரைக்கநாகரசர்
நன்றுகுறத்தியுடன்னமதுயரஞ்சொன்னோமே
சொல்லாதிருந்திடினுஞ் சொன்னாளேநம்துயரம்
யெல்லாத்துயரமது மிதினாலேத்தீருமென்று
சந்தோஷங்கொண்டு சர்க்குறத்தியையனுப்பி
வந்தார்கள்தக்ஷணத்தில் வைகுண்டர்வாழ்பதியில்
கண்டுவைகுண்டரையுங் கரங்குவித்தேபணிந்து
பண்டுபட்டபாட்டைப் பகர்ந்தாரவருடனே
கேட்டுவைகுண்டர் கிருபையுடனேதுரைப்பார்
நாட்டுக்குடைய நாராயணர்பாலன்
பிறந்துவைகுண்டம் பெரியயுகமாள
துக்கக்களையறுத்துப் சுத்தமரையாளாக்கி
பக்கங்களையறுத்துப் பகைஞர்ரொன்றில்லாமல்
ஒருசொல்லுக்குள்ளே யுகமளித்துகமழிப்பீர்
இருசொல்லுக்குள்ளே யிராகூஷியத்தேயாளுதற்கு
பிறந்துகொண்டிருக்கிறப் பெருமைக்கடையாளம்
இறந்ததுகாண்பேய்க ளிப்போதுதந்திரமும்
போகநினைத்தேன் பெரியதெய்வமுந்தனைத்தான்
வேகந்தனிலேவிடுத்ததுகாண் எந்தன்முன்னே
நல்லதுகைவாய்த்து நமக்குவிதிதானச்சு
பொல்லாததெல்லாம் போகவிதியாச்சு
உந்தன்துயரமொக்கயிப்போதீரவென்றால்
எந்தன்மொழிகேட்டிசைவீரே நீங்களெல்லாம்
அப்போதுமலையில் வாழுமலையசரன்
இப்போதுசுவாமி யென்னனீர்சொல்வீரே
யதுக்கெல்லாம்நாங்க ளல்லவென்றுசொல்லோங்காண்
பொதுக்கனக்கேட்டுப் புகல்வார்வைகுண்டருமே
மந்திரதந்திரமாமுனிவன்சாத்திரம்
உபாந்திரவாகடமும் முபாயச்சமூலமதும்
மாயக்கருவுமாறணு வித்தையதும்
உபாயக்கருவுமுயர்ந்தக்கருமோர்டிகளும்
சம்பனமுச்சாடனமுஞ்சல்லியம்பேதெனவும்
வம்புசெய்யுமாஞாலமந்திரமட்டகர்மம்
எட்டுமடக்கியிதுமுதலாய்மந்திரமும்
கட்டுடனேயிப்போ கருசமூலத்துடனே
ஒக்கவைத்தோமென்றொருக்காயடக்கி
மிக்கயென்முன்னே மேதினியீரேளறிய
ஆணையிட்டுவைய்யு மறுமலையில்வாளரசா
நாணமுட்டுப்போகுமுன்னே நம்முன்னேவையுமென்றார்

உடனேமலையரசன் ஒக்கமனதலைந்து
குடலேமருண்டு குறுகமுளிமுளித்து
வம்பறுக்கவந்த மாயக்கூத்தனெனவே
தம்பிலங்களத்துத் தலைசாய்த்துடனயர்ந்து
மாட்டோமென்றேமானால் மலைமிருகங்கேளாது
வீட்டைப்பிய்த்தெறிந்து மிருகம்விலகாது
குடியிருப்புநமக்கு குன்றுமேலங்குமில்லை
படியீரேழளந்தபரமனம்மையிங்குவிட்டார்
அய்யாவுரைத்த வாணைவழிப்படியே
மெய்யாகவைத்து வீடுமட்டும்போயிருப்போம்
அல்லாதேபோனலம்மலையிலிருப்புமில்லை
யெல்லாமறிந்து யினிப்போவதுமரிது
யென்றுமலையரச ரெல்லாரும்சம்மதித்து
அன்றுவைப்போமென் றடிபணிந்துதெண்டனிட்டு
அய்யாவேயெங்களுட வாதிநாராயணரே
கையாரவைக்கக் கருவுகொண்டுவந்தோமில்லை
ஏடுகொண்டுவந்தோ மில்லையேஎன்பரனே
வீடுவரைப்போயெடுத்து விரைவாகவாறேம்நாம்
யென்றுரைக்கமந்திரத்தோ னெம்பெருமாளேதுரைப்பார்
நன்றதுதூரம் நம்முடையக்கைக்குளொரு
சூச்சமுண்டுபிள்ளாய் சொல்லக்கேளுநீங்களெல்லாம்
மாச்சல்படவேண்டாம் மலையரசானீங்ளெல்லாம்
எல்லாவிதத்தொழிலு மிந்திரமாஞாலமுதல்
எல்லாம்வைத்தோமென் றூணையிட்டால்போதும்
நல்லதுவேயென்று நாடிமலையரசன்
எல்லாவிதத்தொழிலும் மந்திரமாஞ்ஞாலம்
எல்லாமடக்கியிதுமுதலிப்போது வைத்தோமென்றூர்
அய்யாணையிட்டவர் முன்னேவைத்தார்காண்
மெய்யாணையிட்டப் பொழுதேமலையரசன்
எங்கள்பிழைப்பு யிப்போதேப்போச்சுதய்யா
தங்கடங்களொன்று தானிருக்குதய்யாவே
அதினல்பிழைப்பு மென்றிருந்தோமித்தனைநாள்
விதியால்குறைந்ததுகாண் வித்தைப்பிழைப்புயெல்லாம்
மலையில்பயிரிட்டு வயிறுபிழைப்பதற்கு
உலவில்லாநொண்பலமு மூலாவுமிருகச்சிறையும்
யில்லாமவிலக்கி யிப்போதரவேணும்
நல்லாப்பயிர்விளைந்து நாங்கள்பிளைக்கவேணும்
என்றுயிவருரைக்க யிதுதந்தோமென்றுரைத்தார்
அன்றுயவரனுப்பியவர் மலைக்கேகுகையில்
வைத்ததொழிலை மலையரசர்நீங்களெல்லாம்
செயித்ததறியாமல்த் திருப்பியேசெய்ததுண்டால்
நரகமதுபிடித்து நாள்வழியேக்கொன்னுகொன்னு
துரேகமடைந்து தீநரகில்மாழ்வீர்கள்
என்றுசாபித்தார் ரெம்பெருமாளானவரும்
அன்றுயவர்கேட்டப் படியேவந்துதென்றூல்
சொன்னநரகில்ச் செத்திறந்துபோவோமென

அன்னப்பெருமான் முன்ருணையிட்டுப்போனர்
போனருலகில்ப் பிச்சைவேண்டிக்குடித்து
வானேரறிய மந்திரமானாலமற்று
மந்திரவித்தை மாமுனிவன்சாத்திரமும்
தந்திரமும்போச்சுதென்று சகலோருங்கொண்டாடி
வைகுண்டசாமி வாய்த்தக்கணக்கதிலெ
மைய்கொண்டவானேர் மிகவறியத்தானெழுதி
பூலோகமும்மறியப் பெரியோனெழுதினரெ

**விருத்தம்**

மாந்திரங்களிவுசூனு மாறணக்கருவுகோழும்
உபாந்திரத்தீதுகேடு ஒறியப்பொய்பொல்லாங்கு
ஏந்தியநினைவுப்பாசமிது முதல்வினைகளெல்லாம்
சாந்தியிலெரித்து நீத்தித்தர்மத்தைவளக்கலுற்ருர்

**நடை**

நல்லநாராயணரும் நாமமணிவைகுண்டராய்
செல்லத்திருவுளமாய்ச் சீமைக்குறுதியுமாய்
மனிதவதாரமெடுத்து வைகுண்டவாசகனும்
பனிதவளும்பத்தினியாய் பாலருடவங்கிசத்தில்
ஊண்டாகிவாழ்ந்து யுலகமறிவதற்கு
குண்டணிபேய் பொய்யுங்குறளிகருவைத்தியமும்
ஆகாதெனவெரித்தப் பிறப்புமறுத்து
வாகாகத்தர்மமதாய் வாழுங்கோமானிடரே
என்றுசொல்லித்தர்மயெம் பெருமாள்நினைத்து
மன்றுபதினைலறிய வாய்த்ததர்மங்கூறினரே
இன்றுமுதலெல்லோரு மிகாபராதஞ்சமென்று
ஒன்றுபோலெல்லோரு மொருபுத்தியாயிருங்கோ
காணிக்கையிடாதுங்கோ காவடிதூக்காதுங்கோ
வீணுக்குத்தேடுமுதல் விறுதாவில்ப்போடாதுங்கோ
வைகுண்டர்க்கேபதறி வாழுவதல்லாமல்
பொய்கொண்டமற்ருேர்க்குப் புத்தியயர்ந்தஞ்சாதுங்கோ
அவனவன்றேடுமுதலவனவன் வைத்தாண்டிடுங்கோ
எவனெவனுக்கும் பதறியினிமலையவேண்டாமே
என்றுவைகுண்டராக்ஷியத்திலுள்ளோர்க்கு
கன்றுக்குமாதாவிரங்கிக் கர்ப்பித்ததுபோலுரைத்தார்
எல்லோருங்கேட்டு யெங்கள்வினைதீர்ந்ததென்று
நல்லோர்கண்முன்னே நவின்றிருந்தசொல்படியே
வருவார்வைகுண்டர் வந்தாலிருப்பவர்க்கு
தருவார்கெதிகள் சாகாதவாழ்வுகளும்
என்றுசொல்லிமுன்ன ரெங்கள்காலமதிலெ
நன்றுதிருமொழியை நாங்களுமேதான்கேட்க
எங்கள்கலிதீர்ந்தெம்பரனே யென்றுசொல்லி
சங்கையுடனேபல சாதியெல்லாமறிந்தார்
நருளறியத்தர்மமிதை நாட்டியேயெம்பெருமாள்
துரிதமுடனேதொல் புவியில்வாழுகின்ற
பக்ஷிபறவைகள்க்கும் பலஜீவஜெந்துக்கள்கும்

அச்சுவரிமுதல்க்கு மானமிருகங்களுக்கும்
ஊர்வனங்களானதுக்கு முதித்தபுற்ப்பூண்டுகள்க்கும்
கார்சேடனுறுகள்க்கும் கறடுகல்லானதுக்கும்
உத்தரவாய்த்தர்மமுரைக்கிருரன்போரே
மிருகமோடுமிருகமிகமகிழ்ந்து வாழ்ந்திருங்கோ
மறுக்கலச்சலிட்டுமாளாமல் வாழ்ந்திருங்கோ
உங்களுக்குப்புல்பூண்டு மதைப்புசித்து
சங்கையுடனேர்தலத்தில் தண்ணீர்குடித்திருங்கோ
வாழ்த்திருங்கோநீங்கள் வைகுண்டருண்டெனவே
தாழ்ந்திருங்கோவென்று தங்கள்கிழைபோலே
மிருகவினத்துக்கிதுவுரைத்துப்பக்ஷிகள்க்கு
உறுதியுடனேவுரைத்தார் வைகுண்டருமே
பக்ஷியெல்லாவினமும் பண்பாலொருவினம்போல்
கக்ஷியுடனேகழிகூர்ந்து வாழ்ந்திருங்கோ
சிறிதுபெரியதுயென்று மிகச்சீருமல்
உறுதிபெரிதுவுடையோனே தஞ்சமென்று
கூடாவிக்குலாவிக் குணமாய்மகிழ்ந்திருங்கோ
நாடியுரைத்தார் நல்லபக்ஷிதங்களுக்கு
புல்ப்பூடானதுக்கும் பொறுதிமிகவுரைத்து
கல்வாரிதனக்குத் கனத்தசேடன்றனக்கும்
தங்கள்தங்களுக்குத் தாழ்மைமிகவுரைத்து
மங்களமாகமனமகிழ்ந்து வைந்தருமே
நாட்டுக்குநம்முடைய நல்லதர்மத்தின்படியே
கூட்டுக்குயேத்த குருவுபதேசம்போலே
எய்யாமல்நாதனெவ்வோருந்தானறிய
செய்தர்மஞாயச் செய்திகேளும்நடுவே

விருத்தம்

அன்னீதத்தாலேலோகமவனியீரேழும்வாடி
குன்னியேக்கலியில்மூழ்கிக்குறுகியேயலைவர்கண்டு
கன்னிகள்மதலையானகர்ப்பகக்குலங்கள் தன்னில்
மன்னிகமனுப்போல்த்தோன்றிவளர்ந்துபின்னுதித்தார்தானே

விருத்தம்

உதித்தாயிரத்தெட்டாமாண்டிலுவரிசெந்தூரில்பெற்று
குதித்தாண்டினில்மாசியில்தெக்ஷணக்குருநாட்டினில்
பதித்தாமரையூரில் பள்ளிதான்கொண்டநாளும்
விதித்தாமிதைக்கருத்தாயருளுரைத்தாயறமுரைத்தாயே

விருத்தம்

பொய்யில்லைப்பசாசுயில்லைப்பில்லியின்வினைகளில்லை
நொய்யில்லைநோவுமில்லைநொன்பலத்துன்பமில்லை
தொய்யில்லையிறைகளில்லை சுறுட்டுமாஞாலமில்லை
மையில்லையுலகத்தோரே வாளுமோர்நினைவாலென்ருர்

விருத்தம்

இத்தனையெல்லாமில்லையென்றரிநாதன்சொல்ல
புத்தியிலறிந்துமன்னேர்புதுமையென்றன்பாய்க்கொண்டு
முத்தியிலிவரைக்கண்டு முயன்றவர்பேறுபெற்ருர்
பத்தியில்லாதாரெல்லாம் பாளெனச்சொல்லிநின்ருர்

### விருத்தம்

இப்படிமனுடரெல்லாமிவர்மொழித்தர்மங்கண்டு
ஒப்புடன்கூடிவந்து வொருவனேத்தஞ்சமென்று
செப்பிடத்துலையாதய்யா சீர்பதம்பதமேயென்று
நற்புடன்மனுடரெல்லாம் நாடியேமகிழ்ந்திருந்தார்

### விருத்தம்

நாடியேயுலகிலுள்ள நருளெல்லாமோர்தலத்தில்வந்து
கூடியேநிற்கும்போதுக்குரோணிதன்கொடியால்வந்த
சாடிகளதினுல்நீசன்சாகிறதறியாமீறி
பாடியேவைகுண்டர்தம்மைப்படையேவிப்பிடிக்கவந்தான்

### விருத்தம்

வந்தவன்சுசீந்திரந்தன்னில் வளைந்தவன்கூடாரமிட்டு
மந்திரிமாரைநோக்கி வகையெனப்புகல்வானீசன்
இந்தமானிலத்திலென்னோடெதிரிதானுரோசொல்வீர்
விந்தயாயவரைச்சென்று விருதிட்டுவருகவென்ருன்

### நடை

நாடுங்குரோணி நாதவழியாய்ப்பிறந்த
மூடமடைந்த முளுநீசமாபாவி
இருந்தநகர்விட் டெழுந்திருந்துதானேகி
வருந்தபடையோடு வந்தான்சுசீந்திரத்தில்
ஆனைத்திரள்கோடி யதிகப்பரிகோடி
சேனைத்திரள்கோடி சென்ருன்சுசீந்திரத்தில்
சேவுகக்காரர் திலுக்கர்துலுக்கருடன்
ராவுத்தர்கோடி ராக்கதர்கள்முக்கோடி
சரடன்கரடன் சகுனிகெவுளியுடன்
முரடனுடனே மூர்க்கர்முழுமூடர்
படைகள்ளலங்கரித்து பாரவெடிதீர்த்து
கொடிகள்ளலங்கரித்து குடைகள்மிகப்பிடித்து
வாழ்க்காறர்கோடி வல்லயங்காறர்கோடி
தோழ்க்காறர்கோடி சுரண்டிக்காரர்கோடி
அம்புக்காறர்கோடி யாயுதக்காறர்கோடி
வம்புக்காறர்கோடி வந்தாரவன்கூட
வெடிக்காறர்கோடி வேல்க்காறர்கோடி
அடிக்காறர்கோடி வந்தாரவன்கூட
இத்தினையாற பாரத்துடனீசன்
தத்தியுடநடந்து தமுக்குமிகவடித்து
வந்துகூடாரமிட்டான் சுசீந்திரத்தில்
தந்துதந்தாகத் தளங்கள்மிகக்கூடி
கொந்துகொந்தாக கொடும்படைகள்கூடிவர
மந்திரிமாரோடு வந்திருந்தேதுசொல்வான்
கேளாய்நீமந்திரியே கிருபையுடனோர்வசனம்
வாழால்ப்பெரிய மன்னர்கடன்னுள்முதலாய்

நமக்காயிருந்ததுகாணம் முடையநாளையிலே
துடுக்கானவெள்ளை நசுருணியவன்றனக்காய்
ஆச்சுதேநாடு யவனுக்கேயாகிடினும்
பேச்சுநாமல்லாமல்ப் பின்னொருவர்காணுதே
ஆனதால்ப்பூமியிலே யாதொருவராகிலும்
மானமறவேநமக்கு மாத்தானைக்கண்டதுண்டால்
ஆய்ந்துவிசாரித்தறிவித்துச் சொல்லுமென்றான்
தேர்ந்துநின்றுமந்திரியு திரீசக்குலமதினால்
பொல்லாதக்கூத்திரப் பிசாசுக்குலமானதினால்
கல்லாதான்கூடிக்கண்டு தேர்ந்தேதுரைப்பான்
வேறொருவரையும் மேதினியில்நாங்காணோம்
வாறோர்ஞாயமாற்றம் வையகத்தில்காணுதுகாண்
நமக்குயிறையிறுத்து நாடுழியங்கள்செய்யும்
குமுக்காயினம்பெருத்த கூண்டசாணரினத்தில்
வைகுண்டமாகவந்து பிறந்தோமென்று
மெய்கொண்டபூமியெல்லாம் வேறொருவராழாமல்
நான்தான்முடிசூடி நாடுகட்டியாள்வேனென
தான்தானுரைபகர்ந்து சாதிபலதும் வருத்தி
ஒருதலத்திலூட்டு வித்தானுற்றநீரானதையும்
அருகிருக்குஞ்சாணார்க் கதிகவிதிதோணுதுகாண்
ஆகாத்தபொல்லாரை யழித்துப்போடுவேனென்றும்
சாகாவரங்கள் சாணார்க்கீவேனென்றும்
சொல்லியிருக்கிறான் சுவாமிவைகுண்டமென்று
தொல்லுலகிலிந்தச் சொல்க்கேள்க்குராசாவே
என்றவன்மந்திரிக ளித்தனையுஞ்சொன்னவுடன்
ஒன்றுமுறையாடா துட்க்கார்ந்தயர்ந்துரைப்பான்
ஏதுகாண்மாயமிது ஞாயம்வந்ததென்ன
வாதுக்கொருவர் வருவாரைக்காணோமென்று
நினைத்ததர்க்கோயிந்த நேருசொல்வந்ததுகாண்
மனதயர்ந்துபார்த்து மந்திரியைத்தானோக்கி
ஏதுகாரணமந்திரியே எல்லாரிலும்மெழிய
சாதியிலேயுள்ளவன்றான் சாற்றுவானோயிந்தமொழி
ஏதோவொருசூச்ச மிருக்குதுகாணிம்மொழியில்
ஆராய்ந்துபார்ப்போ மல்லோருங்கூடிருந்து
என்றந்தப்பேர்க ளெல்லோருஞ்சம்மதித்து
அன்றந்தசாஸ்திரியை யவன்வருத்திக்கேள்க்கலுற்றான்
சாஸ்திரியேயிந்தத் தர்மராச்சியந்தனிலே
வேற்றொருவரெந்தனுக்கு வீறிட்டதுண்டோகாண்
எதிரியுண்டோப்பா ரென்னுடையசோதிரியே
கருதிமிகப்பார்த்து கடியசாஸ்திரிப்புகல்வான்
தர்மமுடிவேந்தே சாற்றகேளுமரசே
கர்மக்கலிதோசங்கமண்டலங்களேள்வரையும்
சுற்றிப்பரந்ததுகாண் டோசத்தால்ப்பூமியெல்லாம்
கர்த்தனரிகிஷ்ணர் கடியகோபம்வெகுண்டு

பூமியிலேவந்து பிறந்ததிந்ததோசமதை
சுவாமிதர்மத்தாலே தோஷமதையழித்து
நல்பூமியாக்கி நாடெங்குமோர்குடைக்குள்
சொல்லொன்றுக்குள்ளாள சுவாமிமகாவிட்டுணுவும்
மனுவாய்ப்பிறந்து வைகுண்டமென்றுசொல்லி
தனுவையடக்கித் தவசிமிகயிருந்து
நல்லோரையெல்லாம் நாடிமிகயெடுத்து
வல்லோராய்ச்சாகாமல் வரங்கள்மிகக்கொடுத்து
ஆளவருவாரவர் வருகும்நாளிதுகாண்
என்றுமிகச்சோதிரியு மிந்தக்குறியுரைக்க
நன்றுநன்றென்று ராஜன்மிகமகிழ்ந்து
சொல்லக்கேள்சோதிரியே சொன்னதெல்லாஞ்சரிதான்
எல்லையுண்டோவவர் வந்திருக்குமினங்களென்ன
சொல்லிவிதிநீ சுத்தமுள்ளசோதிரியே
நல்லியல்புபெற்ற நற்குறியோனுரைப்பான்
இன்னவகைசாதியிலே யிவர்வருவாரெனவே
சொன்னக்குறியைத் தியக்குதுகாணென்மனங்கள்
தர்மங்கொண்டுசுவாமி தாரணியில்வந்ததினல்
பொர்மைக்குலமாயிருக்கும் பெரியவழியாயிருக்கும்
நம்மாலேச்சொல்லி நவிலக்கூடாதிதுவே
சும்மாவெனைநீங்கள் ஜோலிபண்ணவேண்டாமே
எந்தந்தசோதிரியு மிணங்கிவணங்கிநின்றான்
மன்றுதனையாளும்மன்னன் மறுத்தேபுகல்வான்
அப்படித்தானுலாதிமகாவிட்டுணுவும்
இப்படியேவந்திவர் பிறக்கவேணுமென்றால்
போத்தி-நம்பூரி பிராமணசூத்திரகுலத்தில்
பிறக்காமலிந்தப் பிறந்தீண்டாச்சாண்குலத்தில்
பிறக்கவருவாரோ பெரியநாராயணரும்
சும்மாயிந்தச்சாணுன் சுவாமியெனசமைந்ததெல்லாம்
பம்மாத்தாய்க்காணுதுப் பராக்கிரமமந்திரியே
இப்போதொருநொடியில் யிந்தச்சாணுன்றனையும்
மெய்யாகக்கொண்டுவிட வேணுமெந்தன்முன்னே
என்றுமந்திரிமாரை யேவுந்தறுவாயில்
அன்றுயருகிருந்த ஆயிடையர்தன்வழியில்
ஒருவனெழுந்திருந் துற்றராசனைநோக்கி
கருதனம்போல் புத்திகர்ப்பித்தானம்மானை

## விருத்தம்

கேட்டீரோமுன்னுளுள்ள கெறுவிதவளங்களெல்லாம்
தாட்டிமையாகச்சொல்வென்றமியேனும்வணங்கிநின்று
பூட்டியேமனதில்வைத்து புத்தியென்றெண்ணிநீரும்
நாட்டினில்நன்மைசெய்து நலமுடனரசுசெய்யும்

## விருத்தம்

மாயனேயுபாயத்தாலே மனுவதுபோலேயாகி
ஆயனர்க்குலமுந்தோன்றி யவனியில்ருப்பென்கண்டீர்

மாயத்தையறியாநீரு மாளவேபோகவேண்டாம்
ஞாயமாயுரைத்தேனையா நம்முடைவரசுக்கேகும்

விருத்தம்

எழிமையாங்குலங்களென்று வெண்ணுறமனுவேயல்ல
பழிரெனவதியநாதன் பார்க்கவேமாட்டாரையா
அழிவதுயுகத்துக்காச்சு வானதால்வருவார்திட்டம்
வழியிதுயில்லையய்யா மாறியேபோவோம்வாரும்

விருத்தம்

தெசதரன்மகவாய்மாயோன் சீமையில்வந்துதோன்றி
புசமுடப்பிறப்போர்கூடப் பிறந்ததுங்கேட்டிலீரோ
வசையுடன்மனுத்தானென்று வாதிட்டவரக்கன்தன்னை
சிரசையுடநறுத்தசெய்தி விளம்பியுங்கேட்டிலீரோ

விருத்தம்

தெய்வதிவயிற்றினுற்று ஸ்ரீகிருஷ்ணரெனவேதோன்றி
வைவசுதேவன்பெற்ற மனுவெனவளங்கள்நாட்டி
நெய்பிடைவழியில்ச் சேர்ந்துநெருட்டிடுமாஞ்ஞாலஞ்செய்து
செய்வதர்கஞ்சன்றன்னை ஜெயித்ததுக்கேட்டிலீரோ

விருத்தம்

ஐவர்க்குதூதனுகி யங்குமிங்கோடிச்சென்று
மைகுளல்சிலர்கள்தன்னை மணங்களுமிகவேசெய்து
மெய்ப்புடன்கிளைகளோடு மேவியேகுளாங்கள்செய்து
செய்திரியோதனனைக்கொன்ற செய்தியுங்கேட்டிலீரோ

விருத்தம்

இப்படிமாயன்ருனு மிருமூன்றுகங்கடன்னில்
ஒப்புடன்மனுப்போல்த் தோன்றியுவமைகள்பலதுஞ்செய்து
அப்படியுகங்டன்னைலழிந்திடா வரங்கள்பெற்ற
செப்பிடக்கூடாமாயன் செய்தியுங்கேட்டிலீரோ

விருத்தம்

சாணெனக்குலத்தின்மாயன் சார்வரோயென்றெண்ணவேண்டாம்
பாணுைய்த்தோன்றிநிற்பார் பறையனுய்த்தோன்றிநிற்பார்
தூணெனத்தோன்றிநிற்பார்த் தோலனுய்த்தோன்றிநிற்பார்
ஆணெனத்தோன்றிநிற்பார் ரவருருக்கேட்டிலீரோ

விருத்தம்

குகவனின்குலத்தில்வந்தார் குறவனின்குலத்தில்வந்தார்
மசவெனக்குலத்தில்வந்தார் மாடெனக்குலத்தில்வந்தார்
விசுவெனக்குலத்தில்வந்தார் வேடனின்குலத்தில்வந்தார்
அசுவெனக்குலத்தில்வந்தார் ரவருருகேட்டிலீரோ

விருத்தம்

இவ்விடந்தானுய்மேவி யிருப்பவர்க்கெந்தச்சாதி
அவ்விடமாகாதென் றவர்தள்ளமாட்டாரையா
செவ்விடமாலோன் சூச்சஞ்செப்பிடத்துலையாதய்யா
இவ்விடம்விட்டுநாம் ளேகுவோநம்மூரென்ருன்

விருத்தம்

என்றவன்சொன்னபோது யிராசனுமிகவேக்கேட்டு
பொன்றியவகையினுலே புத்தியிலறியாவண்ணம்
மன்றலத்தோர்க்குயேர்க்கா வார்த்தையையுரைத்தாயென்று
கொன்றவன்றன்னேபோடுங் கோபமாய்வுரைத்தானீசன்

விருத்தம்

வேதமாங்கலைகடேர்ந்த மேல்க்குலமதிலேமாயன்
சீதமாய்ப்பிறவாவண்ணஞ் சிறுகுலம்புக்குவாரோ
ஆரடாவிந்தவார்த்தை யார்க்குமேர்க்காபோடா
பாதகாயெனக்குப்புத்தி பகரவேவந்தாய்மோடா

விருத்தம்

நித்தமுன்னுலேலெக்ஷம் நேடியபொன்களிட்டு
சத்திரசாலைதோறும் தர்மமுமழித்துநாமள்
சித்திரதிருநாள்நித்தஞ் செய்கிறகுலத்தைத்தள்ளி
நித்தியம்வேலைசெய்யமெழில்குலம்புக்குவாரோ

விருத்தம்

பிரமனேயொப்பாஞ்சாதி பிராம்மணக்குலத்தைதள்ளி
சீராமனுமற்ருேர்தன்னில்ச் சேர்வதுதிடனேயில்லை
வராகமாயுதித்தமாயன் மனுவெனப்பிறக்கமாட்டார்
ஏதடாயிந்தவார்த்தை யென்முன்னேசொல்விநின்ருய்

விருத்தம்

காரணமானமாயன் கலியுகவருமென்றெண்ணி
நாரணன்பயந்துவோடி நல்மலையேறிமானுய்
வாரணநாதயம்பால் வல்வேடனெய்துசெத்து
தாரணிவாறேனென்று தவலோகஞ்சேர்ந்தார்மாயன்

விருத்தம்

அப்படிக்கொத்தமாயன் னவனியில்மனுப்போல்வாருன்
இப்படியிவன்ருன்சொன்ன திகழச்சியையெங்கேகண்டோம்
கர்ப்பிடிச்சாணுன்கையில்க் கைக்கூலிவேண்டிக்கொண்டு
இப்படிமழுப்பவந்தா யேதடாசெய்தியென்ருன்

விருத்தம்

மழுப்பில்லைக்கேளுங்கேளு மாண்டுநான்போனுலென்ன
வழுப்பில்லையுமக்குத்தூண்டல் வளருதுவவரிடமேகண்டாய்
கழுத்திலேயுமதுகையால்க் கத்தியைவாங்கிவைப்பாய்
முழுத்தில்லையானுலெங்சொல்மேல் வீசையரிந்துதாறேன்

விருத்தம்

ஆனையும்படையுமுந்தன் அரண்மனைக்கோவில்க்காலும்
சேனையும்குடையும்வியாள செல்வமும்சிறப்புயெல்லாம்
ஏனமுமிகவேதோத்து மெரிந்துநீகரிந்துசாவாய்
நானிதைச்சொல்லவில்லை நாரணருரைத்தாரென்றான்

விருத்தம்

என்றிவன்சொன்னபோது யேங்கியேவுளறிப்பின்னும்
பொன்றுறவகையினாலே புத்தியிலறியாவண்ணம்
கொண்டிவன்தன்னைப்போடுங் கொடுவிலங்கதிலேசிங்கத்
தண்டிகையெடுத்துவாருஞ் சாணானச்சாமிப்பார்க்க

விருத்தம்

பார்க்கவேபோவோமென்று பார்முடிவேந்தன்சொல்ல
தார்கெனபாவிநீசச்சறடனு மேதோசொல்வான்
ஆர்க்கிதுயேர்க்குஞ்சாணு னவனிடம்போவதென்ன
கார்க்கெதிகெவிடசாஸ்திரி கடிகனையனுப்புமென்றான்

விருத்தம்

அனுப்புமென்றுரைக்கும்போது வரசனுமேதோசொல்வான்
துனுப்புடன்சாணன்றன்னைச் சூழ்ந்துநூல்க்கயத்தால்கட்டி
களிப்புடனமதுமுன்னே கட்டுடன்கொண்டுவாரும்
வனுப்புடன்போவாயென்று வரிசையுங்கொடுத்தானீசன்

விருத்தம்

கொடுத்திடும்வரிசைதன்னைக் குவித்தவன்வேண்டிக்கொண்டு
கடுத்தமாய்க்கெவுடசாஸ்திரி கடும்படைக்கோலமிட்டு
தடுத்திடும்வீரர்தன்னை தானிங்கேவாருமென்று
நடுத்தரமதிலேநின்று நல்லணிவகுக்கலுற்றான்

விருத்தம்

பரிநடைக்காரர்தன்னைப் பக்கமுன்னேவிட்டான்
கரிநடைக்காரர்தன்னைக் காவலாய்முன்னேவிட்டான்
சரிபரியேறிக்கௌட சாஸ்திரிமுன்னேநின்று
வரிபடைக்கவசம்போர்த்து வந்தனன்படைக்குமுன்னே

விருத்தம்

அம்பெடுத்தெய்வே னென்றவனொருவணிகள்சாட
கம்பெடுத்தடிப்பேனென்னக் காலசன்மிகவேசாட
கொம்பெடுத்துதைப்பேனென குஞ்சரத்தலைவரோட
டும்படக்கொல்வேனென்னப் போயினன்கவுடன்றானே

நடை

இந்தநேரந்தனிலே யேகியந்தசாணானை
குந்தமதுகொண்டிடித்துக் குண்டிசுற்றிக்கயிறிறுக்கி
இங்கேகொண்டுவாறேனென்றுகௌடனுமே

துங்கவிருதுபெற்றுச் சூழப்படைவகுத்து
ஆயுதமம்புமணியீட்டி தான்பிடித்து
வாயுதக்கணேகள் வகைவகையாயெடுத்து
பரியைவிதானமிட்டுப் பாய்ந்துகௌடனுமே
கரியைச்சூழமிறுத்தி கனபடைகள்பின்னிறுத்தி
நீசன்விடைவேண்டி நீனிலமுமறிய
பாசக்கயிறுடனே பாவியந்தக்கௌடன்
வாறவிதமதையும் வைந்தப்பொருழறிந்து
கறணிக்கமொன்று கருத்தில்மிகநினேந்து
இப்போபதறி யெழுந்திருந்தோடவென்று
அப்போதுமாய னறிந்தேகும்வேளேயிலே
நன்மையாய்ச்சொல்லி நாடுவதுமெச்சாதி
தின்மையாய்ச்சொல்லிச் சிரிப்பதுவுமெச்சாதி
என்றுநாம்பார்ப்போ மென்றுமனதிலுற்று
பண்டுநாம்பிறந்த பால்க்கடலேநோக்கி
ஓடத்துணிந்தாரொரு வேசமும்போட்டு
ஆடத்துணிந்தா ராகாசத்தேதேவர்
ஆடையணியாமல் லரைக்கயிறுமில்லாமல்
நாடைக்கெணியாமல் நடந்தார்கடல்நோக்கி
நல்லமனுச்சாதி நாராயணுவெனவே
செல்லமக்களெல்லாஞ் சிவசிவாவென்றுசொல்லி
கூடத்துடர்ந்துங் குபித்துப்பதம்போற்றி
தேடரியநல்லோர் சேவித்துபின்வரவே
ஆகாதநீசவனியாயச்சாதியெல்லாம்
வாயாரப்பேசி வம்புரைத்தேநகைத்தார்
பதறியிவன்போருன் படைவருகுதென்றுசொல்லி
கதறிமிகவோடுகிருன் கள்ளசுவாமியிவனும்
சுவாமியென்ருல்நருள்க்குத் தோற்றுமிகவோடுவானே
நாமிவனேநம்பி நடந்ததுவும்வீணுச்சே
பேயனுடபேச்சைப் பிறமாணமாய்க்கேட்டு
ஞாயமதுகெட்டோம் நாமெல்லாமொன்றுசொல்லி
நீசகுலத்தோர் நெடுந்தூரம்வைதார்காண்
தேசமதையாளுஞ்செல்ல வைந்தர்சூச்சமதை
அறியாமல்நீசரெல்லாம் அப்பொனன்றியைமறந்து
வெறிகொண்டபேயனென மேதினியில்பேசினர்காண்
நல்லமனுவோர் நாரணுத்தஞ்சமென
செல்லமனுவோர் திருப்பாதமுந்தொழுது
கூடிநடந்தார் குருவேகுருவேயென
நாடிநடந்தார் நல்லபதியேற்றவரென
கண்டுகொள்வோமென்று காட்சையுடநடந்தார்
பண்டருள்பெற்ற பச்சமாலுடநடந்தார்
அப்போவைகுண்ட சாமியுமகிழ்ந்து
எப்போதும்வாள்வாரெனக் காகும்மக்களெல்லாம்
வம்புரைத்தநீசகுலம் முழுதுஞ்செத்திறந்து

முன்புவிதியால் முழுநரகமேவிழுவார்
என்றுமிகச்சாபித்தெம் பெருமாடானடந்து
பண்டுபிறந்தப்பால்க் கடலுள்சென்றனரே

விருத்தம்

சென்றவர்தேவரோடுச் செகல்க்கரைதனிலேநின்று
நன்றினந்தன்னைப்பார்த்து நவிலுவார்வைந்தராசர்
பண்டெனைப்பெற்றதாதா பால்கடலுள்ளேயென்னை
சென்றிடவிளைக்கார்நீங்கள் செகல்க்கரைதனிலேநில்லும்

விருத்தம்

நில்லுமென்றினத்தை யெல்லாம்நிறுத்தியேகடலிலுள்ளே
பல்லுயிர்யாவும்வாழப் பரமனுமங்கேசெல்ல
வெல்லமர்தேவரெல்லாம் மேகனிலக்குடைகள்போட
வல்லவன்தகப்பன்பாதம் வணங்கியேவைந்தர்சொல்வார்

விருத்தம்

அப்பனேவொப்பில்லாத யலைகடல்துயின்றமாயா
செப்பவுந்துலையாநாமஞ் சீமையில்விளங்கபெற்ருய்
தப்பரவில்லாயெந்தன் தகப்பனேகேள்மோவையா
எப்போனன்விளங்கியுந்தனிரத்தின சிம்மாசனத்திலேறுவேன்

விருத்தம்

ஆண்டுரண்டாச்சே மாதமாயிருபதினலாச்சே
வேண்டுதலின்னங்காணேன் வெம்புறேன்கலியுள்மூள்கி
கூண்டுநீர்முன்னே சொல்லிக்குருபதேசம்வைத்த
ஆண்டின்னம்வருகிலேயோ வப்பனேமெய்யுள்ளோனே

விருத்தம்

இப்படிமகன்ருன்சொல்ல விருகையால்மகனையாவி
முப்படித்தவத்தால்வந்த முதவெனத்தளுவிக்கூர்ந்து
எப்படியென்ருேநீயு மேங்கவேவேண்டாமப்பா
ஒப்பிலாசிங்காசனம் முனக்கெனவளருதப்பா

விருத்தம்

ஏங்கிப்பதறவேண்டாமே மெனதுமகனேநீகேளு
மூங்கிக்கலியைவிட்டகன்று முழித்துக்குதித்துவுதித்ததன்று
தாங்கியுனைநான்வந்தெடுத்துத் தனதுதாயையிடம்நிறுத்தி
பாங்கிலுதித்தமகனுனக்குப் பட்டந்தரிப்பேன்பதருதே

விருத்தம்

வண்ணப்பதியினலங்காரம் வகைகளின்னதென்றுசொல்லி
யெண்ணத்தொலையாதென்மகனே ரத்தினசிங்காசனப்பவிசு
கண்ணைப்பறித்துநீசனுட கருவையறுத்துக்கலியழித்து
எண்ணும்வளரவாழவைப்பே னெண்ணுணயிதுவேநிசமகனே

விருத்தம்

மண்ணிலுள்ளோர்தாமறிய மனுவோர்ஜீவசெந்தறிய
கண்ணிலிவர்கள்கண்காணக் கலியில்காச்சிமிகநடத்தி
புண்ணில்க்கருதுப்பட்டாப்போல் பொல்லாநீசன்கண்டுளைந்து
யெண்ணியறியாநீசனல்லா மேங்கிமாளவைப்பேனே

விருத்தம்

மகனேநீயுந்தவமிருக்கும் வாய்த்தயிடத்திலிப்போசென்ருல்
உகமேயறியக்கலி நீசனுேடிவந்துவுனைப்பிடித்து
செகமேளறியவுன்கையைத் திறுக்கிப்பின்லேகெட்டிறுக்கி
பகையைசெய்துமிக வடித்துப்பாரவிலங்கில்வைப்பானே

விருத்தம்

வைப்பான்மூன்றேமுக்கால்மாதம் வாய்த்தவிலங்கில்நீயிருந்து
செயிப்பாய்கலியை யறுப்பதர்க்குரிச்சணமேநமக்குக்கைவநச்சு
பொய்ப்பாரென்பான்பின்னும்மவன்பெரிய குற்றமேர்ப்பதற்கு
மெய்ப்பாயவனுமுரைத்ததுபோல் மெள்ளவுரைத்துயிருந்திடுநீ

விருத்தம்

மனுவையடித்ததுபோலே வசைகள்சொல்லிமிகவடிப்பான்
தனுவையடக்கிக்கொண்டிருநீ சற்றும்புதுமைகாட்டாமல்
இனிமேலறிவாயென்றுசொல்லியெண்ணிமனதிலெனைநினைந்து
கனிபோலமகிழ்ந்துநீயிரு நீகண்ணேயெனதுகற்பகமே

விருத்தம்

அன்பாயுன்னையடுத்திருந்த வாதிச்சாதியவ்வினர்க்கு
தன்பாலருந்தும்சாதிகள்க்குத் தவத்துக்குறுதிதான்கொடுத்து
யென்பால்கடலின்கரைதனிலேயேழுமணிக்குவிடைகொடுத்து
பின்பாலவரையருகழைத்துப் புசத்திலடுக்கயிருந்திடுநீ

விருத்தம்

கண்டாய்கண்டாயுடன் புதுமைகண்ணேயுனக்குநற்காலம்
கொண்டாய்கொண்டாய் பத்தறையில்க் கோவில்க்காலுஞ்சி
[வாலையமும்
தண்டாயுதத்தால் 'வாகனமுஞ்சத்திமாதரிருபுறமும்
பண்டோர்காச்சியுனக்குள்ளே பண்பாய்க்காணுமென்கனே

விருத்தம்

காச்சிச்சிறப்புக்கலியாணங்கவரி வீசிக்கொலுவாரம்
சாச்சிக்கணக்குமுன்வருத்திச் சந்திரவர்ணக்கொடிநிறுத்தி
வாச்சியுனக்குத்திருநாளும் வாய்த்தடம்மானம்முளங்க
காச்சியுனதுமுன்காணுங்கருணை மகனே கலங்காதே

விருத்தம்

பல்லக்கேறித்தெருவீதிப் பகலத்தேருநீநடத்தி
செல்லப்பதிகள்மிகமுகித்துத்திருநாள் கண்டுமகிழ்ந்திருநீ
வல்லக்கொடிகள்மரம்நிறுத்தி வருவாய்நித்தவாகனத்தில்
பொல்லாக்கலியன்கண்டுளைந்து பொடிவானித்தமடிவானே

### விருத்தம்

இப்படிசிறப்பதெல்லாம் உனக்கென்மகனே மென்மேலும்
எப்படிமலங்கி எண்ணேடிதுரைத் தேதுபிள்ளாய்
சொல்ப்படியெல்லாம் அந்ததெய்தியில் தோணுங்கண்டாய்
அப்போநீவறிந்து கொள் அப்பனும் நீதானுனய்

### நடை

நல்லமகனே நான்வைத்தவிஞ்சையது
எல்லேதனில்வந்து யிகனேநடத்துமப்பா
என்னென்னபவுசு யின்னம்நடக்குமடா
உன்னேயின்னங்காணு ருல்கிலொருமணிக்கு
கெடுத்தானேயென்று கெடுவார்மிகக்கூடி
நடுத்தனமுடைய நல்லமக்கள்குன்ருது
புழுத்துச்சொரிவாய் பூமிதனில்நீயும்
கழுத்துவரைமுன்னூன்றி கண்ணுங்தெரியாமல்
ஆவியலுகாமலாடை யொன்றில்லாமல்
கிடப்பாய்த்தெருவில் கிழவன்வேசமெடுத்து
துடைப்பார்கள்நம்மினத்தோர் தூக்குவார்நம்மினத்தோர்
சாணுச்சுவாமி சாவாருவாகுதென்று
வீணுகநீசனெல்லாம் வெகுளியாய்த்தான்நகைப்பான்
பெண்சிலரைக்கெட்டி பெரும்புவியோர்தானறிய
மண்சீமையோரறிய மங்கையோடுசண்டையிட்டு
தெருவில்க்கரையேறித் தேவியரைத்தான்கூடி
கருவிலுருத்திரண்டு கண்ணுளர்தான்பிறந்து
சீமைநருளறியத் தேசந்தனிலாண்டு
தாழ்மைபொறுதியுடன் சாணர்விருந்தழைத்து
மனுக்கள்முறைபோலே வாழ்வாய்புவிதனிலே
தனுக்களுனக்குள்ளெ சறுவதுமேயடங்கும்
எல்லாமடக்கி யானுன்னிடமிருந்து
நல்லோனேயுனக்கு நாட்டில்சிறப்புமெத்த
காணுமகனே கலிநீசன்கண்ணுமுன்னே
ஆணும்பெண்ணேடு மன்புற்றிருக்கையிலெ
நல்லத்திருவாளி நர்ப்பட்டுவாகனத்தில்
செல்லத்திருவோடுஞ் செம்பவளமாலேயுடன்
வாகனத்தேறும் வருமானுலத்திருந்து
காணுவோர்காண்பார் காணுதார்வீணுவார்
தாணுவேநீயொருவன் தானுகவாண்டிருப்பாய்
இன்னம்பவுசு யெண்ணத்துலேந்திடுமோ
வன்னமகனே வாறதெல்லாங்கண்டிருநீ
பதருதேபோயிருநீ பாரத்தவசியிலெ
குதருதேபோயிருநீ கூண்டத்தவமதிலே
வாறநீசன்றனக்கு மலங்காதே நின்றுகொள்ளு
போறநீசன்றனக்கு பொறுமையாய் நின்றுகொள்ளு
என்றுமகன்றனேயு மெழுந்திருந்துபோனீயென
மன்றுதனேயழுந்தோர் மகனேக்கடல்கடத்தி
கரையிலேகொண்டு கண்ணருடனுரைத்தார்

பிதாவையனுப்பிப் பெரியவைகுண்டபொருள்
விதானித்துவுச்சரித்து வேதவுல்லாசமிட்டு
தெச்சணபூமி சென்றதவத்திலே
உச்சரித்துநாதனுகந்து நடக்கலுற்றார்
நடந்தாரெதெக்ஷணத்தி நல்லமுனியுடனே
படந்தார்மார்பன் பண்டுதவமிருந்து
தலத்திலேவந்து சுவாமிதவமிருந்தார்

விருத்தம்

இருந்தனர்விஞ்சைபெற்று யிருபுறமுனிகள்ச்சூழ
பொருந்திடுங்கமலமாது பூரணமதுவாய்நிற்க
கரிந்திடும்நீசப்பாவி கயிறுவாள்வெடிகள்சூலம்
புரிந்தவன்கோட்டிசெய்து பிடிக்கவே வந்தானங்கே

விருத்தம்

வருமுன்னேயருகில்நின்ற மக்களைவைந்தராசர்
கருதினமாகநோக்கிக் கடக்கவேநில்லும்நீங்கள்
பொருதிடநீசன்வாறான் பொறுத்துநான்வந்தபோது
அருகிலேயுங்கள் தன்னையழைத்து நாங்கொள்வோமென்றார்

நடை

இப்போதுநீசனிங் கோடிவாறான்காண்
மெய்ப்பானமக்களெல்லாம் விலகிநின்றுவந்திடுங்கோ
செய்கிறதைப்பார்த்து திரும்பியிங்கேவந்தவுடன்
கையருகிலுங்களையுங் கட்டாய்வரவழைப்போம்
என்றுமக்களுக்கு யியம்பவர்விலக
முன்றுசெய்யாப்பாவி முடுகுங்கெவுடனுமே
கூட்டப்படையோடு கொக்கரித்தேதுடியாய்
சாட்டைவெறிபோலே சாடிவந்தான்கெவுடன்
சூழப்படையைச் சூதானமாநிறுத்தி
வேழம்பலரேவிவெடி யாயுதத்துடனே
வந்துவழைந்தான் வைகுண்டர்வாழ்பதியில்
சிந்துக்குயிரான ஸ்ரீபல்பனுபருமே
கவிழ்ந்துபதிவாசலிலே கட்டிலின்மேலிருக்க
அவிழ்ந்ததுணியோடவரிருக்குமுபாயமதை
அறியாமல்நீசனணி வகுத்துத்தன்படையை
குறியாய்ப்பிடிக்கக் கூட்டமதில் நுழைந்து
சாணரினங்கள் சதாகோடிகண்டுழைந்து
வாணள்வதைப்பானோ வென்றுமனதுழைந்து
குதிரைமேலேறிக் கொடுஞ்சாட்டையால்வீசி
சதிருசதிராய்ச் சாணரைத்தானடித்து
அடிபட்டபோ தவர்கள்மிகக்கொக்கரித்து
முடிபடவேயிந்தமுழுநீசவம்மிசத்தை
இப்போதொருநொடியி லிவரையெல்லாமடித்து
மெய்ப்பாகக்கொன்று விடுவோமெனச்சினத்தார்
ஆழுக்கொருவனுவானோ நீசனெல்லாம்
தூழுபோலாக்கவென்றுத் துடியாயெழுந்திருந்தார்

சான்றோர்சினத்துத் தாறுமிகைப்பாய்த்து
ஆன்றோரைநெஞ்சில் வைத்தாடைமிகயிறுக்கி
உடையிறுக்கிக்கெட்டி வுல்லாசத்தைத்தொடங்கவிட்டு
படைத்திரளாச்சான்றோர் பண்பாய்வொருமுகமாய்
யெதுத்துநிற்கும்போது யெம்பெருமாள்தானறிந்து
பொதுக்கென்றகோபமதைப் புத்திதனிலடக்கி
பொறுத்திருந்தவரெ பெரியோரேயாகுமக்கா
அறுத்திடவென்று லபூருவமோயெந்தனக்கு
வம்புசெய்வதைப்பார்த்து வதைக்கவந்தேனக்குலத்தை
அன்புகுடிகொண்ட வதிகமக்காளீங்களெல்லாம்
பொறுத்துயிருங்கோ பூலோகமாளவைப்பேன்
மறுத்துரையாடாமல் மக்களென்றசான்றோர்கள்
என்னசெய்வோமென் றிவர்கையைத்தான்கடித்து
பின்னேவிலகிப் பெரியவனேயென்றுநின்றார்
நீசன்மகிழ்ந்து யெதிர்ப்பாரைக்காணேமென்று
பாசக்கயிறுகொண்டுபரமன் வைகுண்டரையும்
கட்டியிருக்கிக் கைவெடியாலிடித்து
கெட்டியிறுக்கி கீழேபோட்டேமிதித்து
தலைமுடியைத்தான்பிடித்துத் தாறுமாறாயிழுத்து
குலையைக்குலைத்ததுபோல் குண்டரைத்தானலைத்து
குண்டியிலேகுத்திக் குனியவிடுவான்வொருத்தன்
நொண்டியோவென்று நெழியிலேகுத்திடுவான்
வெடிப்புடங்கால்சுவாமி மேலெல்லாம் தானிடித்து
அடிப்புடங்குகொண்டு வடித்தடித்துத்தானிழுப்பான்
சாணுருக்காகச்சமைந்தாயே சுவாமியென்று
வாணுளைவைப்போமோ மண்டிப்பதனிக்காரு
பனையேறிச்சுபாவம் பட்டுதில்லையென்றுசொல்லி
அனைவோரையும்வருத்தி யாபரணந்தேடவென்றே
சமைந்தாய்சுவாமியென்று சாணப்பனையேறி
பனைச்சிரங்கின்னம்பற்றித்தெழியலையே
உனைச்சுவாமியென்றால் வொருவருக்குமேராதே
ஆளானவாழோ நீவாளில்ச்சிறியவனாய்
தாழக்கிடந்து சாமியென்றுவந்தாய்நீ
நாராயணசுவாமி நானென்றதும்நீயோ
வாரணத்தின்காலில் கட்டிவாட்டுவோம் பாருவொன்பான்
உன்னோடுநின்றவர்க ளுன்னையடிக்கையிலே
என்னோடுவந்தென்னவென்று கேட்கலையே
நீசாமியென்றால் நெகிழுவரோயிவர்கள்
பாசக்கயிறுபற்றுமோ வுன்கையிலே
வகைதேடவென்று மனுச்சாமியென்றாயோ
புகையோடேப்புகையாய்ப் போறாய்நீவம்பாலே
நருள்க்களைவருத்திவிட்ட நல்லமந்திரத்தாலே
மருளச்செய்தெங்களையும் மண்ணில்விழவைபார்ப்போம்
அல்லாமலுன்னைக் கெட்டுமறுவதர்க்கு
வல்லமையுண்டானல் மந்திரத்தைப்பார்நீயும்
கூனனைப்போலிருந்து குறுமுழிமுழிப்பதென்ன

நானன்னவென்று நகைப்பாரொருகோடி
ஏசுவார்கோடி யெறிவாரொருகோடி
பேசுவார்கோடி பேயின்வெறும்பேயனென
சொல்லிநகைப்பார் சுத்தமுள்ளநாராயணரை
பல்லுயிரும்படைத்த பரமன்வாய்பேசாமல்
கவிழ்ந்துகண்மூடி கழிகூர்ந்தேமகிழ்ந்து
சவுந்தரியநாதன் தானேநடக்கலுற்ருர்
வெடிகொண்டிடிப்பார் வெட்டவாளோங்கிடுவார்
அடியடித்துத் தள்ளியங்குமிங்குமிழுத்து
வேதனைகள்செய்வார் வேதநாராயணரை
சாதனைகளுள்ள சர்வபரநாரணரும்
எவ்வுகத்துக்கு மிப்பாடுவென்பாடு
இவ்வுகத்துக்கு மிப்பாடுவென்பாடு
அவ்வுலகத்திலுள்ள வனியாயப்பாவிகளை
இவ்வுகத்தைப்போலே யெரியாமல்விட்டேனே
என்றுமனதிலிதமாய் மிகவடக்கி
ஒன்றுமுறையாம லூமைபோலேநடந்தார்
நடக்கவேமாயன் நல்லன்பசான்ருேர்காள்
கடக்கவந்துநின்று கண்ணீர்மிகத்தூவி
ஏழைக்காகயிரங்கி யெங்கள்குலமீதில்வந்தீர்
கோலைக்குலநீசன் கொண்டடிக்கவந்தானே
பாவிநீசனாலே பட்டதுயரறிந்து
ஆவுமேய்த்தநாதன் ஆளவந்தார்நம்மையுமே
அய்யோயினிநாமலைந்து மிகப்போவோமே
மெய்யோடேகுத்தி விழுந்தழுவார்சான்ருேர்
தாய்தகப்பனில்லையென்று தானடித்தநீசனெல்லாம்
வாயயர்ந்திருந்தானே யிவர்வந்தநாள்முதலாய்
இனியாருநம்மை யேத்துக்கைய்தாறதுதான்
தனியானோம்நாமளினித் தலையெடுப்பதெக்காலம்
என்றுசான்ருேர்கள் சொல்லியழுதசத்தம்
கன்றுக்கிரங்குங் கண்ணர்மிகக்கேட்டு
மலையாதுங்கோநீங்கள் மாமுனிவன்புத்திரரே
அலையாதுங்கோ மக்காளையாதிருவாணை
இப்பூமிதன்னில் வந்தித்தனைநாள்வரைக்கும்
கைப்பொருளுக்கிச்சை கருத்தில்மிகநினைத்து
கைக்கூலிக்கிச்சை கருதினேனானைக்கால்
இக்குவலத்திலினிவரேன் கண்டிருங்கோ
தர்மமதுநிச்சயித்துத் தாரணியில்வந்ததுண்டால்
நன்மைகடைப்பிடித்து நான்வருவேனனிலத்தில்
ஒன்றுக்குமலையவேண்டாங்காணுத்தமரே
என்றுக்கும்நானிருப்பே னென்மக்கள்தங்களிடம்
ஆளுவேனோர்குடைக்கு ளானவைகுண்டனாய்
வாழுவோமக்கா வையகத்தைநாமாக

விருத்தம்

ஒன்றுக்குமலையவேண்டா முகபரநாதனாணை
என்றுக்குமலையின்மீது லேற்றியதீபம்போலே

கன்றுக்குப்பாலுபோலுங் கண்ணுக்குப்புருவம்போலும்
என்றுக்குமக்காவுங்களிட மிருந்தரசுவாள்வேன்

**விருத்தம்**

முன்முறைவிதியாலிந்த முழுநீசப்பாவிகையால்
என்விதிப்படவேயுண்டு யிறப்பொன்றனக்கென்றதினுலே
பின்விதியெனக்குநன்ரும் பெரும்புவியாழ்வோமக்கா
உன்விதிநல்லதாகு மொழிவருவாள்வீர்தானே

**நடை**

என்றுமகிழ்ந்து யெம்பெருமாளுள்ளடக்கி
மன்றுதனையழந்த மாலோன் நடக்கலுற்ருர்
கெட்டினக்கெட்டைக் கிறுக்கமுடனிறுக்கி
கட்டினக்கட்டோடே கருநீசன்தானடத்தி
ஏசுவீர்மாயவரை யெறிவார்காண்மாயவரை
பேசுவார்மாயவரை பேயனென்பார்மாயவரை
இப்படியேநீசக்குலங்களெல்லாமாயவரை
அப்படியேபேசி யடித்துமிகநடத்தி
நீசக்குலமிருக்கும் நெடுந்தெருக்களூர்வழியே
பாசக்கயிரேடுப் பகர்க்கள்ளனைப்போலே
தெருவுக்குத்தெருவு சிறுகுழந்தைநீசகுலம்
வருகின்றமாயவனை மண்கட்டிபேத்தெறிவார்
தலையைப்பிடித்திளுப்பார் சடைப்பேயன்பேயனென்பார்
இலைசருகுபோலெ எரியுகின்றசாதியெல்லாம்
குண்டியிலேவொருவன் கோல்கொண்டுகுத்திடுவான்
நொண்டியோவென்று நெளியிலெகுத்திடுவான்
நம்மள்குலத்தை நாணங்கெடுக்கவந்த
பம்பக்குறும்பேயன் பம்பைதன்னைப் பின்னுமென்பான்
அதிலுஞ்சிலபே ரடடாவென்றிடுவார்
மதிலேறிவந்து வாமடவார்சிலர்காண்
இவன்தானடியோ யென்னயுமோவாடவைத்து
சவந்தனையேசுட்டதுபோல்த் தான்சுட்டபேயனிவன்
தலைமயிரைப்பனையில்த்தான் பங்குவைத்திருக்கி
குலையக்குலையக்கொன்ற கொடும்பாவியிவன்
என்றுவெறிவாரிவன் சிலர்களம்மானை
அன்றதுகள்கண்டதிலுஞ் சிலமடவார்
ஆமடியோயுங்களையு மழைத்தானேவீட்டில்வந்து
ஓமடியோயிந்த விழுமாப்புப்பேசாதுங்கோ
அன்றைக்கவனை யடிபணிந்துநின்றுகொண்டு
இன்றைக்கவனை யெறியத்தொடர்ந்தாயோ
என்றுசிலபேரெறியாதே யென்றுரைப்பார்
நன்றுநன்றென்று நாரணருள்ளடக்கி
ஒருத்திக்கொருத்தி வுரைத்திடுங்கோவெனவே
கருதிமுகம்பாராமல் கண்ணர்மிகநடந்தார்
பாவிக்குலங்கள் பச்சமால் நாரணரை
தாவிச்சுசீந்தரத்தைத் தானேக்கிக்கொண்டுசென்ருர்

கொண்டுபோகும்வேளை கொடும்பாவிநெட்டூரன்
விண்டுரைக்கக்கூடாத வேதனைகள்செய்யலுற்றான்
அய்யய்யோமாயவரை யன்னீசமாபாவி
கொண்டுவிட்டுமாயவரை கூண்டுகலிராசன்முன்னே
கண்டுகலிராசன் கருத்தில்மிகதேர்ந்து
பார்ப்போம்பரீக்ஷை பயித்தியக்காறனுடனே
தார்ப்பிரியமாகத் தன்விரலின்மோதிரத்தை
களத்தியொருவர் காணமல்க்கையடக்கி
ஜனத்திலொருவர் தானறியாநீசனுமே
ஏதடாயெந்தன்கைக் குள்ளிருப்பதையும்
ஓதடாவுந்தன் வுற்றவலுவாலே
அப்போதுவாய னடக்கமிகவறிந்து
இப்போதுதானுரைத்தாவிந்த நீசகுலங்கள்
கண்டுபிடித்துக் கட்டுவார்நம்மையுமே
தொண்டுசெய்யுஞ்சான்றோர் துயரமதுமாறாது
நாம்நினைத்தகாரியமும் நடவாதுவானதினால்
யேனிதைத்தான் சொல்லப்போறோமெனவடக்கி
எல்லாம்படைத்த ஏகன்கிருபையென
அல்லாநினைத்தபடி யாகுமெனவுரைத்தார்
அப்போதுநீசனவன் வெகுளியாயுரைப்பான்
இப்போதொருமருட்டா யிவனேசுவாமியென்று
மருளிதுதானென்று மாற்றான்மிகமருண்டு
கொண்டுபோங்கோ சறடன்கூண்டவன் முன்பதிலே
என்றுரைத்தபோது யேவல்சீபாசிகளும்
நடத்தியிழுத்து நாராயணரையுமே
கடத்திசறடன் கண்டிருக்கக்கொண்டுவிட்டார்
உடனேசறடன்வுபாயமதைப் பார்ப்போமென்று
தடதடனவேயெழுந்து சாராயமானதிலே
அஞ்சுவகைநஞ்சு வதில்க்கலந்தான்மாபாவி
நஞ்சில்லையென்று நல்லபாலென்றீந்தான்
பாலென்றபோது பச்சநாதன்மகிழ்ந்து
காலனைக்காலாலுதைத்த கடவுளோர்தான்மகிழ்ந்து
வேண்டியகமேத்தார் வேதநாராயணரும்
ஆண்டிதினை லஞ்சாதிருப்பதையும்
பார்த்துசறடன் பண்பாயகமகிழ்ந்து
வேற்றொருசூச்சம் வேறேயுண்டாகுமென
என்னவோவென்றிவ னுணர்ந்துபாராமல்
பொன்னர்மயக்கம் பெரியமயக்கமாதால்
கொடுபோங்கோவென்று கூறினன்சேவகரோடு
வெடுவாகக்கொண்டு வெறுநீசன்டாணைவில்
யடைத்துவைத்தானங்கே யன்னீதமாபாவி
திடத்தமுடனாரணருஞ் சிந்தைமிகமகிழ்து
இருந்தாரேமாய னேழைக்கிரங்கியவர்
தருந்தார்மாயோன் தர்மந்தனைநினைத்து
சான்றோருக்காகத் தடியிரும்பிலுமிருந்து
மாண்டோரையும்மெழுப்பும் மாயவலுவாண்டி

அய்யையோமாயவரையடைத்து வைத்தேயிருந்த
பொய்யாப்பிரைக்குள் பொறுக்குமோகண்ணுகண்டால்
மோழுக்குழியில் மொதுமொதெனவேபுழுக்கள்
தோமூவழிப்புழுக்கள் தூணிமிகச்சரிய
அட்டைமிதக்க வரியயீதேள்மிதக்க
விட்டநரகு மிகுவாய்ப்புழுமிதக்கும்
நாற்றத்துறைகள் நரகத்துறையோலே
பாத்தவிடமெல்லாம் பலபுழுக்களுஞ்சரிய
அய்யோயவரை யடைத்தபுரையதிலே
கய்யாடிநிற்க காரணமோமாயவர்க்கு
சான்ருேருக்காகத் தர்மக்குருநாதன்
மீன்றுமுழியாமல் முகமலர்ந்துவங்கிருந்தார்
ஏஊகளுக்காகயீரொன் ரெருநாளாய்
மீளாச்சிலுவையிலே மூள்ளாலடிகள்பட்டு
மரித்துப்பிறந்ததுபோல் மாயக்குருநாதன்
யிதுவுகத்துக்கிப் பிரையிலிருந்துவமுந்தவென்று
இருந்தாரேமாயவனுர் ஏழைகளுக்காயிரங்கி
கருந்தார்மார்பன் கருத்தில்மிகவடக்கி
எல்லாமடக்கியிருக்கு மந்தநாஊயிலே
பொல்லாக்கலியன் புறப்பட்டான்மேர்க்கெனவே
இப்பேயனேயுமிங்கே கொடுவாருமென்று
அப்போதுசொல்லியவ னடந்தான்மேர்க்மகனவே
உடனேசிவாசியுற்ற நாராயணரை
திடமாகக்கூட்டிச் சிணமேநடக்கலுற்ருன்
கொண்டுபோனுரே கோட்டாற்றுவூரோடே
கண்டுபெரும்பாவியெல்லாங் கட்டிக்கொண்டுதானெறிய.
எறிவார்சிலபே ரேசுவாரேசிலபேர்
வெறிபேயன்பேயனென்று விரட்டிமிகயெறிவார்
யெல்லாம்பொறுதியுடன் யெம்பெருமாளுமடக்கி
கல்லாரையெல்லாங் கசக்கியறுப்பேனென்று
மனதிலடக்கி மாயநெடுமாலும்
கனத்திருமேனி கண்கவுழ்ந்துதானடந்தார்
நடந்தாரேகோட்டாறு நல்லபிடாகைவிட்டு
கடந்தாரேசுங்கன்கடயெல் கைதானும்விட்டு
பல்ப்பனுபபுரத் தெல்கைபார்த்துத்தெருவோடேநடக்க
உர்பனமாய்மாயன் உள்தெருவோடேநடக்க
ஆகாதபாவியெல்லாம் மவரைக்கண்டேபளித்து
வாயாரப்பேசி வைதாரேநீசரெல்லாம்
அதிலுமன்போர்கள் அவரைக்கண்டேபணிந்து
இதினுள்வரையும் யிவர்நடந்தசட்டமதில்
பொல்லாங்குசெய்தாரென பேருநாங்கேட்டதில்லை
எல்லாங்கடதலைக்கு இட்டதர்மமேகாக்கும்
என்றன்பேர்சொல்லி யிவரமுதுகின்றனராம்
அன்றந்தநாதனது கடந்துபோயினரே
போனுரேத்தக்கலையின் பிரைக்குள்ளேயுமிருந்து
மானுனபொன்மேனி வாலராமங்கடந்து

வாரிக்கரையும் வாய்த்தநதிக்கரையும்
சீரியநாதன் சென்றுகண்டேநடந்தார்
நடந்துதிருவனந்த நல்புரத்தெல்லைகண்டு
அடந்தமரச்சோலை யடவிவனங்கள்கடந்து
கண்டுகொண்டெம்பெருமான் கண்கொள்ளாக்காக்ஷியுடன்
பண்டுநாஞ்சீரங்கத்தை பார்த்துவகன்றேநடந்து
இவ்வூரைக்கண்டு யெத்தனைநாளாச்சுதென்று
செவ்வுமகாவிட்டிணுவுஞ் சிந்தையுள்ளேயடக்கி
அவ்வூரைப்பாராமல் அந்தவனமானதுக்குள்
எவ்வுயிர்க்குந்தானாயீ யுகின்றபிர்மானும்
நாட்டுக்கலியனுக்காய் நல்சோதனையெனவோ
நீட்டினகாலில் நீசனிட்டவிலங்கோடே
ஏழைகளுக்காக யிருந்தார்பாராவதிலே
கோழைக்குடும்ப குறும்பர்தனைவதைக்க
மனுப்பாராவதிலே மாயாண்டிதானிருந்தார்
தனுப்பாரமடக்கி தாழ்மையுடனேயிருக்க
ஆகாத்தநீசன் அழியும்நினைவதிலே
போகாதபடிக்கு பேயன்தனைவிலங்கில்
போட்டுவையென்றும் புள்ளிபதனமென்றும்
கோர்ட்டுக்காரர்தனக்கு கொடுத்தானேஉத்தரவு
அந்தகலிராஜன் அவனுரைத்தஉத்தரவுபோல்
சந்தமுனிமாயனையும் தான்விலங்கில்விட்டுவைத்தான்
அப்போதுமாயனதியசான்றோர்களுக்காய்
இப்பொறுதிகொண்டிருக்கே னெனவிருந்தார்
நாட்டுச்சோதனைக்காய் நாரயணர்விலங்கில்
நீட்டினகாலோடே நிலம்பார்த்தேயிருந்தார்
சாணான்பால்வைத்து சந்தோசப்பாலேத்து
நாணமலென்பெருமாள் நல்லசோலையிலிருந்தார்
சோலையில்வாழ்பறவை சுவாமிவந்தாரென்றுசொல்லி
ஏலேலமுங்கூறி என்னேரமும்தொழுது
நன்றானமாமுனியும் நல்பறவையானதுவும்
கொண்டாடிக்கொண்டாடிக் கொஞ்சிவிளையாடியிருக்கும்
இந்தவனச்சோலையிலே எம்பெருமாள்தனிருக்க
சாந்தமுடனருட்கள் சதகோடியாகவந்து
தொழுதுநமஸ்கரித்து தூயோன்பதம்பூண்டு
முழுதும்உன்பாதமென மொய்குளலாள்சிலர்கள்
நாற்பதுவயதாய் நான்பிள்ளையில்லாதிருந்தேன்
காப்பதுன்பாதமென கண்டுதொழுதபின்பு
தந்தாரேஎங்களுக்கு சந்ததிதழைத்தோங்க
வந்தாரேநாயடியார் வாழும்மனையிடத்தில்
என்னஉபகாரம் இவர்க்குநாம்செய்வோமொன்று
கன்னல்க்கதலி கனிகள்கொடுப்போமோ
தற்மமதாய்த்தீற்த்த சஞ்சலமதுவானதையும்
அம்மாசொல்லஆரால் தொலையுமோடி
குட்டம்பதினெட்டும் குடித்தபதமொன்றாலே
கட்டமுதலாய் காணப்பறந்ததுவே

இப்புதுமைசெய்தவர்க்கு இப்போஒருபுதுமை
கொப்புளிக்குநேரமுன்னே கூடாதோ இவரால்
ஏதோஒருதொழிலாய் இவர்பம்மலாயிருக்க
சூதால்கொடுமைவந்து சுற்றுங்காண்நீசனுக்கு
என்றுசிலபெண்கள் ஏளைபங்கோனருளை
கண்டுதொழுது கருத்தகலநின்றிடுவார்
அப்படியேனருள்க ளாதிநாருயணரை
செப்படிபோலவர்க்கு செய்தநன்றிசொல்லியவர்
கூரைக்குப்போக கூறநினைவில்லாமல்
நாருயணரைச்சூழ்ந்து நமஸ்காரம்செய்துநிற்பார்
சூழ்ந்துநருழ்கள் தொழுதுமிக நிற்கையிலே
தாழ்ந்துசாகுங்கலியன் சறடன்தனைநோக்கி
பேயனொருசாணுனை பிடித்துக்கொண்டுவந்தோமே
துய்யஇரும்புவிலங்கதிலே போட்டுவைத்தோம்
சாமியென்றுபாவித்த சாணுன்தனைநாமும்
காமியத்தால்பெருத்த கடுவாய்தனைவருத்தி
ஏவிவிட்டுப்பார்த்திருவகையும் தானறிந்து
போமெனவேசொல்லி பேயன்தனையனுப்ப
வேணுமேஇப்போ விபரமென்னவென்றுரைத்தார்
ஆணுவமூறக யரசனிதுவுரைக்க
நல்லதுதானென்று நாட்டமுற்றுச்சரடன்
வல்லபிலசேவுகரை வாவென்றருகழைத்து
இப்போதொருநொடியிலேழு மலையுந்தேடி
வெற்போடுவெற்பெல்லாம் வேகமுடன்தேடி
வேகம்பெரியவேங்கைக் கடுவாய்பார்த்து
நாகமதிலுங்கடிய நல்லகடுவாய்பார்த்து
நாழிகையேழதுக்குள் நம்மிடத்தில்கொண்டுவர
தூளியதுபறக்குமது சூராவழியதுபோல்
கொண்டுவாவென்ன கூறிசரடனுமே
விண்டுரைப்பான்பின்னும் வீரியமாய்சேவகர்க்கு
நன்றுமொழிகேளும் நல்வீரசேவகரே
இன்றேழுமணிக்கிங்கே கொண்டுவராட்டால்
தூக்கியேஉங்களையும் தூண்டலிலேபோட்டிடுவேன்
ஆக்கினைகள்செய்திடுவோ மாமிசத்தைவாங்கிடுவோ
என்றுசேவகரை இறுக்கமுடனிறுக்கி
இன்றுபோமெனவே ஏற்றவரிசைகொடுத்து
அனுப்பினன் சேவகரை அந்தவேளைதனிலே
பனிப்பிசினும்வெயிலை கண்டுபதறிணைப்போல்
பதறியேசேவுகர்கள் பண்பாகசட்டையிட்டு
குதறியேவந்து கூண்டுரைப்பார்மாயனேடு
நாராயணரேநாங்கள் போகுங்கருமம்
பேராய்நடக்கவேணும் பெரியதிருமாலே
உம்மைச்சோதிக்க ஒருகடுவாய்கொண்டுவர
செம்மையுள்ளராஜா சேணமேஅனுப்பினர்காண்
ஆனதிஞல்கடுவாய் அடியேன்கள்கையதிலே
போனவுடன்சிக்கிடவும் வரந்தாரும்புண்ணியரே

என்றுரைக்கசேவுகர்கள் எம்பெருமானுள்ளமதில்
நன்றுநன்றென்று நாருயணர்சிரித்து
விடைகொடுத்தார் கடுவாவேகமதில்சிக்கிடவும்
படைசேவகர் பாரமலைதானேறி
கடுவாய்கிடக்கும் கனமலைகள்தான்தேடி
முடிக்கித்தலையாரி முச்சுவலையணிந்து
காடுகலைத்து கடுநாய்கள்விட்டேவி
வேடுவர்களெல்லா விரைந்துகலைத்தனரே
கலைக்கஒருகடுவாய் கடுவேகம்கொண்டெழுந்து
வலைக்குள்நுழைந்துகாண் மாயவனர்தன்செயலாய்
உடனேதான்சேவுகர்கள் ஓடிமிகவேநடந்து
அடவுடனேவலையை அமர்த்திமிகப்போட்டு
உபாயத்தால்சென்றொரு கூட்டுக்குள்ளடைத்து
பாசத்தால்கட்டி கனகூடுதானெடுத்து
தாமரைகுளத்தூர் சன்னியாசிபாதமதாய்
நாமழும்மன்னனுக்கு நாடிப்பிழைத்தோமென்ருர்
நல்லவென்னியுண்டு நற்சாணுசாமியிடம்
வல்லவர்தான்யென்று மகாதயவாய்க்கொண்டாடி
தேடித்திரியாமல் திக்கெங்கும்வாடாமல்
ஓடித்திரியாமல் உற்றசாணுசாமியினல்
நாமும்பிளைத்தோம் நம்உத்தியோகமும்பிழைத்து
சீமையாழும்ராஜன் செப்புவாக்குப்படியே
கடுவாயைக்கொண்டு காலமேபோவோமென
வெடுவாகக்கூடதுக்குள் வேங்கைதனையமர்த்தி
சுமந்துகொண்டுவந்தார் துடியானசேவுகரும்படையும்
அமர்ந்தகடுவாய் அதறுகின்றஓசையினல்
நருழக்கள்மிகப்பதறி நால்கரைக்கும்ஆட்கள்விட்டு
வருகின்றவேளை மஹாகோடியாய்ச்சனங்கள்
சுவாமியென்றசாணுனை சோதிக்கவேணுமென்று
ஆமியமாய்க்கடுவாய் யதோகொண்டுவாருரென
பார்க்கவருஞ்சனங்கள் பலசாதியுங்கோடி
போர்க்குதிரழ்போல் போறவகைபோல
எண்ணிறந்தநருள் இதில்கூடிவந்தனரே
மண்ணளந்தநாதன் மனமகிழ்ந்தே இருந்து
சுவாமியருகில் சூழ்ந்திருந்தசான்ருேர்கள்
நாமினித்தான்செய்வதென்ன நாதனேஎன்றுசொல்லி
கேட்டுநாராயணரும் கீழ்சுண்டுக்குள்மகிழ்ந்து
நாட்டுக்கரிவிதிநாதன் நாராயணனும்நான்
பட்சிபறவைபல சீவசெந்துகளை
நிச்சயமாய்படைத்த நீலவண்ணநாதனும்நான்
மண்ணேழுமழந்த மாயப்பெருமாளும்நான்
விண்ணேளுமழந்த விஷ்ணுதிருவுளம்நான்
ஏகம்படைத்தவன் நான்எங்குநிறைந்தவன்நான்
நாகக்கடல்துயின்ற நாகமணிநானல்லவோ
ஆகப்பொருள்மூன்று அடக்கமொன்ருனதினல்
சீவஜெந்துக்கெல்லா சீவனும்நானல்லவோ

இன்னீசரெல்லா என்னையறியாதிருந்தான்
மின்னிலத்தில்நான்படைத்த மிருகமறியாதோ
என்றேயடக்கி ஏகந்தனைநினைத்து
ஒன்றுக்குமஞ்சாதே உற்றமக்கள்சான்றோரே
பதருதேளந்தனுட பாலகரேஎன்றுசொல்லி
இதருதமாயவனர் இருந்தார்காணம்மானை
அப்போதுஅவரிருக்க அம்மிருகமானதையும்
வெய்ப்போடுநெஞ்ச மானீசராஜனிடம்
கொண்டுவைத்தாரந்த கோபக்கடுவாய்தனையும்
கண்டுகலிராஜன் கனகசந்தோஷமுடன்
அன்றுசீவாயுகளுக் கானவரிசைகொடுத்து
இன்றுகடுவாய் இப்போதுகொண்டுசென்று
கூட்டிலடைத்துக் கோபமதுவருத்த
ஈட்டிமையாயதற் கிரையொன்றும்போடாமல்
இன்றைக்குவைத்தது இதுநாள்கழிந்தபின்பு
சென்றந்தபேயனிடம் சொல்லிவிடலாமெனவே
அடைத்துவைப்போமெனவே அரசன்விடைகொடுக்க
திடத்தமுள்ளசேவகர்கள் சென்றடைத்தார்கூடதிலெ
அன்றுராஜனடுத்தநாள் சென்றதர்க்குபின்
இன்றுகடுவாய்திறந்தி கட்சியதுபார்ப்போமென
வந்தாரனந்த மானீசபாதகனும்
தந்தாய்சரடன் செவுளிக்காடனுமே
கெவுடன்வெகுடன் கீர்த்திதுரைச்சாணிகளும்
மகுடவர்த்தனர்முதலாய் மந்திரிமார்களுமே
துலுப்பர்சலுப்பருடன் சீவாயிமார்களுமாய்
அலுப்பர்பட்டாணிகளும் மானமரிகாலாளும்
காலாளும்வீராளும் கருமறவாசேகரமும்
சூலாளும்தோலாளும் சூழந்தபடையாழர்களும்
ஒக்கத்திரண்டு ஒருமித்தோம்காரமுடன்
மிக்கத்திரண்டு வெடியாயிதத்துடனே
ஆனைக்காரர்கோடி அம்புக்காரர்கோடி
சேனைக்காரர்கோடி திரண்டுவந்தாரம்மானை
இந்தப்படையோடே இட்சாதிதன்னோடு
வந்துவளைந்தார் மஹாகடுவாய்கூடயுமே
அப்போதுராஜனருகில் தலையாரிகளை
இப்போதுஇந்த ஏத்தகடுவாய்தனையும்
குண்டியிலெகம்புகொண்டு குத்துவதுகோபம்வர
பண்டுநாமடைத்த பைத்தியக்காறனையும்
இக்கூட்டுக்குள்ளே யிப்போதுதள்ளுமென்றான்
அக்கூட்டுக்குள்ளே அய்யாயிருந்தனரே
பண்டுபடைத்த பகவாந்தனையறிந்து
கண்டுகடுவாயும் கம்பதுக்கேபதுங்கி
அதறிமுளங்கியது கவிழ்ந்தேபடுத்து
பதறியதுகிடந்து படுக்கைஇளகாமல்
நீசனவன்குத்த நெடுஞ்சரடன்வெடியால்
வாசப்பொடியிருத்தி வன்னப்பொடிநிறைத்து

ஒலயில்மெழுகது போலுள்ளமிகவுருகி
விட்டான்கடுவாய்மேல் விதறிஇளகாமல்
மட்டாக்கடுவாய் மாறிஇளகாமல்
கிடந்ததுகாணையா கிறுபையதினலே
தடங்தெரியாவண்ணஞ் சனங்கள்மிகபார்க்க
ஈட்டியெடுத்து இனிகுற்றவேண்டுமென்று
மேட்டியொருவன் விசையாகக்குத்திடவே
எட்டிக்கடுவா யீட்டிதனைப்பிடித்து
இதறுவருமென் றெள்ளளவுபாராமல்
விட்டிடவேயருகில் நின்றதொருவேதியனை
குத்திச்சேயீட்டில்க் குடல்ப்பீறவம்மானை
கத்தியும்பட்டு கடக்கவொருவன்சாட
பார்த்திருந்தநீசப் பாதகனேதுரைப்பான்
நால்திசைக்குமேராதே நல்மறையோன்பட்டதுதான்
ஆயிரம்பசுவை யடித்துமிகக்கொன்ருலும்
தோசமீதல்லோவொரு வேதியனைகொன்றதது
என்னபோலாச்சு யானினைத்தகாரியங்கள்
மன்னன்கலிராசன் மாசறடனுமயர்ந்து
ஞாயமதல்லவென்று நடந்தானரண்மனைக்கு
தோசமென்றேத்தோமென சொல்லிமிகப்போனன்
அப்போதுசனங்களெல்லோரு மேதுரைப்பார்
இப்போதுபேயனுக்கு யிதுவுமொருநல்லதுதான்
என்றுசொல்லிநீசச் சறடனுமே
ஒன்றுமுறையாடாமலுள்ள படையத்தனையும்
கூட்டிக்கொண்டுப்போனன் கோட்டையதுள்அம்மானே
வேட்டைப்பலித்துதில்லை வெற்றிதான்பேயனுக்கு
பார்க்கவந்தசனங்கள் பலதிசைக்குமிவ்விசனம்
ஆர்க்குமிகவேயறிவித் தகன்றனரே
அப்போதுசுவாமி யருகில்மிகவாழும்
மெய்ப்பானசனங்கள் மெத்தசந்தோசமதாய்
இன்றத்தறுவாயீசுரன் காத்ததுதான்
அண்ணல்காயாம்பு யச்சுதனர்காத்ததுதான்
என்றுமனமகிழ்ந்து யெம்பெருமாள்நாரணர்க்கு
அன்றுவிசனம் யறிவித்தானைபோர்கள்
கேட்டுநாராயணருங் கீழ்ச்சூண்டுக்குள்மகிழ்ந்து
ஆட்டுவானட்டுவங் காணல்லாமல்வேறுழதோ
இப்படியேசொல்லி யிருக்குமந்தநாளையிலே
முப்படித்தானீசர் மொழிந்தநாள்வரைக்கும்
இருப்போமெனச்சொல்லி இருந்தார்காணம்மானை
அருப்பானநீசனவன் சிலநாள்சென்றதன்பின்
என்னவிசாரமிப் பேயனுக்கெனவே
தன்னையிருந்து தானினைக்கும்வேளையிலே
முன்னேயொருயுகத்தில் மூவரியநாராயணர்க்கு
அன்னமுது பாலருந்தமிககொடுத்து
ஆயாகுடியில் அவதரித்தகோமானில்
தூயவொருகோனுந் துணிந்தங்கெளுந்திருந்து

பக்தியுள்ளநாரணரைப் பாராவதுவிழக்க
உத்தரித்துக்கோனு மூலகமதையாளுகின்ற
மன்னனவன் முன்பில் வந்துநின்றங்கே துரைப்பான்
தன்னதியமான தலைவனே கேட்டருளும்
நம்முடையராச்சியத்தில் ஞங்களிடதன்னினத்தில்
எம்முடையஆளா யிருக்கின்றயிச்சாணான்
சாணனிநல்லதன்மை மிகுமானமுள்ளோன்
கோணமனதுடையோன் குணமுடையநல்லவன்காண்
நேர்மையொழுங்குள்ளோன் நேர்சொல்லொருவர்காண்
ஓர்மையுடையோன் உபகாரகாரனிவன்
ஆனதாலெங்களுக்கா யரசேநீர்தாமுருகி
ஈனமிலாதெமக்கா யிரங்குமெனத்தொழுதான்
அப்போதுதாசன் அவன்மனதுதானிழகி
இப்போதிவனை யாமனுப்பிவிட்டிடுவோம்
விட்டாலவனு மேலுமிருக்குமுறை
கட்டாகச்சொல்லிக் கைச்சீட்டெழுதிவைத்து
போகச்சொல்லென்று போகண்டனர்க்குரைக்க
அகமகிழ்ந்துஆயன் மறுத்தேதுசொல்வார்
என்னவிதமா யெழுதிவைக்கும்வாசகங்கள்
மன்னவனேசொல்லுமென மாறியவன்றெழுதான்
அப்போதரச னெல்லோருமேகேள்க்க
இப்போதிவனினத்தில் யெத்தனைபேர்க்கானாலும்
வொப்போடுறவா யொத்திருந்துவாள்வதல்லால்
சர்ப்பம்போலொத்த சகலசாதிதனக்கும்
உத்தரவென்ற துபாயமாய்சொல்லாமல்
மற்றுமொருசாதிகளை வாவென்றுரையாமல்
தன்னொருசாதிப் தன்னோடிருப்பதல்லால்
பின்னொருசாதிப் பிதனம்வைத்துப்பாராமல்
இனத்துடன்சேர்ந்திருப் பேனுமென்றுசொல்லி
கனத்தோடவனுங்கைச் சீட்டெழுதிவைத்து
பின்னவன்னெல்லையிலேப் போகச்சொல்லென்றுரைத்தான்
மன்னன்கலியுரைத்த வாக்கின்படியெழுதி
ஒப்பமிடசொன்னருல கழந்தபெம்மானை
செப்பமுடநாரணருஞ் சிரித்துமனமகிழ்ந்து
நம்மாலேசொல்லி நகட்டப்படாதெனவே
சும்மாலவன்வாயால்த் தானுரைத்தேசுமந்தான்
இதல்லோநல்ல யியல்காரியமெனவே
அதல்லாவென்றரிமா லகமகிழ்ந்து
கைச்சீட்டைவாங்கிக் கைக்கொண்டுதான்கீறி
வச்சிக்கோவென்று மண்ணில்மிகப்போட்டார்
கீறிவிட்டவோலைதனைக் கெடுநீசன்றானெடுத்து
மாறிக்கொருத்து வைத்தான்காணம்மானை
உன்னில்விடத்திலுட்னே நீபோவெனவே
குன்றுடையநீசன் கூறினனம்மானை
அப்போதுமாயவனர் ஆகட்டெனவுறுக்கி
இப்போதுநீநினைத்த லெக்கதிலேபோவேனே

தேவநினைத்த தெய்தியுண்டவ்வேளை
போவேனெனச்சொல்லிப் பெரியோனகமகிழ்ந்து
நல்லவரே மக்காள் நாம்நினைத்ததெய்தியது
வல்லவரேவரும் மாசிபத்தொன்பதிலே
கிழக்குநாம்போவோம் கீணமதாய்நீங்களெல்லாம்
விளக்குவொளிபோலே வீரத்தனமாயிருங்கோ
என்றுரைக்கநாத னிசைந்தமக்களெல்லோரும்
நன்றுநன்றென்று நாதன்பதந்தொழுது
தொழுதுவவரிருக்கத் தூயத்திருமாலும்
முழுதுமனந்த மூதூரைவிட்டுயின்று
பழுதில்லாத்தெச்சணத்தில் பரமன்நமக்கேயருளி
தந்தயச்சிருந்த தாமரையூர்நற்பதியில்
சிந்தைமகிழ்ந்தநாதன் சீக்கிரம்போகவென
நினைத்துத்திருமால் நிர்ணயமாயுள்ளடக்கி
கனத்தபுகழ்ச்சான்ருேர் கைக்குள்ளேநிற்பவரை
பையவேயின்று பயணமேவுரைக்க
உய்யமிகக்கொண்டோ ருல்லாசமேயடைந்து
சந்தோஷங்கொண்டு சங்கடங்கள்தீர்ந்துதென்று
வந்தோர்களெல்லாம் மாயவரைத்தொட்டில்வைத்து
ஏந்தியெடுத்து யியல்வாகனம்போல
ஓர்ந்துவருக உற்றவனந்தமிட்டு
கண்டுநீசப்பாவி கர்த்தாவைத்தானிகழ்ப்பாய்
கொண்டுபோஞ்சாணுரைக் கூடிமிகச்சிரிப்பார்
சாமியொன்ருேன்பட்ட சழங்களெல்லாம்பார்த்தும்
வாய்மதத்தால்பின்னும் வழுங்கல்ச்சுமப்பதுபார்
பிழைப்பில்லேயென்றே புத்திகெட்டசாணுர்கள்
உழைக்கமதியத்து வுழத்துகிருன்சுமந்து
பேயனைச்சுமந்து புலம்பித்திரிவதற்கு
நாயன்முன்னுளில் நாட்டில்படைத்ததுபார்
என்றுதூசணிப்பார் யிசைந்தபுகழ்சான்ருேரை
அன்றதிலேசிலபேர் அல்லகாணென்றுசொல்லி
நம்மளுக்கென்ன நட்டம்வந்துபோச்சுதென
சும்மாவவனினத்தார் சுமந்துகொண்டுபோவதல்லால்
ஏனிந்தப்பேச்சு யியாஞ்சொல்லப்போருமென
தானிந்தவார்த்தைச் சனங்கள்சிலர்சொல்லவே
சொல்லன்புவன்பு சுவாமிமிகப்பார்த்து
நல்லவனந்தமிட்டு நாடும்வால்ராம்மிட்டு
சொல்லயரியும் சிறப்பாய்மிகமகிழ்ந்து
வல்லவழியில் வாளுகின்றவூருமிட்டு
பள்ளிவாசல்கள்விட்டுப் பார்வதியகரமிட்டு
துள்ளிக்கோட்டாறுஞ் சுசிந்திரத்தலமும்விட்டு
வேகமடக்கி விளியிட்டுவண்டிறுக்கி
ஆகமத்தின்தெய்தி யடுத்தாலாகடடெனவே
சொல்லுவேன்வெள்ளித் தோன்றிவருகையிலே
வெல்லுவேனென்று விசையடக்கியெம்பெருமான்
தொட்டிலிருந்த சுவாமிவிளியுமிட்டு

மட்டிலிருந்த வளர்தாமரைப்பதியில்
வந்துபதிகண்டு வட்டமிட்டுத்தானடி
விந்துவளிக்குமேல்க் கெதிகளாகுமென்று
இன்றுமேலெனக்கு யேகவியாளம்வருது
பன்றுவெனக்கு பகர்ந்தகுருமொழிபோலே
சான்றோரைநல்ல தவத்துக்கனுப்பிடவும்
பண்டோர்நமக்குப் பகர்ந்தபடிமாதர்களை
நாடுமணங்கள் நல்லகலியாணமுதல்
வீடுவகைசொத்து விருதுவேடிக்கையுடன்
தேருதிருநாள் திருக்கல்யாணக்கொலுவும்
பாருபுகள்ப் பாவாணர்க்கீதமுடன்
நாட்டில்மனுக்கள் நல்லோர்கள்வாள்வதிலும்
மேட்டிமைகளாக மிகுவாள்வுசேர்க்கையுடன்
வேண்டும்பசுவு மிகுவாய்ப்பவுசுகளும்
தாண்டும்பெரிய சனங்கள்மிகக்குழைவும்
கொடியும்மிகக்கெட்டிக் கொக்கரித்திகனையுடன்
வெடியெக்காளமுடன் வெற்றியிடம்மானமிட்டு
நாட்டில்சிறப்பதிகம் நாமினிமேல்ச்செய்யவென்று
தாட்டிமையாய்நாதன் சாணர்தனக்குவப்போ
அறிவில்வினைதை மதிகநேருத்தமமாய்
குறியாய்மனதில்க் குறிக்கும்படியருள
அருளானவிஞ்சையருள் கொடுக்குமாலோனும்
மருளாமல்ச்சாணர் மனதிலுருவாக
மூணுநேரந்துவைத்து வுச்சியொருநேரமதாய்
வேணும்பச்சரிசி வெற்றிச்சிறுமணியும்
வேகவைத்துநன்றாய் விரைவாய்மணலிலிட்டு
தாகமில்லாமல்த் தவசிருக்கவேணுமென்று
பெண்ணுடனேயாணும் பிறந்தபிள்ளைதன்னோடும்
கண்ணுகைக்கட்டில் கலருங்கிழவிவர
சூலியிளம்பிள்ளை திரண்டமடமாதும்
மாலினருளால் வத்துவகைதானிழந்து
வீடுமனைமறந்து வித்துவிலைகள்செய்து
ஒண்ணிலரைப்பாதியென யொக்கவித்தார்சொத்ததனை
மண்ணுமறந்து மாடாடுதான்மறந்து
ஆண்டபண்டமெல்லா மகலமிகமறந்து
கூண்டபண்டமெல்லாங் கூசாமலேமறந்து
அனுபோகமத்து மாண்பெண்ணிகழாமல்
இனிபோகமத்து யிருந்தார்தவசெனவே
எல்லோருமிக்கயிருக்க தலம்பார்த்து
அல்லோருமேக வவர்கள்மனதிலுற்று
நாதனரிநாதன் நாராயணநாதன்
சீதக்குருநாதனிடஞ் சென்றாரவர்பதத்தில்
சென்றேயவருடைய சீர்பாதம்தெண்டனிட்டு
இன்றேசனங்களுக் கிப்போவிடையருளி
என்றேசனங்க ளெல்லோரும்போற்றிநிற்க
அன்றுபெருமா ளகமகிழ்ந்துகொண்டாடி

நாம்நினைத்ததுபோல் நடந்ததுகாரியந்தான்
தாம்நினைத்ததுபோல் ருன்நடத்துவீரெனவே
உத்தரவுசொல்ல வுடையவழிச்சான்ரோர்
சித்தருடவருளால்ச் சென்றார்தவமதுக்கே

விருத்தம்

தவமதுசெய்யவென்று சடுதியில்சான்ரோரெல்லாம்
உகமதையழந்தோன் பாதமுண்டெனமனதிலாக்கி
வகைபொருளாசையற்று மனைவிகள்மக்கள்கூட
திசையதுநோக்கிவாரி துவரயம்பதியில்ச்சேர்ந்தார்

விருத்தம்

மண்ணுடன்மனைகளாசை மாடுடன்வீடுவாசை
பெண்ணுடன்பொருளினாசை பூதலப்பொன்னினாசை
எண்ணுடனெழுத்தினாசை யிறடுபொல்லாசைவேசை
ஒண்ணுடனாசைநீக்கி யுடையவனாசைகொண்டார்

விருத்தம்

கொண்டெனமனதில்பூண்டு குருபராதஞ்சமென்று
பண்டுநல்த்துவாரகைபதி வடவாசல்தன்னில்
தொண்டிரைவாள்வசூழ்ந்து செகல்க்கரைதனிலேவந்து
கண்டுடன்பதியில்புக்கி கருத்துடனிருந்தாரன்றே

விருத்தம்

இருந்தவர்தலமும்பார்த்து யேகநல்வளியுங்கண்டு
பொருந்திடும்ஞானவான்கள் புண்ணியமனதிலெண்ணி
வருந்திடக்கனிவேகாணும் வாவைநற்பதியிதாகும்
தெரிந்திடக்கடலில்மூழ்கி சிவகலையணிந்தார்தானே

விருத்தம்

அணிந்தவர்பெண்ணுமாணு மன்புடன்மகிழ்ச்சைகூர்ந்து
துணிந்தவர்தங்கள்தங்கள் துயரங்களறவேநீங்கி
பணிந்தவர்னுதன்தன்னைப் பரிவுடன்மனதிலாக்கி
தணிந்தவர்கோபவேகத் தருளியைத்தள்ளிவாள்ந்தார்

நடை

வாள்ந்தேதவசு வாள்வப்பதியதிலே
தாழ்ந்தேச்சனங்கள் சந்தோசமாயிருக்க
அந்திசந்தியுச்சி யாகமூணுநேரம்
நந்தியருளால் நல்லதுணிதுவைத்து
உவரிநீர்றுவைத்து உவரிநீர்குடித்து
உவரிநீர்தன்னிலுற்று வன்னமேசமைத்து
உச்சியொருநேரம் உணவுமிகவருந்தி
மச்சிப்புகழ்ந்த விடியவொருச்சாமம்
உகப்பாட்டுமோதி யுற்றவயமிட்டு
வகையாய்விடியவரும் நாழிகையேழில்
துணிகள்துவைத்து தோயமதிலிறங்கீ
கெணியாய்குளித்து கிஷ்ணர்பதம்போற்றி
இப்படியேநித்தமிவர் மறவாவண்ணமேதான்

அப்படியேவாரி யலைவாக்கரையிருக்க
வாரிப்புறமாய் வளர்காற்றுவாடைமிக
நீரிறைத்தார்போலே நித்தமந்தத்தவத்தோர்
பேரிலிரைத்துப் பெருவாடையாய்வீச
சீருகந்தநாதன் செயலாமெனவிருந்தார்
இருந்தார்தவசு யேற்றரியச்சான்ருேர்கள்
அருந்தாமல்மற்ருென்று மன்னமொருநேரமதாய்
வாரிநீரல்லால் மறிநீரறியாமல்
சீரியல்பாய்ச்சான்ருே செய்தார்தவமதுவே
தவமாய்யிவர்கள் தானிருக்கும்பொழுது
பவமானதுநீக்கும் பச்சநாராயணரும்
முன்ஞருவருசம் உவந்திருந்தநல்த்தவத்தை
பின்னேர்வருசம் பேணிநடத்துமுன்னே
நீசனிடையில்நிறடு செய்தானைதினல்
தோசமவன்பேரில்ச் சுமக்கச்சாபம்புரிந்து
ஆறுவருசம்மதில்க் குறைவுவராமல்
வாறுதவசு வகுத்துமுடிக்கவென்று
புரிந்தார்தவசு பெரியதிருமாலும்
இருந்ததவசு லெக்குத்திகைவதுமுன்
சான்ருேர்தவத்தைத் தான்பார்க்கவேணுமென்று
ஆண்டோர்மனதி லன்புமிகக்கொண்டாடி
அலைவாய்க்கரையில் அமர்ந்திருந்தசான்ருேரை
நிலைபார்க்கவென்று நிச்சயித்தெம்பெருமான்
உகத்துக்குத்தக்க வுபாயமினிசெய்யவென்று
மகுத்துவநாதன் மனதில்மிகவுத்தரித்து
தெள்ளுதனக்குச் சிணமேவிடைகொடுத்தார்
விள்ளுறவேசெய்து விடுநீசிணமெனவே
ஆதிவிடையருள யதுவெல்லாமேசமைந்து
மோதியொருமித் துற்றவந்ததெள்ளினங்கள்
வந்துவளைந்துதல்லோ வாய்த்ததவத்தோரருகில்
பொங்குபொங்குள்ளும் போடுந்துணியதுள்ளும்
வைத்தகுடிலுள்ளும் வளைந்ததுகாண்டெள்ளினங்கள்
மெய்த்தபுகழ்ச்சான்ருேர் மெலிவாய்மிகச்சடைத்து
மாடாடுகோழி வளர்பில்லாநம்மிடத்தில்
ஏடவிடாமல்லவோ விதுசெய்யுமாய்மாலம்
இருக்குமிடத்தி லெண்ணக்கூடாதபடி
பொருக்குபொருக்கெனவே பொனறக்கடிக்குதென்ன
மூணுநேரந்துவைக்கு முற்றகலையானதிலே
கோணியலில்ப்பற்றுங் குறுந்தெள்ளுவந்ததென்ன
படுக்கவிருக்கப் பண்புசற்றுமில்லாமல்
முடுக்கமாய்த்தெள்ளு முடுக்கிமுடிக்கிக்கடிக்க
இதல்லால்சான்ருேர்க் கின்னமும்விட்டுபார்ப்போமென
சதமில்லாமூட்டைத் தன்னினங்களைவருத்தி
தவத்தைக்குலைத்துச் சான்ருேரைத்தான்விரட்டி

பகுத்துவமாய்நீங்கள் பாரிப்பீரென்றுசொல்லி
மூட்டைக்குரைகள் மொழிந்தார்முகுந்தனுமே
சேட்டைசெய்வோ மெனவேதிரண்டுமிகக்குமிந்து
வந்துவளைந்தார் வாளதியச்சான்றோரை
முந்துபரிந்த மூண்டதெள்ளினங்களோடு
கூடிக்குழாவி கூட்டமிட்டேதிரளாய்
தேடிச்சான்றோரை செகலுக்குள்ளேவிரட்ட
வேணுமெனவே விசும்புகொண்டவ்வினங்கள்
பூணுமுடமைப் போர்த்துந்துணியிருந்து
நடையில்கடிக்கும் நல்லிருப்பிலேகடிக்கும்
கிடையில்கடிக்குங் கிடக்கவிடாதேயரிக்கும்
குடிக்கும்மலைநீரில்க் குப்பக்கும்பலாய்க்கிடக்கும்
முடிக்குந்தலையில் மூச்சிறங்கைபோல்கிடக்கும்
அன்னத்திலேமிதக்கும் அண்டைக்கல்லிலேவாழும்
முன்னெத்திமயிரில் மிரந்துமிகமுன்னுதிரும்
இடைக்குள்ளிருந்து யிடைவிடாதேயரிக்கும்
உடையிலிருந்து ஓயாமலேயரிக்கும்
மேலெல்லாமிரந்து மிகச்சரியுங்கீழ்வளியாய்
காலெல்லாம்தெள்ளும் கனமாய்மிகவரிக்கும்
மாறியிவரெடுக்க மனதுசற்றுமில்லாமல்
ஆறிப்பதறி யசையாமல்த்தானிருப்பார்
வாரிக்கரையில் வளர்நண்டுசேகரமாய்
மாரித்துளிர்போல வந்துவளைந்துமிக
பாண்டத்துக்குள்ளே பதிந்திருந்துதான்வளரும்
காண்டமாய்க்கண்டுக் கைநீட்டலாகாதென
தடைவியெடுத்துத் தன்னலேபோநீயென
வடவிப்போகாமல் வளப்பாருபோலிருப்பார்
இப்படியேதெள்ளு யீமூட்டைநண்டினங்கள்
அப்படியேக்கூடியவர்க் கலச்சல்செய்திடவே
அல்லாமல்ச்சான்றோர் அவரவர்க்குதேகமதில்
பொல்லாதவங்கு பெரியசிரங்குடனே
வெகுவாய்பெருத்து மேலிடைகாணுமல்
திகுவாய்சடைத்து சனங்கள்மிகயெல்லோரும்
எங்கேயினிப்போவோம் எல்லோருமென்றுசொல்லி
சங்கையுடன்கூடிச் சமுத்திரக்கரையருகில்
போயிருக்கும்வேளை பொங்குகடல்கோபமதாய்
வாயிதமாய்த்திரைத்தான் வந்துகோபித்தெடுத்து
பாலதியப்பெண்கள் பண்பாய்யுடுத்திருந்த
சீலைரண்டுதனைச் செகல்கொண்டுபோயினதே
அய்யோகடல்தானங்கு செல்லக்கூடுதில்லை
செய்யவிருக்கவென்றால் தெள்ளுநம்மைவிட்டுதில்லை
வீட்டுக்குள்ச்செல்ல விட்டுதில்லைமூட்டையது
ஊட்டுகின்றஅன்னமதில் உசரவந்துநண்டிருக்கும்
தேகமதில்ச்சிரங்குச் சொறுச்சல்பொறுக்குதில்லை

வேகமுடன்காந்தல் மேலில்பொறுக்குதில்லே
தாகத்துக்கேற்ற தண்ணீர்கிடைக்குதில்லே
பாகமுடனுண்ணுதர்க்கு பற்றுதில்லேதீனதுவும்
இனியெங்கேபோவோம் யெல்லோருமென்றுசொல்லி
மனுப்புகழுஞ்சான்றோர் மாதமொருவாருய்
இருந்தாரதிலே யீசன்செயலெனவே
திருந்தாரமார்பன் திரும்பவொருதலத்தில்
கொண்டுபோய்பார்ப்போம்குல தெய்வச்சான்றோரை
பண்டுவொருசாணுன் படுத்திருக்கும்வேளே
சொர்ப்பனம்போலுர்ப்பனமாய் சுவாமிமிகவுஸ்த்தரித்தார்
இதின்நேற்தெக்கு மிருக்குமொருபதிதான்
அதின்நோக்கஞ்சொல்ல ஆராலும்ஏலாது
துட்டர்தனேவென்றுச் சுற்றுமதில்கோட்டையிட்டு
முட்டபதிநாடுமுகுந்தர் முன்னுள் ஆண்டதலம்
அலங்காரநர்ப்பதியினழகு சொல்லக்கூடாது
அலங்காரமான வாய்த்தகடலதினுள்
தேருபொன்பதிகள் சிங்காரமேடைகளும்
நீருக்குள்ளேயிருக்கும் நிறங்கள்சொல்லக்கூடாது
கன்னிமாராடுங்கரிய நல்ப்பூஞ்சுனேகள்
பொன்னினுலேபடிகள் பூஞ்சப்பிறக்கொலுவும்
மாணிக்கக்கல்லால்வளர்ந்த மணிமண்டபமும்
ஆணிப்பொன்தன்னுலழகு பூம்பந்தல்களும்
வகையின்னதென்று வகுக்கமுடியாது
துகையின்னதென்று சொல்லமுடியாது
இப்பதியினீங்களிந்த நேரம்போனுல்
அப்பதியிலுங்களுக்கு அதிகபலன்கிட்டுமென்று
தூக்கமதில்சொர்ப்பனம்போல்ச் சொன்னுரேவுத்தரவு
ஆர்க்கமுடனேயவனெழுந்து சொல்லிடவே
கேட்டுயெல்லோருங்கூடி கெட்டிதானென்றுசொல்லி
ஆட்டுமெனவேயெல்லாரும் சம்மதிச்சு
நடக்கத்துணிந்தார் நாரணருண்டெனவே
அடக்கமுடனதிலேயாறுமாதம்வரைக்கும்
இருந்தோமெநன்ருய் யினிநடப்போம்பதியில்
வருந்தாமல்போவோம் மகாபரனுருண்டெனவே
போவோமெனவே பெண்ணுடனெழுந்து
தாவமுள்ளமுட்டப்பதித்தலத்தில் வந்தனரே

## விருத்தம்

வந்தளர்ப்பதியின்கூறும் வாரியுஞ்செயலுங்கண்டு
சந்தனவாரிபோலுந்தலமிது நன்னதாகும்
இந்தநல்பதியில்நாமளிருந்துதான் தவசுசெய்தால்
செந்தமிளாயன்பாதஞ் செயல்பெறவாழ்வோமென்ருர்

### விருத்தம்

வாள்வதில்க்குறைவராது மக்களுங்கிளைகளோடு
தாள்வதுயில்லாவண்ணந்தவமது வளர்வதாகும்
நாள்வளிபலனுண்டாகும் நாரணரருளினாலே
ஆள்வதுதிடனாமென்று மதிலவரிருந்தாரென்றே

### நடை

என்றேமிகமகிழ்ந்தெல்லோருமொருமுகமாய்
அன்றேமிகமகிழ்ந்தாரதிலிருந்தாரம்மானை
சூழவணியாய்ச்சுற்றுமதில்போலே
நீழவரங்குவைத்து நெருங்கப்புரைகள்வைத்து
வைத்தோர்திசையில் வாயிலொன்றாகவிட்டு
மெய்த்தேதினமுமிகவே துணிதுவைத்து
அன்னமதர்க்கும் அவித்தநெல்லேயுடைத்து
வன்னமுள்ளகாய்கனிகள் வகைவகையாய்த்தான்வகுத்து
நல்லநீர்தன்னில் நாடிதுணிதுவைத்து
எல்லாவகைக்குமிசைந்த நீரேயருந்தி
அந்திசந்திநேரம் ஆதிதனைதுதித்து
தந்திரமதாகத்தவசு மிகப்புரிந்தார்
கண்டிருந்தமற்ற .கலிநீசச்சாதியெல்லாம்
பண்டிலமைத்ததுவோ பனையேறுஞ்சாணார்க்கு
மூணுநேரந்துவைத்துச் சியொருநேரமதாய்
வேணும்பகுத்தாய் வெகுவாயலங்கரித்து
வேதனுமவர்க்கு விதித்தவிதிப்படியே
நாதனவர்பங்கில் நாடிமிகவந்ததுவோ
எப்போதுமீனுண்டென் றேமிகப்பார்த்து
அப்போததைவேண்டி யரக்குரக்காயவித்து
வாயிலெடுத்திட்டு வயிற்வளர்க்குச்சாணர்கள்
போயிலேயுமறந்து பெண்ணுணுமோர்மனதாய்
இந்தப்படியாயிருக்க யிவர்களுக்கு
முந்தவிதித்த விதிவந்துவொத்ததுவோ
அவர்களுடுக்கு மாடையழுக்கில்லாமல்
இவரிருக்கச்சற்று மெண்ணமொன்றில்லாமல்
மூணுநேரந்துவைக்கும் வுற்றதுணிபொன்னிறம்போல்
தோணுதலாயவர்கள் தேகம்பளபளென
இந்தவிதமாயிவர்கள் பாவித்திடவே
சொந்தத்திருமால் சேர்ந்தாரவரிடமே
ஆதிமகாமாலவர் பங்கிலில்லாவிட்டால்
ஓதியுணவருந்த வொன்றுந்தெரியாதிவர்க்கு
போத்திநம்பூரி பிராமணர்கள்தன்சீலே
மாற்றித்துவைப்பு மங்கலாய்க்காணுதுகாண்
இந்தச்சாணர்சீலே யேகாசூரியன்போலே
பந்தவொழிபோலும் பளபளெனதோணுதுகாண்
பிராமணர்கள்சூத்திரர்கள் பேணியிவர்தனக்கு
நிராதனமாய்க்காய்கனிகள் நித்தஞ்சுமக்கிறார்கள்

பாக்கியங்கள்வந்ததென்று பனையேறுஞ்சாணர்கள்
நோக்கமதுவந்துதென்று நீணிலத்துள்ளோர்யள்
எச்சாதியும்புகழ்ந் திருந்தார்களம்மானை
அச்சாதியெல்லாமப்படியே சொல்லிமிக
சாதிமற்ருேரெல்லாந் தலைகவிழ்ந்திருக்கையிலே
நாதித்திருமால் நாடுகின்றசான்ருேரை
இவர்களுக்கருளுமாண்டுலக்குந்திகைந்ததல்லோ
அவரவர்கள்வீட்டிலனுப்பிவிடவேணுமென்று
தோணித்தாரவர்மனதில் சொர்ப்பனம்போலெம்பெருமாள்
மாணிக்கச்சான்ருேர் மனமறியத்தான்பார்த்து
இனிநாம்ளிப்போதிருந்த தலத்தைவிட்டு
தனியாஞேநாமளங்கேச் சார்ந்தோமேயாஞக்கால்
நம்முடையச்சாதி நகைத்திழிவுபேசுமல்லோ
எம்முடையதவமு மில்லையென்றுபோயிடுங்காண்
முன்னிருந்தவீடு மூண்டிருந்தபண்டமுதல்
தன்னிருந்தசொத்துந் தலத்தையிழந்துவந்தோம்
இனியங்கேபோஞ விருக்கவிடமுமில்லை
இனியங்கேபோவதைக் காலிந்தக்கடலதிலே
விழுந்தோமேயாஞல் மேலும்பதவியுண்டு
அழுந்தலுடனினைத்து யல்லோருமேயிருந்தார்
அப்போதரிநாதஞகட்டெனவுறுக்கி
இப்போநீர்போங்க ளென்றேவிடைகொடுத்து
இன்னமிவர்போகலையே யென்றேமனதிலுற்று
அன்னமதைக்குறைத் தாளாக்கரிசியிட்டார்
ஆளாக்கரிசியலர்மலர்ந்த கோவையுடன்
தாளாமல்ச்சனங்கள் சடையாமலேத்தனரே
துவயல்முடங்கவில்லை தினஞ்சேவிப்பதுவும்
உகப்பாட்டோதுவதும் ஓயாமல்ச்செய்தனரே
இன்னும்போஞரில்லையே இப்படியேசெய்திடினும்
இன்னமொருவசனமிப்போது செய்யவென்று
உன்னித்திருமா லுற்றவைசூரியைத்தான்
ஏவிஞர்ச்சான்ருேரேந்திழைக்கும் பிள்ளைகள்க்கும்
மேவியசான்ருேர் மிகமெலிந்துதான்வாடி
பற்றிருந்தபருஞ் சிரங்குமாறலையே
முற்றுங்கண்ஞெழிவு முழுதுந்திறக்கலையே
கும்பிக்குளிர குடிக்கக்கிடைக்கலையே
வெம்புமிலைகனிகள் மிகப்பறிக்கக்கூடலையே
அய்யோநாமெல்லா மலைந்துமலைத்திருக்க
வையமதில்லாத வைசூரிவளைந்துதல்லோ
என்றுஜனங்க ளெண்ணம்பெரிதாகி
சென்றஜனத்தில் சிலபேர்மடிந்திடவே
பதறிநடுங்கிப்பரனே நீதஞ்சமென
குதறியுலகில்க் கூச்சல்மிகவடைந்து
எங்கேயிருந்தாலு மீசன்செயலெனவே

சங்கைவழுகாமல் தாமோதரனுடைய
நினைவுமயராமல் நிலைதவறிப்போகாமல்
தன்னுடையவீட்டில்த் தான்போவோம்நாமளென்று
போகுமுன்னகைப் பெரியோன்பதமணுகி
பாகுவுரைத்துப் பட்டசளமுரைத்து
உத்தரவுவேண்டி யுற்றிடத்தில்ப்போவோமென
புத்தியுடனே பெரியோனடி சேர்ந்தார்
சேர்ந்துவாவைப்பதியின் செய்தியெல்லாமுரைத்து
போர்ந்துவந்து முட்டப்பதியின்பெருமைசொல்லி
ஊணுகிடையாததுவுமுயிரழிவுவந்ததுவும்
கோணுதலெல்லாங் கூறிவிடைகேட்டார்
அப்போதுநாதனல்லோரையும்பார்த்து
இப்போதுவுங்களில் லிடத்திலேபோனல்
நாராயணர்க்குருவை நாளுமறவாமல்
பேராகவேயிருந்தால்ப் பேறுங்கள்க்கேகிடைக்கும்
அன்னமளக்கு மாதித்திருநெடுமால்
முன்னவன்றன்பேரால் முத்திரிகளிட்டதினல்
சென்றவிடமெல்லாஞ் சிறப்பதிகமுங்களுக்கு
என்றைக்கும்நல்ல் வியல்பேயருள்வோமென
நல்லவிடைகொடுத்து நாராயணரனுப்ப
வல்லவளர்சான்றோர் வாழ்த்தியவர்போனர்
அவரவர்கள்வீட்டில் லன்பாகப்போனவுடன்
இவரிவர்க்குநல்ல யியல்புசெய்யவேணுமென்று
உலகமதிலெம்பெருமா ளொருசொருபங்கொள்ளலுற்றார்
இரப்பவடிவாயெடுத்தா ரொருவேஷம்
பரப்படிவைப் பாருள்ளோர்கண்டுகண்டு
கோட்டைக்கணக்காய்க் குளிர்ந்தநெல்லேயெடுத்து
சாட்டமுடன்காய்கனிகள் சகலவகையுடனே
பழங்கள்முதலாய்ப் பற்படமும்பாயஸமும்
வழங்கயிலையிட்டு வத்தல்வகைசீனியுடன்
அன்னமுதற்ரன மாடையோடுபொன்தானம்
சொற்னதானமுதலாய்த் துவையர்க்காறர்கெனவே
சான்றோரினத்தில்ச் சார்ந்தன்புகொண்டவர்கள்
ஆண்டோனருளால் அன்னவஸ்திரங்கொடுத்தார்
நித்தம்நித்தமன்னம் நீங்களுண்ணுமென்றுசொல்லி
சித்தமிரக்கமதால்த் துவையர்க்காறர்கெனவே
இடைவிடாதபடியே யீந்தாரேயன்னமது
வடவெல்லாந்தீர்ந்து மகிழ்ந்தார்துவைத்திருந்தோர்
நாலுதிசையும் நடந்துபிச்சைதான்குடித்து
பால்பவுசுயோடு பாவித்திருந்தனராம்
இப்படியேசான்றோ ரினமாயிருந்தவர்கள்
அப்படியேபிச்சையிட்டன் பாய்மகிழ்ந்திருந்தார்
பாங்கானதுவையல்ப் பண்டாரங்களெல்லாம்
பூங்காரமாகபிச்சை யமுதுண்டிருந்தார்
இந்தப்படியே யிவர்வாழும்நாளையிலே

சொந்தத்திருமால்க்குச் சுவாமியுரைத்தபடி
ஆண்டாறுசென்றதி கதவமதுதான்
கூண்டாய்முடித்துக் குருநாதக்கண்மணியும்
இனிநாஞ்செய்யுமியல் பென்னவென்றுசொல்லி
மனிதவதாரன்மனதில் நினைத்திருக்க
நன்றானமுட்டப்பதித் தலத்தில்நாரணரும்
மன்றாடும்நல்ல வாய்த்தபரமேசுரரும்
வேதப்பிரமன்விழங்கும் மறையோனும்
நாதரிசிமாரும் நல்லசங்கத்தோர்களுமாய்
சத்தியுமையுஞ் சரசுபதிமாதும்
வித்தைமூகத்து வேளைமுகத்தோனும்
எல்லோர்களும் வந்திருந்தார்கடலருகே
அல்லோர்களும்வந் தங்கேயிருந்துகொண்டு
ஏற்றமுனியிலிரண்டுபேரைவருத்தி
சித்தமுடனேதிடீரெனவே நீங்கள்சென்று
நம்முடையபாலன் நல்லவைகுண்டரையும்
எம்முடையயருகிலிப்போ கொடுவரவே
சொல்வியயச்சார் சுவாமிதானென்றுசொல்லி
நல்லியபாய்ச்சொல்லி நாரணனையிங்களையும்
வாருங்கோமுனியே வாய்த்ததவத்தோரே
சேருங்களங்கெ திடீரெனவேயிப்போது
என்றுவிடைக விருவருக்குங்கொடுக்க
அன்றுமுனிகள் வாயுபோல்விரைவாய்
கடிதாய்நடந்துக் கரியமால்நல்த்தவசு
முடிவாகச்செய்த முகுந்தன்பதியில்வந்தார்

விருத்தம்

வந்தனர்வைந்தர்பாத மலரிணைமுனிமார்கண்டு
செந்தமிளாயன்பெற்ற சேயிதுகண்ணேவிண்ணே
கந்தர்கலியைவென்று கனதர்மபுவியையாள
முந்தனர்த்தவங்கள்செய்து முடித்தவாபோற்றிபோற்றி

விருத்தம்

பொல்லாக்கலியில்வந்திருந்து பெண்ணே.-வனிபொன்னைசை
மண்ணேடுண்ணுமதத்தாசை மாய்கைவிளியார்மருட்டாசை
மண்ணோர்தவத்துளணுகாமல்ப் பவமேயறுத்துப்பார்வைவிளி
கண்ணேஞானக்கருவிருத்திக் கண்டாய்பொருளைக்கண்டாயே

விருத்தம்

அய்யாவுனதுதவமதுவாயரம்பை மாதரன்றுபெற்ற
மெய்யாஞ்சான்றோர்கெதிகள் பெற்றார்யெல்லோருமிகபுகழ்ந்தார்
பொய்யாங்கலியனுயிரிழந்து போனான்நரகில்மீளாமல்
அய்யாமுட்டப்பதிதனிலே யழைத்தாருந்தனப்பனென்றார்

விருத்தம்

அழைத்தாரெனவேசொன்ன வுடனாதிமுனியைமிகநோக்கி
பிழைத்தார்போலமனமகிழ்ந்து பின்னுமுனியோடுரைபகர்வார்

இளைத்தகலியினுள்ளிருத்தி யென்னைக்கலியன்செய்தவலுச்
சளத்தமறிந்துவந்தாரோ சமயமிதுவோதானுரைப்பீர்

நடை

நல்லமுனியே நம்மைக்கலியதனுள்
செம்மைகெட்டநீசத் தீபாவிகையதிலே
கண்ணியிட்டுவைத்துக்கடக்கே நகண்டிருந்து
புண்ணியவானின்று பிழைத்துக்குதித்தாரோ
நான்பட்டபாடு நாடுபதிநலறியும்
ஏன்பட்டாயென்று யின்றுகேட்கவந்தாரோ
ஏதோதெரியலையே என்னுடையநாயகமே
பாதகந்தான்செய்த பாராத்தியெங்களெல்லாம்
பார்க்கும்படியாய் பார்க்கிறேனெனவே
ஆர்க்கமுடனேயன் னீசன்செய்தபடி
கட்டுங்கயிறுங்கையில் விழுந்திடத்தில்
முட்டுக்குமேலேவூற்றமிக நினைத்தார்
வெடிப்புடங்குதன்னல் விலாவிலிடித்திடத்தில்
துடிப்புடனேயூற்றந் தோன்றும்படியேவைத்தார்
மேலிலப்பிரம்பால் மிக்கவடித்திடத்தில்
சீலமுடனேசீணந் தோணவைத்தனரே
கன்னமதிலக்கம்பால்க் கனக்கவடித்திடத்தில்
உன்னிதமாகவுடன் தோணவைத்தனரே
கூண்டமுடியைக் குலுக்கியசைத்திடத்தில்
வேண்டுமுடியைமிகக்கழிய வைத்தனரே
இப்படியேநீசன் செய்தயிடறதுபோல்
அப்படியேத்தோணவைத் தாங்காரங்கொண்டனரே
பால்மாட்டை நீசன்பற்றிக்கொண்டேயடைத்து
மால்பாலேக்கு மாதிரியைப்பார்ப்போமென
அந்தநீசன்றனனியாய மாகவேதான்
இந்தநாள்வரைக்கு மிருபத்தொன்றதுக்குள்
கொண்டுவடைக்கக் கோவேங்கிரிநாதன்
அன்றுமுதலிருபத்தொரு நாளதுவரைக்கும்
கோலமெடுத்து குருசமைந்தநாரணரும்
பாலுமுதல்வேறு பண்டமிகயேராமல்
இருக்குந்தறுவாயிது நல்லதாகுமென
அருக்காகநீசனவன் செய்தவேதனைபோல்
எல்லாமுறைபோ லெடுத்தால்சொருபமது
நல்லமுனிமார் நாரணுவென்றுநிற்க
கைக்குள்ளேநின்ற கரியசீஷன்மாரில்
மெய்க்குளறிய விளம்பினரெம்பெருமான்
இன்றேத்திவசமிசைந்த முட்டப்பதியில்
நன்றிப்போபோகநல் மணிகளாகுதென
சொல்லவறிந்து சீஷன்மார்தான்மகிழ்ந்து
நல்லதெனச்சொல்லி நாடியவரிருக்க
அன்றிராதன்னில் ஆருமறியாமல்
நன்றினியசீஷன் நாலுபேர்தானறிய
வந்தமுனியும் வளர்ந்தயிருமுனியும்

சொந்தமுடனுதன் தொட்டில்மிகவேறி
சீஷன்மார்காவிச் சிணமாய்மிகநடக்க
வாசமுள்ளமாமுனிவர் வலமிடமுஞ்சூழ்ந்துவர
துடியாகத்தொட்டில் சுவாமிமிகயிருந்து
வடிவானமுட்டப்பதித் தலத்தில்வந்தனரே
முட்டப்பதியில் முகுந்தனரிநாதன்
கிட்டவருகுங்கிஷ்ணர் வந்துசேர்ந்திடவே
மகனைமிகக்கண்டு மாவிருப்பத்தோடிளகி
உகமாளவந்தவுடைய மகனேயுனது
சடமெல்லாம்வாடிச் சடைப்பானேனென்மகனே
வடவெல்லாமென்னேடு வகுத்துரைநீயென்மகனே
கண்ணேமணியே கருத்துள்ளநாயகமே
விண்ணேவொளியே வேதத்திருவிளக்கே
கலியில்மிகயிருந்து கலக்கமிகவடைந்த
மெலிவெல்லாஞ்சொல்லி விளம்புநீயென்மகனே
அடித்ததாருன்னை யவனிதனில்ப்பேயனென்று
கடுத்தமதுசெய்தகலக்க மெல்லாஞ்சொல்லுவென்ருர்
சொல்லென்றமாலுஞ் சிவமுமெடுத்துரைக்க
வல்லபெலமான வைகுண்டரேதுரைப்பார்
செந்தூர்க்கடலில் ஜெகலதுக்குள்ளென்னைவைத்து
முந்தவெனக்கு மொழிந்தவுபதேசம்
தப்பாமலாறு வருஷந்தவசாக
மெய்ப்பாவின்பாலருந்தி வீடுசொத்தெண்ணுமல்
கலிக்காசியாசை கனவில்நினையாமல்
அலிக்கியானப் பெண்ணிஞசையணுகாமல்
பக்கக்கிழையாசை பாவித்தினிதாசை
அக்கத்திஞசை அனுப்போல்நினையாமல்
நல்லதுணியாசை நளினமொழியாசை
சொற்றனவாசை முதலாயதின்பண்டத்திஞசை
தேய்ப்புக்குழிப்புச் சிறந்தபொருளாசை
தார்ப்பிரியமான சந்தோஷத்திஞசை
பூமியாசைமுதலாய்ப் பேராசையும்வெறுத்து
சுவாமியுமதருளால் தொல்புவியிலுள்ளோர்க்கு
தண்ணீராலெந்தச் சர்வவியாதிமுதல்
மண்ணிலுள்ளோர்யார்க்கும் வாய்த்ததர்மமாகவேதான்
நோய்தீர்த்துவைத்தல்லால் நேட்டமொருகாசறியேன்
வாழ்வில்லாப்பேர்க்கு வாள்வுமிகக்கொடுத்தேன்
தாழ்வடைந்தோர்க்குத் தாழ்வைவிலக்கிவைத்தேன்
பிள்ளையில்லாப்பேர்க்குப் பிள்ளைமிகக்கொடுத்தேன்
கள்ளமெல்லாம்நீக்கிக் களிவைவரத்தைவைத்தேன்
வரம்வேண்டிநம்மிடத்தில் வைத்தந்தபேய்களையும்
குரமாயமலையில்க்கொண்டு வெரியவைத்தேன்
ஆயிரத்தெட்டான திருப்பதியில்
வாயிதமாய்வாழும் வாய்த்ததேவர்தனக்கு

ஞாயமில்லைபூசை நல்லாடுதீபவெலி
தேசமதில்லுங்களுக்குத் தேரோட்டமுதமுதலாய்
ஏக்கப்படாதினிமேலி ராக்ஷியத்திலுள்ளவர்தான்
மார்க்கவைகுண்ட வல்லாத்தான்வந்ததினால்
பூசைபடைப்புப் பெலிதீபமேராமல்
வாசமுடனே மறைந்திருங்கோநீங்களென
சட்டமிட்டுவைத்தேன் தரணிப்புல்ப்பூண்டுவரை
மட்டைமருந்திலையு மலைகடலுவாசுகியும்
வையகத்தைஆளும் மானீசனுமறிய
மெய்யாய்விரித்து விளம்பிமிகச்சட்டமிட்டேன்
இத்தனைச்சட்டமிட்ட வர்த்தமானமெல்லாம்
மத்தியமாய்வைத்த மாமுனியோடேகேளும்
அல்லாமல்பூமி தனிலவர்களறியாதபடி
வல்லாமையாய்க்காசி வளங்குயிலைபாக்குவர
நாளுசைகொண்டு நருள்களிடம்வாங்கினதை
வாளுசையுள்ள மாமுனியோடேகேளும்
நருள்களறிய நல்லவெகுவர்புதங்கள்
இதுக்காய்கிணத்திலேயே ஏகாசிலையுங்காட்டி
இருந்தேன்தவசாய் யென்னுடையநாயகமே
பொருந்தாதகாரியங்கள் புத்திமிகுளறி
செய்துமிகக்காணுது செய்யமணிவிளக்கே
நிசமிதுவோவென்று நீரவரோடேகேளும்
இத்தனையுந்தர்மமதா யான்செய்திருக்கையிலே
புத்திகெட்டநீசப் பொல்லாதான்வந்தெனையும்
கட்டியடித்துக் கைவெடியாலிடித்து
இட்டிறுக்கிவைத்தா னிரும்புவிலங்கதிலே
நஞ்சிட்டுத்தந்தானுடுஞ் சாராயமதில்
கொஞ்சுங்கடுவாய்க் கூட்டிலடைக்கவென்றான்
நீசனவன்ஜாதி நிசமாகத்தான்கூடி
ஏசியெனைப்பழித்து யிடறுசொல்லக்கூடாது
அய்யோயவர்களடித்த வடிகளெல்லாம்
வையம்பொறுக்காது மானீசன்செய்தவிதம்
மந்திரதந்திரத்தால் வஞ்சனைகள்செய்தெனையும்
கொந்திரமாகக் கொல்லவகைசெய்தார்கள்
பாவிகள்செய்த பழவினைகள்சொல்லவென்றால்
தாவுமுலகிற்றாலமதிலோலையில்லை
என்னைத்தவத்துக்கிருத்தி யிதுநாள்வரையும்
இன்னுமிரங்கலையோ யென்தவசுகாணலையோ
அன்றருளித்தந்த வாண்டுதிகையலையோ
இன்றுமுதல்க்கலியிலியான் போகவில்லையையா
நம்மால்க்கலியில் நவின்றிருக்கக்கூடாது
சும்மாவெனைநீங்கள் ஜோலிபண்ணக்கூடாது
நன்றிசற்றுமில்லா நாறவெறுங்கலியில்
கொண்டென்னைவைத்துக் கோலமதுபாராதேயும்

இனியென்னால் கூடாதிக்கலியிலேயிருக்க
பனிதவளுமாயவரே பகர்ந்தமொழிமாருமல்
ஆறுவருஷ மவனித்தவசிருந்தேன்
தாறுமாறுண்டானல் சாக்ஷியோடேகேளும்
என்றுவைகுண்ட ரித்தனையுஞ்சொல்லிடவே
நன்றதியமகனை நல்லமுகத்தோடணைத்து

### விருத்தம்

கண்ணேமணியென்கருவலமே கனகமணியேரத்தினமே
விண்ணேவொழியே கர்பகமேவேதச்சுடரேவிளக்கொளியே
மண்ணேளழுந்தமலர்ப்பதத்தில் வந்தேகுதித்தமலர்க்கொளுந்தே
இண்ணேமுதலாயுனக்குநல்லவியல்பேயாகுதென்மகனே

### விருத்தம்

மகனே தவத்துள்ளிருக்கையிலே வருமோசெல்வமாரார்க்கும்
ஜெகமேளறியத்தவமுடித்துச் சென்ருல்ச்சிவனுக்ககமகிழ்ந்து
தவமேமுடித்தநினைவதுபோல்ச் சகலகருமங்கைகூடும்
அகமேயுனக்குவருளினது யனுப்போல்த்தவருதருள்மகனே

### நடை

செல்வமகனே சீமானேநீகேளு
நல்லமகனே நாரணுநீகேளு
தவவேடம்பூண்டு தவமாயிருக்கையிலே
சிவஞானமெல்லால்ச் செல்வம்போல்காணுது
தவசுநிறைவேறி தாமோதரர்கேத்து
பவுசுமிகவேண்டிப் பலன்பெற்றுவாழ்வார்கள்
மகனேநீயிருந்த மாதவத்தின்பெருமை
ஜெகமீதேசொல்லத் தொலேயுமோயென்மகனே
கள்ளயுகத்தைக் காணுமலேயறுக்க
உள்ளநடுஞாய முகத்தீர்ப்புச்செய்துமிக
ஆகாத்ததெல்லா மழித்துநரகத்திலிட்டு
வாகாய்க்குழிமூடி வாசல்தனேப்பூட்டி
மாறியதில்லாமல் வங்கிஷமுந்தாஞெழிந்து
வேறுவகைசெய்து மேலுமொருநல்லுகமாய்
தர்மயுகமாய்த் தாரணிக்கமாயருளி
பொர்மைமனுவாய்ப் பெரியசான்ருேர்வழியை
அன்பாகவைத்தாள முடிசூட்டி
பண்பாகவேண்டும் பவுசுமிகவாக
சாகாவுலகத் தர்மபதியாள
வாகாத்தவசு வகுத்துமுடிக்கையிலே
ஆங்காரமாமோ வாணுவங்களங்காமோ
ஓங்காரமாமோ உத்ததவசதுக்கு
தவசுநிறவேறித் தான்வந்ததாலேயினி
பவிசுவுனக்குப் பகரவினிக்கேளு
அருகில்வைத்த மாமுனியையழைத்தார்திருமாலும்

துரிதமுடன்முனிகள் சுவாமியெனத்தொழுதார்
இந்தநாள்வரைக்கு மிவரிருந்தநர்த்தவசு
சந்தமோவீணே தானுரைப்பீர்மாமுனியே
அப்போமுனிகளாதியடிபணிந்து
தப்பொருளில்லைத் தவத்துக்குறுதியுண்டு
நூலொழுக்கமல்லால் நுன்னிமைகள்தப்பவில்லை
மாலொழுக்கமல்லால் மனதுவேறில்லையையா
தப்பாத்தவத்திற்குச் சண்டித்தடிநீசன்
சிப்பாயிவிட்டுச் சுவாமிதனைப்பிடித்து
அடித்துவிலங்கிலவன் கொண்டுவைத்தனனே
முடிதலையைப்பின்னி முழுநீசப்பாவியவன்
வைத்துப்பலவேதனைகள் மாநீசன்செய்ததல்லால்
மெய்த்தபுகழ்மாலே யிவர்மேலேகுற்றமில்லை
என்றுமுனிமாரி சையத்திருமாலும்
கொண்டுபோய்நீசன் கோட்டிசெய்தஞாயமெல்லாம்
இருக்கட்டுமந்த இளிநீசன்செய்ததெல்லாம்
குருக்கட்டுமுறையின் குணத்தைமிகச்சொல்லுமென்றார்
உடனேமுனிக ளுள்ளமிகமகிழ்ந்து
படபடெனநின்று பணிந்துமிகப்போற்றி
தப்பில்லையையா தவத்திலொருபங்கமில்லை
நற்பல்லால்வேறு ஞாயக்கேடங்குமில்லை
என்றுமுனிகளிகாபரத்துக்குத்தமமாய்
அன்றுவுரைக்க வதியத்திருநெடுமால்
நல்லதெனவே நல்மகனைத்தாணவி
செல்லமகனே செகலதுக்குள்வாநீயென
மகனைமிகக்கூட்டி வாரிக்குள்ளேநடக்க
தவமுனிகளெல்லாம் சங்கீதம்பாடிவர
பாவாணர்பாடப் பரமுனிவர்தான்பாட
நாவாணர்போற்ற நாராயணர்மகனை
பால்கடலிலுள்ள பாலமுற்தந்தான்வருத்தி
ஆர்க்கமுடனே அருமைமகனைமூழ்கி
அழுக்கைத்துடைத்து அஞ்சாக்ஷரமருளி
முழுக்காட்டிமகனை யுகந்தமுகத்தோடணைத்து
வேதப்புரோகி விளங்கிமிகவாழ்த்த
நீதம்நிறைந்த நீலநிறமண்டபத்தில்
தங்கமணியரங்கில்ச் சமயக்கொலுவதிலே
மங்காதவீசுரரும் மாதவனுந்தேவர்களும்
சக்தியுமையுஞ் சரசுவதிமாதும்
முத்தியுள்ளதேவர் முனிமார்ரிஷிமாரும்
எல்லோருநன்று யிறைஞ்சிமுறையமிட
நல்லோர்களெல்லாம் நாடிமிகவிருக்க
வல்லத்திருமால் மகனைமுகம்நோக்கி
செல்லமகனே சிறந்ததெய்திவந்ததினல்
திருநாள்நடத்தி தெருவீதிதான்வரவும்
ஒருவாரந்தன்னிலொரு நாளிடைவிடாமல்

நித்தந்திருநாள் நீநடத்தியென்மகனே
சத்திகன்னிமாரைத்தான் வருத்திமாலையிட்டு
கலியாணமங்களமும் காக்ஷித்திருநாளும்
சலியாமற்காசி தந்தவர்களுண்டானல்
வேண்டிநீதற்மம் விரைவாய்நடத்தியிரு
ஆண்டத்திருநாள் அதுமுடக்கம்வாராமல்
பிச்சுவெள்ளைப்பச்சரிசி மிளகுஇலைத்தேங்காயும்
மிச்சம்பழஞ்சந்தனமும் மிக்கப்பன்னீர்வாடைகளும்
மேற்கட்டிகட்டி மிகுவாயலங்கரித்து
மால்கட்டுசெய்து மகிழ்மையிடம்மானமிட்டு
இந்தப்படியாயேழு நாழுந்திருநாள்
அந்தப்படிசெய்தவனியிலாடிக்களித்து
எல்லாமுறையுமியல்பாகக்கொண்டாடி
நல்லாண்டுதெய்தி நல்லதிவதம்பார்த்து
தெய்வகன்னிமாரைச் செல்வச்சான்ருேரிடமே
மைவரம்பான மனுமுறைபோல்தான்பேசி
கொடுக்கல்வாங்கல் முறையும்கூறிமிகக்கேட்டு
துடுக்கானநல்ல தோகைக்குணமும்பார்த்து
பார்த்துன்னருகில்ப் பணிவிடைகள்செய்யுகின்ற
தோன்றுகின்றசீஷன் சொல்முறையும்பார்த்து
பதியமுறையும் பாவையர்கள்தன்முறையும்
சதியாயுலகோர் சங்கையதுபோலே
மங்களமதாக மாலையிடுயென்மகனே
தங்கநிறமான தர்மத்தலைவாநீ
என்னேடுகன்னி யேலமேசொன்னபடி
தன்னேடினங்கள் தலைவன்மாரேழ்வரையும்
யெடுத்துக்கொடுத்து யிளமுலைப்பால்தானூட்டி
கொடுத்துயிகனைக் கூறிக்கோயென்மகனே
இப்படியேபெண்களின்னஞ் சிலபேர்களுண்டு
அப்படியேயவரவர்க் கந்தந்தவேஷமிட்டு
வகையாகவேஷ மாறியுருவெடுத்து
திகையாமல்வாக்குச் சொல்லுமுறைபோலே
கலியாணக்காக்ஷி கணக்குத்தீர்வைமுறையும்
வலியானக்கலியில் வாழ்வைமிகக்கொண்டாடி
சாம்பசிவக்கோலம் சாருமஞ்சணைக்கோலம்
ஆம்பக்குறக்கோல மாடிமிககளித்து
முற்றுந்திருநாள் முழுதுமிகநடத்தி
பத்தும்பெரிய பாலர்தங்கள்வீடேகி
விருந்துமிகவு விரைவாகத்தானருந்தி
திருந்துபுகழ்கிளைபோல் சிலவீட்டமுதருந்தி
பிச்சைபோலுமருந்தி பெண்வழிச்சோறுமருந்தி
மிச்சமாய்ப்புவியில் வேண்டும்பவுசியுடன்
வெற்றியிடம்மானம் விருதுக்கொடிகள்கட்டி
புத்திரரானேர்க்குப் பிழைக்கும்வலுபுத்திசொல்லி
பாடித்தீர்வைதீர்த்து பரசோதனைபார்த்து

ஆடித்தீர்வைதீர்த்தாண் பெண்மிகவேகண்டு
நல்லாண்டுகண்டு நாடும்பூமங்கையரை
செல்லக்கலியாணஞ் செய்துசிறப்புடனே
செந்தாமரையாளுடனேசிறப்பிருந்து
கொந்தார்குழலை கூடிமிகப்புரிந்து
ஆனைகன்றீணி அதனாலுலகமெல்லாம்
தானாகநீயுந் தலைவனெனச்சமைந்து
முரணிக்கலியழிய முச்சுடருமொன்றுவாய்
தாரணியீரேழுந் தடதடெனதானசைத்து
நீயதின்மேலாளும் நிர்ணயத்தைக்கேள்மகனே
தங்கமுடிசூடி சான்றோர்க்குநால்வரமும்
அங்கவர்க்குத்தானருளி யழகுமிகக்கொடுத்து
நல்லதற்மமாக நாடும்புவியதிலே
அல்லல்வினையற்ற வனியதைநீயாள்வரய்
அப்போநீயரசு ஆளுகின்றநாளையிலே
செப்பொணச்செல்வம் சிறப்புமிகவுண்டாகும்
பூமடந்தைவீட்டிற் புகுந்துகொலுவிருந்து
தாமுனிந்துநீயுந் தரணிதனில்வந்தவுடன்
நான்வந்துவுன்னை நாடிமிகவெடுத்து
தான்மகிழ்ச்செல்வித் தலைவனுனையாக்கி
சொல்லவொண்ணாத சுகந்தருவேனென்மகனே
எல்லைக்கணக்கு மேழுயுகக்கணக்கும்
தீர்த்துவுளக்கு திருவம்பலமருளி
தோற்றும்பதிகள் துலங்கும்வெகுரத்தினமாய்
எல்லாமருளி யெழுமாதர்தான்சூழ
வல்லோனாய்நீயும் வாழுவாயென்மகனே
மலங்காதேயென்மகனே மாதவங்கள்பெற்றவனே
கலங்காதேயென்மகனே கண்ணேயென்கற்பகமே
என்றுமகனுக்கிது வுரைக்குமிவ்வளவும்
மன்றுகுலுங்காது வாரியலுங்காது
மேகங்குடைநிழற்ற மேவர்கள்போற்றிநிற்க
யோகமுனிமா ரோதித்தமிழ்கூற
ஈசர்மகிழ்ந்து இரத்னமதிலிருக்க
வாசவனுந்தேவர்களும் வாய்பொற்றிதாழ்ந்துநிற்க
இப்படியேசங்க மெல்லாமகிழ்ந்துநிற்க
அப்படியேவிஞ்சை யருளினர்ஆதியுமே

## விருத்தம்

விஞ்சையும்பெற்றுவைந்தர் விரைவுடன்றகப்பன்பாதம்
அஞ்சையுமுணர்ந்தசோதி யரனையும்வழங்கிப்போற்றி
நெஞ்சையுமொன்றுளாக்கி நிற்மலத்தாயைப்போற்றி
கொஞ்சையுங்குணத்தினதன் கூறுவார்குருவைப்பார்த்து
என்னையாட்கொண்டநாதா எங்குமாய்நிறைந்தநீதா
உன்னையான்கண்டுபெற்ற வுன்னருள்கிருபைதந்தார்
இன்னமுங்கலியிற்போய் நானிருந்திந்தமுறைகள்செய்தால்

என்னையாட்கொண்டு ரெத்தினகிரீடமெப்போயீவீர்
கிரீடம்யெப்போயீவீர் யென்றெனக்கேட்டமைந்தா
அரிவிதிகொண்டேசூடி அணியிடைமாரைத்தோய்ந்து
தரிவிதியானபோதுந் தாமரைகைநிகள்ந்தபோதும்
பரிபலம்வந்தபோதும் பார்மகளடைந்தாயன்றே
உன்விதியதனல்முன்னூ லூறியவமிற்தந்தன்னல்
என்விதிதன்னல் வந்தயிகாபரமுனக்குளாகி
மன்முறைதெளிந்ததன்றும் மான்கன்றுயீன்றதன்றும்
பொன்மகளகன்றதன்றும் பூமகளடைந்தாயன்றே
பூமகளுன்னைச்சேர்ந்து பின்னுறுவரைக்குமேலே
நானுகந்தன்னல்ப்போக்கி நகரொருபகற்குளாக்கி
தானுனைத்தங்கமான தைலமாம்பதத்தில்மூள்கி
வானுனைமகிழரத்னமகிள் கிரீடமருள்வேனென்ருர்

நடை

மகனெவுனக்குமகா செல்வமாகிவரும்
சுகமெபோயிரெனவே சொல்லியனுப்பலுற்ருர்
அனுப்பத்திருமாலருமை மகவேதுரைக்கும்
மனுப்புகழ்ப்பெற்ற வைகுண்டமேதுரைக்கும்
பாவிவெறுநீசன் பண்ணிவைத்தப்பாட்டையெல்லாம்
ஆவியறிந்தென்னுடைய வங்கமெல்லாஞ்சோருதையா
என்றுவைகுண்ட ரிசையத்திருமாலும்
அன்றுமகனுக்கு வருளினதுகேள்மாதே
இன்னீசனமக்கு யிந்தயுகம்வரையும்
மன்னீதங்கெட்ட மாத்தாணுய்வந்ததினல்
செய்தானதினல் திருமகனெயஞ்சாதே
மைதானமானவாக்கு நமக்காச்சுதெனெ
கைவாச்சுமகனெ கலிநீசனையறுக்க
மெய்வாய்த்துநம்முடைய மேன்மைக்குலத்தோர்க்கு
அன்பானசீமை யரசாழநாளாச்சு
தன்பாலடையச் சரியாச்சுதென்மகனெ
மலங்காதெபோ நீவாழுகின்றநற்பதியில்
கலங்காதேபோயிருநீ கண்ணே திருமகனே
என்றுவிடையருள யேற்றதிருமாலும்
அன்றுதிருமாலு மன்பாய்விடைவேண்டி
அலைவாய்க்கரையி லாதிவருமுன்னே
நிலையானசான்ருேர் நிரம்பவந்துகூடினரே
கண்டந்தசான்ருேரை கரியதிருமால்மகிழ்ந்து
நன்றென்றுசொல்லி நாராயணர்கூட்டி
பண்டிருந்தநல்லப்பதியில் வந்துசேர்ந்தனரெ
கண்டந்தப்பேருங்கன பிரியமாய்மகிழ்ந்து
தாமோதரனர்த் தலத்தில்மிகச்சேர்ந்து
நாமொமுனிகூட நாடிமிகயிருந்தார்
இருந்துமிகப்பாலு மேற்றநல்லப்பச்சரிசி

திருந்துசிறுமணியுந் தேங்காய்ப்பூதன்னுடென
கொல்லமிழகு கூண்டபொடியுடனே
நல்லாகயிவ்வகைகள் நாடியொருநேரமதாய்
காவிமிகப்புரிந்துக் கனத்தருத்திராக்ஷமிட்டு
தாவமுடன்மாத்திரைக் கோல்த்தானிதுவோடேயிருந்தார்
கொஞ்சநாள்பார்த்துக் கூண்டதிவதம்பார்த்து
பஞ்சகருணுதிகளை பண்பாகத்தானிறுத்தி
கந்தைமிகச்சூடிக் காவித்தொட்டின்மீதிருந்து
விந்தயுடனுகத்து விபரிப்பெல்லாமெடுத்து
கூறிஞரந்த கூண்டரியகாரணத்தை
நாடழியப்போறதுவும் நன்னுடுதோன்றுவதும்
பாடழியநீசன்ப் படப்போறச்செய்தியதும்
நல்லமனுவோர் நாடிமுழிப்பதுவும்
வல்லபுவிதற்மம் வாழ்வதுவுஞ்சிறப்பும்
சொல்லிவிரித்தார்ச் சிறந்ததொட்டில்மீதிருந்து
எல்லோரும்கேட்டிப் போதொருகாரணந்தான்
நடத்துகிருரென்று நல்லோர்கள்சொலிடுவார்
சடத்தமுள்ளநீசச் சண்டாழப்பாவியெல்லாம்
காசிமிகவேண்டக் கபடுசெய்கிருனெனவே
பேசியிவனும் பிதற்றுகின்ருனென்றுசொல்லி
நகைப்பார்சிரிப்பார் நன்றிகெட்டநீசகுலம்
சிகப்பானதுவாலத் தெய்வகுலச்சான்ரோர்கள்
கூடிகுவிந்துக் குணமாகவேகூடி
தேடிவைத்தபண்டஞ் சுவாமிதனக்கெனவே
நம்முடையசஞ்சலம் நாடுபணிதீர்த்தவற்கு
தம்முடையபாலுத்தான் கொடுக்கவேண்டுமென்று
பசுவைக்கொடுப்பார் பாலாடுதான்கொடுப்பார்
கசுவிரக்கமாகக்காசு பணங்கொடுப்பார்
வஸ்திரங்கொடுப்பார் வழங்குமிலைகொடுப்பார்
கஸ்திமிகதீர்த்த காயாம்புவண்ணரென்று
நெல்லுசிறுமணிகள் நெய்தேங்காகனிகள்
நல்லமைப்புச்சான்ரோர் நாடிமிகக்கொடுத்தார்
கொடுக்கஅன்போரெல்லாங் குணமாய்மிகவேண்டி
அடுக்கஅவரருகில் அன்பாகநின்றவரின்
பணிவிடைகள்செய்வோர்க்குப் பரிந்துமிகயீந்தார்
மணியாம்பரனு மகிழ்ந்துபாலேத்தெனரெ
ஏத்துவுகத்துக்கிகத் தீர்ப்பும்புரிந்து
சாற்றுமொழிகூறித் தானிருக்குமப்பொழுது
மாயத்திருமால் மால்வேசமேயெடுத்து
தேயமதில்நம்முடையத் தெய்வகுலமாதற்களை
வருவிக்கவென்று மாஞலவித்தையினல்
உருவிக்கவென்று வுலகநருளானதிலே
தாக்கியுடலுள்த் தமணியமாய்ப்பொதிந்து
நோக்கிமுறைகாண்டம் நேர்மைமொழிமொழிந்து
பெண்ணுண்வரைக்கும் பெருங்கிழவிதான்வரைக்கும்

கண்ணனமதலே கைக்குழந்தைமுதலாய்
பாட்டுவித்தேசம் படிப்புவித்தேசமுதல்
ஆட்டுவித்தேச மாட்டிமிகவருத்தி
முன்னமைத்தபெண்ணே யெல்லாமிகப்பார்த்து
சொன்னமுறைபோல் சிணஞ்செய்யலாமெனவே
இட்டாரொருசூக்ஷம் யீசற்முதலெல்லோரும்
மாட்டாருஞ்சூக்ஷம் வையகத்திலெயாகி
யாதிபதினெட்டு மாராட்டுப்பார்த்தனரெ
ஆதிச்சாதிதனிலெ யமைப்புப்போலுள்ளவற்கள்
தானிறைந்தாடித் தண்மைமிகக்கூறி
வானிறைச்சோதி மயமாய்க்குதித்தனரெ
இப்படியேசாணரி லேற்றபெண்ணுவரை
அப்படியேநன்ருய் ஆராதனையாகி
ஊருக்கூரேயிருந்து வுத்தநருட்களெல்லாம்
பாருகங்காணப் பண்பாகக்கொண்டாடி
உமைபார்வதியெனவு முற்றமுத்தாரெனவும்
இமையோர்புகழும் லட்சுமிநானெனவும்
சத்திகன்னிமாதரென்னுந்தார் குழலாள்தோழியெனும்
பத்தியுள்ளநல்ல பரமேசொரியெனவும்
மண்டகாட்டாளெனவும் மாதுநல்லாள்தோளியென்னும்
பண்டையுள்ளயீசொரியாள் பாக்கியவாட்டியெனும்
வள்ளிதெய்வானை வாய்த்தபகவதியெனவும்
பூமடந்தையென்னும் பெரியபிராட்டியெனும்
பார்மடந்தையென்னும் பத்திரமாகாளியெனும்
நாககன்னியென்னும் நல்லதெய்வகன்னியெனும்
பாகைகைகாட்டும் பைங்கிளிமார்நாங்களென்னும்
இப்படியேநல்ல யேந்திழைமாரெல்லோரும்
அப்படியேநல்ல அவனிபெண்ணர்பேரில்
ஆராதனையா யங்கங்குதான்கூடி
சீராகக்கூடிச் சேர்ந்துவருவார்தினமே
ஆண்பிள்ளைகள் பேரிலானசிவமாலெனவும்
நான்பிர்மாயென்றும் நல்லஅனுமனென்றும்
காலனென்னுமே மனென்னுங்கடிபிலக்கந்தனென்றும்
மாலவனின்மக்களென்னு மாமுனிமார்நாங்களென்னும்
தேவரிசியெனவுஞ் சிமிழ்க்கருடசேவகனெனும்
தாவமுள்ளநல்லச் சன்னசிமார்களென்னும்
ஆராதனையாயவர்கள்மிகவாடி
சீராகக்காண்டம் செப்பிமிகப்படிப்பார்
வருவார்தினமே மாயோனிடமதிலெ
கருவாயுதித்தக்காண்டம் மிகப்படிப்பார்
இப்படியேபெண்ணு மியாமமுறைப்படியே
அப்படிவந்து ஆடிமிகப்படிக்க
நல்லநாராயணரும் நாட்டமிகவறிந்து
வல்லபொருளுமனதுளதறிந்திருப்பார்
அறிந்துசிலநாளகமகிழ்ந்துதான்பார்த்து

செறிந்தகுணநாதன் தெய்திக்கணக்கதிலே
இகனைநடத்தயெண்ண முற்றிருக்கைலெ
உவமைபலசொல்லி வுற்றதெய்வகன்னியர்கள்
அனைவோரும்புகழுமரன் கைலைவாழ்ந்ததுவும்
சுனையாடப்போனதுவுந் தூயோனடத்தினதுவும்
பிள்ளைதனைப்பெற்றதுவும் பெரும்வனத்தில்சென்றதுவும்
வள்ளல்சிவனை வருந்தித்தவம்புரிந்து
உலகில்மிகத்தோன்று முள்ளவர்த்தமானமெல்லாம்
சிலைனுதலிகன்னிச் சொல்லிமிகப்படிப்பாள்
அப்போதிருமா லடக்கமிகமனதில்
செப்புவதெல்லாஞ் சிந்தைதனில்கொண்டிருந்தார்
உமைமண்டைக் காட்டாளுற்றபகவதியாள்
இமையோர்புகழு மேற்றகுலபார்பதியும்
சீதைமடந்தை சேயிழைமாரெல்லோரும்
மாதவனைநோக்கி வழங்கூறியேபடிப்பார்
பாவிக்கலியன்பழி நீசன்ருேன்றினதால்
மேவிக்கலியில் மிகமூழ்கிமாயமதால்
மாயக்கலியை வதைக்குமந்தநாழையிலெ
தேசமதிலெங்களையும் திருக்கலியாணமுகித்து
எங்களுடநாயகனு ரிங்குவருவோமெனவும்
எங்களையுமிங்கே யிக்கோலமாய்வரவே
சொல்லியயச்சசாமி நீர்வந்தீரோ
பல்லுயிரும்பணியும் பரமனெநீர்வந்தீரோ
என்றுமடவாரிப் படியேயிசைய
பண்டுமுறைபோல் பரப்பிரமமாயிருக்கும்
எண்ணித்திருமா லிறுதயத்திலேயடக்கி
மண்ணிலுள்ளோர்கள் வந்துமிகக்கூடிநிற்க
மேலோகத்தார்கள் யிறஞ்சிமிகப்பார்த்துநிற்க
பூலோகமெல்லாம் புதுமையெனப்பார்த்துநிற்க
அப்போதுமாயாதி யாகமத்தின்படியே
செப்போடுவொத்த தேசத்திருப்பதியில்
வாழுகின்றதேவரையும் வாகாய்வரவழைத்து
நாழுக்குநான்சொன்ன ஞாயமுறைப்படியே
நடத்தாமலிப்போ நாயமீறிநீங்கள்
அடத்தமாய்செய்வதென்ன வல்லோருஞ்சொல்லுமென்ருர்
உடனேஎல்லோரு முள்ளமிகத்தளன்று
திடமேகுளறியச் செப்பவாயில்லாமல்
புத்திமயங்கி பொறியழிந்துதேவரெல்லாம்
சக்திகெட்டார்போலே தானேவிறுவிறுத்து
நின்றநிலையை நெடியதிருமாலறிந்து
குன்றினில்கொண்டுக் கொழுவிலங்கில்த்தான்சேர்த்து
மன்றுவொருகுடைக்குள் வைகுண்டமாள்வரைக்கும்
இன்றுமுதலெக்குவரே யிருங்கோபாருவதிலே
வைத்தாரேநல்ல வடவாமுகமதிலே

செயித்தான்விதியெனவே தேவரெல்லாமிருந்தார்
அந்தவவதார மதிகமுடனடத்தி
சந்தானமான சத்திகன்னிமாரையினி
மாமணங்கள்செய்து மாதரேழூபேர்களுக்கும்
தாமதங்களன்றி சந்ததிகள்தான்கொடுத்தார்
இராச்சியமுங்கொடுத் தேற்றபவுசுங்கொடுத்து
இராச்சியமாள செய்யவேணுமெனவே
நிலைத்துத்திருமா னின்றிறுதயத்தேயடக்கி
தனத்தனங்கள்பாடித் தந்தனங்கள்பாடலுற்ருர்
தினத்தினங்கள்பாடி சிவவேடம்போடலுற்ருர்

**விருத்தம்**

முன்னேகுருநாடைவருக்கு மீண்டுகொடுத்தோமிகக்கலியில்
பொன்னேர்மானுயுருவெடுத்து பொருப்பேறிமுனிகையினுல்
சான்ருேங்கூடுமிகப் போட்டுச்சிறீரங்கமேகச்செல்வழியில்
மின்னேயிவர்களேள்வரையுமே விப்புணர்ந்தோமவ்வனத்தில்

**விருத்தம்**

வனத்தில்ப்புணர்ந்தமாதர்களே மக்களேளும்பெறவருளி
புனத்தில்க்காளிதனே வருத்திபிள்ளேயேழுமிகயீந்து
இனத்தில்பிரிந்தமானது போலிவர்களேழுமடவாரை
வனத்திற்தவசுமிகப்புரிய மனதைக்கொடுத்துமீண்டோமே

**விருத்தம்**

மீண்டோங்கைலேக்கிருந்து பின்னுமெல்லியவர்தவம்பார்க்க
ஆண்டோர்சிவனுருமை யாளுமுவந்தவத்துக்கருள்புரிந்து
சான்ருேரிடமேபிருவிசெய்து தரணிதனிலேநாம்வருவோம்
என்றேவிடைகள்கொடுத் தயச்சயிளமாமாதர்வந்தனரே

**நடை**

முப்பிறவிசெய்த மொய்க்குழல்மார்வந்தனரே
நர்ப்பிறவிகொண்ட நாராயணர்மகிழ்ந்து
ஆடரம்பைமாரை யருமைமணம்கூட்டவென்று
வேடமதிட்டார் வீரநாராயணரும்
நாராயணராய் நல்லதிருவேடமிட்டு
சீரானக்காவிச் சீலேமிகப்புரிந்து
ஒருதோளில்பொக்கணமு முத்திராச்சமாலேகளும்
துருசமுடன்சிரசில் துளசிமாலேபுனேந்து
கையில்பிரம்பும் கனத்தச்சுரைக்கூடுடனே
மெய்யில்வெண்பதமு விஸ்த்தாரமாயணிந்து
வேலுமிகப்பிடித்து வேடமிகதரித்து
மாலுநிறமாய்வாய்த்த தொட்டில்மீதிருந்து
ஆகமத்திலுள்ள யறிவுஞானம்பேசி
பாகமதில்நிற்கும் பாலதியச்சான்ருேரை
பார்த்துவருகளேத்து பச்சமாலேதுரைப்பார்

நால்திசையுமறிய நல்லகுலச்சான்றோரை
உங்களுடதாய்மாருற்ற கன்னிமார்களைநான்
எங்களுடைவிதியா லிப்போமணஞ்சூட்ட
விதிவந்திருக்குதுகாண் வேளையிதுஆனதினால்
பெரியவுங்கதாய்மாரை போயழைத்துவாருமென்றார்
நால்திசையும்நீங்கள் நடந்துமிகச்சத்தமிட்டு
மாலதியபெண்ணை வரவழைத்துவாருமென்றார்
சீரானநூல்முறைக்குத் தேனேயெங்கள்தாய்மாரே
நாராயணர்க்கு நல்லமணஞ்சூட்டுதற்கு
நாளானநாளிதுவாம் நண்ணுதலேதாய்மாரே
தாளாமல்வாருமென்று சத்தமிட்டழையுமென்றார்
இப்படியேசொல்லியேற்ற புகள்ச்சான்றோரை
அப்படியேசொல்லி யழைத்தாரேசத்தமிட்டு
பாலருடசத்தம் பாவையர்கள்கேட்டுமிக
சீலமுடனெழுந்து தெய்வமடமாதர்வந்தார்
வந்துமிகநாரணரை வாழ்த்திமிகவணங்கி
சந்துட்டியாகதங்கள் தங்கள்வாக்கினின்று
முன்முறைகள்சொல்லி மொழிந்துமிகப்படித்தார்
தென்பதிகளான தெச்சணபூமியிலே
நான்வந்திருந்து நானிலத்துள்ளவர்க்கு
தீனம்பலதீர்த்து சிறிபண்டாரமெனவே
நாமமிகக்கூறி நாட்டிலிருப்பேமெனவே
சொல்லியெங்கடன்னைத் தொல்புவியில்வாருமென்று
நல்லவராய்ச்சான்றோருள் நாடிப்பிறவிசெய்தீர்
பிறந்துவளர்ந்து யென்பேருகேட்டவுடன்
மறந்திடாவண்ணம் வாருங்கோவென்றுசொல்லி
இப்பிறவிசெய்தநாயகரே பெரியவரேவந்தீரே
கங்கைதிரட்டிக் கரைக்கண்டர்தன்சிரசில்
பெண்கள்ளேழுபேரும் பிரியமுடன்வாழ்ந்திருந்து
யெங்கள்கர்ப்பெல்லா மீடழியவேதுணிந்து
சங்கையழித்தத் தலைவனேநீர்வந்தீரே
எங்களுடபிள்ளை யேழுமினவழியும்
அங்கங்குறையாமலவ் வழிகள்தான்முழுதும்
கொத்தோடேசேர்த்து குடும்பத்தோடேயடக்கி
பெற்றோர்களெல்லாம் பெருவாள்வுதான்கொடுத்து
யெங்களையும்சேர்த்து ராச்சியமும்மருளி
மங்களமாய்வாழ்வோமென்ற மாதவரேவந்தீரே
இனியிப்போதேள்வரையு மேற்றமணபுரிந்து
வனிதவளும்மாயவரே வைத்தாளுமென்றுசொல்லி
பாடியேமாமடவர் பாதம்பணிந்துநிற்க
நாடியேயெம்பெருமாள் நல்லாகட்டெனவே
அருகில்மிகநிற்கும் அன்பானசான்றோரை
வருகவழைத்து வார்த்தைமிகக்கூறலுற்றார்
எந்தனுக்குமுன்னமைத் தயிளங்குளலாளேழுபேரும்

வந்தனரேயிவர்கள் வளப்பமென்னசொல்லலுற்ருர்
கன்னிதானேயிவர்கள் கள்ளிகளோபாருமென்ருர்
உன்னிமனதிலுபாயமாய்த்தானுரைத்தார்
நடையுடைகள்பேச்சு நாரியர்கள்தன்குணங்கள்
மடமயிலின்சாடை மாதிரியைப்பாருமென்ருர்
அப்போதுசான்ருே ரெல்லோருமேமகிழ்ந்து
இப்போதுஎங்களுக்கு யாதுந்தெரியாது
படைத்தவர்க்கேதெரியும் பாவையரினர்க்குணங்கள்
செடத்தமெல்லாமெங்களுக்கு தெரியாதெனவுரைத்தார்
மாயவர்தான்பார்த்து மாதுகளைதானேக்கி
தூயவர்தான்வார்த்தை சொல்லுவார்பெண்களுடன்
நான்எப்போதுங்களையும் நடுவனத்தில்கண்டதுதான்
தானெப்போவந்தேன் தார்குளலேநானறியேன்
காட்டிலேவந்ததெப்போ கர்ப்பையழித்ததெப்போ
பேட்டிசெய்துபிள்ளை பெற்றதெப்போநானறியேன்
ஒன்றுந்தெரியாது வுங்களைநான்கண்டதில்லை
பெண்டுகளேயிப்பேச்சுப் பேசாதேபோய்விடுங்கோ
மாயமாய்நீங்கள் மருட்டிவிழியாதுங்கோ
பாயமாயுங்கள் பகட்டிலடங்கேனென்
பண்டாரத்தோடே பழிமொழிகள்ப்பேசாதே
அண்டாதுவுங்கள் மொழியகலநின்றுபோயிடுங்கோ
என்றுவடாத்தியமாயிவர்தான் மிகமொழிந்தார்
நின்றுநினைத்து நேரிழைமாரெல்லோரும்
அடர்ந்துமடவா ராகத்திரண்டேகூடி
தொடர்ந்துநெருங்கி தொட்டுப்பிடிக்கவென்று
தார்குளலிமூத்தசாஸ்திரத் தாளேதுரைப்பாள்
வாரணியுங்கூந்தல் மடவாரென்றங்கையரே
கள்ளக்கவுலாயக் கைமாயஞ்செய்துயன்று
மெள்ளநிகழ்ந்த மெக்குவாய்த்தாதனையும்
சென்றுபிடித்து செய்தியென்னக்கேளுமென்று
தன்றுபுகழ்சாஸ்திரத்தாள் தங்கையரைக்கண்காட்ட
மடவார்களெல்லாம் மாகோபமாய்வெகுண்டு
அடவாகமாயவரை யடர்ந்துபிடிக்கலுற்ருர்

விருத்தம்

தேன்மொழிமாரேயெந்தன் சித்திரைத்தங்கைமாரே
கான்வனமதிலே நம்மைக்கைகலந்திளிவுசெய்த
மான்முனிதன்னைக்கண்டோம் வார்த்தையில்குழைக்கார்சோற்
வான்முனிதன்னைநீங்கள் வளையுங்கோசிணமெவென்ருள் [றை

விருத்தம்

செப்பிடமூத்தகன்னி தேவியராறுபேரும்
அப்பிடவொன்றுபோலே யவர்வழைந்தாதிதன்னை
முப்பிடியெங்கள் தன்னைமொய்வனமதிலேவந்து
கர்ப்பினையிகழச்செய்த கள்வரேயென்றேசூழ்ந்தார்

விருத்தம்

சூள்ந்தேநமதுதுயிலை முன்னஞ்சுழியஞ்செய்தமாமுனியை
பூந்தெநெருங்கித்துயிலுரியப்பிடித்தேயிழுத்து நாமீன்ற
சார்தோர்மக்களேழுவரையும் தரவேளன்னசெய்தியென்று
ஓர்ந்தேகேள்ப்போமென்று சொல்லிஒன்றுபோலேவளையலுற்றார்

விருத்தம்

வளைந்தபோதுமாயவரும் மனதுளுபாயமொன்றெடுத்து
இழந்தமொழிகள்சொன்னக்கா விழப்பமிதுவேயாகுமென்று
குழைந்தவார்த்தைமிகக்கூறி குழைந்தைய்யேழுமினவளியும்
நுழைந்தேயெடுத்து நொடிப்பொழுதில்நேரேகொண்டுதாரே
[மென்றார்

தரு

பிள்ளையைநான்தாரோம்நீங்கள் பெற்றபிள்ளையைநாம்தாரோம்
பிள்ளையைநாம்தாரோம் கிள்ளைமடவாரே
கள்ளமொழியில்லைஉள்ளதை சொல்லுகிறோம்பிள்ளையை
[நாம்தாரோம்
காட்டுவனத்திலே கண்டுங்கள்தன்னையும்
லோட்டுகள்பார்த்தினீருடுதலைதோற்றதும்
மேட்டுகளாய்யென்னை யெரிக்கத்துணிந்ததும்
பூட்டுகள்சொல்லாமல் பெண்ணேநீர்பெற்றிடும்பிள்ளையை
அருவனமீதிலே அமுர்தவாழ்கங்கையில் [நாம்தாரோம்
சுருபமாய்நீங்கள் சுனையாடும்வேளையில்
வருமொழிமீதுங்கள் வாய்மொழிமதங்கண்டு
கருவதுகொண்டுநீர்க்காட்டினீ லீன்றிடும்பிள்ளையை
உருவனமீதிலென் னுபாயத்தையறியாமல் [நாம்தாரோம்
முறுவல்செய்தென்னைநீர் மொழிந்ததுகண்டுநான்
இறுவானமேலோக வேழுபுவியுயிரன
பெறுகநான்செய்திடப்பேணியேநீர் பெற்றபிள்ளையை
[நாம்தாரோம்

விருத்தம்

மடமயில்மாதேநீங்கள் வந்தென்னைநெருக்கவேண்டாம்
தொடவும்நீர்நியாயமில்லை தூரவேயகலநின்று
அடவதில்ப்பெற்றபிள்ளைக் கடையாளமறியச்சொன்னால்
உடனிப்போமதலைதந்து உலகமுமருள்வோமென்றார்

விருத்தம்

அய்யனேக்குருவே யெங்களாதியேசோதியான
மெய்யனேஒப்பில்லாத வேதநல்மணியேகேள்மோ
வெய்யநல்மதலையீன்று வெள்க்கமுமிகவேயாகி
கையதுதப்பியோடக் கண்டமோமதலையென்றார்

சிந்து

மதலையைத்தாருமையா நாங்கள்பெற்ற
மதலையைத்தாருமையா

மதலையைத்தாருமெங்கள் வயிறெல்லாங்கொதிக்குது
குதலைமொழிகள்கேட்டுக் கொஞ்சிக்குழைந்திருக்க
மதலையைத்தாருமையா
பெற்றநாளின்றுவரைப் பிள்ளைதனைக்காணமல்
மெத்தமனதுநொந்து மெய்யந்தளருதய்யா
மதலையைத்தாருமையா
வாலைப்பருவத்திலே வனத்தில்மயக்கமிட்டு
கோலமழித்தவேத கோலகாலமாமுனியே
மதலையைத்தாருமையா
பாலர்பெற்றநாள்முதலாய்ப் பன்னிரண்டாண்டுவரை
காலதுயிளகாமலேக் காட்டில்த்தவசிருந்தோம்
மதலையைத்தாருமையா
ஊணுறக்கமில்லை யொருவரின்தஞ்சமில்லை
மூணுநாலுகாலம்வரை மூண்டத்தவசிருந்தோம்
மதலையைத்தாருமையா
சிங்கங்கரடிபுலி திரியும் வனத்தினூடே
நங்கைமாரேழுபேரும் நாடித்தவசிருந்தோம்
மதலையைத்தாருமையா
இத்தனைநாளும்தவசிருந்து பின்னுநாங்களுந்தான்
பெற்றனமனுவயிற்றில்ப்பிறந் துவுதித்துவந்தோம்
மதலையைத்தாருமையா
முன்னிருந்தசெல்வமென்ன மூதூர்ச்சிறப்புமென்ன
மன்னுகந்தமாதுமையை மறந்துகலியில்வந்தோம்
மதலையைத்தாருமையா
ஆண்டசிறப்புயென்னமருஞ்சுனையாடலென்ன
காண்டமநிறைவேற்றுதர்க்கோகலியிலுதித்துவந்தோம்
மதலையைத்தாருமையா
உண்டிருந்தசெல்வமென்னஉடுத்த துயில்ஞாயமென்ன
கொண்டிருந்தவிதிப்பயனோ கூறுகலிமீதில்வந்தோம்
மதலையைத்தாருமையா
பொன்னும்பந்தலாரமென்ன பூத்தொடுக்குஞ்சாரமென்ன
முன்னுரைத்துவிட்டதுவோ மூண்டகலிமீதில்வந்தோம்
மதலையைத்தாருமையா
பந்தடிக்கும்வீரமென்ன பைம்பொன்னிறமேடையென்ன
குந்தடிக்கமாவுலகில்க்குதித்திப் பிறந்துவந்தோம்
மதலையைத்தாருமையா
கனனியழியுமுன்னேகாதல் தனைபெற்றதினல்
நின்னுபிள்ளைபாராமலே நெடுகநடந்துவிட்டோம்
மதலையைத்தாருமையா
கண்டுபிள்ளைதானெடுத்துக் கமலமுகத்தோடணைத்து
பெண்டேழும்பால்கொடாமலப் பெருகவனத்தில்ச்சென்ருேம்
மதலையைத்தாருமையா
பாலிளகிநல்லமுர்தம் பாலாச்சொரியுதையோ
மாலழகரெங்களுட மனக்கவலையைத்தீர்க்க
மதலையைத்தாருமையா

வர்ணநிறமதுவும் மக்களுடசாயலதும்
கண்ணதிலேகண்டறியோம் கையதிலேதாருமையா
மதலேயைத்தாருமையா
அங்கமெல்லாஞ்சோருதையோ ஆவிமெத்தவாடுதையோ
தங்கமணிநாங்கள்பெற்ற தவமணியைத்தாருமையா
மதலேயைத்தாருமையா
மங்காததெய்வகுலமக்களேழு யென்வளியும்
சிங்காரமாகவிப்போ சீக்கிரம்நீர்தாருமையா
மதலேயைத்தாருமையா

விருத்தம்

மதலேயுந்தந்துயெங்கள் மனச்சடவெல்லாமாற்றி
குதலேதனக்குயிந்தக் குருமுடிச்சூட்டித்தர்ம
பதியுகமதிலேயெங்கள் பார்முடிமன்னராக
நிதமிருந்தரசேயாள நின்மக்கள் தருவீரென்ருர்

விருத்தம்

163019

தருவீரெனவுரைக்குமடமாதே நீங்கள்சந்ததியை
பெற்றிடத்தில்த்தயவாய்பாரு
பெருகியேவாழ்ந்திருப்பா ரங்கேசென்று
பெற்றிடத்தில் பார்க்குகைலுண்டுவங்கே
மருவியென்னேக்கேள்க்காதேக்காட்டினூடேவளர்ந்திருப்பார்
கண்டுகொள்வீர்திட்டஞ்சொன்னேன்
சருவியென்னேநெருங்காதே மடவீரெல்லாஞ்சந்ததியை
தேடிவனஞ்செல்லுவீரே

விருத்தம்

சொல்லுவீரெனமொழிந்ததேனே கண்ணேசீமானே
நாமாதுபுரக்குமாலே
பல்லுயிருமிகப்படைத்தபாக்கியவானே பருவனத்தி
லெங்களே நீர்ப்பற்றிவந்து
தொல்லேவினேசெய்துநாஞ் சுமந்தேபெற்றே
சுற்றகுலமான தெய்வச்சான்ருேர்தன்னே
இல்லிடத்திலிப்போது தருகிலானுல்யிளுத்
தும்மைச்சந்தியிலே யேற்றுவோமே

விருத்தம்

சந்தியிலேத்துவோமென்ற மாதேகேளுதருவதுண்டோ
முன்கடன்கள் தந்ததுண்டோ
பந்தியழித்துங்களுடபேச்சைநானும் பகருவேனுங்களே
யார்பழித்துயேச
முந்தியிதையுரைத்திட்டேஞேடிப்போங்கோவுலக
நருளறிந்தாக்கால்ச்சிரிக்கலாகும்
சிந்தனேக்கேடாகும்வரை நிர்க்கவேண்டாம் தேன்மொழியே
மறுவிடம்போய்த்தேடுவீரே

## விருத்தம்

தேடுவீரெனமொழிந்தயிந்திரச்சாலந்தெய்வமடவாரோடு
செலுத்தவேண்டாம்
நாடுபதிநாலறியுமுமதுகள்ளஞாயமது யெங்களோடு
நவிலவேண்டாம்
வீடுவழிதோறும்விருந்துண்டுமுன்னேமெல்லிமடவார்
சிலரைகொள்ளேகொண்டு
பாடுபட்டபாட்டையினிநாங்கள் சொன்னால்பாரிலுள்ளோரும்மை
யேசிப்பளிப்பார்காணும்

## விருத்தம்

பளிப்பரெனசொன்னயிளம்பாவைமாரே பாரிலுள்ளோரறி
வார்கள்பச்சமாலின்
களிப்பதுவுங்காண்டமுறைநூல்கடாறுங்காரணத்தை
சொல்வார்கள்கருதிக்கேளு
சுழிப்பதுவுமமைப்பதுவும்நமக்குள்ளாகும் தோகையரே
யிதுயெனதுசொந்தவித்தை
குழிப்பதுவில்ச்சுனையாடிமதலை யீன்றகோலமதை
சொன்னாக்கால்குறைவதாமே
குறைவதாமெனவுரைத்தகுறவாகேளும் கோவேங்கிரி
வாழும்குலமாமாதர்
மறைமுதல்வானோர்சிவனார்க்கு நாங்கள்வந்துச்சுனையாடி
கங்கைதிரட்டியேக
துறையறியாக்களவாண்டுதோய்ந்த கள்வாதொல்
புவிகளறியாதோவுன்சுத்தக்கள்ளம்
இறையளவுமெய்யில்லாப்பொய்யே சொல்லுமேமாளிக்கள்ள
ரெனயெவருஞ்சொல்வார்
கள்ளரெனச்சொல்லிவந்தமாதேநீங்கள் களவாண்டீர்
கைலையதிலீசர்முன்பில்
வெள்ளமதுதிரளாமல்க் கள்ளத்தாலேவெம்மருண்டு
நின்றவிதவெட்க்கங்கண்டு
வள்ளல்சிவனாரறிந்துகலியில்ச் சான்றோர்மேல்வழியதிலே
பிறக்கவென்றுசபித்தார்முன்னே
உள்ளதெல்லாஞ்சொல்லிடுவேனோடிப்போங்கோ ஒகோகோ
வெனச்சொல்லியுறுக்கினாரே
உறுக்கிநீருரைத்தசுணையுமக்கேயல்லா லோவியங்களேளு
பேருக்குமுண்டோசொல்லு
இறுக்கிவைத்தநீரிளகச்செய்தகள்ளம் யீசர்முதல்
வானோர்கள் எவருஞ்சொல்வார்
சிறுக்கிமிடைமாதருடவீட்டில் வெண்ணெதிருடியுண்ட
கள்வரெனச்சொல்வாரும்மை
பொறுக்கயினிமாட்டோங்காணுமது ஞாயம்புகன்றிடுவோமினி
யண்டம்பொடியத்தானே

விருத்தம்

புட்டுக்காய்வைகைதனில்மண்சுமந்து பிரம்படிகள்
பட்டதுவும்போதாவண்ணம்
கெட்டுமிகப்பட்டீரோயிடச்சிகையால் கேள்வியில்லா
முப்புரத்தில்க்கிழவன்போல
குட்டுமிகப்பட்டுமதுவீசைதன்னில்க் குறுங்கண்ணி
போட்டிழுக்கச்குனியவைத்து
பொட்டுவதுகுலேத்திடுவோம் நாங்கள்பெற்றபிள்ளேதனேத்
தந்துப்புவியாளவைப்பீர்

விருத்தம்

ஆடெடுத்தகள்வரெல்லோவுமக்குச்சூடுவணுவளவுந்
தோற்ருமலலேந்துயெந்த
நாடெடுத்தஇடமெல்லாம்வேசம் போட்டுநாண
மொன்றில்லாமல்நாரிமார்தன்
வீடடுத்தமனேதோறுமிருட்டுவேளே வேசையுடன்கூடி
விளேயாடிக்கள்ள
கூடெடுத்தமுறையல்லோயெங்கள் தன்னேக்குவலேயத்தில்
கள்ளியெனக்கூறினீரே

விருத்தம்

இன்னமுண்டுமக்கு வெகுபங்கந்தானுமெடுத்துரைத்
தாலிப்போது விழப்பமாகும்
முன்னமைத்தபாலரையுமினத்திற் சேர்க்கைமுழுவதையுந்
தந்துபுவியாளவைப்பீர்
இன்னமிப்போதாராமலிருந்தீராளுலீரேழு
யுகமறியயிழுத்தும்மை
அன்னமதுவருந்தாமல்மறித்து கொள்வோமதுவறிந்து
பாலரைத்தந்தாளுவீரே

விருத்தம்

பாலரைத்தந்தாளுவீரெனமொழிந்தபாவைமாரேபகர்ப்பொழுது
களித்துவெள்ளிகுதிக்கும்நாழை
காலமேநீரெல்லோரும்வந்தீராளுல் கதிரவனும்போயடைந்து
கங்குலாகும்
சீலமுடன்தென்றலுக்குமழைக்கும் மேலோதிச்சீட்டெழுக
தேவரையும்வருத்தியிங்கே
கோலமணமுங்களேநான்புரிந்துகொள்வேன்குடிலதுக்குப்
போயமதுகுடித்துவாரும்

விருத்தம்

வாருமெனமங்கையர்க்கு விடையருளிமாயன்வருணனுக்குந்
தென்றலுக்கும்வானலோக
ஊருமிகவறிவதர்க்கு வோலேதானுமுடனெழுதி
யயச்சிடவேவந்தார்வானேர்

பாருடனேசங்கமதுதிரண்டுகூடிபாவாணர்கீதமுறைபாடிநிர்க்க
சீருடனேகதிரவன்போயடைந்து மீண்டுதினகரனு
முதித்து வெள்ளிதோன்றிற்றென்று

விருத்தம்

தோன்றியபொழுதேவானோர் ஈசர்மாதுதுதிமுகனும்
நான்முகனும் தொல்விமாதும்
கூன்றிசிரிசிதேவரிசிவேதமான குணயிருள்சிகிணயிருள்சி
குலமாமாது
தான்றுசரசோதிபகவதியின் மாதுசதாகோடி
தேவரம்பைசங்கமாக
மன்றுபுகழ்நாரணருக்குந் தெய்வகன்னிமடவார்க்கு
முகூர்த்தமெனவந்தாரங்கே

விருத்தம்

வானமதிலிடம்மானமுழங்கத் தேவர்மலர்மாரிசலமாரி
வானோர்தூவி
நான்முகனும்வேதமுறைமுகூர்த்தங்கூற நாரிமார்
குரவையிடநமனுமாற
தானமுறைமாமடவார் சமனங்கூறத்தரணிதனில்
நாரணர்க்குந்தையலான
மேன்முகில்மாதர்க்கு மணமாமென்றுமேலோகபந்தலிது
விண்ணோரிட்டார்

விருத்தம்

பந்தலுக்குநமனுதிகாலதாக பக்கம்பதினைந்தும்
வழைப்பரப்பதாக
சந்தமுடன்மேல்கட்டிமறையதாகச் சாருமேல்
மேந்ததுவேசமையமாக
அந்தமுறைசூரியனும் விழக்கதாகவலங்கிரதம்
வானக்காயதுவேயாக
சொந்தமுள்ளசிவமதுவே பீடமாகத்தேவரெல்லாஞ்
செய்துபந்தல்ச்சிறப்பித்தாரே

விருத்தம்

சிறப்பித்தோமென்றுமகாதேவரெல்லாம் திருமாலினடி
பணிந்துசொல்வாரப்போ
பிறப்பித்தபெம்மானேயெவர்க்கு மாய்ந்துபேணி
யமுதளித்துவுயிரனைத்துங்காக்கும்
உறப்பித்தமாலோனே அய்யாவுந்தன்வுதவியினல்
பந்தலதுவிதானஞ்செய்தோம்
நிறப்பித்தமணமதுக்கு நாங்கள்செய்யும்நிசவேலை
இன்னதெனநிகழ்த்துவீரே

### விருத்தம்

தேவருரையதனைமிகக்கேட்டு மாயன்திருமனதுமகிழ்ந்து
வாய்திறந்துசொல்வார்
மூவருரைமாருமலெனக்கு முன்னேமொழிந்ததெய்வ
மாதர்களைமுகிழ்த்தஞ்செய்ய
நாவதுரைவருணனோடு வாய்வுதானும்நளிரமலர்
தூவியதுகுளிரவீச
தேவருரைசெய்துமிக நில்லுமென்றுதெய்வமடவார்
வரவேசிந்தித்தாரே

### விருத்தம்

சிந்தித்தவுடனேயிந்தத் தேன்மொழிமாதரெல்லாம்வந்
தவரடியைப்போற்றி வணங்கியேநாங்கள்பெற்ற
சந்ததியேழுபேரும் தன்னுடகிளைகளொக்கதந்துநலம்புவியை
யாளத்தருவீரென் தலைவாயென்றார்

### விருத்தம்

தருவீரெனச்சொன்ன குலமாதேநீங்கள் தலைவர்எங்கள்
மக்களையும்தருகஉங்கள்
மருவினியகருவதிலேவுதிக்கயீன்ற மனுவழியை
யென்முன்னேவருகச்செய்தால்
தருமினையசொத்தாஸ்தி பொன்னுங்காசுந்தாறதுவும்
கொடுப்பதுவுஞ்சபையிலேப்பேசி
பெருவுங்கள்தன்னைமணஞ்செய்து நீங்கள்பெற்றபிள்ளை
தந்துபுவியாளவைப்பேன்

### விருத்தம்

புவியாளவைப்பேனெனவுரைத்தீரெங்கள் பொன்மானே
கண்மணியேபுரந்தமாலே
கவிஞ்ஞோர்கள்போற்றுமதக்கள்றே தேனேகாயாம்பு
மேனியரேகடவுளாரே
இவிலோககலியதிலே பிறந்ததாலேயிதுநாளு
வரையன்னமீந்தபேர்கள்
செவியானுன்பதமடைந்தாலவர்களேது செய்வார்க
ளெங்களொருசேர்க்கைதானே

### விருத்தம்

சேர்க்கையுண்டோவென மொழிந்தமானேபெண்ணேதேன்
மொழியேயுங்களுக்குதெரியாவண்ணம்
வார்க்கையதுசொல்லாதே நமதுவாழ்வுமக்களுட
வாள்வதுவுமொன்றுபோலே
மார்க்கமுடன்வைத்தரசுவாள நானுமனதிலேநினைத்
திருக்கும்வளமையாலே
கோர்க்கையிதுவவர் கொடுக்கல்வாங்கல்தன்னைக்
கூறிமிகக்கேட்டுமணங்கூடுவேனே

### விருத்தம்

மணங்கூடுவேனெனவே யுரைக்கமாயன்மனுவளியிலுதித்த
குலச்சான்ருேரெல்லாம்
அணங்குயினவழிபோலேயவர்கள் வந்துவாயனடி
போற்றிமிகவன்பாய்நிற்க
குணங்குறிகள்கண்டுமிகவரியோன்மெச்சிகொடுப்பதென்ன
யிவர்களைநான்மணங்கள்செய்தால்
பணங்கள்மிகப்பொன்காசு ரெம்பரெம்பபாவையர்க்குச்
சீதனங்கள்பகருவீரே

### விருத்தம்

பகருவீரெனமொழிந்தயையா நீரும்பதியமென்ன
வெங்களுக்குபண்பாயீவீர்
உகருமெனச்சொல்லியே சான்ருேரெல்லாமுடைய
குலச்சொக்கருமேயுரைப்பார்பின்னும்
தகருமோநான்தருகுந்தங்ககாசு சதாகோடி
யெண்ணமதுதாளுயில்லை
நீதருவீர்நீங்கள்தருஞ்சொத்தையெல்லாம் நினக்கறிய
சொல்லிடுங்கோநிசமாயென்ருர்

### விருத்தம்

ஆண்டவரேயிப்பதியங் தருவீராளுல்யாமடியா
ராளுகின்றவஸ்துவெல்லாம்
கூண்டபண்டம்பொன்னுடமையாடு மாடுகுருபரனே
யாங்கள்வரையுமக்குச்சொந்தம்
மீண்டடிமைமுக்காலுமுமக்குநாங்கள் விலையடிமையாளுேம்
காண்விரையமாலே
பாண்டவரைகாத்துரச்சித்தாண்டாப்போலேபாவையரு
மக்களுமுன்பக்கந்தானே

### விருத்தம்

பக்கமதுஎன்றவுடன் மாயன்ருனும்பதருதேவுங்களையுங்
காத்துக்கொள்வேன்
ஒக்கவெனக்குங்களையுமாண்டுகொள்வேன்ஒண்ணுபோலே
யிருந்துபுவியாள்வோம்நாமும்
தர்க்கமதுயில்லையப்பாயிந்தவார்த்தை தந்ததுவுமீந்ததுவுந்
தவறேயில்லை
மிக்கதெய்வகன்னியரைமணங்கள்செய்ய மெல்லிகையை
பிடித்தெனக்குவிடுகுவீரே

### விருத்தம்

கைபிடித்துத்தாருமென வுரைத்தீரையாகணவரெல்லோ
முன்னவர்க்குக்கருணைமாலே
மெய்பிடித்தமெல்லியருந் தேவியல்லோமேதினிக
ளறியதவதாரஞ்செய்தீர்

எப்படித்தானுங்கள் கையைப்பிடித்துயீயயிவ்வுலகி
லவதாரயிகனைதானோ
எப்படியோயறியோங்காணென்று சொல்லியேந்திளைமார்
கைபிடித்துயீயலுற்றார்

விருத்தம்

ஈந்திடவேமாயவரும் தங்கத்தாலேரத்ன.வொளிபோல
வீசுந்தாலிதன்னை
மாய்ந்துமிகப்போகாமல்த் தாலிவாளமகாதர்ம
யுகம்வாளமாதும்வாழ
ஏந்தும்புவிதர்மமது தளைத்துவாழஈசர்
முதலெல்லோருமிருந்துவாழ
சாந்தகுலச்சான்றோர்கள் தளைத்துவாழதாலிமிகவாழ
வென்றுதரித்தார்தாலி

விருத்தம்

தாலிமிகத்தரிக்குகையில் மாதரோடுத்தாமனிய
நாதனும்மகிழ்ந்துதானேதுசொல்வார்
கேலிமிகவுரையாதுங்கோ யின்னங்கெணிமடவா
ரனேகமுண்டுமணங்கள்செய்ய
சோலியல்லோவாச்சுதென்று நினையாதுங்கோ
தொல்புவியையரசாள்வீர்நிசமேசொன்னோம்
மாலினுடசூச்சமகாகோடியுண்டு மனதுசடையாமல்
மிகவாளுவீரே

விருத்தம்

வாளுவீர்கூடுவிட்டுக்கூடுபாய்வேன் மறுவுருபாய்ந்து
வுங்கள்மனதில்வாழ்வேன்
மாளுவேன்முழித்துப் பின்வருவேனுங்கள்மனதலைந்து
வெணையிகழ்ந்துமாளாதுங்கோ
தோளிலேயிருந்து பலசூச்சஞ்செய்வேன்தோகையரே
நீங்கலெல்லாமெனதுவாயம்
நாளிலேயறிந்துமிக கண்டுகொள்ளும்நாரணரின்
நடப்பிதுவேஞாயம்சொன்னோமே

விருத்தம்

சொன்னமொழிதனைமறந்து நீங்களெல்லாம்தூசணித்து
யெனைக்கபடமெண்ணுதுங்கோ
என்னுடையதொழிலிதுவே வுங்களோடுவிருந்து
தர்மமுடிசூடியாளுமட்டும்
பொன்னுடையநாடதுககு வானோர்தம்மைபோக
விடைகொடுக்கவவர்போனாரங்கே
கன்னிமடவார்கையைப் பிடித்துக்கொண்டுகருணைபதித்
தெருவீதிவருகின்றாரே

## சிந்து

தெருவீதிநாம்வருவோமெந்தன் தேவிமாரேகன்னிநாயகமே
மருவினிய கன்னியரே பதிவலங்கள்சுற்றிநாம்வருவோம்
கண்மணியேகாரணரே ஓகோகாயாம்புமேனியரே
மண்ணேழுமழந்தவரே ஓகோமாயவரேநாம்வலம்வருவோம்
பெண்ணரசேமாமயிலே நமதுபொருமைப்பதிவலம்வருவோம்
தண்ணமுள்ளதேவிமாரே நமதுதர்மபதிவலம்வருவோம்
ஆண்டமணிநாயகமே உலகாண்டருளுமென்கண்மணியே
காண்டம்நிறைவேற்றவந்த யெங்கள்கணவனேநாம்வலம்
[வருவோம்
பொர்மைப்பதிவலம்வருவோம்கலிபொடியயாமம்போட்டிடுவோம்
தர்மமதுதழைக்கச்சொல்வோம்பதிதானேவலம்தான்வருவோம்
பொல்லாதவகையழித்து சாமிபுதுப்பூமிதோணவைத்து
கல்லாதர்கருவறுத்துச்சுவாமி கதிகபதிவலம்வருவோம்
நாடும்பதித்தலங்கள்வாளும்பெண்ணே நம்முடையயினங்கள்
[வாளும்
கேடுகலிகோடுவாதும் பெண்ணேகிளர்ந்தபதிவலம்வருவோம்
ஆகாத்தபேரையெல்லாம் சுவாமியக்கினிக்குவிருந்தளித்து
வாகாகதர்மபதி வாளும்பதிவலம்வருவோம்
முன்குறோணிவுதிரமதால் லுதித்துவந்தக்குலங்களெல்லாம்
தன்குணத்தால் மாண்டுபோகத் தர்மபதிவலம்வருவோம்
மாத்தானேளியவேணு மக்களெல்லாம்வாளவேணும்
காத்தோரைக்கய்விடாமல் நாமள்கருணைபதிவலம்வருவோம்
தெண்டமிறைபொய்க்களவு செய்யும்வண்டகுலங்களெல்லாம்
கொண்டகலிகூடமாண்டு குருநாதபதிவலம்வருவோம்
வீணனகலியுகத்தைசுவாமி வெய்யோனுக்கமுதளித்து
சாணுரைவைத்தாளத் தர்மபதிவலம்வருவோம்
நாடும்பதிதுலங்குதெடி நல்லசிலைகுதித்ததடி
ஆடுமாடுயருகுதடி காத்தா ஆவினங்கள்தோணுதெடி
நல்லபதிதுலங்கணுமே சுவாமிநாடுதர்மமாகணுமே
பொல்லாப்பதுவொழியணுமே சுவாமிபுத்தியொன்றுய்க்குவி
[யணுமே
கோவில்தெருதுவங்கணுமே நம்மள்கோட்டைவெளியாகணுமே
தேவருடநல்த்திருநாள் பெண்ணேதினமுவந்துகூடணுமே
தங்கத்தொட்டில்தண்டாயமும் தாண்டும்பதிவீதிகளுமதலத்
[தில்வந்துகூடணுமே
சங்கையோடுடம்மானமுந் தலத்தில்வந்துதோணணுமே
கோட்டையிட்டுகொடியுங்கெட்டி கொத்தளமாய்மேடைசெய்து
நாட்டையெல்லாந்தான்கிலிக்கி நமக்குபதியேறணுமே
நம்பினேரைகாக்கணுமே நாடுகெட்டியாளணுமே
அம்பலங்களேறணுமே யவதாரங்கள்நடத்தணுமே
சிங்காதனமேறணுமே தீவெட்டிகள்போடணுமே

கண்காச்சைகாணணுமே பெண்ணேகன்னியரைக்கைப்பிடித்
[தால்
பாக்கியங்கள்பெருகணுமே சுவாமிபாரிலுள்ளோர்காணுதர்க்கு
ஆக்கிநாங்கள்படைக்கணுமே யமுதருந்திவாளணுமே
மக்கள்பெற்றுவாளணுமே வந்துமெந்தன்கால்பிடித்து
ஒக்கநின்றூராட்டணுமே பெண்ணேயுற்றபள்ளிமெத்தைசூழ
பால்பசுவுபெருகணுமே பஞ்சணையில்கொஞ்சணுமே
தூலருமையறியாமலேகலி தொல்புவியுமமயங்கணுமே
சமுசாரியாகணுமே தலையில்சோறுசுமக்கணுமே
ஒவுதாரியாகணுமே வுங்களைநானடிக்கணுமே
அயலூர்போகணுமே யளைக்கநீரும்வரவேணுமே
கயல்விளிமாரொருதர்க்கொரு தர்கற்றுதல்கள்கொள்ளணுமே
நானும்வந்துநிரத்தணுமே பெண்ணேநல்லமொழிசொல்லணுமே
தேனும்பாலும்போலேநாமள் தேசமதில்வாளணுமே
கண்டுயிந்தநீசகுலம் களிப்புச்சொல்லியும்மைமிக
பெண்டுகள்க்குவீங்கியென்று பொல்லாப்பயலேசணுமே
காரணத்தையறியாமலே கலிப்பயல்கள்தான்நகைத்தால்
மாரணத்தின்தீர்வைதன்னில் மடுநரகம்பூத்திடுவேன்
செம்பவளநர்ப்பதியின் தெருவலங்கள்சுத்திவந்தோம்
பொன்பதிக்குள்நாமுள்புக்கிமறுபொழுது வந்தால்வருவோ
[மைய்யா
சோபனமேசோபனமே திருநடனச்சோபளமே
தேவர்குருநாரணர்க்குத் தேவியர்க்குஞ்சோபனமே
பூமலர்ந்தயீசொரிக்கு பொன்தேவிமாதுமைக்கும்
காமனந்தநாரணர்க்குங் தெய்வகன்னியர்க்குஞ்சோபனமே
பூமடந்தைநாயகியுக்கும் பொன்னுமண்டைக்காட்டாளுக்கும்
பார்மடந்தைலச்சுமிக்கும் சிவபகவதிக்குஞ்சோபனமே
தெய்வகன்னிநாயகிக்கும் சிறந்தவள்ளிமடந்தையர்க்கும்
ஐவர்குலநாரணர்க்கும் கன்னியரிவையருக்குஞ்சோபனமே

## விருத்தம்

துடியிடைக்கன்னிமாரைத் திருமணந்திருமால்செய்து
குடிபுகள்சான்றோர்மக்கள் குரவைகள்முளக்கத்தோடு
திடீரெனதெருக்கள்ச் சுற்றிதேவியுமன்னராக;
படிமிசைபதியினுள்ளே பதிந்துவந்திருந்தாரன்றே

## நடை

மாதுநல்லாரேள்வரைம் மணமுகித்துமாயவரும்
தீதகலும்நர்பதியில் சிறந்தங்கினிதிருந்தார்
கன்னிமாரேள்வரையும் கைப்பிடித்துமாயவரும்
பொன்னும்பதியில் புகழ்ந்தத்திருநாள்நடத்தி
நித்தந்திருநாள் நிதநடத்தவேணுமென்று
சித்தமதில்நாரணரும் சிந்தித்தாரம்மானை

எற்றிசையுமுள்ள ஏற்றபுகழ்சான்ருேரும்
முற்றியடைந்தோமோ மோக்ஷமதுபெற்ருேமே
நம்முடையதாயார் நல்லதெய்வகன்னியரை
செம்மைத்திருமால்த் திருமணங்கள்செய்ததினுல்
குற்றமில்லேநம்முடைய குலத்திக்கினியனவே
சிற்றமதுநாதன் செயல்நமக்குண்டெனவே
வந்துமிகஎல்லோரும் வாழ்த்திமிகப்பணிந்து
சிந்துபுகழ்தெய்வ மடவாரையுந்தொழுது
நல்லபண்டமானதுவும் நாடும்நிதியதுவும்
வல்லகுலச்சான்ருேர் மாதாப்பிதாவதுக்கும்
கொடுத்தாரேநல்ல குவலயத்தில்மக்களெல்லாம்
விடுத்ததெல்லாம் தான்வேண்டிமிகயேற்ருர்மாயவரும்
பலன்பெற்ருேமென்று பாலதியச்சான்ருேர்கள்
குலமெல்லாம்வந்து கூடினுர்மாயனிடம்
அப்போதுநாதன் நர்த்தவமேபுரிந்து
இப்போதிருநாளிகனே நடத்தவென்று
நாளானநாளிதுதான் நாதன்பிறந்தநாளும்
தாளாதுஞாயறதுவே சுவாமிபிறந்தநாள்
இந்நாள்முதல் திருநாளிகனேமிகநடத்தி
பொன்னுனநாரணரும் பூரித்தாரம்மானே
ஞாயருச்சைத்திருநாள் நான்பார்க்கபோவோமென
தேயமதிலுள்ளத் தெய்வகுலச்சான்ருேர்கள்
பாலுக்குநெல்லும் பண்பாய்ச்சிறுமணியும்
மாலுக்குநல்ல மகிந்தபிச்சிமாலேகளும்
கொழுந்துபன்னீர்சந்தணமும் குலுங்காவிடலேகளும்
தென்னங்காய்மாம்பழமும் திகட்டாப்பலாங்கனியும்
வாழைகனிஇலேயும் வகுந்தகமுகின்குலேயும்
நாளேக்குத்திருநாள் நமக்குமுந்திப்போவோமென
இத்தனேயுங்கொண்டிசைந்த திருநாள்வகைக்கு
பத்துமூணேரு பணமுமிகயெடுத்து
காதுக்குநல்லாக யேத்தபணியாபரணம்
மார்புக்கியல்பாய் வளர்கோர்வையுமணிந்து
பெட்டிச்சீலேயுடுத்து பெரியநாமப்பொட்டுமிட்டு
கட்டன்னமுமெடுத்து கண்ணர்த்திருநாள்கெனவே
மக்கள்மணவாளன் மனேவிக்கிழவியுடன்
சிக்கெனவேநாதன் திருநாள்க்குப்போவோமென
வருவார்க்கிழமை மாதந்தவருமல்
திருமால்அகமகிழ்ந்து திருநாள்முறைநடத்தி
கொட்டாலேயிட்டு குவிந்தமணிமேடைவைத்து
பட்டால்மேல்கட்டி பழங்கனிகள்தான்தூக்கி
பிச்சுமாலேதூக்கி பெருவாடைதான்தொழித்து
சந்தனம்கஸ்தூரி சவ்வாதுபுனுகுடனே
சித்தரெவரும்போற்ற தேன்கனிகள்மாங்கனிகள்

வெற்றிலைபாக்கு மிகுவாய்பழங்களுடன்
தத்திதத்தியாக சதகோடியாய்க்குவித்து
பால்பாயுதங்கள்வைத்து பாரித்துநல்பதிக்குள்
மாலாயிருந்து மகிழயலங்கரித்து
தெருவில்காழாஞ்சித் தீவெட்டியும்பிடித்து
மருவினியமாதர்மார் குரவைமலமலென
டம்மானநாகசுரம் நல்லவாணம்வெடிகள்
மும்மானமுழக்கம்போலே மிகமுழங்க
கன்னிமாரெல்லாம் காவிப்பட்டாடைகொண்டு
பின்னுமடவார்க்குப் பெரியஉத்திராச்சமிட்டு
நாமப்பொட்டிட்டு நல்லயத்தாப்புமிட்டு
மாமடவாரெல்லாம் மகிழ்ந்துதெருவில்வர
எந்தன்பிரானும் மெடுத்தார்ஒருவேடம்
கந்தைக்காவிப்பூண்டு கனத்தவுற்றிராச்சமிட்டு
கையதிலேமாத்திரைக்கோல் கமுக்கூட்டிலேபிரம்பும்
மெய்யதிலேவெண்பதமும் மினுக்கமுடனணிந்து
உச்சிகொண்டைகோர்க்து உயர்ந்தச்சுரைக்கூடுமிட்டு
மெச்சித்துளசி மிகுமாலையுமணிந்து
பிச்சிமாலைபுனைந்து பெண்கள்மிகச்சூழ்ந்துவர
சச்சிசங்கமாக சனங்கள்சான்றோர்கள்வர
கைக்குள்நின்றசீசர் காயாஸ்திரமணிந்து
மெய்க்குருவைப்போற்றி மேலிலுத்திராச்சமிட்டு
கைபதிலேமாத்திரக்கோல் கனத்தச்சுரைக்கூடுமிட்டு
மெய்யதியபொக்கணமும் மேலதியநாமமிட்டு
அய்யாகுருவே யென்றவர்கள்மிகப்போற்றிவர
துய்யாதுவையல் துவைத்தபண்டாரமெல்லாம்
காவியுடனுத்திராச்சங்கனத்த செம்புகடுக்கமிட்டு
நாவில்சிவாயாவெனவே நாட்டமிகவாய்வரவே
ஆராதனையாய் யருள்கொண்டபெண்ணும்
நாராயணர்பேரில் நல்லக்கீதம்பாடிவர
தங்கரத்தினத்தொட்டிலிலே சுவாமிமிகயிருந்து
பெண்கள்மிகநன்றாய் பெருகக்குரவையிட
சங்குதொனிக்க சகலோருமேபோற்ற
சிங்கமுகலச்சுமியுந் திருமுகத்தினின்றிலங்க
சான்றோர்கள்தொட்டில் தண்டயமுஞ்சுமந்து
ஆண்டோர்பதியை யலங்கிர்தமாகிவர
கன்னிமார்நாதன் கைக்குளுழுங்காய்வரவே
மின்னும்பதித்தெருவும் மிகவேயிந்தபவுசாய்
உலாவிவரவேஉற்ற தெய்வவானோர்கள்
குலாவிமகிழ்ந்து கிருபையுள்ளநாரணரும்
பூமாரிபொன்மாரிப் பெரியச்சிலமாரி
நாமாரிவானோர் நாடிமிகத்தொளிக்க
யெல்லோரும்பார்த்து யித்திருநாள்நல்லதென

அல்லோரும் மெச்சியக மகிழ்ந்தாரம்மானே
நல்லதிருநாள் ஞாயருச்சைமுழுதும்
செல்லமறுநாள் திங்களுதித்தவுடன்
காட்சிநடத்தி கரியத்திருமாலும்
நாட்ச்சிமாரோடும் நாதன்பதிபுகுந்தார்
நாதன்பதிபுகுந்து நருள்க்குவிடைகொடுத்து
மாதரோடுநாரணரும் மகிழ்ந்திருந்தாரன்போரே
இப்போதிருநாளிகளை மிகநடத்தி
நர்ப்புடையநாதன் நாயகிமார்தன்னோடு
கூடியிருந்து குலாவியிருக்கயிலே
வேடிக்கையாக விதியானபடியால்
நல்லபுகழ்சீதாலச்சுமிக்கும் நாரணரும்
செல்ப்பட்டானதுவும் சிவந்ததங்கக்காறயதும்
இட்டுக்கலியாணம் லச்சுமியைச் செய்யவென்று
மட்டுநிகரில்லா மாயன்மனதிலுற்றார்
தங்கத்தால்க்காறை தானதியப்பட்டதுவும்
அங்கேமிகவருத்தியாயிழைக்குத்தான்கொடுத்தார்
திருநாளிகளையுடன் டம்மானமுழக்கமொடு
பெருமாளும்லச்சுமியை பேராய்மணம்புரிந்து
தெருவலங்கள்ச்சுற்றி சிறந்தபதிபுகுந்து
மருவினியமாயன்மாதரோடு வீற்றிருந்தார்
நல்லரியநாதன் நன்றாயிருக்கையிலே
வல்லதிருதெய்வ மடவார்களேதுசொல்வார்
அய்யாவேயெங்களான திருமாலே
வையமிழந்த மாயத்திருமாலே
யெங்களைநீரிப்போயிவுலகந்தானறிய
மங்களமும்செய்தீரே மக்களைதாருமொன்றார்
அப்போதுமாயனவர்களோடேகேள்பார்
இப்போதுமாதர்களென என்னோடுகேட்டதர்க்கு
நல்லத்திவதம் நமக்குவரும்நாளில்
வல்லவகையாலும மதுமக்களையுந்தாரேமென்றார்
அதுவரையும்நீங்கள தட்டாமலேயிருங்கோ
இதுவுரைக்கநல்லோ ரேந்திழைமாதரெல்லாம்
சந்தோஷமாகசுவாமி தனக்காகவர்கள்
வந்தேனிதமும் வாய்த்ததொண்டுசெய்துமிக
வாய்த்தபுகழ்லச்சுமியு மாதுமடவாரேளும்
ஏற்றதொண்டுசெய்து யெப்போதும்வீற்றிருந்தார்
நாரணர்க்குந்தேவியரை நாடிமிகமகிழ்ந்து
காரணருமெச்சி களிகூர்ந்திருந்தார்
நன்றாகவிப்படியே நாச்சிமாரோடிருக்க
எண்டிசையிலுள்ள ஏற்றபுகள்சான்றோர்கள்
வந்தவர்பதத்தை வாழ்த்திமிகப்போற்றி
சந்துட்டியாகத்தாழ்ந்து நமஸ்காரமிட்டு
மனதில்நினைத்ததெல்லாம் மாயவரோடேயுரைத்து
தனதுள்விடைவேண்டி சங்கடங்கட்டீர்த்திருப்பார்

தெய்வமவராய் திருவுளமுமவராய்
வையமகிழமனுப்போலுமிருப்பார்
வத்துவகையு மாடாடுசொத்துகளும்
ஒத்துமிகவாழ்ந்துடையபரனிருந்தார்
இப்படியேவொத்தி ருந்தவர்வாழும்நாளையிலே
நர்புடையதெய்வ நாயகிமார்கேட்டபடி
மதலைகொடுக்க மனதிலுற்றெம்பெருமாள்
குதலையினத்தைக் கூறிமிகவுரைத்தார்
ஏழினமுமாதர்க்கினமிட்டே தான்கொடுத்து
நாளுவந்தபோதே நாரணருங்கொண்டாடி
வாய்த்ததிருநாள் மகிழ்ச்சையுடன்நடக்க
ஏற்றகுலச்சான்றோ ரெல்லோரும்வந்துநிற்க
பிள்ளைதனையெடுத்துப் பெண்ணார்களேழுபேர்க்கும்
வள்ளலந்தமாலு மனதுற்றியிருக்கையிலே
கண்ணனதெய்வ காரிகையாரெல்லோரும்
விண்ணணமாக வீரநாராயணரை

## விருத்தம்

கண்ணரேகரியமாலே காரணக்குருவேஅய்யா
இண்ணெங்கள்மதலையேழு மெடுத்துநீரினமாக
விண்ணெங்கும்மகிழத்தந்து வெற்றியாய்யாண்டுகொள்ளும்
மண்ணெங்குமளந்தமாலே மகாபரகுருவேயென்றார்

## நடை

நாதக்குருவே நாடுமெங்கள்மன்னவரே
மாதவரேயின்று வந்தநாள்நன்றெனவே
இப்போமதலை யெடுத்துமிகத்தாரும்
செப்போடுவொத்த திருமாலேயென்றுரைத்தார்
நல்லதுதான்பெண்ணே நாட்டுநருளறிய
முல்லைவனத்தில் முன்னேநீர்பெற்றுவைத்த
மதலையேழும்வளத்து யித்தனைநாளும்
குதலைப்பிராயமதாய்க் கொண்டுதிரிந்தேவளர்த்தேன்
பாலமுதூட்டாமல் பருவனத்தில்நீங்கவிட்டு
கோலவனத்தூடே குதித்தோடிமீண்டுவந்தீர்
என்னென்னபாடு யானிந்தபிள்ளையினால்
பொன்னெயக்கன்னியரே புகலவுந்தான்கூடிடுமோ
தெய்வேந்திரன்பசுவைத் திரையாகக்கொண்டுவந்து
மெய்வனத்தில்ப்பாலுகொண்டு மிகக்கறந்துமக்களுக்கு
ஊட்டிவளர்த்தேன் னும்பர்கோனுமறிந்து
மாட்டிடவேயென்னை மாபடைகளோடுவந்தான்
தப்பியவன்றனக்குத்தான் வளர்த்தேன்பிள்ளைகளை
ஒப்பரியபாலமுர்தமொரு நாளொளியாமல்
மைப்பெரியதாலம் வகுத்துமிகவளர்த்தேன்
மக்களுக்காயபாடுபட்டு வைகைமண்ணும்நான்சுமந்தேன்

சொக்கரெனுமுருசமைந்தேன் செந்திருமக்கள்வாளவென்று
பின்னுமிப்பிள்ளைகள்தான் பெரும்புவியையாளவைக்க
துன்னுகெட்டகலியில்த் தோன்றிக்குதித்துவந்தேன்
வந்தான்சாணார்குலத்தில் மாயெனென்றுமானீசன்
பின்தாக்கிகையைப்பிடித்து மிகயிறுக்கி
சாட்டைகொண்டேயடித்து தடியிரும்பிலிட்டுவைத்து
கோட்டிமிகசெய்து கூறிமிகவடித்து
அரங்குமணிமேடையானதிலே யென்னைவைத்து
பரங்குவியநித்தம் பாதம்பணிவேனென்றார்
சாணாரிடத்தில்தான் போகாதபடிக்கு
கோணமைலெங்களுடன் கூடியிருயென்றடித்தான்
பெற்றபிள்ளையெல்லாம் பெருகலைந்துபோவாரென
இற்றவிலங்கில்யிருந்தேன் மிகக்கவுள்ந்து
சாலமுடனீசன்றான் படுத்தும்பாட்டையெல்லாம்
பாலருக்காய்வேண்டி பரராறியபட்டேனான்
பெற்றதுதான்போதுமென்று பெண்ணேநீரேள்பேரும்
மெத்ததெளிந்து யிருந்துவந்தீரிப்போது
என்றுரைக்கமாலும் ரேந்திழைமாரேள்பேரும்
மற்றுள்ளோர்களறிய மாதருரைக்கலுற்றார்
பிள்ளைகள்தான்நன்றாய் .பெருகிமிகவாழ
வள்ளலெங்கள்மாலே மாறாய்த்தவசிருந்த
காரணத்தைச்சொன்னால்க் கணக்கிலடங்கிடுமோ
பூரணத்தின்ஞானப் பெரியத்திருமாலே
ஆருமொருதரா ராட்டங்காணாதை
மேருநிறைவனத்தில் மெல்லியரேள்பேரும்
ஒருவர்முகமொருவர்க் கோருருவங்காணமல்
கரியவரவர்கள் காவுவடவுகளில்
உடுகலைகள்கொய்துற்ற முடிதான்விரித்து
கடுகெனவேவூசிதனில் கைவிரலைத்தானூன்றி
ஆசைவுறவறுத்துத் தக்கபக்கதாசையத்து
மாய்கைக்கருவறுத்து மயக்கவெறிதானறுத்து
பாசமறுத்து பக்கதுணைமறந்து
வாசமணமும் வாக்குபேச்சும்மறந்து
காடுநினைவறுத்துக் கனவுபயங்கடானறுத்து
வீடுநினைவறுத்து வெளிவீடுதான்திறந்து
மலசலங்களாற்று வாயுவுடபோக்குமத்து
குலதலமுமற்று கூறுகின்றபேச்சுமற்று
பேச்சற்றுமூச்சற்று பெருவனத்திலும்மருளால்
ஏச்சதூச்சமற்று யீராறுகாலம்வரை
நிர்க்கவுடம்பை நெடுபுற்றுத்தாமூடி
பக்கமால்முளைத்துப் புருவினங்கள்தான்கூடி
முட்டையிட்டுகுஞ்சு மூன்றுவதுதான்பொரித்து
வட்டணியாய்க்காடு வழைந்தெங்களைச்சூழ்ந்து
கடுவாய்புலிகரடிக் கனத்திருகுட்டிகளீன்று

கடுகிமிகப்புற்றுக் கரையில்மிகவாள்ந்திருக்கும்
ஆனையதுகுட்டியது பயின்றெங்களுட
தான்னின்றபுற்றருகில் தன்னால்மிகவாளும்
பிள்ளையால்நாங்கள்ப் பெருகத்தவசிருந்து
உள்ளமெய்களெல்லா முரைக்கவெளிதாமோ
நாணமற்றூணுமற்று நாலுமூணண்டுவரை
தாண்டருடதஞ்சமெனத் தவசுமிகப்புரிந்து
பிள்ளைகளாசையினால்ப் பிரியாத்தவசிருந்தோம
வள்ளலெங்கள்மக்கள் தனைமாயவரேதாரும்
தந்துபுவியாளத் தலைவரேயெம்முடைய
விந்துவழிமக்களையும் விரைவாய்மிகத்தாரும்
தாருமென்றுமாதரெல்லாந் தாழ்மையுடனீதுரைகக
ஆருங்கரொவ்வா வச்சுதருமேதுரைப்பார்
மாதேநானிந்த வையகத்தில்வந்தவுடன்
பாரேழில்நம்முடைய பஞ்சவர்கள்தன்வழியில்
தெரிந்துந்தன்மக்களிலே சீசனெனத்தெரிந்து
கூர்ந்தென்கைக்குள் கொள்ளுகிறேன்வேலையது
இன்னுபாரென்று மேழுபேரையுமெடுத்து
நன்னகரிபார்க்க நாதனிடுப்பில்வைத்து
வட்டமிட்டாடி மாதொருவருக்கொருவர்
கிட்டவிட்டுக்காட்டி கிளிமொழிமார்கைக்கொடுத்தார்
பாலரையும்பார்த்து பாவையரைப்பார்த்தவுடன்
சீலமுள்ளலச்சணமும் சிற்றினையும்மொப்பனையும்
ஒப்பொமென்றுஎல்லோரும் விண்ணோருந்தான்மகிழ்ந்தார்
செப்பமுள்ளமாதர் சிரித்துமனமகிழ்ந்து
அண்ணுபெற்றபிள்ளைகள் அயந்திரண்டானதிலே
மண்ணுதனையாளு மாபாவிசோழனவன்
கொன்னுனிருபேரைக் கூண்டத்தவமீதில்வந்து
சொன்னீரேசுவாமி தோன்றியிப்போவந்தீரே
தேன்மொழியமாதே சென்றபிள்ளரண்டுடைய
மானதியமக்களென மாயவரும்தானுரைக்க
அப்போதுபெண்க ளச்சுதரைத்தான்பார்த்து
இப்போவரவில்லையே யெப்போவருவார்கள்
மைப்பெரியகண்ணே மாதரென்றேவியரே
செப்பினீரேநீங்கள் சென்றமக்களெப்போவென்று
பொல்லாதநாட்டுப் போன்றுகலியைமுடித்து
நல்லதர்மநாடு நாந்தோணவைக்குகையில்
நடுஞாயங்கேட்டு நடுத்தீர்ப்புசெய்யுகையில்
கெடுவேலைசெய்த கேள்வியில்லாச்சோழனையும்
ஆக்கினைகள் செய்தாளநரகதிலே
தாக்கியுன்மக்களைநான் சடத்தோடெழுப்பிமிக
தருவேன்குருசாமி தன்னாணைமாதர்களே
மருவினியமாதே வார்த்தையிதுதப்பாது

என்றுதிநாதனீதுரைக்கமாதரெல்லாம்
நன்றுதிமகிழ்ந்து நாடிமக்களையெடுத்து
மடிமீதில்வைத்து மலர்ந்தமுகத்தோடணைத்து
கண்ணேமணியோ காட்டுராசன்மகனே
விண்ணோர்கள்மெய்க்கும் வேதப்பரஞ்சுடரோ
தோணர்க்கரிய துய்யதிருமாலீன்ற
சாணரோநாயகமோ சகலகலைகற்றவரோ
தெய்வயுகக்கன்றே திசைவென்றசான்றேரோ
வையம்புகழவந்த மக்களென்றுசொல்லி
சந்தோசமாகத் தார்குளலாளேழ்பேரும்
புத்திமகிழ்ந்து பூரித்தகமகிழ்ந்தார்
நாங்கள்செய்ததவத்தில் நாலிலரைபங்குவரம்
வாங்கினேமைய்யா மாயவரேயின்னமுண்டு
நாட்டாள்வைக்க நல்லவரந்தந்ததுண்டு
தாடாண்மையுள்ள சங்கரரும்வந்திருந்து
என்றுரைக்கமாத ரெம்பெருமாள்நல்லதென்று
இன்றுரைத்ததுவும் லெக்கதியிலாகுமென
சீதைக்குநல்ல சிறந்தமகனையெடுத்து
மாதுக்குத்தான்கொடுத்தார் வையகத்தோருகாண
மணமுகித்துமாதருக்கு முன்வகுத்தமைந்தரையும்
குணமுடனேகாட்டிக் கொடுத்தாரேயெம்ருமாள்
நல்லதிருநாள் நாள்க்கழித்துமற்றுளள்
வல்லகதிரோனும் வந்ததுகாணம்மானை
கதிரோனுந்தோன்றிக் கங்குல்வெளியாகுகையில்
திருநாளிகனை செய்துநிறைவேறி
மக்களெல்லாருஞ்சூழ வந்துமிகப்பணிந்து
மிக்கவர்வீட்டில் விடைவேண்டித்தான்போனர்
கைக்குள்ளேநிர்க்கும் கரியசீசன்மாரும்
மைக்குழல்மாரோடு மகிழ்திருந்தாரம்மானை
பின்னுஞ்சிலநாள் பெரியதிருநாள்நடத்தி
மன்னுகந்தநாரணரும் மாதரோடுவீற்றிருந்தார்
பெண்களவரவர்க்கு பெ்ரியவரங்குவைத்து
தங்கள்தங்களுக்குச் சாமானம்மிகக்கொடுத்து
பால்பவுசுகொடுத்து பாக்கியங்கள்வெகுவாய்
மாலவர்கள்மனையில் வந்துயமுதருந்தி
இன்றொருவீட்டிலேற்றமுதருந்தி
அன்றிராவங்கே அனந்தமால்பள்ளிகொண்டு
பின்னுமொருமாதருட பொன்னரங்கில்வந்திருந்து
அன்றுயமுதருந்தி யன்றிராவ்வம்மனையில்
பள்ளிகொண்டபடியே பாவையர்கள்வீடோறும்
துள்ளியேமாயன் திருவிளையாட்டுமாடி
மங்கையர்கள்காணமல் மறுமனைகளும்புகுந்து
கொங்கைமடவாரோடு கூடிவிளையாடிடுவார்

மாயன்விளையாட்டை வகைப்படியேசொல்லவென்ருல்
வாய்ந்தயுலகில் வளர்ந்தபனேவோலேயில்லே
கூடிமடவாரோடு குவிந்துவிளையாடுகையில்
நாடிமடவார் நாயகிமார்தங்களுக்கு
ஒருவர்க்கொருவரு பாயமாய்ப்பார்த்திருந்து
திருமருகரோடே தெய்வமடவார்வெகுவாய்
சண்டைபிடிப்பார் தந்ததுபோராதெனவே
கண்டமடவாரோடு கனிவாகபோறீரென
அவள்வீட்டில்ப்போறீர் யவளோடதிகமுமாய்
உபகாரம்செய்கிறீருள் ளாகத்தானிருந்து
என்னேடுபேச்சு யிப்படியேசெய்வீரென
மின்னேவியங்கள் வெகுவாகக்கத்திடுவார்
சுவாமியோடுவெகுவாய் துரத்தனங்கள்தான்பேசி
நாமகலப்போவோமென நடந்துமக்களுட
வீட்டிலவர்போவார் வீரமால்தானறிந்து
கூட்டிவரப்போவார் குளுந்தமொழியுரைத்து
அள்ளித்தருவேன னந்தவிராகன்பணமும்
வெள்ளியும்பொன்னு மேன்மையுள்ளசீலேகளும்
உந்தனுக்குப்போர வுடமைமிகத்தருவேன்
அந்தப்பெண்ணர்களுக்குக் கதுக்கதுபோலேகொடுப்பேன்
எழுந்திருநீயென்றெட்டிமிக கைப்பிடித்து
குளிர்ந்தயவர்வார்த்தை கோதைமின்னர்தான்கேட்டு
சிரித்துமகிழ்ந்து தேர்த்தலிதுநன்றெனவே
உருத்துமிகச்செய்வதெல்லா மோவியமும்நானறியேன்
ஏன்காணுமும்முடைய யிந்திரசாலமெல்லாம்
கோவேங்கிரிவேந்தேக் கொஞ்சமெனக்குதெரியும்
மருட்டாதேயுங்காண் மாய்மாலமுந்தெரியும்
உருட்டாதேயும்போமுமது தொள்ளிலும்தெரியும்
எனக்கோர்வார்த்தை யிதமிதமாய்ப்பேசிடுவீர்
தனக்கேக்கநெஞ்சகந் தானறியாதேயிருக்கும்
கனியமுதுடைய கருத்தெல்லாம்நானறிவேன்
நின்றுசடையாமல் நீர்போகுமென்றுரைப்பாள்
அப்போதுமாயனதுக் கினியவார்த்தைசொல்லி
இப்போதுநீயு மெழுந்திருந்துவாவெனவே
மாயனழைக்க மாதுமெழுந்திருந்து
நாயன்பிறகே நடந்துமிகவருவாள்
வந்துவளர்பதியில் வாள்ந்துண்டினிதிருந்தார்
அந்தப்பதியில் அய்யாமிசமகிழ்ந்து
இப்படியேபெண்ணேடிசுனே மிகநடத்தி
ஒப்பரவாய்மாயனு கந்துண்டிருக்கையிலே
செந்தூரலேயிலத் தேவனுதித்தன்றுவந்த
முந்தமூலேப்பதியிலு வரிக்கரையிடத்தில்
சென்றங்கிருந்து சிவலிங்கத்தானமைத்து
மன்றுக்குள்கொஞ்சம் மறைத்துவைத்துமாயவரும்

நான்றவசிருந்துநாள்கொஞ்சமேகளித்து
வான்புதுமையற்புதங்கள் மாநிலத்தோர்தாமறிய
செய்துதெய்வமாதர்களை சிறந்தமணமுகித்து
தெய்திதனிலிங்கே திருநாளைக்கொண்டாடி
வருவேனெனச்சிலைக்கு வாக்குமிகக்கொடுத்து
திருவேற்றிவைத்த தெய்தியின்றுவந்துதென
சும்மாயிவரை திருப்பதியில்வாநீயென்று
நம்மாலுரைத்தால் ஞாயமில்லையென்றுசொல்லி
கொஞ்சமொருச்சூத்திரங்கள் கூர்மையாய்செய்யவென்று
அஞ்சலெனச்சாமளாத் தேவிதனையளைத்து
கன்னியிலேரண்டுபேரை கலகமிட்டு
யென்னுடையமக்களிலு மியாமமுறைப்படியே
கொஞ்சமதுவாங்கி கொடுத்துயிரைதான்வாங்கி
மஞ்சறையில்வைத்து மகிழ்ந்துமிகக்காருமென்று
விடைகொடுக்கநாதன் வேண்டினாள்தேவியவள்
திடமுடனேசொன்னச் சொல்வாக்குரைப்படியே
கன்னியரில்ரண்டு கடத்தினாள்மாதேவி
மின்னினொளிமதலை வீரத்தனமாக
நாலுமூணுடனே நகட்டினாள்மாதேவி
உடனேசனங்களுடை யவரேதஞ்சமென
தடமேலேவீள்ந்து சுவாமியபையமென்றார்
அவதாரத்தின்படியே யன்றமைத்தபெண்கொடியை
உபகாரமாமணங்களுடையவரேநீரருளி
வையகத்தோரெல்லாம் மனமகிழ்ந்திருக்கையிலே
செய்யயிந்தமாயன் செய்வாரோமாயவரே
ஆரார்க்கும்மேர்க்குமரிவையர்கள்மக்களுந்தான்
பேராவழியானப்பொல்லாப்புசெய்தாரோ
ஆதியேயவர்க ளனியாயஞ்செய்ததென்ன
சோதியேயென்று தொழுதார்மடவார்கள்
அப்போதொருமகன்றானஞ் சாறுநாளதுமுன்
சொர்ப்பனங்கள்கண்டதுவை சொல்லாமல்தட்டழிந்து
அன்றைப்பொழுதிலவன் வந்தடிதொழுது
நன்றினியயெங்கள் நாயகமேநாரணரே
பத்துநாளுண்டுநான் படுத்திருக்குமவ்வழவில்
பெத்துச்சளிந்ததவர்போல் பெரியபூவண்டர்வடிவாய்
வந்துயென்னோடு வளப்பமெனச்சொல்லலுற்றார்
கொஞ்சநாள்தோப்புக் குளிர்ந்தபதியானதிலே
அஞ்சிரண்டுவயதில் வாழ்ந்திருந்துபின்னும்
மூலகுண்டப்பதியில் மிகயிகனைசெய்யெனவே
ஏலமேசொன்னதெல்லா மெண்ணமதுயில்லாமல்
பெண்களைக்கண்டவுடன் பூத்தானமாய்மகிழ்ந்து
கண்ணட்டமறந்து கலியைமுடிப்பதற்கு
நினைவுமயந்து நிலைபேர்ந்திருக்குகிறான்
நாட்டுக்குற்றங்கேள்க்க நானயச்சிவைத்ததற்கு

கோட்டுமடவாவர குறிப்பாகவெண்ணிமிக
யெண்ணியிருக்கிறா னிப்போதுஅங்குசென்று
நண்ணிமூலப்பதியில் நாடிவரச்சொல்லிவிடு
வரவில்லையானால் மாதருடன்மக்களையும்
சரமதையும்வாங்கிடுவேன் சாமியுடன்போய்புரைநீ
என்றுசொல்லிநாளுமெட்டு ரண்டாச்சுதய்யா
அன்றுவுரைக்க ஐயாமிகக்கோபமுற்று
பாவிப்பயலே பகராமலித்தனைநாள்
மேவியிருந்தாயே மெல்லியிளந்தேனே
தீட்டிவைத்தசொர்ப்பனத்தை சொல்லாதிருந்ததினால்
கூட்டில்மிகவாள்ந்த கிளியைமிகத்தோற்றேனே
முந்திவந்துநீயு மொழிந்ததேவுண்டானால்
யெந்தனின்மயிலை யிழந்துமிகவாடேனே
பூவண்டரானால் பெரியப்பிதாவல்லவோ
மாவண்டப்பயலே வந்துசொல்லாதேயிருந்தாய்
இப்போபதிக்கெழுந் தருளவேணுமென்று
மைப்போடுவொத்த மாதொடுமக்களுமே
கூடிநடந்தார் கூண்டதியப்பொன்பதியில்
தேடிமூலப்பதியின் சிறப்பெல்லாம்தான்பார்த்து
ஏலமேஇப்பதியி லெட்டுநாள்க்குள்ளேவந்தால்
மாலவரின்மக்களுக்கு மாய்வுசத்தும்வாராதே
கெடுத்தானேசொர்ப்பனந்தான் கெணித்தவுடன்சொல்லாமல்
கொடுத்தோமேநம்முடைய குலமக்கள்மாதரையும்
இப்பதியில்வந்தா லெள்ளளவுதோசமில்லை
எப்பதியுமிப்பதிக் கொவ்வாதுயென்றுசொல்லி
எல்லாருடனே யெம்பெருமாளும்மகிழ்ந்து
அல்லல்வினைதீர்ந்ததில் வாழ்ந்திருந்தனராம்
தோப்புப்பதிபோல்த் தொட்டிக்கெட்டம்பலமும்
கோப்புப்புரையுங் குவிந்தமணியரங்கும்
பள்ளியறையும் பார்சவுக்கைமண்டபமும்
துள்ளியிகனை சுகசோபனம்வரவே
பூம்பந்தலும்பெரிய புகுவீரமேடைகளும்
ஊண்புரையும்நல்ல உகத்தீர்ப்புமேடைகளும்
சிணமாகச்செய்து சிறந்துமிகயிருந்து
குணமாகமாயன் கோதையோடுவாழ்ந்திருந்தார்
வாளுந்திருநாள் வாரஞ்செவ்வாச்சைமுதல்
ஆளுந்திருமா லவதாரகாட்சியுடன்
கும்மியிகனை குவலையத்தீர்ப்புரைத்து
தம்மியல்புகொண்டு சுவாமிவெண்பட்டுடுத்தி
தங்கக்குல்லாவணிந்து தாமலியநீராளம்
எங்கும்மகிழ யெம்பெருமாள்தானணிந்து
ஆயிளைமாரவர்க்கழகு வெண்பட்டுடுத்தி

மங்களமாயிகளை மகாயிகளை தான்கூறி
சங்கமகிழசாமி திருநாள்நடத்தி
பாக்கியங்களோடே பவுசாயிருக்கையிலே
தாக்கிமிகமாயன் சந்தோசமாய்மகிழ்ந்து
பொல்லாக்கலிநாடு போன்றவருங்காலமதில்
வல்லாமையான வாய்த்தபகவதிக்கு
மாதுமைக்குமண்டைக் காட்டாள்பார்வதிக்கும்
தீதகலும்வள்ளித் தெய்வானைநாயகிக்கும்
கலிமுடியுமுன்னே கலியுகத்தோர்கண்காண
வலியானமாதர்களை மணமுகிக்கவேணுமென்று
முன்னுரைத்தாகமத்தின் முறைநூல்ப்படியாகவே
நன்னூல்வழியாகவே நாமுகிக்கவேணுமென்று
உன்னித்திருமா லுள்ளில்மிகவடக்கி
வள்ளலந்தமாகுமரி வாளும்பகவதியை
மாயமாய்க்கொண்டு வரவேணுமென்றுசொல்லி
உபாயமனதிலுடைய பரன்நினைத்தார்
கிழவனைச்சமைந்து கிறுதஞ்செய்யவேணுமென்று
தளதளெனத்தேகந்தன்னுடம்பு மினுமினுக்காய்
மெக்குவாய்ப்பொக்கனுமாய் முடியுமிகவெண்ணரையாய்
கக்கலிருமலுமாய் கையதிலேகோலூன்றி
தள்ளாடிமெள்ளச் சன்னைமிகப்போட்டு
பிள்ளாப்பகவதியே பேத்தியென்பொன்மகளே
கண்ணுமயிலே கனகவொளிமாமணியே
பெண்ணும்பிள்ளாய்பேத்தி பேரனுக்குகஞ்சிவிடு
என்றுசொல்லிமெள்ள வேந்திளையாள்தானிருக்கும்
குன்றுமணிகோவிலுக்குள் குன்னிமிகச்சென்றனரே
பேத்தியென்றசொல்லு பிரியமுடனையகியும்
காதில்மிகக்கேட்டுக் கன்னிமிகப்பார்த்து
ஆர்காணும் நானிருந்தவரங்குக்குள்வாரதுதான்
பாரளியும்நாளோ பையரங்குக்குள்ளேவந்தாய்
எங்கிருந்துநீர்தானெவ்வூருன்பேரேது
கிங்கிலுக்கவந்தவனே கிழவன்றனேயுரைநீ
அம்மாயென்பேத்தி யாயிழையேநாயகமே
சும்மாமயங்காதே சூச்சமொன்றில்லையம்மா
பரமாத்தமம்மா பழனிமலையெந்தனுக்கு
விதமாற்றமில்லை வினைதவித்தைதானுமில்லை
லாடகுருவம்மா ராமன்யெந்தன்பேர்பேத்தி
திலாடமதிலிருந்துத் தீர்த்தமிடங்காடவந்தேன்
வந்தேனன்கண்மயக்காய் வழிதப்பியிங்கேதான்
உந்தன்றிருப்பதியை யொருவகரமென்றிருந்தேன்
மகளேயென்பேத்தி மாஞானமொன்றுமில்லை
செகமெல்லாந்தீர்த்தஞ் சென்றேனனிவ்வயதுள்
உன்னுடையதீர்த்த முகந்தாடவந்ததிப்போ
பின்னுமொருபேச்சுப் பேசுகிறீரிவ்வுலகில்

இன்னுந்தன்பதியிலிருந் திந்தராவிடிந்தால்
நின்னுநின்னுபோயாலும் நிச்சயம்பார்த்தேமகிழ்ந்து
என்னுடையவூருக் கேகவேணும்பேத்தி
பொன்னுமகளேபேத்தி யெனப்போத்திசொன்னர்

விருத்தம்

போத்தியென்றுரைத்ததபோது பொன்பகவதித்தாய்மெச்சி
போத்தியேயுமக்குக்கொஞ்சம் பொரிமாவுப்பிசைந்துதாறேன்
ஏத்திநீரிளைப்புமாறி யின்றுராக்கழித்துயேகும்
சாத்தியமொழியைக்கேட்டுத் தனதுளம்மகிழ்ந்தார்போற்றி

நடை

அம்மாநீசொன்ன வருமையெனக்கதிகம்
மும்மால்க்கும்யேத்து முகுந்தன்பதம்பெறுவாய்
தாகமல்லால்ப்பசிகள் தானெனக்கில்லையம்மா
தேகமதுவாடாமல் செலந்தந்தால்ப்போதுமென்ருர்
பால்மோருபோலே பதங்கொடுத்துமாகுமரி
காலாறிப்போமெனவே கன்னிமிகவுரைத்தாள்
தாகமதுதீர்ந்து தானிருக்கும்பொழுது
நாகரியகுமரி நாயகியுமேதுரைப்பாள்
போத்தியுமக்கு போரவயதானதினல்
நாற்றிசைகளெங்கும் நடமாட்டமாயிருக்கும்
ஏதேதுதீர்த்தமிகனை பலமாயுனது
மாதோடேசொல்லும் மாபெரியபோத்தியென்ருள்
உடனேகிழவனுளமகிழ்ந்து நன்றெனவே
மடமாதேகாசி மகாதீர்த்தம்நல்லதுதான்
கன்னிகுமரிகாசி தீர்த்தம்நிகராம்
பின்னுமற்றதெல்லாம் பிறமாணமப்படித்தான்
இப்போதொருசெய்தி இராச்சியத்தில்சொல்லுகிருர்
எப்படியோநிசமா யிருந்தாலதுமேன்மையதாம்
என்றுரைக்கநல்ல யிளங்குமரியேதுசொல்வாள்
விண்டுரைத்தஞாயமதை விளம்புவீர்போத்தியென்ருள்
அப்போது கிழவனச்சரியமாய்மகிழ்ந்து
இப்போது வேணுமிவளைமிகயிளக்க
என்றுமனதுள்ளிருத்தி மிகத்தெளிந்து
மன்றுதலின்கேட்டவளமை கேளென்றுசொல்லி
ஆயிரத்தெட்டாண்டாமானதொரு மாசியிலாம்
வாயிதமாய்செந்தூர் வாரிதனிலேபிறந்து
வைகுண்டமென்று வையகத்தில்வந்திருந்து
கைகண்டவற்புதங்கள் கனகோடிசெய்கிருராம்
தண்ணீரதுவாற்ருன் கொடுக்கும்முத்திரியாம்
மண்ணிலுள்ளாரும் வந்துவணங்குகிருராம்
புண்ணியதானங்கள் போதமிகச்செய்கிருராம்
குட்டங்குறைநோவு குருடுமையானதுவும்
கட்டங்கொடிய கர்மமுதற்றீர்க்கிருராம்

சந்ததிகளில்லாத தரணிமனுப்பெண்களுக்கு
மைந்தர்கொடுக்கிருராம் மாதர்மஞ்செய்கிருராம்
மனுப்பேரில்பேயை மாகிலுக்கமாயாட்டி
தனுப்பிலங்கள்வாங்கிச் சருகிலெரிக்கிருராம்
தெய்வமடவாரெனவே தேவியேழுபெண்களையும்
வையமறியமாலையிட்டுக் கொண்டாராம்
நித்தந்திருநாள்போல் நீணிலத்துள்ளோர்கள்
மெத்தகுமுக்காய் மிகவந்துகூடுருராம்
டம்மானவெடிகள் டகுடகெனநாகசுரம்
இம்மாத்திரமெனவே யெண்ணவுந்தான்கூடாதாம்
காச்சிரெம்பவுண்டாம் கலிமுடிக்கவந்தோமென்றும்
பேச்சுமிகற்சொல்லி பிரான்யாமங்கூறுருராம்
இப்படியே பேச்சிதுவுறுதியானுக்கால்
எப்படியுங்கர்த்தனிவரெனவே சொல்லிடலாம்
அல்லார்கலியுகங்கள் யழியுகின்றநாளையிலே
சொல்லால்பெரியத்திருமால் சொருபமதாய்
தெச்சணத்தில்வந்து திருவிளையாட்டாகுமென
அச்சமறபேச்சொன்ருதியிலே கேட்டதுண்டு
அந்தமுறைதானேவவனிதனில்கேள்க்கிறது
எந்தவிதமோ தெரியுதில்லையென்பேத்தி
போய்ப்பார்த்தால்தெரியும் பொன்பேத்தியென்றுரைத்தார்
வாய்பார்த்தபோதே மாதுமிகமகிழ்ந்து
கண்ணரியபோத்தி காரணத்துநல்போத்தி
திண்ணமுள்ளபோத்தி செப்புவதைநீர்கேளும்
தெய்வமடவாரை திருமணம்செய்தாரென்று
வையமதுசொன்ன வளமுரைத்தீரென்பேத்தி
மாதரையும்பார்க்க மனவிருப்பாயிருக்கு
ஆதரவாய்ப்போத்தி யதுவரையுமென்னையும்நீர்
கூட்டிக்கொண்டுபோவீர் கிழவனுனப்போத்தி
பூட்டியுந்தன்பிறகே பிள்ளைபோலேவருவேன்
செய்தியென்னவென்று தேவியுருக்கமுடன்
செய்திமிகவடைந்த தாதனேடேயுரைத்தாள்
அப்பொழுதில்லாடகுருவவரேது சொல்லலுற்ருர்
இப்பொழுதுசொன்னதர்க்கு யான்கூட்டிப்போயிடுவேன்
ஓடிநடக்க ஒட்டாதுதள்ளாட்டம்
கூடிநடக்கக் குறுக்குப்பிலக்காது
பேசிநடக்கப்பிசகு மம்மாயெனக்கு
வீசிநடக்க விளிக்குகொஞ்சந்தான்மறைவு
கக்கலிருமல்கால் பிலக்கவொட்டாது
சிக்கெனவேநடந்தால் செருக்கிருமலீளைவரும்
இத்தனைதுன்ப மிருக்குங்கிழவனுடன்
சிற்றிடையீர்நல்ல சிறுபிராயம்நடந்தால்
ஒக்குமோபேத்தி வுன்னடையுமென்னடையும்
பக்குவமோநாந்தான் பாதைநடப்பதற்கு

நானடப்பேன்காதவழி நாலுநாள்தங்கலென
நீயென்னோடேநடந்தால் நிகராமோபேத்தியென்றார்
அப்போதுநல்ல வாயுளையுமேதுரைப்பாள்
நர்ப்போடுவொத்த நம்முடையப்பேராநீர்
வேருள்கள்கூட வெளியேறப்போகாது
வீருகப்போத்தி மெல்லநடையாகிடினும்
உம்மோடேநடக்க உள்ளாசையாயிருக்கு
எம்மாத்திரநாள் யெவ்வளவுசென்றாலும்
பையவிருந்திருந்து பாதைமிகநடந்து
நெய்யதியகன்னி நேரிழைமாரேள்வரையும்
பார்த்துவரவேணும் பண்டையுள்ளபோத்தியென்றாள்
சாத்துமொழிகேட்டுத் தாதன்மிகமகிழ்ந்து
அப்படியேயானால் யாயிழையேயுன்னருகில்
பொற்பணிவேலைபுரியும் பெண்ணுரறியாமல்
இங்குள்ள பேர்களெள்ளளவுமறியாமல்
கங்கைக்கரைவழியே காணுதுபோயிடுவோம்
போகவென்றாலும் பொழுதுஉதிக்குமுன்
ஏகவேணும்நாமென் றியல்பாயுரைத்தனராம்
அப்போதுகன்னி யாயிழையும்நல்லதென்று
இப்போதெழுந்திருவுமிது கடந்துபோவோமென
சொல்லக்கிழவன் சிரித்துமனமகிழ்ந்து
நல்லகாரியமெனவே நாம்போவோமென்றுன்னி
அரிகரிகோவிந்தா வலதுயின்றபோத்தியென்று
கரிகரிகோவிந்தா காரியங்கள்கைகொண்டோமென்று
குன்னிமிகவெளுந்து கோலுமிகப்பிடித்து
உன்னியிருப்புவிட்டு உடனேவெளியில்வந்து
சன்னைமிகயிருமி தள்ளாடிதள்ளாடி
பின்னேவிழுவார்போல் போத்திமுன்னிற்கையிலே
மாதுகதவெல்லாம் வாங்கிமிகவடைத்து
கேதுவிழைத்துவந்த கிழவன்பின்னாலேகி
வந்தவளையழைத்து வாவாபிறகெனவே
சந்தமுடன்லாடகுரு சாடைசெய்துமுன்னடந்தார்
முன்னடக்கப்போத்தி மொய்குழலால்பின்னடக்க
அன்னநடைகள் விட்டலைவாய்கரைவழியே
முட்டாங்குவிட்டு முகந்தெரியாவண்ணமவள்
கட்டிக்கவுழ்ந்து கன்னிபகவதியும்
கிழவன்பிறகே கிழிமொழியாள்தானடக்க
மலர்மாரித்தூவ வாய்வுமறைவீச
பூமிகுலுங்காமல் பொருப்புமசையாமல்
காமிகுமரி காலசையாமல்நடந்தாள்
நடக்கும்வழியில் நாயகியோடேகேள்பார்
வடக்குநாடுநமக்கு வசந்தான்வழிநடப்பு
தெச்சணபூமி திசைமயக்கமாயிருக்கும்
பச்சைவளையணிந்த பாவையரேபார்த்துநட

திக்குத்திசைகள் தெரியுதில்லையென்பேத்தி
முக்கொருமூலைதன்னை முன்னடிப்போவோமென
வாரிக்கரைவழியே வாய்த்தநேர்மேர்க்காக
காரிருளாகுமுன்னே கால்விரைவாய்போவோமென
சொல்லச்சிறுகன்னி தியங்கிமெள்ளவாயுரைப்பாள்
அல்லல்வினையோ வாண்டவன்தன்செயலோ
வெளிசாணதேயிருந்த மெல்லிவெளியில்வந்தால்
வழிதெரியுமோதான் மாபெரியப்போத்தியென்றாள்
பதருதேபெண்கொடியே பகவான்றுணையுண்டடி
இதருதேமிவ்வழியே சென்றக்கால்
தெச்சணத்தில்பள்ளிகொண்டு தெய்வமடவார்களையும்
நிச்சயமாய்மணம்புரிந்த நீலவண்ணருண்டுமெடி
கலங்காதேகண்ணே கடல்கரையேப்போவோம்
விலங்காமல்வழியே மேர்க்குநோக்கிப்போவோம்
என்றுசொல்லிமாதை யிளக்கிமிகப்போகையிலே
அன்றந்தவாரியதர்க்கு வடபுறமாய்
டம்மாளவோசை டகுடடகாவென்றுமிக
இடம்மானநாகசுர மிரச்சல்மிகக்கேட்டு
சற்றேப்பொறுப்பேத்தி சத்தமொன்றுகேள்க்குதிங்கே
மெத்தவிரச்சல் மேளத்தொனிகேள்க்கு
குரவையொலியுங் குத்துவெடியுங்கேள்க்கு
பரசாதிக்குரல்கள் பலவிதமாய்கேள்க்கு
பார்த்துநடப்போம் பாதைவிட்டுவிலகி
சற்றுவடக்கேறித் தான்பார்த்துப்போவோமென
என்றுரைக்கப்போத்தி யியம்புவாள்நாயகியும்
நன்றுநன்றுகிழவா நடவுமுன்னேயெனவே
தண்டையணிமடவாள் சடைத்துமுகம்வாடி
கெண்டையெங்கண்மடவாள் கிள்ளைபோலேயுரைத்தாள்
குன்னிமெல்லக்கிழவன் கோலூன்றிக்கோலூன்றி
மின்னிடையேப்பய்யவென்று மெல்லவடக்கேநின்று
வடக்கேறிமாதை வலத்தவிட்டுத்தான்கூட்டி
நடக்கையிலேயாளிரச்சல் நாடிமிகக்கேட்டு
அன்னநடையழகி யமுர்தவாய்ச்சொல்லழகி
சின்னயிடையழகி திலைசமயங்கியேதுரைப்பாள்
கண்ணினியப்போத்திக் காரணத்துநல்ப்போத்தி
நண்ணினியப்போத்தி நானுரைக்கும்செய்தியைக்கேள்
சனக்கூட்டம்ரெம்பத்தான் காணுமாகையினல்
என்னைக்கூட்டிக்கொண்டு யிதில்விட்டகலாதேயும்
திக்குத்திசையெனக்கு தெரியாதுகண்டீரே
பக்குவங்கள்சொன்னேன் பாதமடைக்கலமே
கைக்குள்விட்டுக்கொண்டு கன்னியரைத்தான்கூட்டி
பைக்குள்வைத்துக்கொண்டு பகலோனுதிக்குமுன்னே
என்பதியில்கொண்டு யிருத்தியெனைவைத்தீரால்
பொன்பதினயிரந்தான் புனைந்ததொருதாவடந்தான்
உம்முடைய மார்பிலுடனணிவேன்கண்டீரே

எம்முடைய மானமிருக்குதுகாணும்மிடத்தில்
ஒருவரறியாமலுபாயமாய் கொண்டுயென்னை
திருவனப்பதிக்குள் சேர்த்துவையும்போத்தியென்ருள்
பேத்திபதருதேபெரியபதி சேர்த்துவைப்பேன்
காத்துவசுங்காத கண்ணர்பதிசேர்த்துவைப்பேன்
மலங்காதேபேத்தி வாள்பதியில்வாள்ந்திருக்க
கலங்காதேசேர்த்துக் கண்ணுளைவைத்திடுவேன்
என்றுரைக்கபோத்தி யிளவரசியும்மகிழ்ந்து
அன்றுவந்த கிழவனருகிலொண்டித்தானடந்து
ஆளுக்கிடைநடுவே யாயிழையும்போத்தியுமாய்
தோளுப்பிடித்தாப்போல் தோகையரும்வந்தனளாம்

விருத்தம்

வந்தனள்பதியின்சீரும் வளர்மணிமேடைக்காலும்
சந்தனவாடைவீசும் தலமதுநருக்கள்சீரும்
செந்தமிழ்த்தர்மச்சீருஞ் சிவாலயதெருக்கள்நேரும்
புந்தியில்மகிழ்சைகூர்ந்து போத்தியைமெச்சுவாளே

விருத்தம்

போத்திநீருரைத்ததெல்லாம் பொய்யில்லைமெய்யதாகும்
சாத்திநீர்ப்பின்னுந் தெய்வத்தார்குழலுண்டுமென்று
பார்த்துநீர்நமக்குக்காட்டு பைங்கிளிமாரையெல்லாம்
சீத்துவமாகயெந்தன் சிந்தையறியவென்ருள்

விருத்தம்

உடனந்தக்கிழவன்ருனு முள்ளதுதானென்று
மடமயில்குமரிதன்னை வாவெனவழைத்துக்கூட்டி
குடத்தனமுடையரான கோதையர்கோவில்புக்கி
நடைதனில்நின்றுகொண்டு நாரியரிவர்தானென்ருர்

விருத்தம்

பார்த்தந்தமடவாளான பகவதிமாதுசொல்வாள்
சேர்த்திந்தமடவார்தன்னை திருமணஞ்செய்தமன்னன்
எங்கெந்தவிடத்தேவாழ்வாரிது நமக்கரியக்காட்டி
சாத்திந்தத்தலமும்காட்டித்தன் பதிபோவோமென்ருள்

நடை

ஆதிக்கிழவா அருமைக்கன்னிமார்களையும்
நீதியுடன் கண்டேன்னேரிழைமார்தன்னைமணம்
செய்தகணவரையுஞ் சென்றுபார்த்தேநாமும்
நாயகரேநம்பதியில் நாம்போவோம்வாருமையா
என்றுரைக்கமாது யிழங்கிழவனேதுரைப்பார்
நன்றுநன்றுபேத்தி நாயகியார்மன்னனையும்
இன்றுநீகாணயிப்போது காட்டுகிறேன்
பார்த்துக்கோவென்று பையவாயென்றுசொல்லி
கோற்றுக்குருவம்பலத்தில்க் கும்மிமிகக்கொண்டாடி

நாட்டுத்தீர்வைக்கணக்கு நவின்றிருக்கும்வேளையிலே
காட்டிக்கொடுத்தார் கரியமால்நாரணரை
பகவதியாள்வந்து பார்க்கின்றவப்பொழுது
சுகபதியாள்கண்ணுக்கு துய்யதிருமாலும்
பச்சநிறமும் பவளவாய்க்கனியிதழும்
நச்சரவில்பள்ளிகொண்ட நல்லசொருபம்போலே
தண்டையணிக்காலுந் தாமரைக்கைபொன்முகமும்
கெண்டையக்கண்மாலும்கிரண வொழிரத்தினம்போல்
செம்பவளவாயும் சிறந்தபீதாம்பரத்துடனே
அம்பலத்தேநின்று வானந்தமேபுரிய
தானந்தமான சச்சுதானந்தவடிவை
ஆனந்தமான யழகுபகவதியும்
கண்டுவந்தமாது கண்மூடாவண்ணமங்கே
நின்றவள்பார்த்து நெஞ்சந்தடுமாறினதை
கிழவரறிந்து கிழிமொழியைவிட்டகல
பளவவொருசொரூபம் பாசமிகயெடுத்து
கைநிகழ்ந்துமாயன் கனகபதிமீதில்வந்தார்
மைவளையமாது மாறிமனதேதிரும்பி
பார்த்தாளருகில் பண்பாகநின்றதொரு
கூத்தாடித்தாதனையுங் கோதைமிகக்காணமல்
பாவிக்கிழவன் பாதகங்கள்செய்தானே
லாவிலாவிப்பார்த்து லாவிமிகத்தேடலுற்றாள்
அய்யோகெடுத்தானே ஆதிக்கிழவனம்மை
மெய்யோனென்றிருந்தேன் வெளியேற்றிவிட்டானே
எங்கேயினிக்கண்டு யென்பதியில்ப்போவேநான்
திங்களுதிக்குதல்லோ சேவல்குரலாகுதல்லோ
நிலாவெளிச்சமாகுதய்யோ நிர்க்கிழவனையுங்காண்கலையே
குலமழிவதாச்சே குவலையக்கேடாகுதல்லோ
மானமழிந்தாச்சே வையகமும்பேச்சாச்சே
தானமழிந்தாச்சே சங்கையினிகெட்டாச்சே
இக்கிழவனம்மை யிளக்கியிங்கேகொண்டுவந்து
மொக்கைமிகக்கெடுத்து மோசஞ்செய்யவந்தானோ
என்னபோலாச்சு என்தலையின்கூறிதுவோ
அன்னம்போலேவார்த்தை யாசாரமாயுரைத்து
சந்தியில்பந்தாக்கினனே சளக்கிழவன்நம்மையின்று
சுந்தரியும்மெத்தத் துவங்கிமனதேங்கி
புலம்புவாள்தனியே பொன்னும்பகவதியும்
சிலம்புவணிநாயகியும் திகைங்கிபுலம்பினளாம்
என்னைப்படைத்தவரே ஈசுரரேதஞ்சமென்று
பொன்னனையமாது புலம்பித்தவிக்கலுற்றாள்
தலையிலெழுதுஞ் சங்கரனேதஞ்சமென
உலையின்மெழுகதுபோலோ வியமுமுள்ளுடைந்து
இனம்பிரிந்தமானதுபோலிய்யமதுபோலிளகி
மனம்பிரிந்துமாது மதலையழுதாப்போல்
பிறப்பித்தசீமானே பிஞ்ஞகனேதஞ்சமென்று

சிறப்பித்தமாது திசங்கிமசங்கலுற்ருள்
மாதுபகவதியாள் வயதுப்திறுடையாள்
சாருமிடமாதர்போல் தனியேபுலம்பலுற்ருள்
கண்ணினியசொல்லாள் கரியமகாயீசொரியாள்
எண்ணுஞ்சாகாம லிருக்கும்பகவதியாள்
தாயில்லாப்பிள்ளை தயங்கிறைப்போலேநின்று
வாய்குழறிகண்ணீர் வடியமிகவழுதாள்
சோடுபிரிந்ததுய்ய பிராவுமிரங்கி
போடுகின்றசத்தம்போலே குரல்நிகழ்த்தி
உள்ளுக்குள்க்கேள்க்கும் வோவியத்தின்றன்குரலு
எள்ளுக்குள்எண்ணையென யிருந்துயழுகலுற்ருள்
சங்குள்ப்பிறந்த சமய்த்திருமணியும்
எங்கும்புகழ்பெற்ற யீசொரியாள்மாமயிலும்
தனியேயிருந்து தனதுளகமடக்கி
மனிதர்காணுமல் மறைந்துநின்றுமாதுநல்லாள்
கிழவன்றன்னைத்தேடி கிழிமொழியாள்பார்த்து
களபநிறத்தாள் காணுமல்வாடலுற்ருள்
கூட்டிக்கொண்டுவந்தக் கூனுக்கிழவனையும்
காட்டித்தரமாட்டீரே கன்னிகுலமாதர்களே
ஆதிமகாலச்சுமியே யண்டமழந்தவளே
சோதிமகாமானே துணைசெய்யமாட்டீரோ
அன்னப்பச்சிமாமரங்காவா வினங்காளுர்வணங்கா
என்னைமிகக்கூட்டிவந்து யிளங்கிழவனைக்காட்டித்
தாறீரோஎந்தனுட சந்தப்பதிஞன்போக
வாறீரோஎன்மனது வாட்டந்தவிர்ப்பதர்க்கு
என்றுபுலம்பியிளங்குளவி தேடுகையில்
குன்றுமேல்திங்கள் குதிக்குமந்தவேளையதாம்
வேளையறிந்து மெல்லிப்பொன்வண்டதுபோல்
சூழ்ந்துநிர்க்கும் புன்னைப்பூவிலொருசூச்சமதால்
இருந்தாள்பொன்வண்டாய் யேத்தபகல்போகும்வரை
தருந்தார்மார்பன் சாமிமிகவறிந்து
பகவதிக்குமங்களங்கள் பாடிமகிழ்ச்சையுடன்
சுகபெரியமாயன் சோபனங்கள்கொண்டாட
ஆடிக்களித்து அகமகிழ்ந்தாரச்சுதரும்
கூடிநிர்கக்கும்பேரோடுங் கூறிமிகவாடிடுவார்
நாட்டையளிக்கநமக்குளொரு முகூர்த்தம்
பேட்டைத்தர்மந்தோண போக்குண்டுமெந்தனக்கு
என்றுகும்மிபோட்டு யிழங்குழலையும்பார்த்து
இன்றுயிருவென்று யெம்பெருமாளுமாட
நல்லபகவதியாள் நாடிப்பொன்வண்டதுபோல்
செல்லப்பதுங்கி திசைமயக்கமாயிருந்தாள்
பகல்ப்பொழுதுமாறி பகவானடைந்தபின்பு
உகப்படைப்புமின்னுள் வொருகுழந்தைபோலாகி
பத்துவயது பிராயம்போலேசமைந்து
சீத்துபலதுடையாள் சேர்ந்தவுயிர்கண்மணியாள்

ரண்டுபொழுதாச்சே நம்பதியைவிட்டிளகி
பண்டுபதிக்கேக பாதைசற்றுங்காணலேயே
நாலுதிசையுண்டும் யென்பார்நமக்குச்சற்றுந்தோணலேயே
கோலூன்றுங்கிழவன் கூட்டிவந்தபாதையதும்
சற்றுந்தெரியலேயே தலேயிலெழுதுஞ்சிவனே
முற்றுமிந்தநாடு முடிமாஞ்சிபோவதர்க்கோ
நரைக்கிழவனம்மை நடுச்சபையில்க்கொண்டுவிட்டான்
உரைத்திடுவாரிந்த வூரிலொருவசனம்
மாப்பிள்ளேக்குவீங்கி வறட்டுக்கிழவன்கூட
போய்பிளேத்தேனென்று புவனஞ்சொல்வாரிதுவே
நம்முடையமட்டும் நாயன்விதித்தானே
சும்மாயிருந்தக்கிழவன் சோலிப்பண்ணவந்தானே
படைத்தபரனே பாவியேயென்றலேயில்
நடத்தையெழுதி நவின்றதுவுமிப்படியோ
பரதவித்துமாது பலபல்வாவெண்ணிமிக
விரதமுற்றமாது மெல்லியிழமயில்போல்
ஆளுக்கிடையே யன்னம்போலேதிரிந்து
கூழுகுடித்த குறுங்கிழவனேத்தேடி
திரியும்பொழுது செய்யதிருமாலவரும்
பரியேறும்பெருமாள் பகவதியைக்கண்டவரும்
இனியிவளேயிந்த யிராச்சியத்தில்நம்முடைய
மனிதப்பெண்கூட்டில்விட்டு மாலேயிடவேணுமென்று
நினேத்தும்பெருமாள் நேரிழையைதான்மயக்கி
புனேத்தொருபெண்ணுடைய பொர்க்கூட்டுக்குள்ளடைத்து
தாண்டவமாடுஞ்சபையில் சனங்களெல்லாம்பார்த்திருக்க
காண்டமிகப்படித்துக் கன்னிப்பகவதியை
மனுவறியவண்ட வானலோகமறிய
இனிமணங்களிவளே யாம்புரியவேணுமென்று
நிச்சித்தொருபெண் நிலேயுங்குறிபார்த்து
எச்சரிக்கையான யிளங்குயிலாள்தன்கூட்டில்
அடைத்தார்பெருமாளாயிழையும் வெகுவாய்
படைத்தோரருளால் பாரீரேழுமயங்க
பாடினள்காண்டம் பகவதித்தாய்நாயகியும்
நாடியவள்படித்த நல்காண்டமானதுதான்
புகன்றுலுலகம் பொடிப்போலுதிர்ந்திடுமே
உகந்தான்முடிய வுரைக்கிருள்காண்டமது
மனுவிலுடலதை யுமகாகிலுக்கமாய்க்கிலுக்கி
தனுவளேத்தாப்போலே சடலந்தனேவளேத்து
ஆளுக்கிடையதிலே யாட்டிசடலமதை
தூளுமிகப்பறந்து தூசிவானமடைய
சடலமதைப்புடவையென தான்கோபமாய்க்கிலுக்கி
தடதடனெச்சுவாமியுட தாளடியில்வீழ்ந்து
பாவிநீயிந்தப் பாரழிக்கவந்துயெங்கள்
ஆவிமறுகயவனிதனி லெங்களேயும்
சீரளிக்கவென்றோ தெச்சணத்தில்வந்திருந்தாய்

போராழியில்லாமல் பொன்றுகவியதிலே
பொல்லாதநீசனுட பிதிரையெல்லாமழித்து
சொல்லொன்றுக்குள்ளே தெய்வகன்னிமக்களையும்
வைத்தாளநீயும் வந்தாக்காலெங்களுட
மெய்த்தானமழிக்க மேன்மையோயெந்தனுக்கு
பாவிநீயென்னிடத்தில் பருங்கிழவனுகவந்து
தேவியெந்தன்மானமெல்லாஞ் சீரழித்துப்போட்டாயே
இவ்வளமைசெய்வாயென்று நான்முன்னறிந்தால்
பொவ்வவாய்த்தீயெறியப் போடுவேனக்கினியை
என்கோவில்வந்து யென்னைக்கண்மாயமதாய்
உன்கோவில்வாசலிலே விட்டுஆட்டுப்பார்க்குகிருயே
என்னமாயமாகயிங்கு கொண்டுவந்தாய்நீ
பொன்னம்பலத்தீசன் பொடிப்படுவானிங்கிலையோ
பொல்லாதகத்தீசன் பொருப்பேறிமாண்டானே
எல்லாவாபத்துமித்தனைநாள் காத்துமிப்போ
மாண்டானகத்தீசன் மாமுனியாய்ப்போனனே
வேண்டுமென்றகாலம் வேம்புமினிப்பானதுபோல்
பார்வதிமாதும்மையும் பரமேசொரியாளும்
சீர்பதியென்னக்காள் சிறந்தமண்டைக்காட்டாளும்
ஒக்கக்கசந்தாரோ வோவியம்வேண்டாமென்று
அக்கறுகுசூடும் ஆதிவெறுத்தாரோ
மூவாதிமூவருக்கு முன்னுதித்துவந்தவனே
தேவாதிதேவன் தேவருக்குமூத்தவனே
இவனுடையமாயமென்னச் சொல்லப்போறேநாம்
சிவனுக்குமென்னுடைய செய்திதெரியுமல்லோ
ஆர்க்குமடங்காத்ததிகாரம் பெற்றவனே
பாருக்குள்வந்து பவுசுகெடுக்கிறனே
போகவழிசொல்வீர்களோ பொன்னுகன்னியம்பதிக்கு
ஏகவழிசற்று மெனக்குதெரியலையே
என்றுபகவதியாளிரஞ்சி மிகக்கூச்சலிட்டு
மன்றுதனில்வீழ்ந்து மாபுலப்பமாயழுதாள்

விருத்தம்

புலம்பிடத்திருமால்மாதை பொறுபிள்ளாபிள்ளாபெண்ணே
நீதான்சலம்பிநீயுரைத்தாலோ கந்தட்டுண்டுபோமோசொல்லு
பலம்பெறயுனக்குயிந்த பருவமாமணங்கள்செய்ய
நலம்பெறவரங்கள்பெற்றேன் நலம்பெறத்தீசனுனே

விருத்தம்

நானென்றயீசரானல் நானிலம்பிறவார்கள்ள
கோனென்றயிடையன் சாமிகோபாலனுனதாலே
தானென்றுவுலகில்த்தோன்றிச் சடாச்சரவாட்டுமாடி
நானென்றுவேடம்பூணும் நாரணன்நீதானென்ருள்

விருத்தம்

நாரணன்நீதானென்று நவின்றதுசரிதான்பெண்ணே
காரணயுகத்துக்கெல்லாங் கருவுதித்தோங்குமாதி

நாரணயீசனல்லால் நடப்புவேறுருசொல்லு
வாரணக்குயில்போலன்ன மயிலெனவுரைத்தாரையா

விருத்தம்

உரைத்திடமொழியைக்கேட்டு உறுமியேகோபமுற்று
வரைத்தடம்புலிபோல்ச்சீறி மங்கையும்மாறிச்சொல்வாள்
நரைத்துமேபுலச்சைகெட்ட நாரணயீசரென்று
துரைத்தனமாகச்சொல்லச் சுணையுண்டோவுனக்குயென்றாள்

விருத்தம்

சாதிக்குச்சாதி நீயுஞ்சமைத்துநல்வேடம்பூண்டு
தாதிக்குகணவன் போலச்சடமெடுத்துடல்கள்போட்டு
வாதிக்குப்பிறப்பாய் பின்னும்வழிமுந்தன்குலமேகந்தன்
சாதிக்குசரியோஉந்தன் தன்குலமறிவேனென்றான்

விருத்தம்

அறிவேனனென்றபெண்ணே ஆதியுமெனதுள்கண்டாய்
தருமொழிசொல்லவேண்டாந் தாணுமாலையனுநானே
உறுமொழியொருசொல் குள்ளேயுகமதையாளநானும்
மறுமொழியில்லாவண்ணம் வரம்பெற்றநாதனனே

நடை

அப்போதரிவையரும் ஆதிமுகம்நோக்கி
இப்போதுன்மெட்டெல்லா மிகவறிவேன்
சோலிமிகப்பண்ணுதே சுகமாயெங்களைவிடுநீ
கேலிமிகச்செய்யாதே கெஞ்சுகவாய்பெண்ணுரை
பாதகங்கள்யேறுதே பாவையரைவிட்டுவிடு
தோதகமாய்வித்தை தோகையரோடேறுது
எங்கள்மசக்கமெல்லா மிகத்தெளித்து
சங்கையெங்கள் பதிக்குத்தானேகவைத்துவிடு
கேட்டந்தநாரணருங் கிளிமொழியோடேதுரைப்பார்
நாட்டமடவாரே நானென்னசெய்தேன்காண்
உங்களைநான்கட்டி ஓடிமிகப்போகாமல்
எங்களுடபொர்ப்பதியி லிட்டிருக்கோபிள்ளாசொல்
போகவேணுமென்றால் பொழுதிருந்துபோகலாமே
ஏகவேணுமென்றால் யெழுந்திருந்துபோகலாமே
மாயதிருமேனி மனதிலொன்றேயடக்கி
வாய்த்திருவாய்மலர்ந்துரைக்கப்பெண்ணுளும்
வாயுரைத்தாப்போலே மனதுக்கேசொல்லாதே
நீயுரைத்தநெஞ்சம் நினைப்புவேறுயிருக்கும்
மாயமறிவாரோ மாயாதிவுன்சூச்சம்
உபாயமறிய ஒருவராலேலாது
என்றுமாகுமரி யிப்படியேசொன்னவுடன்
நன்றுநன்றென்று நாரணர்பின்னேதுரைப்பார்
பெண்ணேயெனதுடைய பேரழகிபெண்மயிலே
கண்ணேயெனது கனியயென்றெள்ளமுதே

அமிர்தவாய்ச்சொல்லழகி யாசாரவீச்சழகி
முகுதவாய்க்கண்ணே குமரிப்பகவதியே
தேனேமயிலே திகட்டாததெள்ளமுதே
மானேகுயிலே மரகதப்பெண்ணேவியமே
கெஞ்சுகவாய்ப்பெண்ணே கிளிமொழியென்மாமயிலே
செஞ்சுடரேநல்ல திரவியமாமணியே
பொன்னும்பகவதியே பிள்ளாநான்சொல்வதுகேள்
என்னுடையபேரில் எள்ளளவுங்குற்றமில்லை
கலியளியவயது காலஞ்சரியானதினால்
வலியயுகமான வாய்த்ததர்மநல்புவிதான்
பிறப்பதினாலிந்தப் பெருபுவியில்நான்பிறந்து
சிறப்பதுகள்செய்து செய்கருமமும்முடித்து
நாடாளநமக்கு நல்லபலனானதினால்
தாடாண்மையான சத்திப்பகவதியே
உண்மைதான்சொல்லுகிறேன் வோவியமேநீகேளு
தண்மையல்லால்வேறு தப்பிதங்கள்சொல்லேனான்
மாதுவுமையாள் வாய்த்தகுலபார்வதியாள்
தீதுபுகழ்லச்சுமியாள் சிறந்தபகவதியாள்
மண்டைக்காட்டாள் தெய்வமடந்தையேழுபேர்கள்
குன்றையுறைவள்ளிக் கோதைத்தெய்வானைவரை
பூமடந்தைநல்ல பொன்னரியதேவியர்கள்
பார்மடந்தைகங்கை பாணிமடந்தைமுதல்
எல்லோருங்கூடியிருக்க வொருதலத்தில்
வல்லாருமீசர் வகுத்துரைக்கநீகேளு
கலியென்வரம்பெத்து கைலைதனைவிட்டவனும்
திலியனுகத்தில் தேவியவள்பெண்ணுடனே
வருகுமந்தவேளையிலே மாமுனிராமரிசி
திருவுமையாள்பங்கரொடு சென்றுநின்றேதுரைப்பார்
நல்லபரமேசுரரே நாடியிந்தக்கலியன்
வெல்லக்கூடாதவரம் வேண்டியவன்போறதினால்
எக்காலமையா இவன்முடிவாவதுதான்
அக்காலமெல்லாம் மருளுமென்றூரீசுரரை
நல்லபரமேசுரரும் நாடுமுனிகேட்டதர்க்கு
சொல்லலுற்றூர்பெண்ணே செவிகொடுத்துக்கேட்டிடுநீ
மாமுனிகேளென்று மாயரந்தயீசுரரும்
தாமுனிந்துசொன்ன தண்மைமிகக்கேளும்
பொல்லாக்கலியன் பொன்றியடிவேறவே
எல்லாமறிய யிலக்கறியக்கூறினராம்
இவன்மாளும்போது யினத்துக்கினம்பகையாம்
சிவஞானநினைவு செல்லாதுதேசமதில்
குலைகளவுரெம்ப கோள்கள்மிகுந்திருக்கும்
தலைஞானவேதம் தடுமாறிகைவிடுவார்
நேருக்குக்காலம் நிகழ்ந்திருக்கும்பார்மீதில்
போருக்குயாரும் புத்தியாய்தானிருப்பார்
பிள்ளைக்குத்தாயும் பெருத்தபகையாயிருக்கும்

கள்ளக்கணவருடக் கருத்துமிகமாதருக்காம்
கூடிவுடன்பிறந்தக்கோதையரேப் பெண்ணெனவே
நாடியவரெண்ணி நாணிறப்பார்கோடி
வாரிகோபிக்கும் வாங்குஞ்சிலயிடங்கள்
மாரிமறைந்துவிடும் வாயுவதுநோய்வீசும்
கீழ்ச்சாதியெல்லாங் கெறுவிதங்கள்மிஞ்சியவர்
மேல்ச்சாதிதன்னை வேலைகொண்டுதான்வருவார்
வம்புக்குநோக்கம் வாக்கில்மிகவிருக்கும்
அன்புக்குநோக்க மடங்கிமிகயிருக்கும்
மனுவதிலேகர்பிகளா மாதர்கர்ப்பேயிழந்து
தனுவாய்ப்புருசருட தன்வாக்குக்கேளார்கள்
தெய்வநிலைகள் தேசமதிலேக்காணுது
மைநெரியப்பெண்ணுர், மனுநீதங்காணுது
இராசநெறிநீதம் ராச்சியத்தில்காணுது
பிரர்யம்வருமுன்னே பெண்கள்நிலையழிவார்
தெய்வமடவார் தேசமதிலேவருவார்
வையமறியமாலையிட்டு வாழ்ந்திருப்பார்
பார்வதியாளீசொரியாள் பரமேசொரியாளும்
சீர்பதியாளான சீதாதேவிமுதலாய்
கன்னிகுமரிகைலைபுகழ் மாதரெல்லாம்
உன்னியவர்களொரு தலத்திலேகூடி
வாழ்ந்திருப்பார்மங்களமாய் மக்கள்கிளைவாழ்வுடனே
தாழ்ந்திருந்தமாகலியன் தன்னுல்மடிந்திடுவான்
இப்படியேயிந்தக் கலிமாயும்லக்கெனவே
அப்படியேமாமுனிக் கருளசிவனுரும்
பின்னுமுனியும் பிஞ்ஞகனேடேகேள்ப்பார்
துன்னுபுகளீசுரரே தெய்வமடவார்களெல்லாம்
கலியுகத்திலவர்கள் கட்டாய்வொருதலத்தில்
சலிவிலாதேவாழ்ந்து சந்ததிகள்வாழ்வுடனே
வாழ்ந்திருப்பாரென்று வகுப்புரைத்தீசுரரே
கூர்ந்திவர்கள்தன்னைக் கோலமணஞ்செய்கிறதார்
யானறியச்சொல்லி ஆதியெனத்தொழுதார்
தானறியச்சொன்ன தண்மைமிகக்கேளும்
நாடுகுற்றங்கேள்க்க நல்லோரைத்தேர்ந்தெடுத்து
கேடுகலிநீசருட கிளைவழிகளுமறுத்து
தெய்வச்சான்றோர்களுக்குச் செங்கோல்மிகக்கொடுத்து
மெய்வரம்பாய்த்தர்மமேன்மை முடியுந்தரித்து
தர்மபுவியாளத் தாட்டீகவைகுண்டரும்
பொர்மைகுலமானதிலே பிறக்கிருரானதினுல்
நாங்களெல்லோரும் நமனுமவர்க்குள்ளானேம்
தாங்கியொருபொருள்போலே தானிருப்போமப்பொழுது
ஒருபொருளாய்வந்து வுருவெடுப்பதானதினுல்
திருமடந்தையாவருஞ் செய்யுமன்னர்தானவராம்
என்றீசர்சொல்ல யிசைந்தமுனிநல்லதென்று
நன்றுநன்றையா நல்லகாரியமெனவே

சந்தோசங்கொண்டு தானிருந்தான்பெண்ணரசே
முந்தோர்மொழிந்த முறைநூல்ப்படியாலே
வந்ததுகாணிந்தவிதி மங்கையரெங்களுக்கு
யெந்துகாரியம்பெண்ணே யென்னையொன்றுஞ்சொல்லாதே
தலையில்விதிபிள்ளா தங்கடங்களாகாதே
கிலேசமதையெலாங் கிளிமொழியேவிட்டுவிடு
கொண்டுவந்தேன்பெண்ணே குவிந்தவிதியெந்தலைக்குள்
பண்டுவமைத்தபடி பதறுதேபாவையரே
பெண்ணேநீயொருத்தி பேர்பெரியகண்ணரசே
கண்ணேயுனைக்காணமல் கலங்கிமிகநானலைந்து
வாடியிருந்தேனெடி மங்கையுனைக்காணமல்
கோடியிருந்தேனெடிக் குமரியுனைக்காணமல்
தாகத்தாலுன்னைத் தவமிருந்துகண்டேனெடி
கோபத்தால்க்கன்னி குமரியென்னைப்பேசாதே
என்றுமகாமா விரக்கமுடன்மாதைமிக
கொண்டுவணைவாய்க் குழைவாய்மிகயிருக்க
அம்மைபகவதியா ளகங்கழிகூர்ந்து
நம்மைப்படைத்தது நாயன்முன்னுளென்றுசொல்லி
இருந்தபதியையெண்ணி யெண்ணிமாதுநல்லாள்
பொருந்துவிளியால் பொருமிமிகநீருவிட்டு
அழுதாளேசொல்லி யருவரைகடாணிழக
ஒழுகாகநிர்க்கு முலகநருளளவே
மாமரங்களெல்லாம் மலங்கிமிகவளவே
பூமரங்களெல்லாம் பூத்துச்சொரிந்தனவே
அய்யோநானிருந்த வம்பலமுந்தோற்றேனே
வையாவழித்தெருவு மண்டபமுந்தோற்றேனே
சிங்காசனமும் செல்லத்துறையும்வாவிகளும்
மங்காதபொன்னும் மாழிகையும்தோற்றேனே
இலாடக்கிழவன் ராத்திரியில்வந்துநம்மை
கபாடமிகச்செய்ததினல் கனபதிகள்தோற்றேனே
பொன்னுபரணமும் பெட்டகமுந்தோற்றேனே
முன்னுளெழுத்தோமுத்து மண்டபமுமிழந்தேன்
ஆண்டிலொருதேரோட்டம் வதுவெல்லாம்தோற்றேனே
வேண்டுமனுவந்து விழுந்திறைதல்தோற்றேனே
தண்டையணிசிலம்பும் தரளமெல்லாம்தோற்றேனே
துணைக்கிள்ளையான தோளியரைத்தோற்றேனே
பணப்பெட்டகமும் பைம்பொரியப்பட்டுகளும்
நவமணியாற்செய்த நல்லவடந்தோற்றேனே
செகமெல்லாங்கூடி சேவிப்பதுந்தோற்றேனே
இத்தனைநாளுமிருந்த கெதியோவெனக்கு
முத்திபெற்றயீசன் முன்னெழுதிவைத்ததுவோ
அய்யோநான்பிறந்த வன்றுமுதலின்றுவரை
வெய்யோன்முகம்வரையும் மெல்லியறியேனே
பாவிக்கிழவன் பரிகாசஞ்செய்வானென்று
ஆவியறிந்திலனே வங்கமதுவாடுதையோ
மூன்றுபொழுதாச்சே வூறுநீர்தானருந்தி

மீண்டசரீரம் விழலாய்யெரியுதையோ
பாலும்பழமும்பருந்தேனுஞ் சர்க்கரையும்
நாலுரண்டான நல்லருசியதுவும்
பாவித்தகும்பி பருங்கனல்போலமீறுதையோ
ஆவிதடுமாறுதையோ வாதிபரமேசுரரே
என்றுபகவதியா ளெண்ணமுற்றுத்தானழவே
மன்றுதனையழந்த மாலுமிகவமர்த்தி
தேனினியகண்ணே தேவிபகவதியே
நானினித்தான்சொல்லும் நல்லமொழிகேளாய்
நான்மணங்கள்செய்யும் நாரியர்கடன்னிலுமே
மேன்மையதாயுனக்கு வெகுபணிகள்நாந்தருவேன்
பொன்பணங்களான பெட்டகமுந்தருவேன்
என்பதியுந்தருவேன் யேறும்பல்லாக்கருள்வேன்
தண்டாயமேறிச் சனங்கள்மிகபோற்றிவர
கொண்டாடநல்ல குருபாக்கியந்தருவேன்
திருநாள்பவுசுதினமுனக்கு நானருள்வேன்
அருள்ஞானப்பெண்ணே யங்கிருந்தசீரதிலும்
ஐரெட்டியாகயணி வேனுனக்குடமை
பொய்யென்றிராதே பொன்முடியுந்தன்னாணை
யென்றுமாயாதி யிப்படியேயாணைகொண்டு
குன்றுதனமின்னாள்க் குமரிமனம்மகிழ
சத்தியஞ்செய்து தலையைத்தொட்டாணையிட்டு
புத்திவந்துபெண்ணாள் பொன்னும்பகவதியாள்
நாதனுடதஞ்சமென நாடியகமகிழ்ந்து
மாதுகுமரிவாயுரை யாதேயிருந்தாள்
அப்போதிருமா லானந்தமேபெருகி
இப்போபகவதியை யேற்றமணஞ்செய்யவென்று
உன்னித்திருமாலொரு சொரூபங்கொண்டனராம்
மின்னுமந்தயீசுரராம் வேடமதைக்கொண்டனராம்
எக்காளவாத்தியங்க ளிசைதாளநாகசுரம்
அக்காலமீதில் தேவராகாயமாகநின்று
பந்தல்விதானமிட்டு பாவாணர்போற்றிநிற்க
சந்தமுடன்மனிதர்ச் சாதிமிகமகிழ
தெய்வரம்பைமாதுத் திருக்குறவைதான்பாட
ஞாயமனுவோர் நல்குரவைதான்பாட
பகவதிக்குநல்ல பாரமணக்கோலமிட்டு
சுகபரனுமாலைமணச் சொரூபமெடுத்தவரும்
பிச்சுமாலைபுரிந்து பொற்கடுக்கன்மீதணிந்து
மிச்சமுடன்வெள்ளி விரலாளியோடரஞாண்
பொன்தாவடங்களிட்டு பொன்னரியதாலிதன்னை
மின்தாவடம்பூண்ட மெல்லிபகவதிக்கு
கண்ணுனதாலி காரணத்துநல்த்தாலி
விண்ணோர்கள்மெய்க்க விறலோன்மிகத்தரித்தார்
கண்டுதெய்வாரும் கன்னிபகவதிக்கு

யின்றுமணம்புரிந்தா ரிறையவர்தானெனவே
கொண்டாடிக்கைலேக்குவிந்து மிகவாழ்ந்திருந்தார்
தொண்டரனச்சான்றோர் துதித்துமிகப்போத்தி
கலிமுடிந்தக்காலங் கன்னிபகவதிக்கு
சலிவில்லாமாமணங்கள் தானுச்சுயின்றனவே
எல்லோருங்கொண்டாடி யிருந்தார்காணம்மானே
நல்லநாராயணரும் நாடியகமகிழ்ந்து
செல்லமடவாரோடு சேர்ந்துவிளையாடியிருந்தார்
அந்தந்தபெண்களுக்கழகு சொரூபங்கொடுத்து
சேர்ந்தவிளையாட்டுத் தோகையரோடாடினராம்
ஆடித்திருநா ளானந்தகும்மிகளும்
நாடியிகத்தீர்ப்பும் நல்லமக்களுக்கறிவும்
சொல்லியாமங்கூறிச் சோபனங்கள்தான்பாடி
நல்லியல்வாய்நாதன் நடத்திவருகையிலே
ஈசுரனுக்கேற்ற யேந்திளையாள்பார்வதியை
வீசுபுகழ்பார்வதியை வெற்றிமண்டைக்காட்டாளை
மாமணங்கள்செய்ய மனதிலுற்றெம்பெருமாள்
பூமணங்களான பொன்னுநல்லபார்வதிக்கு
மங்களங்கள்கூறி மாதைமிகநினைத்து
திங்கள்சடையணிந்துச் சிவவேடமுந்தரித்து
மாத்திரைக்கோல்கைபிடித்து மார்பில்தாவடம்பூண்டு
காத்திருந்துபார்பதியை கருத்தாய்நினைக்கலுற்றார்
மாதுமைக்குமங்களங்கள் மாயேசுரன்கூறி
தீதகலுமாதர்களைச் சிவமும்மிகநினைத்து
கருத்தாயிருந்து காண்டமதுசொல்லியவர்
உருத்தாயிருந்து வோதுவார்மோகமதாய்
பெண்ணேயென்பார் பதியேபேரானமாதுமையே
கண்ணேயென்பார்வதியே கனகநகரெத்தினமே
கூட்டுக்கிளியே கொடியிடையேநீங்களெல்லாம்
நாட்டிலெனைவிட்டு நன்னகரில்வாள்வீரோ
தனியேநான்வந்திருந்து தவித்துமுகம்வாடுவது
கனியேயென்மாமணியே கருத்திலறியீரோ
உள்ளுடைந்துவாடி யுங்கள்மேல்காதல்கொண்டு
தள்ளுடைந்துநானிருக்குந் தன்மையறியீரோ
ஊணுறக்கமில்லை யுங்களைநான்யெண்ணியெண்ணி
கோனுதலாய்வாடி கோடிமுகம்வாடுறேனே
வாரீரோபெண்காவயற் பார்த்துவன்னமிட
பாரீரோயென்முகத்தை பார்த்திரங்கமாட்டிரோ
அன்னங்காய்வைத் தமுதருந்துமென்றுசொல்லி
முன்னிங்கேவந்து முத்தமதுதாரீரோ
வாழைப்பழங்கனிகள் மாம்பழம்பலாக்கனிகள்
கூழணையசந்தணமுங் கொண்டுவந்துதாறையளோ
கண்ணரியபெண்ணே கள்ளமில்லாதோவியங்கா
பெண்ணரியமாமயிலே பிள்ளாயென்கண்மணியே
எண்ணுஞ்சிறுபிள்ளை யாயிருக்குமந்தபார்பதியே

கண்ணுமயிலே கைக்குள்வந்துசேராயோ
யென்னுபரநாதனு மொயில்விசைகள்தான்கூற
மன்ருர்க்குளாலுளுமையாள் வாய்த்தகுலபார்பதியாள்
வந்துதிருப்பாதமதில் மகாகோபமாய்வீழ்ந்து
முந்துமொளியெல்லா மொழிந்தாரேமாதரவர்
அய்யோயிதென்ன யடிமாறுகாலமதோ
பொய்யோகலியென் பிறக்கப்போய்நாங்களெல்லாம்
இப்பாருலகிலிப்படியே வந்ததென்ன
பொல்லாக்கலியுகந்தான் பொடிப்பட்டுப்போறதற்கோ
வல்லாத்தமங்கையெல்லாம் மாகலியில்வந்ததுதான்
என்றந்தமாதரிது கூறமாபரனும்
நன்றெந்தமாதர்களே நானினைத்ததுபோலே
வந்தீரேயின்று மணம்புரியவேணுமென்று
புந்தியயர்ந்து பூவைமுகங்கோணி
அண்ணர்நாரணருமவனிதனில்வந்தாரென்று
பெண்ணரசுநாங்கள் போய்பார்க்கவேணுமென்று
வந்தோமேயென்னுடைய வரம்பெரியவண்ணரென்ருர்
பிந்தாமல்மாயன் பேசுவார்மங்கையுடன்
அண்ணதுநீயென்ரு யாயிழையேயிவ்வுலகில்
இண்ணதுவேலிப்படித்தான் யென்னுடையநாயகமே
மனதயர்ந்துமாதர் வாயுரைக்கக்கூடாமல்
தனதுளமுங்கோடி தலையில்விதியெனவே
நின்ருர்மடவார் நினைவுதடுமாறி
பண்டாரமாக பரமன்வடிவெடுத்து
தாலிமிகத்தரித்தார் தாமனந்தபெண்ணூர்க்கு
ஆலித்துப்பார்வதியை யருவியுடநீராட்டி
சந்தோஷமாகத் தாலிமிகத்தரித்தார்
வெங்தோசந்தீர்ந்து மேலோர்கள்கொண்டாட
வையகத்தோரும் மனமகிழ்ந்துகொண்டாட
செய்யத்திருமால் செய்ச்சடங்குகள்முடித்து
வாழ்ந்திருந்தார்பெண்களுடன் மாயப்பரநாதன்
தாள்ந்திருந்துமடவார் சரணமிகப்பூண்டு
பூண்டுபணிவிடைகள் பூவையர்கள்செய்துமிக
வேண்டும்பலபாக்கியத் தோடிருந்துமிகவாழ்ந்திருந்தார்
இப்படியேபெண்க ளோடிருந்துமிகவெம்பெருமாள்
நர்ப்புடையதேர்த்திருநாள் நாளுங்குறையாமல்
செய்துயிகனே சிவசோபனம்புரிந்து
மைதுவழைமாதரோடு பண்பாகவேயிருந்தார்
மாதருக்குமாதவனும் வானோர்க்குநாயகமாய்
தாரணிக்குநாதனெனத் தான்வாழ்ந்திருந்தனராம்
வாழ்ந்திருக்கும்நாளில் மாதுகன்னிமார்களோடும்
சேர்ந்திருக்கும்நாளில் திருமால்மனமகிழ்ந்து
கூர்ந்ததொருதேவி குவிந்தமண்டைக்காட்டாள்க்கு
சோபனங்கள்கூறி சுற்றமங்களம்பாடி
மேவரசியான மெல்லியரைநாமணந்தான்

புரிந்தவர்க்குக்கோலம் புகுந்தணியவேணுமென்று
மதிபெரியமாதை மயக்கமிகசெய்திடவே
மாதுக்குநல்ல மனவிருப்பமானதொரு
சீருகந்தமாதரெனச் செம்பவளமாயவரும்
காதுக்குத்தோடணிந்துக் கைக்குவளையணிந்து
மார்பில்வடமணிந்து வாய்த்ததண்டைகாலிலிட்டு
சேலையுடுத்துச் சிவந்தகொசுகமுடித்து
மாலையணிந்து மார்பிர்க்கலையணிந்து
கோர்வையணிந்து குழலுமிகமுடித்து
தோர்வைப்படாத தோகைபோலேசமைத்து
மஞ்சணையும்பூசி பிச்சுமாலைமிகவணிந்து
செஞ்சொல்மதனைச் சிந்தைக்குள்ளேயிருத்தி
எடுத்தார்பெண்ணுகை யெம்பெருமாள்கோலமது
கடுத்தகன்னிமார்கள் கன்னிகணவரென்று
சொல்விமகிழ்ந்து தோழிநாமென்றுசொல்லி
முல்லையணிப்பெண்ணூர் முகுந்தன்பதந்தொழுவார்
நாட்டிலுள்ளோரும் நாரணப்பெண்ணுரென்று
தாட்டிமையாய்ப்போற்றிச் சரணம்பணிந்துநிற்பார்
இப்படியேவேச மெடுத்துத்திருமாலும்
பொர்படியில்வாழும் பொன்னுமண்டைக்காட்டாளை
மயக்கிக்கொடுவாவெனவே மாமோகப்பெண்ணேவ
இச்சொருபம்போல யேந்திழையாள்கண்ணிலொரு
சற்சுருபமாகத் தான்கண்டுரைபகரும்
பெண்ணேயென்னக்காள் பேர்பெரியநாயகமே
கண்ணேயென்மாமணியே கனகவொளிமாதவமே
கலியுகத்திலேபெரிய கண்காச்சைதன்னுடனே
வலிதானநல்ல வாய்த்த பதிச்சிறப்பும்
நித்தத்திருநாளும் நீலமணிமண்டபமும்
சிற்றம்பலமும் திருநாள்சிறப்புடனே
சத்திகன்னிமாரும் தண்டாளமாதுமையும்
பத்தியுள்ளபார்வதியும் பார்மகிழ்பகவதியும்
கங்கைமடவாரும் காச்சிமிகப்புரிந்து
கொங்கைமடவார் கூடிமிகப்புரிந்து
கும்மியடித்துக் குரவைமிகக்கூறி
எம்வடிவுபோலே யேலங்குளலார்கள்
ஆடிப்பாடித் தலங்கிறுதமாகியவர்
சாடிக்குலாவிச் சனங்கள்வெகுகூட்டமுடன்
பாலும்பழமருந்தி பாவிக்கும்பாவனையை
மேலுக்குகந்தவளே விடுத்துரைக்கக்கூடாது
என்றுரைக்கவந்த யிளவரசிக்காட்டாளும்
அன்றுமதிமயங்கி யாயிழையாள்மாய்கையொடு
கூடிநடந்துக் கூண்டரியநர்ப்பதியில்
ஆடிக்களிக்கும் மாதிகணச்சபையில்
வந்தாளேமாய்கை மண்டைக்காட்டாளுடைய
சிந்தையதர்க்குள்ளே சென்றுமிகவிருந்து

திக்குத்திசைகள் தெரியாமல்த்தான்மயக்கி
பக்குவமாது பறிகொடுத்தபேர்களைப்போல்
புலம்பித்தவித்து பெண்ணரசுநிர்க்கையிலே
வலம்புரிக்கண்மாயன் மாதைமிகவருத்தி
மணமுகிக்கவென்று மாயன்மனதிலுற்று
பகவதிக்குள்ச்சேர்த்து பாரமணஞ்செய்யவென்று
சுகவதியாளந்த சோதிபகவதிக்குள்
உள்ளாக்கிக்கொண்டு வுற்றத்திருச்சபையில்
துள்ளாட்டமாக்கித் தொகுத்தகாண்டம்படித்தாள்
வையகத்தோர்காண வாழும்பகவதியாள்
செய்யமண்டைக்காட்டாள் சிறந்தகாண்டம்படித்தாள்
அய்யோநான் கண்மயக்கமாய்யங்கிருந்திங்குவர
பொய்யோயொருமாய்கைப் பெண்ணுகவந்ததுதான்
இங்கேயிவர்போல யிருந்ததுகாண்வந்தபெண்ணும்
சங்கைநமைக்கெடுக்கச் சமைந்தாரேபெண்ணுகி
பெண்ணுச்சமைந்து பேராசையுமாகி
கண்ணனையெந்தன் கர்ப்புயிழந்தேனே
என்றுமாதேவி யிப்படியேசொன்னவுடன்
ஒன்றுமறியாதவர் போலுள்ளந்தனிலடக்கி
பெண்ணுரிந்த பெருங்கலியைத்தான்முடிக்க
கண்ணனபெண்ணரசிக் கரியசொரூபமது
எடுத்திகனைக்கூற யானிங்கேயாடுறவன்
முடுத்துந்தனூரில் முறைமயக்கவந்தேனே
யெனக்குப்பெண்ணில்லை யென்றிரந்துகொள்ளவந்தேனே
தனக்கிதுவோஞாயந் தரணியதுசொல்லாதோ
நாமிருப்பிங்கேநாம மெங்குங்கேழ்க்குதல்லோ
சோமவாரமணிந்த சுவாமியுடகர்ப்பனையோ
என்றுபெருமா ளிதுவுரைக்கமாதுசொல்வாள்
குன்றெடுத்தமாயக் கோபாலாவுன்சூச்சம்
எவருலழவெடுக்க வேலுங்காணுன்மாயம்
கவருயிரங்கோடிக் கருததிருக்கும்மாயவரே
இராமனுய்த்தோன்றி இராவணசங்காரமது
ஸ்ரீராமர்படைவகுத்துத் தென்னிலங்கைசுட்டழிய
போரில்நீர்நின்று பொருதுகின்றவேளையிலே
மேருகுலுங்கி விண்டுள்மிகப்பறந்து
ஆகாயத்தேகி யந்தரங்கமேகமதில்
தூள்மூடக்கண்டு தேவர்மிகப்பதறி
வேழதியவுன்போர்மிகுத் தேவர்பார்க்கையிலே
போரிலும்நீர்நின்று பொருதுசரம்விழைக்க
வாரியிலும்பாம்பணையில் வாய்த்தபள்ளிகொண்டீரே
ஆய்ப்பாடியாய ரெல்லாருந்தான்கூடி
சாய்ப்பானபேய்களுக்குச் சருவில்கொடைகொடுக்க
பேயையெல்லாவோட்டி பெரும்பூதமாயிருந்து
ஆயர்கள்ப்பார்த்திருக்க வங்குபூசாரியுமாய்

தின்ருய்யெத்தயுனைஞ் சிலபூதமாயிருந்து
தொட்டிலரமனையில்ச் சிறுபிள்ளையாய்க்கிடந்து
மட்டுப்பருவமுள்ள மாதர்மனைபுகுந்து
விளையாடிநீயும் வேருரறியாமல்
குழைவாய்மதலையெனுங் கூர்ந்ததொட்டிலேகிடந்து
சிறுகுழவிபோலே சீறிமிகவழுவாய்
பருபதங்களுமெடுப்பாய் பாலன்போலேகிடப்பாய்
உன்சூச்சவேலை யுரைக்கவெழிதாமோ
தன்சூச்சமெல்லாந்தான் வுரைக்கக்கூடாது
பலவேசங்கொண்டு பார்முழுதுஞ்சுற்றிடுவாய்
குலவேசநீருங் கொண்டதொழிலல்லவோ
ஆரோடேசொல்லி யதட்டிவிடவேண்டாமே
பாரோடுதித்துவந்த பாவையொடுசெல்லாது
என்றுமன்றைக்காட்டா ளிசைந்தமொழிகேட்டு
நன்றுநன்றுபெண்ணே நமக்கிதுவேஞாயமுறை
பெண்ணேயுன்பேரில் பேராசைமெத்தவுண்டு
கண்ணேவுன்னையிப்போ கலியாணஞ்செய்வதற்கு
வேளையிதாகும் மெல்லியரேயென்றுரைக்க
மானதியமங்கை மனதயர்ந்துவாய்குழறி
தலையெழுத்தெனவே சத்தமுறையாடாமல்
சிலைதாள்நுதலாள் சொல்லுரையாதிருந்தாள்
இருந்தநினைவை யேகமூர்த்தியறிந்து
பொருந்துமதியான பிரமாதிவேசமதால்
வேசமெடுத்து மேளத்தொனியுடனே
வாசவருந்தேவர்களும் மலர்மாரிதூவிவர
தேசநறுளறிய தெய்வமடவாரறிய
மாயபரனும்மகாபெரிய நூல்முறையாய்
வாசக்குழலாளை மாலையிட்டாரம்மானை
மாலையிட்டுநாதன் வாய்த்தசடங்குங்கழித்து
சாலையத்துள்யேகித் தானிருந்தாரம்மானை
மணமுகித்துநல்ல மணவறையிலுள்ளிருந்து
துணைபெரியமாயன் சுருதிமுறைப்படியே
ஆகமத்திகனை யலங்கிருதமாய்புரிந்து
நாகரிகநாதன் நடத்திவரும் நாளையிலே
கந்தனுக்கும்பெண்ணைக் கலியாணஞ்செய்யவென்று
சிந்தித்துநல்ல திருமால்மனமகிழ்ந்து
கேட்டுநருள்விட்டு கிளிமொழியைத்தான்வருத்தி
கோட்டுவரையான கோதைவள்ளிநாயகியை
கந்தன்சொரூபங் கரியமால்தானெடுத்து
எந்தன்பிரானும் யேற்றவள்ளிநாயகியை
மாலையிட்டுநல்ல மணமுகித்தார்கந்தனுமே
வேலையிடம்மான வேண்டுஞ்சடங்குசெய்து
நாளிட்டுவந்து நாளேழுமேகழித்து
வாழட்டுமென்று வாய்த்தசடங்குமுகித்து

மாதரோடெல்லாம் மகிழ்ந்திருந்தாரம்மானை
தாரணியோரறியத்தான் வாழ்ந்திருந்தனராம்
பெண்ணூர்தமக்கு பேர்பெரியதர்சொருபம்
கண்ணனமாயவருங் காட்டிமிகவாழ்ந்தார்
வாழ்ந்திருக்கும்நாளையிலே மங்கைதெய்வமாதர்களில்
யேந்திழைகளில்ச்சிலர்க ளிழங்குளவிபெற்றனராம்
பாலராண்பெண்ணும் பாவையர்கள்பெற்றுமிக
கோலமுடன்வாழ்ந்திருந்தார் கூண்டரியசெல்வமொடு
பாக்கியங்கள்ரெம்ப பவுசுங்குறையாமல்
நோக்கியியல்வாய்மாதர் நுண்ணிமையாய் வாழ்ந்திருந்தார்
நாராயணர்க்கு நல்லமதுதான்படைத்து
காரணரமுது கலந்துமிகவுண்டிருந்தார்
கூடியிருந்துக் குலாவிமிகவாழ
நாடிமகிழ்ந்து நாரணருந்தேவியுமாய்
வாழ்ந்திருக்கும்நாளை மங்கைபகவதியாள்
சேர்ந்தகுழலான தேவியவள்தோழியர்கள்
இருந்துமிகவாழ்ந்த யிரணவொழிமண்டபத்தில்
திருந்துபகவதியை தேவியவர்கள்காணமல்
காணமல்த்தேடி கானகங்களும்பார்த்து
வாணல்மறுகி வந்தாரேநர்ப்பதியில்
பதியில்பகவதியை பண்பாகப்பார்த்தவர்கள்
விதியிதுவோதாயே வெயிலுகந்தமாதாவே
நீயிருந்தபதிதானிதானம் போதாதெனவொ
நீயுமிந்தபதியை நினைத்துவந்தவாறேது
அப்போபகவதியா ளவர்கள்தனைப்பார்த்து
இப்போநமக்கு வெழுத்தின்படியாலே
நடந்திருக்கும்பெண்ணே நவிலக்கூடாதினிமேல்
கடந்தபொருள்காணும் கன்னியிவர்கண்டீரே
தலையில்விதியெனவே சாற்றினள்தோளியுடன்
மலைவுதெளிந்து மாதேயென்தாய்மாரே
எங்களுக்குத்தாயே யினியாருநல்த்துணைதான்
தங்கடங்கள்தீரச் சாற்றுமெங்கள்மாதாவே
மாதேயென்தோளியரே மன்னருக்குமெந்தனக்கும்
தீதேதுமில்லாத தெய்வத்திருப்பதியில்
நின்றுபணிசெய்து நிறைவாகநில்லுமென
அன்றந்ததோழியருக் கருளிவிடைகொடுக்க
விடைபோலேதோழியர்கள் வேதம்புகழ்பதியில்
சடைவில்லாதேமகிழ்ந்து தாள்ந்தேவல்செய்திருந்தார்
நன்றாகநாரணரும் நாடுமடவார்களுமாய்
ஒன்றாகமக்களொடு வொத்தளமாய்த்தானிருக்க
பெற்றவுபதேசம் பெருநூல்முறைப்படியே
கற்றக்குழலார் கனமானதேவியரை
ஏகமறியயிசைந்து மணம்புரிந்து
வாகாய்பரனும் மகிழ்ந்திருந்தாரம்மானை

இனியிந்தயிவ்வுகத்தில் யாமனுப்பங்கோலமதை
தனுவைக்குறைக்க தனதுள்மிகவடக்கி
நடந்தும்நருள்கள் நல்லன்னமீகிறதை
இடத்தில்கொடு வந்தீயுங்களென்றுமிக
சொல்லிநாங்கூட சுவாமிமிகயிருந்து
நல்லமக்களோடு நாங்கூடிவாழவென்று
ஆராதனேச்சொருபமடக்கினருள்மனதில்
ஊரானதில்ப்பிச்சையுங்களுடமுப்பாலே
இடஞாயமில்லே யென்னிடத்தில்கொண்டுவந்து
விடநானுங்கூடி விருந்துதர்மமேற்றிடலாம்
என்றுரைக்கநருள்களெல்லோருஞ்சம்மதித்து
கொண்டுவந்துவிட்டார் கூடிவந்துநாரணரும்
மாதர்மக்களோடு மாயன்மனமகிழ்ந்து
தாதரிருந்து சாப்பிட்டாரம்மானே
கூடியிருந்துக் குலாவியமுதேற்று
பாடிமகிழ்ந்து பரமன்வரும்நாளேயிலே
பின்னும்பெருமாள் பிள்ளேகளேத்தான்பார்த்து
மன்னும்பெரியமக்கள் மக்கள்மாதர்களே
உங்களுட வீட்டி லுற்றவிருந்தருந்த
மங்களமாய்யெந்தனுக்கு மாவிருப்பமாயிருக்கு
நான்வந்தென்பேரால் நாட்டுமிணத்தாங்கல்களே
தான்வந்துபார்க்கச் சந்தோஷமாயிருக்கு
என்றுரைக்கநாத னிசைந்தகுலச்சான்ருேர்கள்
நன்றுநன்றெங்கள் நாராயணக்குருவே
எப்போதுநீர்வந்து ரச்சிப்பீரென்றுமிக
தர்பரனேநாங்கள் சடைத்துமுகங்கோடி
மழைகாணுப்பயிர்போல வாடியிருந்தோமய்யா
பிழையானதுபொறுத்துப் பிள்ளேகளேயாண்டுகொள்ளும்
ஆண்டுகொள்ளுமையா வாதிமகாபரனே
பூண்டுகொண்டோமும்முடைய பொர்பாதம்நாங்களென
தொழுதுவணங்கிச் சுவாமிமிகவரவேணுமென்று
முழுதுமனேயில் முகித்தமுறைபந்தலிட்டு
பந்தலிட்டுநல்லப் பரிமேல்க்கட்டிகட்டி
சந்தமுடனேதலேவாழையும்நிறுத்தி
அம்மைமாரவரவர்க்கு வரங்குமிகவகுத்து
செம்மையுடன்மாயன் சிறந்திருக்கமேடையிட்டு
கட்டுமேல்க்கெட்டி யென்கனிபலதுங்கொணர்ந்து
வெட்டிராமிச்சி மிகுத்தபன்னீர்சந்தணமும்
வாடைகமகமென மலர்ப்பிச்சிமாலேதூக்கி
மேடையலங்கரித்து விதானம்பலதணிந்து
அய்யாவுக்கமுது தானகனிவகையும்
மெய்யானதாய்மார்க்கு வேண்டுகின்றதீன்வகையும்
கூடவந்தநருள்குக் கோப்புபலசேகரித்து
வாடவிடாமல் வஸ்துபலதீன்வகையும்

மேளத்தொனியும் வெடிவாணக்கோப்புடனே
காளடம்மானங் கடியசிறப்புடனே
அய்யாவைநன்ரு யானபரிமேலேற்றி
வையாளிகொண்டு மாதாவைத்தொட்டில்வைத்து
ஆடல்பாடலுடனே யரம்பைக்குரவையுடன்
நாடதியநாரணருக்கு நல்லவிருந்தெனவே
சான்ருேரவர்கள் தான்கூட்டித்தங்களுட
மீண்டோர்மனையில் விருந்துமிகக்கொடுத்து
நாரணர்ச்குச்சான்ருேர் நல்லசுருளும்வைத்து
காரணர்க்குநல்லக் கனபட்டுகள்கொடுத்து
அம்மைமாரவர்க்கு வதிகப்பட்டுச்சேலேகளும்
செம்மையுடன்கொடுத்துச் செய்வார்விருந்தெனவே
விருந்துகொடுத்து மேலதியநல்சிறப்பாய்
திருந்துழவர்பதிக்குத் திரும்பக்கொண்டேவிடுவார்
இப்படியேமாயவரும் யேற்றசான்ருேர்களுட
மைப்புடையவீடோறும் மாயன்பதிதோறும்
விருந்துமருந்தி வேதாகமம்போலே
பொருந்துமிகனே புரிந்துமிகவாள்ந்து
இன்னமொருபெண்ணேற்றமடந்தையரை
நன்னகரிமெய்க்க நாமணங்கள்செய்யவென்று
கேட்டுப்பரிசமிட்டு கிழர்ந்துமுகூர்த்தமிட்டு
நாட்டுநருளறிய நாரிமின்ஞர்தானிருக்கும்
ஊரிலவர்சென்றுற்ற மங்களம்புரிந்து
பாரிலகமகிழ் பதியில்வந்துதானிருந்தார்
பதிதனிலேவந்து பாவித்தகமகிழ்ந்து
விதியால்பெரிய விருதுக்கொடிகள்க்கெட்டி
சொத்தாஸ்திவஸ்து தொகையெண்ணமில்லாமல்
வஸ்தாஸ்திபேரில் மனதுமிகநாடி
நிலங்கரைகள்சுற்றி நிர்ப்பயிர்கள்தன்னினவாய்
தனம்புகழும்நாதன் தனதுளகமகிழ்ந்து
பொன்ஞனபெண்களுக்குப் பொசுக்கும்பலவஸ்துகளும்
கண்ஞனமாயன் கையாரவேகொடுத்து
நடத்திப்பெண்ஞரை நல்லவொழுங்காக
இடத்திலிருத்தி யிகனேபுரிகையிலே
எம்பெருமான்நாட்டு யிகனேநிறைவேற்றி
பொன்பதியில்நாமேழும் புரிந்துதிருநாளும்
நடத்தித்திருமால் நாட்டுக்கணக்கும்பார்த்து
தடத்தின்வளியாய் தானிருந்துள்ளாராய்ந்து
வந்தநாள்வந்து வையகத்துச்சோதனேகள்
இந்தநாள்வரைக்கு மிருந்துநாம்பார்த்ததிலே
மிச்சமிந்தசாதியென்று மேலோர்மிகவறிந்து
அச்சமில்லாற்சாதி ஆதிச்சான்ருேர்களேயும்
விலேபோட்டுஆளடிமை மேவிக்கொள்ளவேணுமென்று
மலேயாமலென்பெருமாள் மனதிலுற்றுச்சான்ருேரை

உயிரறிந்துநல்ல விலைகூறியாளடிமை
மெய்தறிந்துநாதன் முழுதடிமைகொண்டனராம்
கொண்டவடிவமைக்கு ளச்சாதியானேரை
அண்டமறிய ஆகத்தெழிந்தெடுத்து
சேத்துவைத்துக்கொண்டார் சிவஞானபொக்கணத்துள்
காத்துவந்தபெண்களுட கற்பறியவேணுமென்றும்
பெத்துவந்ததீர்ப்பு பிறமாணப்படியே
சித்துவொன்றுசெய்ய சிந்தைதனிலுற்றனராம்
உற்றமனதிலுபாயமதுவாக
வஸ்துவகைபேரில் மகானேட்டமாயிருந்து
பொன்னுபணம்காசு பெரியநிலமதிலும்
தன்னுள்நினைவாய்த் தானிருந்தாரம்மானை

விருத்தம்

இப்படியிவர்தான் பாரிலெண்ணியகருமமெல்லாம்
ஒப்புடன்முடித்து தன்னுலூணியதெல்லாந்தோன்ற
வைப்புடன்யாமங்கூறி மனுக்களைதெளிந்துயேத்து
இப்புவிவிட்டுக் குண்டமேகிடமனதிலுற்ருர்

விருத்தம்

ஏகிடமனதிலுற்று யிருக்கின்றவுபாயந்தன்னை
வாகிடமிருக்குமாதர் மனைவிகள்மக்கள்ச்சான்ரோர்
தாகிடச்சீசன்மார்கள் தங்களுமறியாவண்ணம்
கோகிடக்குண்டஞ்செல்லக் குருவையும்நாட்டமான

விருத்தம்

மனதிலுற்றமாயன் மாதர்கள்மக்களோடும்
தனதுளமகிழ்ந்துக்கூடித்தயவுடனிருக்கும்போது
எனதுடல்காணுவண்ண மின்னமுஞ்சிலநாள்பாரில்
தினமுடல்வாடிநீங்கள் தேடுவீரென்னைத்தானே

விருத்தம்

தேடியேயிருக்கும்போது தேவியர்மக்கள்காண
நாடியசொருபங்கொண்டு நான்வந்துநடுக்கள்கேள்ப்பேன்
பேடிகள்நினைத்திடாமல் பேசினநூல்ப்போல்கண்டால்
வாடியேயலையாவண்ணம் வாள்தர்மப்புவியில்வாள்வோம்

விருத்தம்

என்றவர்சிரித்துக்கொண்டு யிருந்ததைகவனியாமல்
விண்டவர்நழியாய்ப்பேசி விடுத்ததைமக்கள்சான்ரோர்
என்றைக்கும்ஆள்வாரென்று யிருந்தனரவர்களெல்லாம்
குண்டத்தைமனதிலெண்ணிக் குருவையும்நாட்டமானர்

விருத்தம்

குருவேவெனக்குநீரருளிக் குறித்தவாண்டுயிதுவரைக்கும்
ஒருசொல்மொழியேக்குறையாமல் வுகத்துத்தீர்ப்புக்கூறிகலி
கருகயாம்மிகவுரைத்துக் கைக்குளெடுத்தென்மக்களையும்
வருகக்குண்டமனதிலுற்றேன் வந்தேக்கூட்டிக்கொடுபோவீர்

நடை

ஆதியேயெந்தன் அப்புவனந்தகுரு
சோதியேயெந்தன் சொந்ததிருபத்திருவுளமே
இந்நாள்வரைக்கு மிவ்வுலகில்போயிரென்று
அன்னாளுரைத்த அப்புநாராயணரே
இனிநானுமது யிலங்கும்பதியில்வர
முனியானவர்க்கு முற்றவிடையருளும்
ஆண்டாச்சுலக்கு வடுத்திருக்குதையாவே
வேண்டாமுலக மேலுலகமேயளேயும்
அங்கஸேயுமைய்யா ஆதிமுனியெந்தணேயும்
தங்கயினிமாட்டேன் தரிப்பிடமங்கேயல்லால்
என்றுவருந்தி யிவரிருக்கும்நாளேயிலே
மன்றுதணேயாளும் மாயத்திருமாலும்
வரங்கொடுத்தநாளும் வைத்தலக்கும்பார்த்து
பரமிருந்துதேர்ந்து பாலன்றன்ஸேவருத்த
வேணுமென்றீசுரரும் வேதத்திருமாலும்
கண்ணுமகஸேக் கடியவிமானமதில்
ஏற்றிவைத்துமாமுனி வரிருபுறமுஞ்சூழ்ந்துவர
சாத்திரியோர்ஞானச் சர்க்குருவைத்தானனுப்பி
வைகுண்டவீட்டை வாஞேரலங்கரித்து
மெய்கொண்டநாதன் விளம்பிஞர்மேலுலகில்
மாஞேர்களெல்லாம் வைகுண்டவீடதையும்
தானமுடனெல்லாஞ் சணமேயலங்கரித்தார்
சற்குருவான சடாய்முனியிங்குவந்து
மெய்க்குருவான வீரவிசையனுக்கு
சொன்ஞரனந்தச் சுகமாலழைத்தாரென
நல்லதுதானென்று நவின்றவரையும்புகழ்ந்து
சொல்லவரைமணிக்கு சென்றிங்கேநில்லுமென்று
மாதர்மஸேமறந்து வாள்வைமிகமறந்து
தாதருன்மறந்து சடலவுடைமறந்து
நன்மைபலசோபனமு நழிப்பேச்சுமறந்து
செம்மைக்குருவாய் செம்மிமூலமடக்கி
மூலமதிலடக்கியுட லூற்றைதாணிறக்கி
காலேமடக்கி கண்ணனூர்தாஞேக்கி
கைக்குள்நின்றமக்கள் கலங்கிமிகப்பயந்து
நிற்கும்நிஸேவை நிஸேவிலறிந்துவைத்து
நடக்கும்படியான நல்மொழிகளுமுரைத்து
உடற்குள்குறியாய் வொத்துமிகவாளுமென்று
சொல்லிமக்கள்கையைத் திருமுகத்தோடேசேர்த்து
இல்லியல்பாய்வாளுமியா முழித்துவாரேமென
பதருமல்நீங்கள் பண்பாயொருப்போலே
சிதருமல்நீங்கள் செய்யவனுகூலமுமாய்
இருந்துமிகவாளு மென்றுநாமங்கொடுத்து
திருந்துபுகழ்மாயன் சிறந்தவோராயிரத்து

ஓரிருபத்தாறு மோங்குமிடபமதில்
சீரியல்பாயுள்ள தெய்திஇருபத்தொன்றில்
பூறுவபச்ச பூசநச்சேத்திரத்தில்
வாறுடையசோம வாரம்பொழுதூர்ந்து
பன்னிரண்டுவேழை பாவிக்கும்நேரமதில்
மெய்கொண்டச்சான்ரூர் மேலாசையுள்ளிருத்தி
கைகண்டமாமுனிவர் கட்டாய்மிகச்சூழ
வைகுண்டமேக வழிகொண்டாரம்மானே
வைகுண்டமானூர் வாய்த்தவிமானமோடு
வானலோகத்தார் மலர்மாரிதான்தூவ
விமானமதிலேறி மேலோகமீதில்வர
தேவாதியெல்லாந் திருப்பாட்டுக்கூறிவர
மூவாதியெல்லா முகமலர்ந்துதானிருக்க
தெய்வரம்பைமாதர்த் திருக்குரவைதான்பாட
மெய்வரம்புநாதன் மெய்குண்டமீதில்வந்தார்

### விருத்தம்

வந்தபொழுதேமறையோரும் வானோர்தேவரிசிமாரும.
நந்தன்பெருமாள்மகனெனவே நாடிவணங்கிமிகப்போற்றி
எந்தன்பிரானேயெங்களுக்கிரங்கி யிமையாள்க்கொண்டவரே
சிந்தரெவருமிகப்போற்றத் திருமால்மகனைக்கண்டாவினரே

### விருத்தம்

கண்டேமகனைமிகவாவி கமலமுகத்தோடுடனணைத்து
பண்டேசெகலில்மகரமதுள் பண்பாய்யிருத்தியருளிவைத்த
நன்ரூர்மொழியுங்குறையாமல் நடத்திக்கணக்கின்பிறகாரம்
இன்றேயெழுந்திங்கேகிவந்த யிழமான்கன்றேயென்ருவினரே

### நடை

ஆவிமகனையன்போடுறவணைத்து
தாவிமகன்மேல் தயவுமிககூர்ந்து
மாமுனிவர்தங்களையும் வாருங்கோநல்லதென
தாமுனிந்துமகன்மேல்த் தயவாகத்தாயாரும்
அன்புமிககூர்ந் தருமைமகனையாவி
இன்புருகநன்ருய் யிருந்தாள்காண்லச்சுமியும்
சந்தோஷமாக சங்கரருந்தான்மகிழ்ந்து
வந்தாயோவென்று மகிழ்ந்துகொண்டாரம்மானே
நான்முனிவனும்வேத நல்லதெய்வேந்திரனும்
தாமுமிகமகிழ்ந்து சந்தோஷங்கொண்டனராம்
சரசுபதிமாதும் தாயீசொரியாளும்
பரசுராமன்முதலாய்ப் பண்பாய்மகிழ்ந்திருந்தார்
கைலையுகமுங் கமண்டலமேள்புவியும்
அகிலமறிய யரனூர்வைகுண்டமென
எக்காளபூரிகையுமிடம்மானமுடன்
முக்காலத்துள்ள முனிமார்முளக்கிமிக
ஈரேழுலகும்யிவர் செய்தநல்த்தவம்போல்

ஆரேதுஞ்செய்ய வடங்காதிவர்தவந்தான்
பிறவிநாசக்கலியன் பொல்லாதவையகத்தில்
திறவிதனிலிருந்து செய்துதவமேற்றுவரோ
கண்டால்ப்பவஞ்சூடுங் கலியனுடவையகத்தில்
தண்டரழமானதவம் தாக்கிநிறைவேற்றுவரோ
கலிதுடருமுன்னே கனகதுவராயுகத்தில்
சலியாமல்வாள்ந்த தர்மமுதல்தவத்தோர்
பதறிநடுங்கிப் படாதினிமேலென்றுசொல்லி
குதறிமலேந்துக் கொடுவானமாமுகடும்
கெடுவுங்குகையுங் கீழுமேலுனுளேந்து
முடுகுமுன்னேடி நுழைந்தார்மிகப்பதறி
அப்படியேநல்ல வறிவோர்பதறிமிக
தப்பிவரயிவருஞ் சடையாமலவ்வுகத்தில்
முப்பிறவியுந்தியிலு முதித்துகுதித்தவராய்
அவ்வுகத்துக்குள்ள யாண்டுமூவாறுவரை
செவ்வுமகாஞானத் திறவிவெளிநாடி
பவமறுகாவண்ணம் பாரத்தவம்புரிந்து
சிவமதுவைக்கண்டு செயல்பெற்றுமவ்வுகத்தில்
மாதுக்கிழையோடு மக்கள்பலசொத்தோடும்
சீருமனேயோடுஞ் சிறந்தபலஞாயமொடும்
இருந்துயிகவாழ்தெள்ப்பாவஞ்சூடாமல்
சிறந்தவைகுண்டச் சிவவீடுகாண்பவராய்
பெரிதுபெரிதெனவே பெரியமுனிவோரும்
அரிதுஅரிதெனவே யகமகிழ்ந்துகொண்டாடி
கொண்டாடிநாதந் குருவேசரணமென
மன்ருடுங்கைலே வானவரும்போற்றிநிர்க்க
பூமிதனில்மக்கள் பெரியகுலச்சான்ரோர்கள்
சுவாமியுடதேவி சுற்றமடமாதர்களும்
அன்பானதொண்டர்களு மசந்துமுகங்கோடி
வன்பானபேர்கள் வசையாய்மிகநகைக்க
வைகுண்டமேகவழி கொண்டார்நம்மளேய்யா
என்றுபுலம்பி எல்லோருந்தான்தேறி
முன்றுமொழிந்த முறைப்படியேநம்மளேய்யா
நடந்தார்தானல்லால் ஞாயம்வேறில்லேயென்று
மாதத்திருநாளும் வாரமறவாதபடி
நாதன்றனக்கு நாமள்செய்வோமெனவே
கோவிலதுவைத்துக் கூண்டதிருநாள்நடத்தி
சேர்வைசெய்துமக்கள் தினஞ்சூழ்ந்துபோற்றிநிற்க
நாதனுடதேவி நாயகிமாரெல்லோரும்
சீதமணவாளருட சீர்பாதமுண்டெனவே
துயரமதாய்வாடிச் சிவனேசெயலெனவெ
இயல்புதருவீரெனவே யிருந்தார்தவமுறைபோல்
நண்பரெல்லாம்வாடி நாராணுபோற்றியென்று
அன்பர்முறைபோல அகமகிழ்துதானிருந்தார்

பொன்மேனிக்கூட்டைப் பொதிந்துமணிக்கோவில்வைத்து
தென்மேனிச்சான்ருேர் திருநாள்நடத்திவந்தார்
இப்படியேயன்போரேந்திழை மாரெல்லோரும்
முப்படியேசொன்ன முறையெனவேயிங்கிருக்க
அப்போது கைலேக்கானகுருநாரணரும்
மைப்போலினிய மகனேமிகமுன்னிறுத்தி
கூண்டமணியே கோகுலமேகர்பகமே
ஆண்டமணியே யருளுமெந்தன்கண்மணியே
எந்தன்மணியே என்னுதவோவியமே
உந்தனேநான் பெற்றுற்றகலியுகத்தில்
இருத்தித்தவமேற்ற முறையும்நடத்தி
வருத்திநருளே மாசோதனேபார்த்து
களித்துக்கொண்டாடிக் கலிநெகிழநல்லோரை
தெளித்துவரவென்று செப்புமுறைவரையும்
இருந்துநீயெங்கே யிகனேநடத்தினதை
பொருந்தும்படியே புகன்றிடுநீநானறிய
மாயவர்தான்கேள்க்க மனதுமிகமகிழ்ந்து
ஞாயக்குருநாதன் நாடிமிகவுரைப்பார்
அய்யரேக்கோவே அப்புவேநீர்கேளும்
பொய்யர்வாள் கலியில்புரிந்துதவசாக
ஆறுவருசமதிகத்தவம்புரிந்து
வாறுமுன்னீறும் வாரியிலேவந்திருந்து
கேட்டுமகிழ்ந்து கெணித்ததின்மேல்நல்வளங்கள்
தாட்டாண்மையாய் நீருந்தான்மொழிந்தசொல்படியே
நித்தந்திருநாளும் நேரிழைமாருள்ளதையும்
புத்திரரையுஞ்சேர்த்துப் பெண்களேயும்மாலேயிட்டு
மாலேயிட்டுப்பெண்களோடு வாழ்ந்துமகவீன்று
கோலமணிமாதருக்கு கோடிபலவஸ்துவரை
தேடிக்கொடுத்துத் தேசக்கலிநாடழிய
ஆடிக்களித்து யாமமிகக்கூறி
நல்லோரையெல்லாம் நாடித்தெளித்துமிக
வல்லோரையுந்தன் வைகுண்டமதில்வந்தேன்
ஆஸ்திபலதும் ஆயிழைமார்மக்களேயும்
கோத்திரமுங்கண்டேன் கூறிவைத்தலக்கில்வந்தேன்
அந்தசிறப்போடங் கிருந்தேனுைக்கால்
இந்தவைகுண்டமி யான்வந்துகாண்பேனே
என்றுகுருமகனு ரிசைந்தவுடன்நாரணரும்
அன்றுவயச்சிருந்த வானமுனிதங்களேயும்
இருபேரையும்வருத்தி யாமுரைத்தவார்த்தையதில்
ஒருமொழிதானுகிடினு முலேவிதங்களுண்டோசொல்
தவருமல்ச்சொல்வீர் தப்பிதங்களுண்டானுல்
பதருமல்ச்சொல்வீர் பரம்பெரியமாமுனியே
யெனக்கறியாவண்ணமியார்செய்வார்மாமுனியே
தனக்கறியநீங்கள் சாற்றுவீருள்ளபடி

என்றுமகாக்குருவுமியம்பமுனிமாரும்
நின்றுவாய்புதைத்து நெடியோன்பதம்பூண்டு

விருத்தம்

கண்ணுக்குள்மணியாய்நின்றக் காரணக்குருவேஞான
விண்ணுக்குளெவர்க்குஞான வெளிச்சுடரானமூர்த்தி
ஒண்ணுக்குளொன்ருய் நின்றுலகீரேளணைத்துங்காக்கும்
அண்ணுக்குங்கடந்தசோதி வறிவுளமறியாதேதோ

விருத்தம்

எறும்புகடையானைமுதல்பேதாபேதமெண்பத்து
நாங்குயிர்களுக்கு மேகமாக
உறும்பொருளாய்நின்றகுருநீயே யல்லாருலகதிலே
யாருளதோவுடையமாலே
செறும்பொருளாயுமதுமகனங்கேவந்து செய்தவசுமுறை
யதிலுநடத்தைமேலும்
கறும்பொருள்போலெங்கள் மனதறியவொன்றுந்
தப்பிதங்களில்லையென தாள்ந்துநின்ருர்

விருத்தம்

தப்பிதங்களில்லையையா தவத்துக்காதிதண்மைமிகு
குணமுடையதர்மசீலன்
உப்பரிக்கைமீதிருந்துவரசேயாளஉன்புவிக்கு
வாசையல்லாலுலகில்லை
மைப்பிதுக்கமானதொருகுழலாரோடும்மக்களோடு
வாழ்வோடும்வாழ்ந்தவுள்ளம்
நர்பிதுக்கமானகுருநாட்டமல்லால்நானிலத்துள்
ளாசையில்லைநாங்கள் கண்டோம்

விருத்தம்

நாங்கள்மிகக்கண்டோமிவருள்ளம்போலேநாடுபதினலதிலும்
தவத்தோர் பார்த்தால்
காணங்கரிதுவெங்களுடகருணைநாதாகலியுகத்தை
வேரறுத்தக்கடவுள்பாதம்
ஓங்கவவரடியிணையைப்பணிந்தென்னுமுமுழியங்கள்
செய்தவரோடுகந்துநிர்க்க
பாங்கருளிச்செய்துமிகவாண்டுகொள்ளும்பரமகுருநாத
னென பணிந்துநின்ருர்

விருத்தம்

நின்றவரைமுகம்நோக்கி மாயன்ருனும்நிலைவரங்களுள்ள
தெல்லாமெனக்குள்ளாச்சு
இன்றிவரைநீங்கள்கொண்டு நமதுகுண்டத்தேகபதி
வாசதெருவெல்லாங்காட்டி

கொண்டுவந்தத்தயிலமதில் மூழ்கிப்பின்னுங்கொடு
வரவேணுமெனக்கூறவாஞேர்
டுண்டுபலமேளமொடுதாளத்தோடுவுற்றரதமீதினில்
வைத்தும்பர்சென்ருர்

விருத்தம்

சென்றவர்கள்நாரணனின்குண்டமானசிறப்பையெல்லாம்
காட்டிமிகத்தெளிந்தசந்த
தன்றமலர்வாள்தங்கப்பதத்தில்மூள்கிதண்டிகையின்
மீதிருத்திதயவாய்வாஞேர்
கொண்டவர்கள்மாயனுடபதத்திலிட்டுக்குலாவியந்த
வாஞேர்கள்கும்பிட்டேற்ற
மன்றலணிமாயவருமீசர்தானும் வைகுண்டமாமுனி
யெனவேவழங்கினுரே

விருத்தம்

வளங்கியந்தமாயவரும் வாஞேர்தம்மைவரவழைத்து
நீங்கள்மகாமேர்பில்ச்சென்று
இழங்குருமானைகுருவைந்தராசரின்றுபுவி
யீரேழுமடக்கியாள
பளங்குருநூல்முறைபோலே பாரில்த்தோன்றிப்
பதியாளவந்தாரெனபதிப்பீரென்று
வளங்கமிகமறையோர்கள்மேர்விர்சென்றுமாயனுரை
தவருமல்வகுத்தார்தானே

விருத்தம்

வகுத்திடவேமுன்னுரைத்தமுறைபோலுள்ளமகாபெரிய
கிரீடமுமவர்க்குச்சூடி
பகுத்துடையசெங்கோலும் பரமநார்தன்பரம்பெரிய
முத்திரியும் பலன்கள்யாவும்
தொகுத்திடப்பொன்னீராள்துயிலுமீந்து துதிச்சிங்காதன
மீதில்தூக்கிவைத்து
மகுத்துவமாய்வாளுமெனவாஞேர்போற்றமறையவரும்
யீசுரரும் வரமேயீந்தார்

விருத்தம்

ஈந்திடச்சிங்காசனத்திருந்தவரேதோசொல்வார்
கூர்ந்திடயெனகருவிங்கே குணமெலாம்நலமதாக
சார்ந்திடயருளிச்செய்தீர் தர்பராவொப்பில்லானே
ஓர்ந்திடவெனக்குவங்கே யுகந்தவருண்டேமுன்னம்

விருத்தம்

ஆடையும்பொன்னுங்காசுமன்னமும்பாலுமுந்தன்
நீடியவுதவியாலே நினக்கவரிதுநாள்மட்டும்

வாடியேமுகங்கோணுமல் மனத்தயவதிலைீந்து
தேடியமக்கள்தன்னைச் சிந்தையில்நினைக்குதென்றார்

விருத்தம்

அய்யரேயிதுநாள்மட்டுமவரெனக்களித்தசெல்வம்
வையமேதரியாதெந்தன் வாயிஞலுரைக்கப்போமோ
மெய்யெல்லாமவர்கள்பேரில் மேனியுமுருகுதைய்யா
செய்யனேயவர்களெந்தன்றிருப்பாதம்வணங்கச்செய்வாய்

விருத்தம்

திருப்பாதம்வணங்கச்செய்வாயென்றெனத்தெளிந்தஞானி
கருவதிலுதித்தசான்ஞேர் சாதியில்க்கௌவையாகி
குருபதம்வணக்கஞ்செய்து கூறியமொழியைக்கேட்டு
மருவணீதுளசிபூணும்மாயனும்மகிழ்ந்துசொல்வார்

விருத்தம்

கைகண்டமணியேயெந்தன்காரணக்குலமேகன்றே
வைகுண்டமணியேயுந்தன்மனதலைந்திருக்கவேண்டாம்
மெய்கொண்டமணிகளான மேன்மக்கள்ச்சான்ஞேரெல்லாம்
பொய்கண்டகலியைவிட்டுன் பொர்பதம்பெறுவார்கண்டீர்

விருத்தம்

கலியையெரிக்கத்தவசிருந்தகருத்தையறிந்துவுன்னிடத்தில்
வலியவந்துள்பதம்வணங்கிமனதுக்கேர்க்கநின்றவரும்
பொலியவுனக்கமுதுடனேபுடவைபலதுமீந்தவரும்
ஒலியத்தானதர்மமதுமூவந்தேயளித்தோர்மிகவாழ்வார்

விருத்தம்

இரக்கும்படிபோலவடிவெடுத்துயிருந்துகலியைமுடிக்கவங்கே
உரைக்கும்மொழியைக்கேட்டு னக்குதவிபுரிந்தவுத்தமரும்
கரைக்கும்படியேயமுதளித்துக்கைக்குள்ளேவல்புரிந்தவரும்
மறைக்குங்குருவேயென்ஞணவந்தேசேர்வாருன்பாதம்

விருத்தம்

உடுக்கத்துணிகளில்லாமலுலகமதிலேயெழியவனாய்
முடுக்கமதுவேயில்லாமல்முடியும்விரித்துப்பேயனைப்போல்
கடுக்கக்கலியையெரிப்பதர்கு கவுள்ந்துசிறைநீயங்கிருக்க
அடுக்கவுனக்குவுதவிசெய்தாரவரேயுனக்குமகவாமே

விருத்தம்

ஆமேயவர்களல்லாமதிகமகனேநீயிருந்து
ஓமேயறியாவண்ணமுந்தாலுலகிலுன்னைப்பளித்தவர்கள்
சாமேதீயில்த்தான்கிடந்துசடமேநரகுக்குள்ளாகி
வேமேயுந்தன்மேலானைவிறுமாபத்ததிஞணையிதே

நடை

ஆணைமகனே அசையாதகண்மணியே
சாணாரென்குலங்கள் தப்பாமலுன்னுடைய
தர்மபதிராச்சியத்தில் தான்வாழ்வார்சத்தியமாய்
வர்மமுனைப்பேசி வம்புசெய்தநீசகுலம்
அழுந்தநரகமுதுள்ளாகுவார் சத்தியமாய்
குழிந்தமனதுடைய கோவேயென்கண்மணியே
மலங்காமல்வாழ்ந்திருநீ வையகத்திலெப்போதும்
பிலங்களதுபார்க்க பொய்வேசமொன்றனுப்பி
மகனேநீசொன்ன மானால்முறைப்படியே
உலகமீதில்யார்தானுகந்திருக்கிறரெனவே
பார்த்துவரச்செய்யவோர் சொரூபம்படைத்துவனுப்புகிறேன்
ஏற்றந்தச்சாதிக்கின்னமீராறுகலை
அடுக்கும்வரைநீ யவர்பேரில்நாட்டமதாய்
முடுக்கமுடனிந்தவுற்றசிங்காசனத்தில்
தவம்போலிருந்து தானளுகுண்டமதில்
ஆழுநீவரசு ஆண்மைக்குறையாமல்
நாளும்வரைமகிழ்ந்து நலமாகவாள்ந்திருநீ
அனுப்புகின்றபொய்ச்சொரூபமாங்காரமற்றவுடன்
மனுப்புகழநாமள் வையகத்தின்மீதிறங்கி
நிச்சித்துவைத்த நினைவானதின்பிறகே
வச்சிருந்தநல்ப்பதியில் வாழலாங்கண்மணியே
என்றுரைத்தமாகலியில் யேற்றபொய்வேசமதாய்
குன்றுதனிலிருந்துக் கோலமதுதானனுப்ப
வந்தங்குதித்ததுகாண் வையகத்திலம்மானை
நந்தனனென்பான் நாரணன்கோன்ராமனென்பான்
முந்தச்சுவாமிகள்க்கு முன்னுதித்துவந்தனென்பான்
செந்தழல்போலநின்றிடுவான் சிட்டுப்போலேபறப்பான்
கண்டகண்டவர்ப்புதங்கள் கண்ணரைக்காட்டிடுவான்
பண்டையுள்ளவைப்பைப் பாரறியக்காட்டிடுவான்
தீர்க்கமுடன்அற்புதங்கள் திடீரெனவேகாட்டிடுவான்
மார்க்கம்பலதணிவான் வைகுண்டமென்றிடுவான்
கடலில்நடப்பேனென்பான் கனலிலிருப்பேனென்பான்
மடவாரையெல்லாம் மாலையிடுவேனென்பான்
இப்படிகோடி யெண்ணறிந்தயற்புதங்கள்
செப்பிடுவான்பூமியிலே தேசநருள்மலங்க
சூச்சமனேகஞ் சொல்லவொண்ணவித்தையதாம்
தூச்சமறியாமல் தொல்புவியெல்லாமயங்கும்
இந்தப்படியா யிருக்கின்றநாளையிலே
முந்தவைகுண்டமுடி சூடிவாழ்ந்திருப்பாய்
சிவனுமையாளுஞ் செய்யதிருமாலும்
தவமுனிவர்களுஞ் சரசுபதிமாதிருவும்
நான்முகனும்வேத நல்மறையோரும்
தாமுனிந்தாகமத்தின் றன்மையதின்படியே
தொடுத்தகலியென்று தோன்றிக்குதித்தவரை

கொடுத்தகணக்கின்படியே கொல்லக்கலிதனையும்
வானமதுகுளவி மண்பூமியம்மியென
தானமதுநிரப்பாய்த் தன்னுலிருந்திடவும்
உண்டானதெல்லாமுடன் கரிந்துநீறிடவும்
அண்டருலகம்வரை யசைந்துமுழித்திடவும்
மாயவருமீசர் வைகுண்டமாமணியும்
தாய்தமர்களான சத்தித்திருவுடனே
வைகுண்டரான மகனைநடுநிறுத்தி
மெய்குண்டத்தேவர் மிகுகூலமாகிவர
முத்திச்செங்கோலு முழிப்புச்சங்கும்பிரம்பும்
பத்தியுள்ளநாரணர்தான் பாலனுடகைகொடுத்து
ஆகாயமாகவவர்கள் மிகவந்துநிர்க்க
வாகாகநாரணரும் மகனைமுகம்நோக்கி
நல்லமகனே நாடுந்தவத்தோனே
செல்லமகனே திருபெற்றகண்மணியே
உந்தனக்கேற்ற வுற்றமனிதர்களும்
சந்தமுள்ளதேவியருந் தனதுகந்தபுற்பூடும்
ஆகின்றபச்சிகளும் மானமிருகமதும்
பாகுசெறிவிருச்சம் பண்பானநர்ப்பதியும்
யாதாகமுன்னே யாமிட்டநூற்படியே
நீதான்வருகவென நினைத்துவிடுயென்மகனே
நினைத்தார்வைகுண்டம் நினைவின்படிபோலே
மனத்தயவுகூர்ந்து மலமலென நல்மனுவோர்
முழித்தார்வைகுண்டர் மொய்குழலார்மக்களுமே
களித்தேயிருந்தக் கருத்தின்படியாலே
பச்சிமிருகம் பால்மிருகச்செந்துகளும்
அச்சுதற்கேற்ற வாதிவிருச்சமதும்
புதுப்பூமிபுதுநிலவு புதுவானம்புதுவாயு
குருபூமியான கூண்டதங்கபொன்பதியும்
பொன்பதியும்நற்தெருவும் பெரியதெற்பவாவிகளும்
அன்பதியநன்மனுவு மனுகூலமாயுதித்தார்
எம்பெருமான்முன்னே யாமமுரைத்தபடி
வம்பரெல்லாமாண்டார் மனதுகந்தோர்தான்முளித்தார்
தர்மயுகத்துக்குத் தானேற்றவஸ்துகளும்
நன்மையுடனுமள் நாடிக்குதித்ததுண்டால்
நல்லயுகதர்மம் நாடிமிகக்குதித்தார்
வல்லவைகுண்டமதாய் வந்தவுடன்வாருமென்ற
சொல்லியயச்சிருந்த சுற்றமிருகமதும்
நல்லமனுவோரும் நர்ப்பறவையானதுவும்
விருச்சமதுவுமேலுகந்தவஸ்துகளும்
வாருமெனச்சொன்ன வகையெல்லாமமுழித்தார்
ஆருமிகவொவ்வாதரியோன்மிகமகிழ்ந்து
ஆகாத்ததெல்லா மாழிதனைவருத்தி

சுற்றயுகத்தைச்சுற்றி வருத்துமென்று
கற்றைக்கங்கையாள்க்குக் கரியோன்விடைகொடுத்தார்
விடைவேண்டிவாரி விமலன்மொழிந்தபடி
கடல்வாரிசெய்து கமலயுகஞ்சுத்திபண்ணி
கர்த்தனரிநாரணரைக் கடலுமிகத்தெண்டனிட்டு
முத்தனரிநாதன் முன்னுரைத்தநீசனென
குரோணியவனுயிரைக் கொண்டுவந்துமுன்னிறுத்தி
சுரோணிதப்பாவி சொல்லடாவுத்தரங்கள்
ஏழுபிறவியிதுவரையுஞ் செய்துவுன்னை
வாளுநீயென்று வரமருளிப்பார்த்தேனே
இக்கலியில்நானு மிரப்பனைப்போல்வந்திருந்து
மிக்கவுலகறிய வெறிபேயையும்யெரித்து
தண்ணீரால்மானிடர்க்கு சகலநோய்தான்தீர்த்து
புண்ணியமாய்த்தர்மம் புரிந்துமிகவருளி
காணிக்கைக்கூலி காவடியும்நிறுத்தி
ஆணிக்கமாக வம்புவியில்யாவரையும்
ஒருதலத்தில்விட்டுற்ற புத்திசொன்னேனே
இருபுத்தியால்நீயு மென்னைப்பிடித்தடித்தாய்
கட்டியென்னைப்பேயனெனக் கடுவிலங்கில்வைத்தாயே
அட்டிசெய்யவில்லையல்லோ வாண்டியாய்நானிருந்து
பண்டாரமாகப் பார்மீதிலன்பரிடம்
நன்றாகப்பிச்சை நான்வேண்டியேகுடித்து
தர்மமாயல்லோ சனங்களுக்குநோய்தீர்த்தேன்
வர்மமாயென்னை வந்தடிக்கஞாயமுண்டோ
அல்லாமல்முன்னே யானிடத்திலாணையிட்டு
எல்லாமினிமேலிராச்சியத்திலியாதொருவர்
பண்டாரமென்று பாரறியவந்தவரை
அண்டேனவரை யட்டிமிகச்செய்யேனென்று
ஆண்டிகளைநானு மட்டியதுசெய்ததுண்டால்
கூண்டிறந்துபோவோங் கொடிப்பிதிர்களானதெல்லாம்
சேனைதழமிழந்து செல்வமதுதானிழந்து
ஏனைக்குழலோடென் கிளைகளெல்லோரும்
தன்னாலிறந்து சழுநரகம்போயிடுவோம்
முன்னாள்நீசொல்லி மொழிந்தாணையின்படியே
பண்டாரந்தன்னைப் பதைக்கவிடாதபடி
அண்டாமல்நீயு மடித்ததினல்ஞாயமென்ன
சொல்லடாநீதான் சொன்னமுறைப்படியே
கல்லடாநீதான் கவிழ்ந்துநிர்க்குஞ்ஞாயமென்ன
பாவியேநீயேழ்பிறவி பார்மீதிற்றோன்றியதில்
ஆவியறிய அனுப்போலும்நன்மையது
செய்ததுண்டோசொல்லு செவியுனக்குக்கேள்க்கலையோ
மெய்தெரியயிப்பிறவி மிகுயிரப்பன்போல்னாும்
எழியகுலத்திலிகாபரனே தஞ்சமென்று
சுழிமுனையைமுத்திச் சோமனருளுள்ளிருத்தி

உடுக்கத்துணிகளத்து வுண்ணவூண்தானுமற்று
படுக்கயிடமுமற்றுப் பரமாற்றமாயிருந்து
சாதிபதினெட்டதுக்கும் யாமமுறைப்படியே
நீதியுடன்தண்ணீராய் நொன்பலங்கள்நீக்கிவைத்தேன்
நீயறிந்துங்கண்டும் நீனிலத்தோர்தாமறிய
வாயிலிடும்வெற்றிலேக்கு மனுவோர் தடவுகின்ற
சுண்ணும்பாலும் தொட்டுநீதந்தாயோ
எண்ணுமல்நீயும் என்னைமிகப்பழித்து
பாவிநீயென்னைப் பருசுகெடத்தானடித்து
மேவினுனிட்டிருந்த வெற்றிச்சுரைகூடதையும்
உடைத்துத்தகர்த்தாயே வுற்றகந்தைக்காவியையும்
மடத்தனமாய்நீயும் வலித்துக்கிழித்தாயே
தோளிலிடும்பொக்கணத்தைத் தூக்கியென்னைக்கீழ்ப்போட்டு
தூளிபடவுதைத்து துண்டுதுண்டாய்க்கீறினையே
அய்யோநீசெய்த வனியாயஞ்சொல்லவென்ருல்
வையமீரேழும் வளிந்துநிரம்பிடுமே
பத்தினியார்பெற்றப் பாலதியச்சான்ருேர்கள்
மெத்தவவர்நன்ருய் விளங்கிருக்கணுஞ்சிவனே
ஆடையில்லாமல் லமர்ந்திருக்கயிலே
நாடதிகமான நல்லபட்டுநீராளம்
தங்கச்சரிகை தலேப்பாக்குல்லாக்களும்
மங்களமாயென்னை வந்தெடுத்துதான்போர்த்தி
பாலும்பழமும் பருந்தேனுஞ்சர்க்கரையும்
மேலும்நவனிதியும் வேண்டும்பலகாரம்
அன்னங்காய் சொர்னமன்பாககொண்டுவந்து
பொன்னப்பநாரணரே பெற்றவரேதின்னுமென்று
வாயிலெடுத்திட்டு வளமாகயெந்தனுக்கு
சாயத்தலேயணையும் சருகத்தொட்டில்மெத்தைகளும்
பாதங்கீள்கொள்ளாமல் பாலதிசயச்சான்ருேர்கள்
ஈதலிரக்கமுடன் யெடுத்தென்னைதோளில்வைத்து
போற்றிமகிழ்ந்து பூமெத்தைமேலிருத்தி
ஏத்திப்பலகாலுமென் சொல்மிகக்கேட்டு
தாங்கிமிகயிருந்தச் சான்ருேர்களின் பெருமை
நாங்களுரைக்க நாடுமிகத்தாங்காதே
என்னஎன்னப்பவுசு யெனக்கவர்கள்தானீந்து
பொன்னம்பலமீதில் புகள்ந்துமிகவாழ்வாரே
பாவிநீயென்னைபருசுகெடதானடித்து
ஏவிநீவிட்ட யேவலாளிப்போதெங்கே
ஆணுவங்களெங்கே வுன்னுடைபடைகளெங்கே
பூணுகின்றதங்கப் பொன்னுபரணமெங்கே
வித்தாரமெங்கேநீ வீத்திருக்கும்மேடையெங்கே
சுத்தார்கிழைகளெங்கே தோகைமயிலார்களெங்கே
குதிரைத்தளங்களெங்கே கோட்டையெங்கேவாயிலெங்கே
சதிராயணிவகுத்த தாண்டும்படைகளெங்கே
தேரெங்கேவுந்தன் சிங்காசனங்களெங்கே

ஊரெங்கேயுந்தனெழுங்குதளச்சேனைகளெங்கே
மாடமெங்கேகூடமெங்கே மணிமேடையாரமெங்கே
தோடமெங்கேவுந்தன் றேழரெங்கேசூரரெங்கே
ஆயுதங்களெங்கே யம்புதடிக்காரரெங்கே
வாயுரங்களெங்கே வாயில்காப்போர்களெங்கே
துட்டமெங்கேயட்டியங்கே துரத்தனங்களானதெங்கே
பட்டமகங்காரமெங்கே பருங்கிள்ளாக்கானரெங்கே
மாடமெங்கேநீதான் வளர்த்தமிருகமெங்கே
ஆடெங்கேயுந்தனுடரம்பைமாதரெங்கே
வேடிக்கையெங்கே விதித்தகணக்குமெங்கே
ஓடிவுலாவுமுற்ற சாறட்டுமெங்கே
வண்டியெங்கேவுந்தன் வாள்வெங்கேமாச்சியெங்கே
சண்டிப்பயலேவுன் றுடாண்மையெங்கேசொல்
இத்தனையுந்தோற்றிப் போநரகமதில்
சத்திறந்துபோக வுன்றலையில்விதியாச்சே
உன்விதியால்நீயு முயிரழிந்தாயல்லாது
என்னதிகாரத்தால் இயாக்கினைகள்செய்கிறேனே
உன்னால்நீமாள வூளிவிதியானதல்லால்
என்னாலுனைநான் யிடுக்கமதுசெய்கிறேனே
தன்னாலேதான்கெட்டுத் தான்போவாரென்றபடி
உன்னாலேநீயு முயிரளிந்தாய்மாபாவி
ஒருபிறவிதன்னிலுயிரழிக்கக்கூடாதோ
கருவருளும்நாதன் கர்பினைக்கேராதெனவே
பிறவியேழுன்னைப் பெரும்புவியிலேபடைத்து
திறவிப்பொருளோன் சிந்தைமிகவறிய
உகத்துக்குகங்களுத்தமனாய் நான்பிறந்து
மகத்துவமாயுந்தன் மனதைமிகப்பார்த்தேன்
எள்ப்போலேதர்ம மீதிலிரக்கமுடன்
நன்பேதுங்கண்டிலனே நன்றிகெட்டமாபாவி
ஏழுபிறவிலுமென்பேருசொல்வோரை
கோழுசெய்தவரைக் கோட்டிகொண்டேயடித்து
சிறைக்காவல்தன்னில்த் திட்டவிலங்கில்வைத்து
அறையானதுகொடுத்து வட்டிமிகசெய்தல்லால்
இரக்கமுடன்றயவில்லையே யுன்னிடத்தில்
அரக்கர்குடும்ப மானதினாலுன்னுடைய
மனதிரக்கமாகாது மாபாவிநீகேழு
முன்னாள்க்குறோணியுதித்துவந்தமூன்றுகமும்
தன்னாலேநீபிறந்து தாண்டியதுகழித்து
பின்னாள்பிறந்தாய் பெருங்கிறேதாயுகத்தில்
அன்னாளில்நீங்ளண்ணனென்னு தம்பியென்னும்
பிறந்தீர்படைகள் பெருத்தசனக்கூட்டமுடன்
சிறந்தமதினும்பெரிய செல்வமாய்யாண்டிருந்தீர்
ஆண்டிருக்கும்போது மாங்காரம்தான்மீறி
தாண்டிப்பதமறந்துத் தானவரையும்பிடித்து

தெய்வமடவார்களையுஞ் சிறையில்மிகப்போட்டு
மெய்வரம்புவிட்டு மேலோகத்தார்களெல்லாம்
ஊழியங்கள்கொள்ள வுனக்குமனதாகி
நாழில்வரைநாட்டி மிகவட்டிசெய்து
வம்புசெய்துநீயும் வானலோகம்வரையும்
அம்புவியெங்கு முன்னனியாயமேமீறி
ஈரேழுலகும் மிராமராமாவெனவே
பாரேழும்நித்தியம் பண்பாய்முறையிட
முறையமிட்ட சத்தமுடையபரனறிந்து
இறையவரும்நம்மிடத்தி லிந்தவனியாயமதை
மாற்றிவைக்கவென்று மலரோனையனுப்ப
பார்த்துன்னைநானும் பழையவரமும்தோற்று
ஆயுதத்தாலம்பாலைந்துமுகத்தாலும்
மாயும்படியே வகையில்லையென்றுசொல்லி
ஆறுமுகமாயான புகழ்சத்திதனை
வீறுடனேநல்ல வேலாயுதமெனவே
எடுத்தேசொரூபமியானுனக்குநல்லபுத்தி
விடுத்துவுரைக்க மிகுதூதனையனுப்பி
சொல்லியுங்கேளாமல்ச் சூதப்படைக்கூட்டி
கொல்லுவேனென்று கூடும்படையோடு
சண்டைக்குநீயுஞ்சமைந்து வந்தாயென்னேடு
கண்டேயுனைநான் கருணைபோலபுத்திசொன்னேன்
தேவர்களைவிட்டு தெய்வமடவாரைவிட்டு
மூவர்களைநெஞ்சில்வைத்து யுகமாளுவென்றேனே
அப்போதுநீயு மாக்கிரமந்தன்னாலே
இப்போதுபேயாண்டி யார்கேள்ப்பாருன்பேச்சி
பிச்சைக்காரூவுன் சொல்பேருலகமாளுகின்ற
செஞ்சொல்வளர்ராசனுக்கு சொல்லாதுபோடாவென்ருய்
யென்னேடேபோர்க்கு வெதிராகவந்தாயென்ருல்
உன்னேடுவுள்ள வுற்றத்திறத்தாலே
சண்டைக்குவாடா தாட்டாண்மைபார்ப்போமென்ருய்
அப்போதுவேலாலறுத்தேனுனுன்னுயிரை
முப்போதுவுள்ள முழுக்கிளைகள்அத்தனையும்
சேரக்குலமறுத்துன் சேனையெல்லாமழித்து
கோட்டையழித்துன் குவலயத்தைத்தானழித்து
கேட்டை நானுன்னேடு கெர்விதமேதென்றுரைத்தேன்
சத்திவேலாலே சத்தியென்னைச்சங்கரித்தாள்
புத்திகெட்டவாண்டி போதுமோயென்னைவெல்ல
என்ருயேபாவி யேற்றயுகமன்றழித்து
அன்றேயுனையு மதிலோர்பிறிவிசெய்தேன்
அன்னாளுள்பேர்தான் அதிகவிரணியனாய்
துன்ஞாயமாய்நீ தோன்றிமுடுக்கமதாய்
அரிநமாவென்று வச்சரத்தையுமாற்றி
மதியாகலுன்பேரை வளங்கினையவ்வுலகில்
ஆதிசிவமறிந்த சுரூவுனையறுக்க

மாதிரிபோலென்னை வகுத்தாரேயுன்மகவாய்
மகவாயுனக்கு மாயவுருவெடுத்து
உகமேளறிய வுதித்துவளருகையில்
பள்ளியிலேசென்று படிக்கின்றநாளையிலே
தெள்ளிமையாயுன்பேர் செப்பென்றான்வாத்தியானும்
உடனேநான்மாறி யொருவசுரன்பேரதையும்
தடமேலுரைத்தால் தருணமதுகாத்திடுமோ
படைத்தகுருவின் பருநாமஞ்சொன்னதுண்டால்
சடத்தைமிகக்காக்கத் தருணம்உதவிசெய்வார்
ஆனதார்ப்பெரிய வரிநமாவல்லாது
மானமில்லாப்பாவி மாபாவிசூரனுட
ஏற்றப்பேரான யிரணியநமாவெனவே
சாற்றக்கூடாது தானிதுவேசொன்னவுடன்
வாள்த்தியுன்னோடுவந்து வளங்கூறிடவே
பார்த்தென்னைநீயும் பர்க்கடித்துச்சொல்லெனவே
இறுக்கிநெருக்க யிசையாமல்நான்மாறி
உறுக்கிப்பெரியோன் வுற்றவரியோன்பேரை
சொல்லவேநீயுஞ் சொன்னஅரியெங்கேயென்றாய்
வல்லபொருளான மாயவரியோனும்
எங்கெங்குமாகி யெவ்வுயிர்க்கும்தானாகி
அங்கங்குமாகி யழவுக்களவாகி
நிரந்தரமாயெங்கும் நின்றந்தசொரூபமதாய்
பரப்பரமாய்நிர்ப்பார் பாரவரியென்றேனே
கோணிநீவாடி குருவென்றவுன்னரிதான்
தூணிலுமுண்டோ சொல்லென்றனைப்பார்த்து
கேள்க்கநானுண்டெனவே கிறங்காமல்சொல்லிடவே
வாள்கணையால்நீயும் வாயினடைதன்னில்நிர்க்கும்
தூண்பேரில்வெட்டச் சிங்கமாய்நான்தோன்றி
வீண்கொண்டபாவியுனை வய்யோனடையதிலே
இடைநடையில்வைத்து யெந்தனொருநகத்தால்
குடல்நெழியக்கீறிக் கொன்னேநானுன்னையுமே
உயிர்நெகிழுமுன்னே உன்னுடையகண்முன்னின்று
செய்தயுத்தத்திறஞ் சொன்னவப்பொழுது
உன்னாலேயென்னை வுயிரழிக்கக்கூடாது
முன்னாலுன்னகத்தி லுற்றமலைபத்ததனை
சேர்த்துப்பதித்து செய்யநகமாக்கி
கீத்துநீசெய்தாய் கெறுவிதமாயல்லாது
ஏலாதுஉன்னாலே யென்றியம்பவுடன்நான்மாறி
மேலாகப்பின்னும் விளம்பினதைநீகேளு
பத்துமலையைப் பாரநகமாயப்பதித்து
இத்தலத்திப்போதிறக்க வைத்தாயல்லாது
உன்னாலெனைமாய்க்க வுற்றவகையில்லையென்று
சொன்னாயேநீயுஞ் சொன்னவுடன்நான்மாறி
பத்துமலையை பருந்தலையாயுனக்கு
எத்திசைகள்மெய்க்க வேற்றதியகைத்திறமும்

கைத்திறமும்வில்த்திறமும் கணையாளிவாள்திறமும்
புத்திரரின்கூடப் பிறப்போர்கள்தன்திறமும்
மெத்தபவுசும் வேண்டும்படையோடே
கொற்றவனுயுன்னைக் குவலையத்திலேயருளி
உன்னிடுக்கத்தாலே வொருராமபாணமதால்
கொன்றுனையன்றின்று கூறுமொழிகேழ்ப்பேனுன்
என்றுவுனக்கிருந்த வுயிருமளித்து
அன்றுகிறேதாயுகமுமழித்துமிக
பின்னுந்திரேதா பெரும்புவியிலுந்தனையும்
பத்துத்தலையாய் பாவிநீராவணனுய்
மற்றுநிகரொவ்வா வாய்த்ததம்பிமாரோடும்
சேனைபடையுடனே செல்வரோடுநீபிறந்து
வான்லோகம்வரைக்கும் மாபாவியாண்டனையே
ஆண்டிருந்துமல்லா தாதிசீதாலக்ஷிமியை
மாண்டிறந்துபோங்காலமாபாவிநீயவழை
கொண்டுபோயுன்னுடைய கோட்டையதுள்வைத்தாயே
மன்றுதனில்நானும் மாதைவிடுவென்றுசொல்லி
வேண்டுகின்றபுத்தி விதவிதமாய்ச்சொன்னேனே
கூண்டுந்தன்தம்பி கும்பன்விபீசணனும்
நாராயணருடைய நல்லசீதாலெக்ஷிமியை
ஆராலேகூடுமருஞ் சிறையில்வைத்திருக்க
பாவிநீவம்பால் பழிக்காகிப்போகாதே
கூவுமொழிசீதைதனை கோட்டைவிட்டனுப்பிவிடு
மாதைவிடாதே வம்புசெய்தாயானுக்கால்
பாதகாவுன்னுடைய பவுசெல்லாம்போகுமென
கொன்றுவுனையன்று கூறுமொழிகேள்ப்பேனென
என்றுனக்கிருந்தவுயிருமழித்து
சொன்னதம்பிமாரை சொல்லால்மிகத்துரத்தி
சின்னஞ்சிறுவன் தெசதரனுர்பாலனுட
பெண்ணவளைச்சீதையெனும் போகச்சொல்லென்றனயே
மண்ணுழவேணுமென்கீல் வணங்கிபணியெனவும்
அல்லாதேபோனுலலக்கழிவாகுமென
எல்லாம்பெரிதா யென்னேடுரைத்தாயே
பார்த்தார்ச்சிறுவன் பைங்கிளியாள்தன்புருஷன்
காத்தானதில் பறக்குங்கரியதுரும்பெனக்கு
அவனுடையபெண்ணு மாதிசீதாலச்சுமியாம்
இவனுடையபேரால் ராச்சியங்கள்கேடாமாம்
ஆமோடாநீங்களரக்கர்குலமோடா
போமோடாயெந்தன் பூமுகத்தில்நில்லாதே
என்றேயெனையு மிளப்ப மிகப்பேசி
அன்றவர்பேச்சை யல்லவென்றுதட்டிவிட்டாய்
அப்போதவர்கள் அன்பாகயென்னுடைய
செப்போடுவொத்தத் திறமெல்லாஞ்சொல்லிடவே
சின்னக்குழந்தையென்றுஞ் சீதையொருபெண்ணெனவே
மன்னவனேவுன்மனதில் வைத்துமேகொள்ளாதே

நாட்டுக்குடைய நாரணரேராமரென்றுங்
கூட்டுக்கிளியான கோதைசீதாலச்சுமியாள்
முட்டாளாயுந்தன் முழுநீசப்புத்தியினல்
அட்டாளபூமி யடக்கியரசாளுகின்ற
பகுத்தைக்குலேயாதே பளிக்கிரையாய்ப்போகாதே
தொகுத்தவுரைபோலச் சீதைதனைவிட்டுவிடு
என்றுரைத்தார்பின்னு மிருவருள் தம்பியர்கள்
அன்றுவுனக்குவதிககோபமுண்டாகி
என்னுடையகண்முன் னிப்போதுநீங்கள்நின்ருல்
உன்னிருபேர்தங்களுற்ற சிரசதையும்
அறுத்துவதைப்பேனது வறிந்துநீங்களெல்லாம்
மறுத்துவுரையாமல் வனமதிலேபோயிருங்கோ
என்ருயேநீயும் இருவரையுமப்போது
அன்றேயவர்க ளயர்ந்துமிகயிருக்க
அப்போதெனதுடைய வாதிசீதாலக்ஷிமியை
நர்ப்போடுயர்ந்த நாயகியைநான்றேடி
அனுமன்றனேயுமங்கே யனுப்பிவைத்தேன்
தனுவானவாழி தார்குழல்க்குத்தானீந்து
உன்கோட்டைவாயிலுடனே நான்வந்துநின்று
என்கூட்டிலான ஏற்றசீதாலச்சுமியை
விடுநீயென்றேனே வீணுய்நீகேளாமல்
படுவதறியாமல் படையெடுத்தீர்யென்னேடு
அப்போதுன்தம்பி ஆனவிபூஷணனும்
நர்ப்போடுவெனேவந்து மிகநல்வியவன்
பொல்லாதபாவியுடன் பிறந்ததோஷங்களித்து
யெல்லாம்பொறுத்து யெனேயாண்டுகொள்ளுமென்ருர்
நல்லதுதானென்று நானவனேயும்ஏற்று
பொல்லாதபாவியென் பெண்ணேவிடுஎன்றேனே
பாவிநீகேளாமல் படையெடுத்துவந்தனேயே
தாவிநீவிட்ட சரங்களெல்லாம்தடுத்து
யென்கையினலே எடுத்துவொருபாணம்
சங்கையுடனெயிது தலேயறுத்தேனுந்தனேயும்
உன்னலுன்படைகளுயிரழிந்துமாண்டபின்பு
முன்னுழுரைத்தமொழி கேட்டேனுன்னேடு
அப்போதுபாவியதற் கேதுநீயுரைத்தாய்
இப்போதுஎன்னுடைய ஏத்ததம்பிதானெருவன்
உன்னேடேசேர்ந்து உயிர்ப்பிலங்கள்தானுரைத்து
சொன்னதினலென்னுடைய சிரசறுத்தாயல்லாது
ஏலுமோராமா இளப்பம்பேசாதேயென்ருர்
மாலுநானப்போ மகாகோபமாய்வெகுண்டு
சுட்டிப்பயலே சுணேவந்துதில்லேயெனவே
மட்டிப்பயலே மாறிப்பின்னேதுரைத்தேன்
உந்தனுடதம்பி ஒருவன்மிகவந்தெனக்கு
சிந்தையுற்றுஉன்பிலங்கள் தெரியப்படுத்தியல்லோ
கொன்ருய்நீயென்று கூறினுயின்னமுனே
துவாரகைதன்னில் தோன்றவுனேயருளி

பவுருயுனக்கு பக்கத்துணையாக
ஒருநூறுபேராய் யுலகில்மிகநீதோன்றி
எதுவோர்க்கும் நான்பொதுவாயிருந்துயுனேவதைத்து
இன்றுரைத்தபேச்சு யானன்றுகேள்ப்பேனே
அன்றுவுன்னுடைய அன்னசுத்தம்வேரறுத்து
உன்னுயிரையுமளித்து உற்றயுகமுமழித்து
என்னுடையலட்சுமியை யான்மீட்டிஎன்னுள்வைத்து
உற்றதிரேதாயுகமளித்துந்தனேயும்
சுத்தத்துவாரகையுந் தொல்புவியும்தோணவைத்து
சுற்றத்துவராத்தொல்புவியில் தோணவைத்தேன்
பிறந்தாய்நீபேருலகில் பிறப்போருநூறுங்கூட
அறந்தான்பெரிய ஐவர்களும்அங்குதித்தார்
அப்படியேநீபிறந்து ஆழுகின்றவேளேயிலே
முப்படியேநானும் யுகத்தில்க்கோபாலனென
பாலனெனஉதித்து பாண்டவர்கள்கூடியிருந்து
ஸ்தூலமென்றும்வீமனுக்கு சொல்லியுனேசங்கரித்தேன்
சங்கரித்துன்னே சகுனியிமுக்கையிலே
பங்கமாய்முன்னுரைத்த பாங்கும்மிகக்கேட்டேன்
அப்போதுநீயும் அகமகிழ்ந்துகொள்ளாமல்
இப்போதுவீமனெனேக் கொன்னுலல்லாது
ஏலுமோபோடாயிடயாஎனேயுரைத்தாய்
மேலுமந்தயுகத்தில் மேட்டிமையாயுன்னேயிப்போ
தன்னுல்பிறக்கவைத்து தன்னுலழிவையென்று
சொன்னேனுனுன்னே சொன்னமொழிப்படியே
உன்னுலக்குதித்து உற்றகலியனென
இன்னுள்வரைக்கும்நீ யிருந்தாயேபார்மீதில்
பார்மீதில்நானும் பரதேசிபோலிருந்து
பேரேதும்யில்லாமல் பொறுதியுடனிருக்க
கர்மவயதுனக்குக் காலம்சரியாகி
வர்வம்வந்துமூடி மாண்டாயேதன்னுலே
முன்னுனக்குத்தந்த முடியுமென்சக்கரமும்
மன்னுகந்தநல்லவரங்கள் மிகத்தத்துவமும்
எல்லாருமிப்போ தென்முன்னெடுத்துவைத்து
பொல்லாதவனேநரகம்புக்கிடுநீஎன்றனராம்
மாறியுரைக்கவாய்மொழிகளில்லாமல்
உளறிக்கலியனுடக் கடித்துவைத்தனனே
எல்லாவரமும்வைத்து எந்தன்முடியும்வைத்து
பொல்லாப்புவானதொரு பொய்களவும்முருட்டும்
தந்திரமும்ஞால தத்துவங்களானதுவும்
அந்திரமான அன்னீதவஞ்சனேயும்
மாய்கைபலது வழக்கோரமானதுவும்
சாய்கைபலதும் சர்வபொல்லாப்பானதெல்லாம்
என்னேடுகூட யானுமதுகூட
வன்நரகில்புக்கிடுவோ மென்றுவரம்வைத்தனனே

வைக்கவவனுடைய மாய்மாலமாய்கையதும்
பொய்க்கலியனுயிரும் பொதிந்துதிரையாக
ஆயிரத்திருநூறனியாயப்பவஞ்சூடி
தீயிறத்தமான தீருதருனரகில்
சுத்தியெடுத்துத் தூக்கிக்கொண்டேயவனை
இத்தனைநாள்நம்மை இரச்சித்தராசனென்று
மாய்கையெல்லாம்கூடி வளைந்தவனைத்தூக்கி
பேயலகைவாழும் புழுக்குழிக்குள்ளாக்கி
முக்கிநிமிர்ந்தது முதக்காமல்மாய்கையெல்லாம்
தாக்கியிருந்த தடதடனசேடனது
நிமிர்ந்ததைமூடி நிரத்தியதையம்மானை
பார்த்தந்தசேடன் பாரைநிரப்பாக்கியபின்
உற்றவைகுண்டரொருசங்குஊதினரே
வெற்றியாய்சங்கு விரைவாகஊதியபின்
எற்றிசையீரேழுமிந்தசங்கோசைமிக
நல்லோர்களான நாடும்மனுவோரும்
நல்பூமிநல்விருக்ஷம் நல்மிருகம்ஊர்வனமும்
கற்புநெறியான கடியபலவகையும்
கீழ்மேல்நடுவும் கிரணமண்டபம்மூன்றில்
நாழ்மேல்பரம்பெரிய நல்லவகையானதெல்லாம்
தற்மநன்னீதம் தவசுநிலமைமுதல்
நன்மைபலதும் நாடிமிகவந்ததுவாம்
எல்லாம்வைகுண்டரிட்ட சத்தமிதில்வந்து
நல்லாகக்கண்டு நாரணரைத்தான்போற்றி
வைகுண்டசாமி வரவேணும்என்றுசொல்லி
மெய்க்கொண்டஞானம் மிக்கதவம்புரிந்தால்
வந்துசத்தமொன்றில் வரவழைப்போமென்றுசொன்ன
செந்துயிர்காக்குஞ் சிவகுண்டம்வந்தீரே
தர்மவைகுண்டசாமி வந்தாரென்றுசொல்லி
நன்மைபலசெந்தும் நன்னதிகப்பச்சிகளும்
பசுமைக்குணமான பலமிருகஊர்வனமும்
கசுவிரக்கமான கற்ருவின்றன்னினமும்
நல்வேதம்நீதம் நாடுகின்றசாஸ்திரமும்
சில்வாடைப்பிச்சு செந்தாமரைமலரும்
தங்கநவரத்தினமும் சமுத்திரத்துநல்வகையும்
கங்கைக்கண்ணுளுங் கமலப்பூவாணிமுதல்
தர்மமதும்போற்றி சுவாமியெனத்தொழுமாம்
முழித்தமனுக்களுக்கு மொய்குழலார்தங்களுக்கும்
களித்தேவிளிஞானக் கண்ணுமிகவருளி
நல்லமனுக்களுக்கு நாலுவரமுங்கொடுத்து
செல்லமனுக்கள் தேகமதுபொன்னிறமாய்
கல்வித்தமிழ்ஞானக் கலைக்கியானமுங்கொடுத்து
நல்விச்சிறப்பாய் நாடியவர்க்கீந்து
தெய்வமடவார் திருக்கன்னியேழ்வரையும்

வையமழந்தோர் வரவழைத்தேழ்பேருக்கும்
பெற்றமதலையெல்லாம் பிறமாணமாய்த்தெரிந்து
தத்திரமாயேழ்பேர்க்குந் தரந்தரமாய்தானீந்து
வைகைதனிலிறந்த மக்கள்வரைநாரணரும்
தையலவரேழ்பேருக்குந் தான்தெரிந்தீந்தனரே
ஏழ்பேருக்குந்மதலை யினமாகத்தான்கொடுத்து
வாழுங்கோபுவியில் வயதுபதிநாறெனவே
எல்லோரும்நன்ருயிருந்துவொருயினமாய்
நல்லோராய்ச்சாகாமல் நீடூழிகாலமெல்லாம்
ஆண்பெண்ணுடனே யதிகபலபாக்கியமும்
காணக்காணநீங்கள் கௌவையற்றுவாழுமென்ருர்
பச்சிப்பறவை பலசீவஜெந்துக்கள்க்கும்
அச்சமில்லாப்புவியில் யல்லல்வினையில்லாமல்
பெத்துப்பெருகி பிதுரெல்லாம்வோரினம்போல்
ஒத்துமிகக்கூடி ஒருதலத்துநீர்குடித்து
வாழ்ந்திருங்கோதர்ம வையகத்திலென்றனராம்
சார்ந்திருங்கோவென்று தாமன்விடைகொடுத்தார்
நல்லபூவாசநளிர் விருக்ஷமானதுக்கும்
அல்லலகற்றி யமர்ந்துமிகவாழுமென்று
தில்லையாடும்பெருமாள் சொன்னரதுகளுக்கு
புல்ப்பூடுங்கூடிப் பொருந்திமிகவாழுமென்று
நல்ப்பூடதர்க்கு நவின்றுவிடைகொடுத்தார்
அசையாமல்வானமது நேர்நிலாவுடனே
பிசகானதில்லாமல் பொழுதுமிகசாயாமல்
நேராகவாழுமென்று நெடியோன்விடைகொடுத்தார்
வருணனுக்குநல்ல வாக்குமிகக்கொடுத்து
தருணமதுபார்த்து சாற்றியிருவென்றுரைத்தார்
வாயுவதுக்கு மறைபோலவழங்கெனவே
வீசும்புகழ்நாதன் விடைகொடுத்தாரம்மானை
நீதமதுமூன்றும் நிலையாகநில்லுமென்று
சீதக்குருநாதன் சொன்னரதுகளுக்கு
மானுவதர்ம வரம்புதவருமல்
நானுபதேசம் நவின்றதுபோல்நில்லுமென்ருர்
பூமகள்வாணிப் பொருந்திக்கலைபுரிந்து
சீர்முகத்தர்மச் சீமையிலும்வாழ்ந்து
மகிழ்ந்திருமென்று மாயனருள்புரிந்தார்
குவிந்துமலர்மகளுங் கொண்டாடிக்கொண்டிருந்தார்
கங்கைமுதலாய் கனகரத்தினுதிகள்க்கும்
சங்கையுடனீங்கள் தன்னைல்துலங்கிமிக
வாழுவீரென்று வரமும்மிகக்கொடுத்து
என்னென்னபாக்கியங்கள் யெல்லாமிகத்தளைத்து
பொன்னம்பலம்போல பொருந்திமிகவாழுமென்று
நல்லவகையவர்க்கும் நாடிமிகக்கொடுத்தார்
வல்லபுவிக்கு வாழ்வுவரமுங்கொடுத்து

நல்லவைகுண்டர் நாராயணமகர்க்கு
வல்லமகர்க்கு வாய்த்தமுடியுங்கொடுத்து
செல்லக்கலியாணஞ் செய்யவேணுமெனவே
வைகுண்டரான வாய்த்ததிருநாதனுக்கு
மெய்குண்டமான விமலக்குருநாதனுக்கு
நாதக்குருவான நாராயணமணிக்கு
சீதமங்கைமார்கள் தேவிதெய்வக்கன்னியரை
கன்னியரைநன்ருய்க் கலியாணமும்புரிந்து
மன்னரவர்க்கு மாலையுடன்புரிந்து
பொன்னம்பலர்க்கும் பெரியபொருளதுக்கும்
தன்னம்பெரியசதா பிரமனனவர்க்கும்
நாதன்மார்க்கெல்லாம் நல்லமணம்புரிந்து
மாதவர்களார்க்கும் வாய்த்ததேவாதிகள்க்கும்
ஆதவனைதரி கேசவன்றனக்கும்
இப்படியேமங்கள மெல்லார்க்கும்கொண்டாடி
செப்பமுள்ளநாயகிமார் சேர்ந்தங்கொருப்போலே
சரசுபதிமாதும் தண்டரமூச்சுந்தரியும்
விரசுகுழலுமையும் வீரமகாலச்சுமியும்
வாய்த்தபகவதியும் வாழுகின்றபார்பதியும்
ஏற்றபுகழ்தெய்வ யிழங்குளல்மாரேழ்பேரும்
வள்ளித்தெய்வானை வாயீசொரியுடனே
தெள்ளிமையாயுள்ள தேவிபராபரையும்

### விருத்தம்

இந்தமாதர்கள்வந்தபோதிலே சிந்தையாகியதெய்வமாதர்கள்
முந்தநாங்களுமீன்றபாலரை முற்றுமாதவம்போலவளர்ந்திடும்
சிந்தர்மாமணிதெய்வநாயகி தேவிகாளிவராகிசுந்தரி
இந்தமங்களமானதிர்க்கண்டிலோ மெங்கள்நாயக
ரென்றவர்போற்றினர்

### விருத்தம்

போற்றுமாதரைப்பார்த்து நாதனும்போதமாமென
வாமிதுகூறுவார்
சாற்றுமாதரேதையலேழ்வரே சந்தமாகியயந்திரியானவள்
பார்த்துன்மைந்தரைக்காத்திடாமலேபாலரன்று
யிரிப்பிடியானதால்
ஏற்றுக்கௌவையாய் வீற்றிருக்கிருளெண்ணந்தீர்த்தவள்
தன்னையழைக்கிறேன்

### நடை

பெண்ணேகேளுந்தன் பிள்ளைரண்டுதன்னுயிரை
கள்ளக்கவுலாய கரிகாலச்சோழனவன்
கொன்னதினல்க்காளி கூண்டமனமிடைந்து
என்னிடத்திலேவந் திவ்வழமையுரைத்து
பாலர்முளித்து பரம்பெரியவைகுண்டரும்

சீலமுள்ள தர்மச் சீமையரசாளுகையில்
வருவேனதுமட்டும் வடவாமுகமதிலே
குருவேதுணையெனவே குவிந்திருப்போமென்றிருந்தாள்
இப்போதவள்க்கு யிங்குவரஞாயமுண்டு
நர்போடுவொத்த நல்லபரக்காழியைத்தான்
அழைக்கிறேனென்றுவாதி நினைக்கலுற்றார்
பிழைக்கிறேனென்று பெரியகுலமாகாளி
உடன்வந்துநாரணரை யுவந்துபதங்குவித்து
திடன்வந்துநின்று சிவனையடிதொழுது
பாலரெல்லாமுந்தன் பாதம்வந்துசேர்ந்தாரென்று
மாலவரேயெந்தன் மனதுமகிழ்ந்துதையா
நாரணரும்மெச்சி நன்றாயகமகிழ்ந்து
காரணமதாகக் கழிகூர்ந்தினிதாக
வைகுண்டநாதருக்குங் வாள்மடந்தைமாதருக்கும்
கைகண்டநல்லக் கலியாணமும்முகித்து
மணிவைகுண்டருக்கு மாமகுடஞ்சூட்டி
அணியாபரணமனேக மெடுத்துஅணிந்து
தங்கக்குல்லாவுந் தளிருநிறச்சட்டையிட்டு
பெண்கள்குரவையிட பெரும்பொன்மாலையுஞ்சூடி
பன்னீர்பரிமளமும் பவளநிறம்பொட்டுமிட்டு
நன்னீர்களாடி நாரணக்கண்மணிக்கு
ஆலத்திவன்னியாகாயத்தீவெட்டமும்
கோலமடவார்கள் குக்குளித்துநீராடி
பட்டுபணிகள்ப் பரிமணங்குகளும்புரிந்து
கட்டுமுறையாய் கன்னியர்கடாஷையிலாய்
தேவர்கள்மூவர்களுந் திசைவென்றமன்னர்களும்
மூவர்களும்நல்ல முளித்தபலஜெந்துகளும்
நான்முகனும் வேதநல்லமறையோரும்
வானுகமுமண்ணுகமுமன்றுகமுமொன்றெனவே
எல்லோருநன்றாய் யகமகிழ்ச்சையுடன்
நல்லோர்களெல்லாம் நாரணனூர்பொன்பதிக்குள்
தெருப்பவுசுவந்து சிங்காரபொர்ப்பதிக்குள்
மருப்புகளும்சிங்காசனத்தில் மகிழ்ந்திருக்க
போவோமெனவே பெரியவைகுண்டரையும்
கோவேங்கிரிபோல் குருவைரதமீதேற்றி
தேவாதியெல்லாஞ் சிவ சிவாபோற்றியென
சீவசெந்தெல்லாம் திருப்பாட்டுக்கூறிவர
தெய்வமடவார்த் திருக்குரவைப்பாடிவர
மெய்வதிந்தச்சான்றோர் மொகுமோகெனவேகூடி
கட்டிபங்கள்கூறிக் கனகப்பொடியுந்தூவி
கெட்டிகெட்டியென்று கீர்த்தனங்கள்பாடிவர
வாரிசங்கூத வாயுமலர்தூவ
நாரிவருணன் நல்லந்திமலர்தூவ
இந்தக்கொலுவா யெழுந்துரதமீதேறி

சிந்தர்மகிழச் சிவமுந்திருமாலும்
கூடரதமீதில் கூண்டங்கினிதிருந்து
இலாடர்மகிழ நல்லத்தெருப்பவிசு
நேராகவந்து நெடியோன்பதிதனிலே
சீராய்ப்பதிமுடுகச் செகலதுவேதானீங்கி
அமைத்தலைக்கொண்டிருந்த வளகுபதிகோபுரமும்
சமைத்துயிருந்த தங்கமணிமண்டபமும்
மண்டபமும்மேடைகளும் மணிவீதிபொர்த்தெருவும்
குண்டரைக்கண்டந்தக் கொடிமரங்களுந்தோன்ற
வாரியதுநீங்கிவைத்த லக்கில்போயிடவும்
சாதிவைகுண்டர் சாபம்நிறைவேறி
சாபம்நிறைவேறி தானுய்நினைத்ததெல்லாம்
யாமமுறையாயங்கே குதித்திடுமாம்
என்னென்னயாமம் எல்லாமேயிட்டதெல்லாம்
பொன்பதிதான் புரந்தாளவந்ததினுல்
நிறைவேறிநானும் நிச்சித்தமெய்வரம்போல்
குறைபடிகள்வாராமல் குணமாகவாளுமென்றுர்
இப்படியேயாமமெல்லாம்நிறைவேறி
முப்பத்திரண்டறத்தால் முகித்தசிங்காசனத்தில்
செப்பொத்தமாணுக்கர் சேவிக்கயிருபுறமும்
ஒப்பற்றபொர்பதிக்குளுயர்ந்த சிங்காசனத்தில்
மறுமன்யரெதிரி வையகத்திலில்லாமல்
விறுமஞ்ஞரான வெற்றிவைகுண்டருமே
சிங்காசனமிருந்து தெய்வச்செங்கோல்நடத்தி
பொங்காரமான புவிதர்மராச்சியத்தில்
ஆளுவாரென்ற வாகமநூல்ப்படியே
ஏழுபெண்மக்களின மொன்ருய்த்தான்கூடி
வாளவேணுமெனவே வாய்த்தசிங்காசனத்தில்
ஆளவைகுண்ட ரவரிருந்தார்பொன்மாதே

## விருத்தம்

ஆதியாம்வைந்தராசரருள்ச் செங்கோலேந்தித்தர்மச்
சோதியினெழிபோல ரத்தினந்துலங்கியமுடியுஞ்சூடி
நீதிபோலதர்மஞாய நெறிபுரிந்தரசேயாழ
சாதியாமுயர்ந்தச்சான்ருேர் தன்னையேவருத்திச்சொல்வார்

## விருத்தம்

மக்களேநீங்களெல்லாம் வாள்பொன்னம்பதியில்ச்சென்று
முக்கியமானதர்மயுக நிலமதிலேதன்னுல்
கக்கியபொன்கள்சொர்ணம் கைமனங்குளிரவன்னம்
பொக்கிசம்நிறையவைத்துப் புகளவுண்டினிதாய்வாள்வீர்

## விருத்தம்

வாளுவீர்தாழ்வில்லாமல் மக்களுங்கிளைகள்கொஞ்சி
நாளுமேமகிழ்ச்சைகூர்ந்து நலமுடன்வாளும்போது

நீளுமேயெனதுசெங்கோல் நீதியும்நெறிபோல்வந்து
ஆளுமேயுங்கள்தன்னை யன்புடனலையாவண்ணம்

விருத்தம்

வண்ணமாய்நீதமூன்றும் வரம்பணுவிலகிடாமல்
தண்ணமாயிருந்துவாளுஞ் சனங்களேபதறவேண்டாம்
திண்ணமாய்த்தன்னந்தன்னால்ச் சிறப்புடனிருந்துவாள்வீர்
எண்ணமேதொன்றுமில்லை யெழிமையும்இல்லைகண்டீர்

விருத்தம்

உன்னிலும்பெரியோனாக வொருவனுமுயர்த்திக்கண்டால்
தன்னிலும்பெரியோனாக தனைத்தினிதிருந்துவாள்வீர்
என்னிலும்பெரியோனீங்கள் யானுங்கள்தனிலுமேலோன்
பொன்னிலவூற்றுவீசும் பொன்பதியுகத்துவாள்வே

விருத்தம்

ஆணுடன்பெண்ணும்பெற்று வதிகமாய்ச்செல்வமாகி
தானுடநினவுமுற்று தர்மமும்நெறியுங்கற்று
வேணும்நீள்காலமெல்லாம மெல்லியருடனேவாழ்ந்து
பூணுதல்கமலநாதன் பொற்பதம்பெற்றுவாள்வீர்

நடை

மனுக்களவர்க்கு வாய்த்தசட்டமீதருளி
தனுக்கள்பெரிய சந்தமிறுகங்கள்கு
ஒன்றாகக்கூடி ஒக்கஒருயினம்போல்
நன்றாகவொர்தலத்தில் நண்ணீர்குடித்துமிக
வாள்ந்திருங்கோவென்று வைந்தர்மிகச்சட்டமிட்டார்
வாழ்வந்தஜெந்துகளுக்குவைகுண்டரப்போது
மெச்சிக்குழைந்து மேவிவொருவினம்போல்
பச்சிபறவைகள்க்கும் பாங்காகச்சட்டமிட்டு
ஊர்வனங்கள்கு வொருப்போலேச்சட்டமிட்டு
பாருகத்தில்நீங்கள் பசுமையாய்வாளுமென்று
தேவதெய்வார்க்குந் தெய்வஸ்திரிமார்க்கும்
மூவர்முனிவருக்கும் முக்கோடிதேவருக்கும்
யெல்லோர்க்கும்நன்றாய் யியல்பாகச்சட்டமிட்டு
வல்லோர்களான வைகுண்டமாமணியும்
செங்கோலுமேந்தி சிங்காசனமிருந்து
மங்காததேவரம்பை மாதரிருபுறமும்
சிங்காரமாகத்தேன் போல்மரைவீச
சான்றோர்களேவல் தனதுள்ளகமகிழ்ந்து
நின்றேவல்செய்து நிததம்பணிமாற
கட்டியங்கள்கூறி கவரிமிகவீச
கெட்டியாய்ச்சான்றோர்க் கிருபையுடன்மகிழ்ந்து
பாவித்துநித்தம் பரமவைகுண்டரையும்
சேவித்துப்போற்றி திளமேவல்செய்திடவே

கன்னியர்களோடுங் காதலாய்தானீன்ற
மன்னதியச்சான்றோர் மக்கள்மனைவியோடும்
ஆதிவைகுண்ட மானந்தநாரணரும்
நீதியாய்தர்ம நேரோர்மணிதூக்கி
சிங்காசனத்தில் சிவசூரியக்குடைக்குள்
கங்காதரனார் கற்பினையைஉள்ளிருத்தி
ஆண்டபரனு மாதிமுறைப்படியே
சான்றோர்கள்போற்ற தரமபதியாண்டிருந்தார்

### விருத்தம்

ஆண்டிருந்தரசுசெய்ய வணிவரைபோலேநீதம்
பூண்டிருந்துஇனிது வாழ்ப்பூதலமனுவோர்வாழ
கூண்டிருந்தருளாச்செல்வம் குணமுடன்மகிழ்ச்சைகூர்ந்து
வேண்டிருஞ்செல்வமோங்க வேற்றுமையில்லாவாள்ந்தார்

### விருத்தம்

தர்மமாய்ப்புவியிலுள்ள சனங்களும்பலதுசெந்தும்
பொற்மையாய்வாளும்போது புரந்தரவானோர்விண்ணோர்
நன்மையாய்யவருங்கூட நாடொன்றாய்மேவிவாள
வர்மமேயில்லாவண்ணம் வைந்தரும்புவியையாண்டார்

### கலி விருத்தம்

ஆண்டனர்புவிதிரி மூன்றினுமோரினங்
கூண்டனர்க்குலமெனக் குலாவிவைந்தரும்
தாண்டியவோர்குடை தாங்குகுவலயம்
மூன்றிலும்லோர்மொழி முகுந்தன்வாள்ந்தனர்

### விருத்தம்

பருதியுமதியெனப் பவந்துசேவனர்
கருதியுமுகமனுங் கமழ்ந்துகைமலர்
அருதியும்மலர் மகழணிந்துபூவினர்
சுருதியுமுறை வழித்தூக்கிவாள்ந்தனர்

### விருத்தம்

பொன்முகவருளது பொருமியாவியே
அன்முகமதிலும் மமர்ந்துபுகுந்திரு
இன்முகமதிலு மிருந்துவாவியே
பொன்முகவைந்தர் புயத்தில்வாள்ந்தனர்

### விருத்தம்

முதமுகவானவர் மூன்றெனவொன்றினர்
சதயிதகாலெனச் சமைந்துவாள்ந்தனர்
உதவெனமனமு முவந்துலாவியே
நிதநிணைவளர்வரு நிரந்துவாள்ந்தனர்

விருத்தம்

சீரணியுமையாள்பங்கா சிவமகிழ்ந்தினிதூய்வாழ
நாரணர்திதுவும்வாழ நான்முகவேதன்வாழ
வாரணவானலோக மாதவரெல்லாம்வாழ
காரணக்கன்னியான கமலப்பூமாதுவாழ

விருத்தம்

பூமாதுவானபகவதியும்வாழ பொன்மாதுசரசுவதியும்புரிந்துவாழ
நாமாதுவானபூமடந்தைவாழ நாகரீகதேவியர்கள்நலமாய்வாழ
போர்மாதுவீரமாகாளிவாழ பொன்னுலகத்தர்மபகி
பொருந்திவாழ
சீர்மாதுகொண்டபுகழ்ச்சான்ரோர்வாழ சிவவைந்த
ராசருமேசிறந்துவாழ

விருத்தம்

மாதுதிருலெக்ஷிமியாள் மகிழ்ந்துபோற்றிமாயனுடமுகம்
நோக்கிமாதுதானும்
தீதகலும்நாயகமே சிறந்தமாலே தேசமதிலுமக்
கெதிரிதோன்றிற்றென்று
நீதமுடன்ரேன்றியங்கே யுகங்கடோறும்நிந்தனைகள்
படுவதெனக்கறியச்சொல்வீர்
ஈதுரைக்கமாதவள்க்கு மாயன்ரனுமித்தனையுமெடுத்
துரைக்கயிசைவாள்பின்னும

விருத்தம்

பின்னுமந்தநாதனுடவடியைப் போற்றிப்பொன்மானே
யெனதுடையதேனேகண்ணே
இன்றுவரைக்குரேணியுயிர்தன்னை நீருமேழுபிறவி
செய்தவனையிசைந்துபார்த்தும்
நன்னியெள்ளுப்போலினிவுகாணவண்ணம்ஞாயநடுக்
கேட்டவனைத் தன்னைல்க்கொன்னீர்
பின்னுமக்கெதிரியின்னமுண்டோ சொல்லும்பெரிய
குருவெனபணிந்துப்போற்றினளே

விருத்தம்

போற்றுமடமயிலானச் சீதைப்பெண்ணின்பொன்முகம்
பார்த்தருள்புரிந்துபுகல்வாராயன்
சாற்றுமெனக்கெதிரிவந்தவாறேதென்றுதானுரைத்தாய்
நீயறியத்தன்மையாக
கீர்த்தியுடநானுரைத்தேன் காண்டமாககிழிமொளியே
யினியெனக்குக்கீழுமேலும்
வேற்றுமொருயெதிரியுண்டோவென்று கேட்டமெல்லியிழ
மாமயிலனையமாதேகேள்மோ

விருத்தம்

மாதேநீகேளுயீரேழுபூமி மண்ணிலுவராழிவளர்வரைசூழிதான
சீதேநீவரையெனதுள்ளறியாமாயச்செகவீரசாலம
தெனக்குமுண்டு
பூதேயெனவெகுண்டுவர யுகங்கள்தோறும்பிறக்கவே
நான்கேள்க்கபுரிந்தாரீசர்
மாதேயென்பகைஞ்ஞர் வழிக்குலங்கள்மாய்த்து
மறுமஞ்ஞரெதிரியில்லாவண்ணம்வாழ்வேன்

விருத்தம்

இனிமேலுமெனக்கெதிரியில்லைமானேயெமது
மக்களோடுகூடியிருந்துவாள்வோம்
மனுவோருமுனிவோரும் வானலோகமாலோருமென்
வாக்குவளியேவாள்வார்
இனிவேறுபயமேதோயெனக்குமாதே யிலங்குபதி
மீதிலுனையிடமேவைத்து
பனிமாறுகாலம்வரைவரசேயாள்வோம்பதறமனம்
வேண்டாமெனபகர்ந்தாராயன்

விருத்தம்

மாயனுரைமனமதிலேமாது கேட்டுமகிழ்ந்து
முகமலர்ந்துவாய்புதைத்துநின்று
தீயனெனுமாகொடியவரக்கர் சேர்க்கைதிரையறுக்க
நீர்துணிந்துசென்றநாளே
நாயனெறிகாணுதவடிமைபோல நடுங்கிமனதிடைந்துவெகுநாளே
ஆயருமைநாயடியாளின்று கண்டேயகமகிழ்ந்தே
னெனதுதுயரிளந்திட்டேனே

விருத்தம்

இகழ்ந்திட்டேனென்ற மடமயிலேமானேயென்ருவி
யிருகையால்மாதையாவி
புகழ்ந்திட்டமானமணிமேடை புக்கிபூவையரை
யிடமிருத்திபுகழ்ந்துவாழ
மகிழ்ந்திட்டமானமுறைநீதிவாழமறைவாழ
பிறையவரும்மகிழ்ந்துவாழ
உகந்திட்டமானமுறை நூல்போல்வாழவும்பர்
சிவமாதுலகமனுவோர்வாழ

விருத்தம்

மாதவள்க்குத்தானுரைத்த காண்டந்தன்னைவையகத்து
மனுவோர்களறியமாயன்
தாதணியும்தாமரையூர்பதியில்மேவித்தழைத்திருக்கும்
சான்ரோரில்தர்மவாளன்

நாதனருள்மறவாதராமகிருஷ்ணனுடனகமகிழ்ந்துபெற
நலமாய்வந்த
சீதநரிக்கோபாலன் மனதுள்ளோதுசெப்பனவே
நாதனுரைதொகுந்தவாரே

விருத்தம்

வாருனகதைவகுத்தநாதன்வாழ வகுத்தெழுதிப்படித்த
குலமனுவோர்வாழ
வீருனதெய்வசத்திமடவார்வாழ வீரமுகலச்சுமியும்விரைந்துவாழ
நாராயணரருளால் படித்தோர்கேட்டோர்நல்லவுரை
மிகதெளிந்துநவின்றுகற்ருேர்
ஆருறும்பெற்றவர்களகமேகூர்ந்துயன்றூழிகால
மிருந்தாள்வார்திண்ணம்

## அய்யா துணை

வாளி விருத்தம்

திண்ணமிந்தவகிலத்திரட்டம்மானை தன்னைத்திடமுடனே
மனவிருப்பமாகக்கேட்டோர்
யெண்ணமிந்தவினைதீர்ந்து ஞானமானயிறையவரின்
பாதாரத்தியல்பெற்று
வண்ணமிந்ததர்மபதி வாள்வும்பெற்றுமக்களுடன்
கிளைபெருகிமகிழ்ச்சையாக
திண்ணமிந்தப்பார்மீதில்ச் சாகாவண்ணம்நீடுழிகால
மிருந்தாள்வார்திண்ணம்

முற்றிற்று



டாஸ் பிரஸ், நாகர்கோவில்.

# நன்றி அறிவிப்பு



இந்த நூலை அச்சிலியற்றி வெளியிடுவதற்காக பேருதவி புரிந்த, திருவிதாங்கூர் – கொச்சி முன்னாள் அமைச்சர் திருவாளர் **A. சிதம்பரநாதன் நாடார்**, B.A.B.L., M.L.A., அவர்களுக்கும், சுவாமிதோப்பு, திருவாளர் **S. S. திரவியம் நாடார்**, B. A. B. L., அவர்களுக்கும், தேனி, திருவாளர் **K. P. P. E. முத்துசுவாமி நாடார்**, அவர்களுக்கும், சுவாமி தோப்பு, திருவாளர் **P. பொன்னுசுவாமி நாடார்**, அவர்களுக்கும், தூத்துக்குடி, திருவாளர், **கா. சு. பொ. ச. நடராஜ நாடார்**, அவர்களுக்கும்; தூத்துக்குடி, திருவாளர் **K. G. E. கம்பெனியாருக்கும்**, எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

சுவாமிதோப்பு, இப்படிக்கு,

*17—1—1963.* **பா. தங்கைய்யா நாடார்.**